# ஆய்வுக் கோவை

# 2004

## பண்பாட்டியல்


பதிப்பாசிரியர்

சிற்பி பாலசுப்பிரமணியம்

ஒய்.டென்னிசன்

சிலம்பு நா. செல்வராசு

பெ. சுபாசு சந்திர போசு

சா.கிருட்டினமூர்த்தி

(அமைப்புச் செயலர்)



இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்

பிஷப் ஹீபர் கல்லூரி

திருச்சிராப்பள்ளி

# ஆய்வுக்கோவை

## பண்பாட்டியல்


பதிப்பாசிரியர்

சிற்பி பாலசுப்பிரமணியம்
ஒய். டென்னிசன்
சிலம்பு நா. செல்வராசு
பெ. சுபாசுசந்திரபோசு
சா. கிருட்டினமூர்த்தி
(அமைப்புச் செயலர்)





பதிப்புதவி

முனைவர் அன்னிதாமசு
முனைவர் ஜீன் லாறன்ஸ்
முனைவர் ச. சிவகாமி
முனைவர் தா. ரெங்கநாதன்
முனைவர் சூ. நிர்மலாதேவி
முனைவர் மு. வளர்மதி



**இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்**

தமிழாய்வுத்துறை
பிஷப் ஹீபர் கல்லூரி
திருச்சிராப்பள்ளி - 620 017

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Āivukkōvai - Paṇpāṭṭiyal |
| Editors | : | Cirpi Balasubramaniam<br>Y. Tennyson<br>Cilampu. Na. Selvarasu<br>P. Subashchandrabose<br>S. Krishnamoorthy |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus, Taramani<br>Chennai - 600 113. Ph: 22542992 |
| Copyright | : | All India University<br>Tamil Teachers Association |
| Publication No. | : | 503 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2004 |
| Paper Used | : | 18.6 TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | xii + 274 |
| No. of Copies | : | 700 |
| Price | : | Rs. 75/- (Rupees Seventy-five only) |
| Printing | : | United Bind Graphics<br>101-D, Royapettah High Road<br>Chennai - 600 004 |
| Subject | : | Tamilology |

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

# அணிந்துரை

இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், தமிழ் வளர்க்க, தமிழாய்வு செழிக்கத் துணிந்த தமிழ்ப் பெருமக்களாம் முதுபெரும் புலவோர் பெருமைமிகு தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், வ.சுப. மாணிக்கனார், தா.ஏ. ஞானமூர்த்தியார் முதலியோரின் மூளையாம் கருவறையில் உருவாகிச் சிந்தனைத் தடத்தில் வளர்ந்து அரிதின் உயிர்ப்புப் பெற்ற தவக்குழவி.

இந்திய அளவில் பரந்து கிடக்கும் தமிழறிஞரின் தமிழாய்வுக் கருத்துகள், போக்குகள், சிந்தனைகள் ஆகியவற்றைப் பிறரும் அறிந்து கொள்ள ஒரு வாய்ப்பு; தமிழன்பர் பலரும் ஒருங்குகூடிக் கருத்துலகில் கலந்துரையாடித் தமிழ் வளர்க்கும் முயற்சி; தமிழாய்வை நெறிப்படுத்தும் செப்பனிடும் பெருநோக்கு; தமிழ்ப்பணியை விரிவு படுத்தும் விரைவு படுத்தும் அடிப்படை இலக்கு எனப் பல நன்னோக்குடன் செயல்வீரர்களால் உருவாக்கப்பட்ட இந்த இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் முதன் முதலில் தன் முகம் காட்டியது சூன் 1969இல் ஆகும். அன்றைய தமிழ்ச் சங்கங்களை நினைவூட்டும் இம்மன்றத்தின் முதல் கூட்டம் மதுரை மாநகரில் நிகழ்ந்தது மிகப் பொருத்தமாகும். பாண்டித்துரைத் தேவரின் நான்காம் தமிழ்ச் சங்கத்தின் பின் இதனை ஐந்தாம் தமிழ்ச் சங்கம் எனக் கூறினும் ஏற்புடைத்தே.

வெள்ளிவிழாவைக் கடந்து, பொன் விழா நோக்கி ஏறுநடை போடும் இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் இன்று தன் 35ஆம் கருத்தரங்கைச் சென்னை மாநகரில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் நடத்தி மகிழ்கிறது. இம்மன்றம் தோற்றம் முதல் முன்னேற்றப் பாதையில், உழைப்பில் சலிப்போ, கொண்ட கொள்கையில் மயக்கமோ தயக்கமோ இன்றிப் பல வளர்ச்சிப் படிகளைக் கடந்து வெற்றிநடை போடுவது குறிப்பிடத்தக்கதாகும்.

படிக்கவிருக்கும் கட்டுரைகளைக் கருத்தரங்க நாளன்றே ஆய்வுக் கோவைகளாக நூலாக்கித்தரல் எனும் புதுமரபிற்குக் கால்கோளிட்டது இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்.

1971ஆம் ஆண்டு நடைபெற்ற மூன்றாம் கருத்தரங்கிலிருந்து இம்முயற்சி செயல்பட்டு வருகிறது. 1969, 1970 ஆகிய முதலிரு கருத்தரங்க ஆய்வுக் கோவைகளையும் இதன் 30ஆம் கருத்தரங்கை (2000) நடத்திய உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமே வெளியிட்டு நிறைவு செய்துள்ளது. 35 ஆண்டுகளில் 10,000 கட்டுரைகளை நெருங்கிக் கொண்டிருப்பது இதன் இமாலய சாதனையாகும்.

இம்முப்பத்தைந்தாம் கருத்தரங்கம் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் சிறப்பாக நடைபெறுகிறது. இக்கருத்தரங்கக் கட்டுரைகள் இலக்கியவியல், இலக்கணவியல், பண்பாட்டியல், சமயவியல், இக்கால இலக்கியம், பல்துறையியல் என 6 தொகுதிகளாக உங்கள் கரங்களில் தவழுகின்றன.

இத்தொகுதிகளைப் பதிப்பிக்கும் நிலையில் உதவிபுரிந்த இந்நிறுவன ஆசிரியர்களுக்கும், ஆய்வு உதவியாளர்களுக்கும் நன்றி. இவ் ஆறு தொகுதிகளும் தமிழியலின் அரிய கருவூலங்களாக விளங்கும் என்பதில் ஐயமில்லை.

இத்தொகுதிகளின் உருவாக்கத்திற்குத் துணைநின்ற அனைத்து நல்லுள்ளங்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இக்கருத்தரங்கை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் நடத்துவதற்கும், கருத்தரங்க நூல்களை வெளியிடுவதற்கும் இசைவு தந்த இந்நிறுவன ஆளுகைக் குழுவிற்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இக்கருத்தரங்கத் தொகுதிகளை விற்பதற்குரிய விற்பனை உரிமையை இந்நிறுவனத்திற்கு வழங்கிய இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத்திற்கு நிறுவனத்தின் சார்பில் நன்றியை உரித்தாக்குகிறேன்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் **மாண்புமிகு கல்வி அமைச்சர் திருமிகு செ. செம்மலை** அவர்களுக்கும், **தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர் திருமிகு பு.ஏ. இராமையா இ.ஆ.ப.,** அவர்களுக்கும், **சிறப்புச் செயலாளர் திருமிகு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.,** அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

சென்னை
18-5-2004

**இயக்குநர்**

# உள்ளே... உள்ளே... உள்ளே...

## பண்பாட்டியல்


| | |
|---|---|
| **சிவ. சத்தியவதி** - கலித்தொகையில் இசை | 1 |
| **அ. சங்கர்தாஸ்** - மாதவியின் கலைத்திறன் | 6 |
| **இரா. கலைவாணி** - மாயூரம் வேதநாயகம் பிள்ளையின் அறிவுரைக் கீர்த்தனைகள் | 11 |
| **இரா. வசந்தமாலை** - இசையியல் இசைக்கலைச் சொற்கள் | 16 |
| **வெ. ஜனகமாயாதேவி** - ராக ரஸம் | 21 |
| **அ. கோபிநாத்** - 'அழிந்து வரும் இலாவணி' இசைக்கலை | 26 |
| **பனைவயல் கா. காளிதாஸ்** - இசைநாடகக் கலைஞர்களின் குழூஉக்குறி | 29 |
| **பா. பொன்னுராஜன்** - சிலம்பக் கலையின் வளர்ச்சி | 34 |
| **பொ.நா. கமலா** - வர்மக்கலை - ஒரு பார்வை | 38 |
| **கா. சத்தியபாமா** - தமிழ் இலக்கியங்களில் கைரேகைக் கலை | 43 |
| **க.ஆ. முருகேசன்** - பண்பு | 48 |
| **மா.பா. குருசாமி** - பண்பாட்டின் அளவுகோல் | 53 |
| **மு. கோமதி** - இலக்கியங்கள் காட்டும் பண்பாட்டில் மனித உயிர் நேயம் | 58 |
| **ஹ. அல்தாஜ் பேகம்** - உமறுப்புலவர் காட்டும் மகளிர் பண்பாட்டு நெறிகள் | 63 |

**க.ப. அறவாணன்** - தனியே அவர்க்கோர்
குணம் உண்டு 68

**நா. சந்திரசேகரன்** - பாய்ஸ் படுத்தும் (பண்)பாடு 71

**அ. சரசுவதி** - பஞ்சவாசம் 76

**ஓடை. தமிழ்ச்செல்வன்** - நாட்டுப்புறவியல்
பார்வையில் பாரி மகளிரின் கையறுநிலைப் பாடல் 81

**மொ. பத்மாவதி** - நாட்டுப்புறவியல்
அறிவுக்கு விருந்து 86

**நீ.வ. கருப்புசாமி** - நாட்டுப்புற இலக்கியத்தில்
நகைச்சுவையுணர்வு 91

**சூ. நிர்மலாதேவி** - காவல் தொழிலும்
கட்டுப்பாட்டு மீறலும் 96

**மூ. பெரியசாமி** - கதைப்பாடல் பதிப்பாசிரியர்கள்
- ஒரு பார்வை 101

**ந. விஜயசுந்தரி** - நாட்டார் நாடகங்களின் அமைப்பு 105

**ஜா. வளர்மதி** - நாட்டுப்புறப் பாடல்களும்,
தமிழ்ப்பண்பாடும் 110

**து. வெள்ளைச்சாமி** - நாட்டுப்புற வேளாண்
பாடல்கள் 115

**மு. கருணாநிதி** - நாட்டுப்புறச் சிறார் வழக்காறுகள்
'திருவிழாவும் திருநாளும்' 120

**யோ. தர்மராஜ்** - தெய்வங்களின்
சடங்கியல் உணவுகள் 125

**க. முருகேசன்** - சௌடாம்பிகை அம்மன் :
வழிபாட்டு மரபுகளும் தனித்துவமும் 130

**ச. குருஞானாம்பிகா** - சிறுதெய்வம்
- தாய்த் தெய்வ வழிபாடு 135

**மு. முருகேஸ்வரி** - நாட்டுப்புற மருத்துவப் பழமொழிகளும் உணவுகளும் *140*

**தா. வெஸ்லி** - காவு *145*

**அ. சின்னதுரை** - அன்னக்கொடி *147*

**வே. செடிப்பவுன்** - நாட்டுப்புறச் சிறுவர்களின் பண்டிகைப் பாடல்கள் *152*

**தி. பெரியசாமி** - விடுகதையின் நுண்பாகுபாடு *157*

**மு. சதாசிவம்** - பழமொழிகளைத் திருத்தலாமா? *161*

**கு. மங்கையர்க்கரசி** - தமிழில் வேளாண் பழமொழிகள் *166*

**ஆ. பஞ்சாமிர்தம் & சொ. முத்தையா** - வங்காளப் பழமொழிகளில் இராமாயணம் *171*

**எஸ். இராஜேந்திரன்** - முதுவான் பழங்குடிகளின் கிளை மரபுகள் *176*

**தி. அங்காளம்மன்** - பக்கிர் இனவரைவியல் *181*

**ம. வின்சென்ட்** - காணிச் சமூகத்தில் பிலாத்தி *186*

**ரா.ச. ராஜஸ்ரீ** - வயிற்றுப் பொங்காலைச் சாற்றுப் பாடல் ஓர் ஆய்வு *189*

**ஜே.ஆர். இலட்சுமி** - வெளிநாட்டவர் ஸ்டான்லி, பி.ரைஸ் அவர்கள் கண்ணோட்டத்தில் இந்திய நம்பிக்கைகள் *194*

**வெ. கிருட்டிணசாமி** - மழை பற்றிய நாட்டுப்புற நம்பிக்கைகள் *199*

**க. ரவி** - பழமொழிகளில் நம்பிக்கைகள் *204*

**த. கணேஷ்காமராஜ்** - நஞ்சை மனிதர்கள் காட்டும் பழக்கவழக்கம் *208*

**மு. முத்துவேலு** - ஆவணத் தமிழ் 212

**மு. நளினி** - அவனிபாஜனக் கல்வெட்டுகளில் கோயில் 217

**இரா. கலைக்கோவன்** - அவனிபாஜனக் கல்வெட்டுகளில் வருவாய்ப் பிரிவுகள், வரிகள், உழவு 222

**இரா. லலிதாம்பாள்** - அரளிப்பட்டிக் குடைவரை 227

**கு. பகவதி** - வசவ சமுத்திரம் - துறைமுகம் ? 230

**அர. அகிலா** - மெய்யத்துக் கோயிலில் களவும் கொலையும் 235

**ச. விஜயலெஷ்மி** - உத்தமர் கோயில் வழிபாட்டு முறைகள் 238

**எம்.ஏ. சுகந்தி** - திருச்செந்தூர் வட்டத்தில் மரவழிபாடு 243

**வேலம்மாள் முத்தையா** - கிருஷ்ணாபுரம் ஆஞ்சநேயர் கோவில் 247

**இ. செல்வி** - விருதுநகர் அருள்மிகு மாரியம்மன் கோயில் பங்குனித் திருவிழா 252

**ப. கல்பனா** - விடுதலைப் போராட்டத்தில் நெல்லையப்பர் 257

**சிவ. விவேகானந்தன்** - கிறித்தவப் பிரசங்கியார்களின் பார்வையில் அய்யா வைகுண்டர் 262

**தே. ஞானசேகரன்** - இந்திய விடுதலைப் போராட்ட வீரர் தளபதி சுந்தரலிங்கக் குடும்பனார் 266

**மா. மணிமாறன்** - மௌனப்புயல் - நாவலில் அரசியல் பின்னணி 270

# கலித்தொகையில் இசை

***சிவ. சத்தியவதி***

*தமிழ்ப் பல்கலைக்கழகம்*
*தஞ்சாவூர் - 613 005*

சங்க இலக்கிய நூல்களில் பல வகையான இசைப்பாடல்கள் மற்றும் இசைக்கருவிகள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. சங்க இலக்கிய நூல்களில் ஒன்றான கலித்தொகை ''பாவின் பெயராலமைந்த தொகை'' என்ற சிறப்பினைக் கொண்டதாகும். இதில் காணப்படும் செய்யுள்களில் இயற்கை வர்ணனைக்கும் அகப்பொருள் புறப்பொருள் நிலையினைச் சித்திரிக்கும் பொருட்டும் உவமையாக இசைச்சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. அவற்றை எடுத்துரைக்கும் வகையில் இக்கட்டுரை அமைகின்றது.

**கலித்தொகையின் சிறப்பும் பாடல் அமைப்பும்**

எட்டுத்தொகை தொகுப்பில் ஆறாவது நூலாக அமையும் இந்நூல் ''கல்வி வளர்கண்ட கலி'' என்றும், ''கற்றறிந்தோர் ஏத்தும் கலி'' என்றும் அறிஞர்களால் சிறப்பித்துக் கூறப்படுகின்றது. கலித்தொகை ஐந்து பகுதிகளைக் கொண்டதாகும். அவை நிலப்பகுதியின் அடிப்படையில் பிரிக்கப்பட்டுள்ளன. பாலைக் கலியில் 35 செய்யுள்களும், குறிஞ்சிக் கலியில் 29 செய்யுள்களும், மருதக் கலியில் 35 செய்யுள்களும் முல்லைக் கலியில் 17 செய்யுள்களும், நெய்தற் கலியில் 33 செய்யுள்களும், அமைந் துள்ளன. இச்செய்யுள்களோடு கடவுள் வாழ்த்துப் பகுதியும் சேர்ந்து கலித்தொகையில் மொத்தம் 150 பாடல்கள் உள்ளன. சங்க தொகை நூல்களில் குறைவு சிதைவு இன்றிக் கிடைத்தது கலித்தொகை மட்டுமே என்று கூறப்படுகின்றது.

ஒவ்வொரு கலியும் தனித்தனி புலவர்களால் இயற்றப் பட்டுள்ளன. இவை ஒவ்வொன்றும் தனித்தனிச் சிறப்புப் பெற்று விளங்குகின்றன. சான்றாகக் 'குறிஞ்சிக்குக் கபிலர்' என்று கூறப் படுகிறது. ஐந்து கலியையும் தொகுத்து அமைத்தவர் நல்லந்துவனார் ஆவார். இவரே நெய்தற் கலியையும் கடவுள் வாழ்த்துப் பாடலையும் இயற்றியுள்ளதாக நச்சினார்க்கினியர் உரை குறிப்பிடுகின்றது.

**கலிப்பாடல் உறுப்புகள்**

கலித்தொகைப் பாடல்கள் அகப்பொருள் நுட்பம் வாய்ந்தன வாகவும், வாழ்வியல் உண்மைகளை எடுத்துக் கூறும் வகை யிலும் அமைந்துள்ளன. இயற்தமிழில் இசைக் கூறுகள் அமைந்த பாவகை கலிப்பாவாகும். கலிப்பாவின் அடிப்படை உறுப்புகள் தரவு, தாழிசை, சுரிதகம் என்பனவாகும்.

**தரவு**

கலிப்பாவின் முதல் உறுப்பு ''தரவு'' ஆகும். ''தந்து முன்னிற்றலின் தரவே'' என்று இதற்கு இலக்கணம் கூறப்படுகிறது. தரவு, பாடலில் அமைந்த நோக்கத்தையும் அதனால் விளையும் பயனையும் பாடப்படுவோரை முன்னிலைப் படுத்திக் கூறும். எனவே இது முதல் உறுப்பாகச் சொல்லப்படுகின்றது.

**தாழிசை**

கலிப்பாவின் இரண்டாவது உறுப்பு ''தாழிசை'' என்பதாகும். இத்தாழிசை தனித்தும் ஒரு பொருள் மேல் மூன்று பொருள் அடுக்கியும் வரும். இது இடைநிலைப்பாட்டு என்றும் சொல்லப்படுகின்றது.

**சுரிதகம்**

பாவின் முடிந்த கருத்துகளை உணர்த்தி நிற்கும் பா உறுப்புச் ''சுரிதகம்'' ஆகும். இது மூன்றாவது உறுப்பாக அமைகின்றது.

இவ்வாறு அமைந்த கலிப்பா உறுப்புக்களானது, இன்றைய கீர்த்தனை என்னும் இசைப்பாடல் வகையின் உறுப்புக்களான பல்லவி, அனுபல்லவி, சரணம் என்பவற்றிற்கு ஒப்பாகக் குறிக்கப் படுகின்றது. முதற்பொருளைக் கொண்டு வரும் தரவு பல்லவி என்றும், இடைநிலைப்பாட்டு என்று கூறும் தாழிசை அனுபல்லவி என்றும், பாவின் முடிந்த கருத்துக்களை உணர்த்தும் சுரிதகம் சரணம் என்றும் அமைகின்றது.

**பாடல் வகை**

சங்க காலத்தில் இசைப் பாடல்கள் வாய்மொழிப் பாட்டாக மட்டும் அமையாமல் இலக்கியமாகக் கருதும் அளவுக்குக் கருத்துச் செறிவுடன் அமைந்துள்ளன. இவற்றில் கலித்தொகையில் துணங்கைப் பாடல், வள்ளைப் பாடல் வகைகள் பற்றிய பாடல்கள் உள்ளன. இவை எளிமையான சொற்களில் தொழில் அடிப்படையில் பாடப்பட்டுள்ளன.

**துணங்கைப் பாடல்**

சங்க காலத்தில் ஆடப்படும் கூத்துக்களில் ஒன்றாகத் துணங்கைக் கூத்து விளங்குகிறது. அதனை ஆடும்போது பாடப்படும் பாடல்

துணங்கைப் பாடல் ஆகும். இது பெண்களால் மட்டுமே ஆடிப் பாடப்படுகிறது. இருகைகளையும் மடக்கிக் கொண்டு முழங்கை யினால் இடுப்பில் இடித்துக் கொண்டு ஆடுவது இதன் ஆடும் முறையாகும்.

*துணங்கையாய் என வந்த கவ்வையிற் கடப்பன்றோ*
*(கலி. 16:18)*

*........ தந்துநின்*
*தமர்பாடுந் துணங்கையுள் அரவம் .......* *(கலி. 70:14)*

இப்பாடல் மருத நிலத்தில் பாடப்பட்டுள்ளது.

**வள்ளைப் பாடல்**

வள்ளைப் பாடல் உலக்கை கொண்டு திணை அல்லது நெல்லைக் குத்தும்போது பெண்களால் பாடப்படுவது. இது தற்பொழுது உலக்கைப் பாட்டு என்று அழைக்கப்படுகிறது. இது பற்றிக் கலித்தொகை உணர்த்தும் பாடல்

பாடுகம் வாவாழி தோழி வயக்களிற்றுக்
கோடுலக்கை யாகநந் சேம்பின் இலைசுளகா
ஆடுகமை நெல்லை அரையுரலுட் பெய்திருவாம்
பாடும் வாவாழி தோழிநற் றோழிபாடுற்று. *(கலி. 41: 1-4)*

...... தோழி நம் வள்ளையுள்
ஒன்றி நாம் பாட மறைநின்று கேட்டருளி *(கலி. 41: 40-41)*

பெண்கள் வள்ளைப் பாடல் பாடும்போது ஆண்கள் மறைந்து நின்று கேட்பார்களாம்.

வள்ளையை உணர்த்தும் மற்றொரு பாடல்
வள்ளை யகவுவம் வா, இகுளை நாம்
வள்ளை யகவுவம் வா; *(கலி. 42: 8-9)*

குறிஞ்சிக் கலியில் மட்டுமே இப்பாடல் பற்றிய குறிப்புகள் காணப்படுவதால், குறிஞ்சி நில மக்களால் மட்டும் இப்பாடல் பாடப்பட்டிருக்கலாம்.

**கலித்தொகையில் இசைக்கருவிகள்**

சங்க கால மக்கள் தாங்கள் கேட்கப்பட்ட ஒலிகளை முறைப் படுத்தப்பட்ட இசையாக அமைத்து இன்புற்றனர். இவ்வாறு பண்படுத்தப்பட்ட இசையானது இசைக் கருவிகளிலும் வாசிக்கப் பட்டது. இசைக் கருவிகளானது பண்ணிசைக் கருவிகள் என்றும் தாளவிசைக் கருவிகள் என்றும் இருகூறாகப் பிரிக்கப்படுகின்றது. அதாவது பண்களை இசைக்கத் தகுந்தவற்றைப் பண்ணிசைக் கருவிகள் என்றும் தாளத்தைப் பொருத்தமாகக் குறித்துச் சுவையுடன் ஒலிக்கும்

கருவிகளைத் தாளக் கருவிகள் என்றும் குறிப்பிடலாம். அவ்வகையில் கலித்தொகையில் சில இசைக் கருவிகளைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. மேற்சுட்டிய இசைக் கருவிகளின் பாகுபாடு சங்க இலக்கியத்தில் சுட்டப் பெறவில்லை. இவ்இசைக் கருவிகள் பற்றிய குறிப்புகள் பெரும்பாலும் உவமையாகவே கூறப்பட்டுள்ளன.

கடவுள் வாழ்த்து ஆடுந் தெய்வமான சிவபெருமான் மீது பாடப்பட்டுள்ளது. இதில் சிவபெருமானின் கையில் ஒலிக்கின்ற உடுக்கையைப் பறை என்று கூறப்படுகின்றது. தோற்கருவிகள் அனைத்தையும் பறை என்றும் அழைக்கும் வழக்கம் இருந்தால் இவ்வாறு கூறப்பட்டுள்ளது.

சிவபெருமானின் கையில் உள்ள பறை ஒலிப்பதால் மற்ற வாத்தியங்கள் ஒலிக்காது நின்றன என்று கீழ்கண்ட பாடலில் கூறப்பட்டுள்ளது. தலைவியின் (பார்வதி) கொடிய இடைக்கு உவமையாகச் சொல்லுவதால் இது உடுக்கையைக் குறிக்கின்றது என்பதை அறிய முடிகின்றது.

*படுபறை பலவியம்பப் பல்லுருவம் பெயர்த்துநீ*
*கொடுகொட்டி யாடுங்காற் கோடுய ரகல்குறிக்*
*கொடிபுரை நுசும்பினாள் கொண்டசீர் தருவாளோ*

*(கடவுள் வாழ்த்து - 5-7)*

சிவபெருமான் கொடுகொட்டி என்னும் கூத்தினை ஆடு வதற்குப் பறையை பக்கவாத்தியமாகப் பயன்படுத்தியுள்ளார்.

சங்க இலக்கியத்தில் யாழிற்குத் தனிச்சிறப்பிடம் தரப்பட்டுள்ளது. யானைப் பாகனின் பரிக்கோளிற்கு அடங்காத யானையானது யாழ் இசையின் ஓசையைக் கேட்டு நின்றதாகக் கூறப்படுகிறது.

*காழ்வாரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல்*
*யாழ்வரைத் தங்கி யாழ்குந் தாழ்புநின்* *(கலி. 2: 26-27)*

சோலையில் பூவினது உண்ணும் கரிய தும்பியின் ஓசை யாழோசையை ஒத்துள்ளதாகக் கீழ்வரும் பாடல் அடி விளக்குகின்றது.

*வீழ்கதிர் விடுத்தபூ விருந்துண்ணும் இருந்தும்பி*
*யாழ்கொண்ட இமிழிசை இயன்மாலை அலைத்தரூஉம்*

*(கலி. 29: 16-17)*

சில பாடல்களில் வண்டின் ரீங்காரத்திற்கு உவமையாக யாழ் குறிக்கப்படுகின்றது.

*''தளையவிழ்பூஞ் சினைச்சுரும் பியாழ்போல இசைப்பவும்''*

*(கலி. 34-16)*

யாழின் வகைகளுள் ஒன்றான செவ்வழியாழ் பற்றிய சிறப்பை நெய்தற் கலி விளக்குகின்றது. கேட்பதற்கு இனிமையான இசையும், இசைப்பதற்கு ஏற்றதாகவும் இவ்வகை யாழ் அமைவதை இப்பாடலடி விளக்குகின்றது.

''செவ்வழியாழ் நரம்பன்ன கிழவியார் பாராட்டும்''

(கலி. 118-15)

பொதுவாக இசைக் கருவிகள் பெரும்பாலும் இயற்கையில் கிடைக்கும் பொருள்களைக் கொண்டே தயாரிக்கப்பட்டன. முழுமையாக மரத்தினால் மட்டும் உருவாக்கும் கருவி குழலாகும். இக்குழல் தமிழ் மக்களின் இசைக் கருவிகளில் முந்தியது என்று சொல்லப்படுகின்றது.

முல்லை நிலத்திலுள்ள கோவலர் ஊதும் குழலின் தன்மையும் அவை செய்யப் பெற்றுள்ள பொருளும் கூறப்பட்டுள்ளன.

''ஒழுகிய கொன்றைத் தீங்குழல் முரற்சியர்
வழூஉச் சொல் கோவலர் தத்தம் இனநிரை'' (கலி. 106:3-4)

''சிறுவெதிர்ங் குழல் போலக் கரும்பிமிர்ந்திம்மென''

(கலி. 119:8)

சிறிய மூங்கிலால் செய்யப்பட்டது குழல் என்று இப்பாடலடி கூறுகின்றது.

இவ்வாறு கலித்தொகை சங்க இலக்கிய நூல்களில் அனைத்திலும் இசைப் பற்றிய செய்திகள் காணக் கிடைக்கின்றன. இவை இந்திய இசையின் அடித்தளமாகவும், பழந்தமிழ் இசையை வலுப்படுத்தும் வகையிலும் உள்ளன. இச்சிறப்பு வாய்ந்த பழந்தமிழ் இசையானது இலக்கியத் தன்மை குறைந்திருந்த காரணத்தால் எழுதிக் காக்கப் படாமல் பெயரளவில் மட்டுமே குறிக்கப் பெற்றுள்ளன. இவை பற்றி முழு விளக்கங்களைத் தற்பொழுது உள்ள இசைக்கருவி களின் உருவ அமைப்பைக் கொண்டு ஓரளவிற்கு ஊகிக்க முடிகின்றது.

**குறிப்புகள்**


1. கலித்தொகை (நச்சினார்க்கினியருரையுடன்), 1965, கழக வெளியீடு.
2. தமிழர் இசை, 1980, டாக்டர் ஏ.என். பெருமாள், உலகத் தமிழாராய்ச்சி வெளியீடு, சென்னை.
3. வாழ்வியற் களஞ்சியம் (தொகுதி - 6), தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு, தஞ்சாவூர்.

# மாதவியின் கலைத்திறன்

**அ. சங்கர்தாஸ்**

அழகப்பா பல்கலைக்கழகம்

காரைக்குடி - 3

கலைகள் அறுபத்து நான்கு என்பது ஒரு வகை வரையறை. காலந்தோறும் புதுப்புதுக் கலைகள் பூக்கலாம். ஒவ்வொரு கலைக் கென்றும் தனித்திறமைகள் உண்டு. ஒவ்வொரு கலையும் தனி நூலிலேயே கூறப்பட்டுள்ளதன்றி வேறு நூல்களில் இடையிடையே இடம் பெறுவதுண்டு. இவ்வகையில் இயல், இசை, நாடகப் பொருள் கொண்ட தொடர் நிலைச் செய்யுளான காப்பியமாகிய சிலப்பதிகாரத்தில் கலைகள் இடம் பெற்றிருப்பதில் வியப்பில்லை. இந்நூலில் இயல் கலையினும் இசைக்கலைக்கும், நாடகக் கலைக்கும் மிக்க இடம் உண்டு. இக்கலையின் விழி மாதவியின் கலைத் திறனைச் சிலம்பு வழி காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**பிறப்பு**

'குல விச்சை கல்லாமற் பாகப்படும்'

என்பதைப் போல மாதவியின் ஆடற்கலை வழிவழியாக வந்த குடும்பக் கலை. மாதவியின் குலம் ஆடற்கலைக்கு வித்திட்டது. இதனை,

''தெய்வ மால்வரைத் திருமுனியருள
தாதவிழ் புரிகுழன் மாதவி'' (சிலம்பு. 1-7)

எனும் பாடல் வரிகள் சுட்டும். இந்திரன் அவையில் உருப்பசி இசையோடு நடனமாடுகின்றாள். அகத்திய முனிவரும் வீற்றிருக் கின்றார். உருப்பசி இந்திரன் மகன் சயந்தனைக் கண்டு காதல் கொண்டு ஆடுகின்றாள். அகத்திய முனிவர் இருவரின் போக்கைக் கண்டு சாபம் கொடுக்கின்றார். இச்சாபத்தினால் சயந்தன் விந்திய மலையில் மூங்கிலாக நிற்கின்றான். உருப்பசி காஞ்சி நகரத்துத் தேவகனியாகத் தோன்றினாள். வரிசையிலே உருப்பசியின் பரம்பரையில் தோன்றியவள் மாதவி என்று இவள் பிறப்பு பற்றிக் கூறுகின்றார் இளங்கோ. மாதவி உருப்பசியின் பரம்பரையில் தோன்றியவள் என்றதால் இப்பெயர் பெற்றிருக்கக் கூடும் என்பது சிலர் கருத்து. மாதவிக்கு இடப்பட்ட பெயர் ஒரு கொடியின் பெயராக இருக்கக்கூடும் என்றும் சிலர் கருதுகின்றனர். கொடியின்

பெயரைப் பெண்களுக்கு இடுதல் மரபாக இருத்தலின் இது கொடிப் பெயராக இருக்க வாய்ப்புள்ளது. குருக்கத்திக்கு மாதவி என்னும் ஒரு பெயரும் வழங்கப்பெறும். பூங்கொடி, அல்லி, செந்தாமரை, முல்லை முதலிய பூவின் பெயர்களைப் பெண் பெயராகப் பயன் படுத்துதலை வழக்கில் காணலாம். இதனை,

''கோவலன் பிரிய கொடுந்துயர் எய்திய
வருந்தினை போது நீ மாதவி'' *(சிலம்பு. புறஞ்சேரி. 48-51)*

'கோதை மாதவி கொழுங்கொடி எடுப்ப'
*(சிலம்பு. ஊர்காண். 113)*

என்ற பாடல் வரிகள் மூலம் நாம் உணர்ந்து கொள்ள முடிகின்றது. மாதவி பிறந்து பதினோறாவது வயதில் நடனமாடத் தொடங்கினால் அவளின் கலைத்திறனை (நடன அரங்கேற்றம்) ஆடற்கலை, பதினோராடல், அழகுக்கலை, ஒப்பனைக்கலை, இசைக்கலை என்ற தலைப்புகளில் விரிவாகக் காணலாம்.

**நடனஅரங்கேற்றம்**

இளங்கோவடிகள் மாதவியின் நடனத்தை அரங்கேற்றுக் காதையில் எடுத்துரைக்கின்றார். மாதவி ஆடல், பாடல், அழகு ஆகிய மூன்றும் நிரம்பப் பெற்றவள் இதனை,

'ஆடலும் பாடலும் அழகும் என்றிக்
கூறிய மூன்றின் ஒன்று குறைபடாமல்' (சிலம்பு. 8-9)

என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன. சிலப்பதிகாரம் அரங்கேற்றுக் காதை முத்தமிழில் ஒன்றான இசைக்கு இலக்கணம் வகுப்பதன் மூலமாகப் பழந்தமிழர் இசையைப் போற்றி வளர்த்தனர் என்பதை அறிய முடிகிறது. கலை நங்கை மாதவி ஆடுதற்குத் தேவையான வாஸ்த்து முறைப்படி இளங்கோ ஒரு நடன மேடையை அமைத்து அவற்றில் மாதவியின் நடனம் அரங்கேறுகிறது.

**ஆடற்கலை**

'புலன்களின் உணர்வு குறைவாய், அறிவின் தெளிவே மிகுதியாய் அமைந்தது இலக்கியக் கலை. இக்கலை, கலைஞரை அடிமைப்படுத்தாமல் உயர்த்திவிடும். இங்கு மாதவி கற்ற கலை ஆடல், பாடல், அழகு என்ற மூன்றுமாகும். இவற்றுள் ஆடல் கலையும், அழகுக் கலையும் பலன்களைக் கடந்து வாழமாட்டாத கலைகள்' என்று கூறப்படுகின்றன.

மாதவி தன் ஐந்தாம் ஆண்டில் ஆடற்கலையைக் கற்கத் தொடங்கி, பன்னிரண்டாம் ஆண்டு முடிய ஏழு ஆண்டுகள் கசடறக் கற்றுத் தன் கலை வண்ணத்தை மன்னருக்கும், மக்களுக்கும், உலகிற்கும்

காட்டவேண்டுமெனக் கருதி அரங்கேற்றி நின்ற நிலையை ஆசிரியர் கூறுகின்றார். இதனை,

'ஏழான் டியற்றியோர் ஈராருண்டில்
கழல் மன்னற்குக் காட்டல் வேண்டி.' (சிலம்பு. அரங். 10-11)

எனும் பாடல் வரிகள் மூலம் உணரலாம். அறுபத்து நான்கு கலைகளையும் கற்றுந் தேர்ந்தவள் என்பதை விளக்கிக் காட்டவும், தலைக்கோல் பட்டம் பெற வேண்டியும் ஆடல் திறனை வெளிக் காட்டினாள். தலைக் கோல் பட்டம் என்பது ஆடுமகளை மட்டும் பொருத்ததன்று. ஆசான், இசையாசிரியன், கவிஞன், தன்னுமையாளன், குழலோன், யாழ்ஆசிரியன் அரங்கத்தின் அமைப்பு ஆகியவற்றையும் பொறுத்து மாதவியின் திறனை மன்னனுக்குக் காட்ட விரும்பி மேற்கூறிய முறையில் ஒன்றும் பிழையாது தன் திறத்தைக் காட்டினாள். அரங்கேற்றத்திற்கு எல்லாம் முறைப்படி அமையப் பெற்ற பின்னர் மாதவி,

''வலக்கால் முன்மிதித்து ஏறிஅரங்கத்து
வலத்தூண் சேர்தல் வழக்கெனப் பொருந்தி''
(சிலம்பு. அரங். 131-132)

ஆடினாள். வலக்காலை முன்வைத்து நன்மை பெருகவும், தீமை அகலவும் இரண்டு தெய்வப் பாடல்களைப் பாடினாள். இசைவாணர் இசைந்துவர ஆடல்பாடல் பொருந்திவர, தாளங்கெடாது ஆடினாள். தாண்டம், நிருத்தம், நாட்டியம் என்று முக்கூறுப்பட்ட கூத்து வகைகளை நூல் கூறிய முறையில் வழுவாமல் ஆடினாள்.

நாட்டியக் கலையை நன்கு கடைபிடித்துக் காட்டினாள் என்பதை
''இசைப் பூங்கோதை இயல்பினின் வாழமை
ஒருமுறையாகப் பெற்றனள்'' (சிலம்பு. அரங். 160-163)

இப்பாடல் வரிகள் சுட்டுகின்றன. மரபுக்குக் குறைவில்லாது ஆடியமைக் கண்டு 'தலைக்கோல் அரிவை' என்ற பட்டத்தையும் ஆயிரத்தெட்டுக் கழஞ்சு பொன்னையும், தரமுயர்ந்த பச்சை மாலையையும் மாதவி பரிசாகப் பெற்றாள்.

'நின்று ஆடுதல் நிலை என்றும் கீழே விழுந்து ஆடுதல் படிதம் என்றும் கூறுதல் அக்காலத்திய மரபு' இவற்றின் அடிப்படையில் மாதவி நின்றாடல், விழுந்தாடல் போன்றவற்றிலும் மரபு பிழையாது ஆடினாள் என்பதை,

'நிலையும் படிதமும் நீங்கா மரபிற்
விதிமாண் கொள்கையின் விளங்க' (சிலம்பு. கடலாடு. 65-68)

எனும் அடிகள் உணர்த்துகின்றன.

**பதினோராடல்**

மாதவி ஆடற் கலையில் சிறந்து விளங்கினாள் என்பதற்கு அவள் பதினோராடலில் தேர்ச்சி பெற்றுள்ளாள் என்பது குறிப்பிடத் தக்கது. 'கலையே குறிக்கோளாய்க் கலையே வாழ்வாய்க் கலைத் துறையில் காலம் கழிப்பவர்கள் ஒழுக்கத்தோடு வாழ்தல் அருமையாக உள்ளது'[3] என்று ஆசிரியர் மு.வ. குறிப்பிடுகின்றார்.

மாதவியின் ஆடல், பாடல், அழகு என்னும் மூன்று நிலைகளையும் சோழவேந்தன் போற்றிப் பரிசு நல்குமாறு கலைகளில் தேர்ச்சி பெற்றவள் என்பதைப் பதினோராடல் விளக்குகின்றது. இதனை,

> ''திரிபுரம் எரியத் தேவர் வேண்ட
>
> ......................................
>
> ஆயிராணி மடந்தை ஆடிய கடையமும்''
>
> (சிலம்பு. கடலாடு. 40-63)

என்ற பாடல் வரிகள் வழி அறியலாம் ஆடல் வகைகளான, கொடுகட்டி, பாண்டுரங்கம், அல்லித் தொகுதி, மல்லின் ஆடல், ஆடிக் கூத்து, குடைக் கூத்து, குடக் கூத்து, மரக்கால், பாவை, கடையம் எனும் ஆடற்கலைகளில் தேர்ந்துள்ளாள் என்பது குறிப்பிடத்தக்கது.

**அழகுக்கலை**

அழகு என்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கு என்கிறார் பேராசிரியர். 'கலையும் அழகும் எப்பொழுதும் இணைந்தே இருக்கும், ஒன்றிலிருந்து ஒன்றைப் பிரிக்க முடியாது. தமிழ் இலக்கணம் கூறும் இரட்டைக்கிளவியைப் பிரித்தால் எவ்வாறு பொருள் தராதோ அது போலவே கலையும், அழகும் பிரித்துப் பார்க்க முடியாது' என்று மு.வ. குறிப்பிடுகின்றார். இவ்வழகு பொருந்திய மாதவியின் உறுப்புகளின் அழகினை,

> 'உவவுற்ற திங்கள் முகத்தாள்'
>
> 'மாமலர் நெடுங்கண் மாதவி'
>
> 'போதவிழ் புரிகுழல் பூங்கொடி'
>
> 'பெருந்தோள் மடந்தை'
>
> 'மரகத மணித்தாள் செறிந்த மணிக்காத்தள் மெல்விமலாள்'
>
> 'பண்ணும் திறனும் புறங்கூறும் நாவினாள்'
>
> 'வளையா மழலை மொழியினாள்'

என்று முகம், கண், கூந்தல், தோள், மெல்விரல், நாக்கு, மொழி, வண்ணம் என வெளிக்காட்டுகின்றார்.

**ஒப்பனைக்கலை**

'கலை மனத்தை நெகிழ்விப்பது, புலன்களை நுண்மைப் படுத்துவது, அறிவின் தலைமையை மாற்றி புலன்களுக்குத் தலைமை நல்குவது' எனக் கலையைப் பற்றி மு.வ. குறிப்பிடுகின்றார். அறுபத்தி நான்கு கலைகளில் ஒப்பனைக் கலையும் ஒன்று. மாதவி ஆடற் கலையில் சிறந்து விளங்கியது போல் ஒப்பனைக் கலை யிலும் திறம்பெற்று விளங்கினாள் என்பதைக் கடலாடு காதையில்,

''பத்துத்துவரினும் ஐந்து வரையினும்
மையீர் ஓதிக்கு மாண்புற அமைந்து'' *(சிலம்பு. கடலாடு. 76-108)*

எனும் பாடல் வரிகள் குறிப்பிடுகின்றன. இவற்றில் பத்து வகையான துவர்களையும், மனம்மிக்க ஐந்து விரைகளையும், முப்பத்திரண்டு மூலிகைகளையும் ஒன்று சேர்த்து ஊறவைத்துக் காய்ந்த நன்னீரில் தைலம் தேய்த்து மணம் வீசும் கூந்தலை நீராட்டினாள். மெல்விரல்களில் சிவக்கச் செம்பஞ்சூட்டினாள். விரலுக்குப் பீலி, கால்களுக்கு மோதிரம் முதலிய அணிகளை அணிந்தாள். தோள்களுக்குக் கண்டிகையுடன் சேர்ந்த தோள்வளையைப் பூட்டினாள். கைகளுக்கு வால்வளை, கைவடம் ஆகியவற்றைச் சூட்டினாள். கழுத்தில் முத்துமாலை, மணியாரம், பூண் நாண், சரப்பளி போன்றவற்றை அணிந்தாள். சந்திரபாணியென்னும் நீலக் குதும்பையைக் காதில் அழகுறப் பூண்டாள்.

கூந்தலுக்குச் சீதேவி, செழுநீர், வலம்புரி, தலைப்பாளை, தென்பல்லி, வடபல்லி முதலிய மணமிக்க மலர்களைச் சூட்டினாள்.

**இசைக்கலை**

யாழை எடுத்துக் கொண்டு கோவலனும் பாடுவான், மாதவியும் பாடுவாள். கோவலன் பாட்டைக் காட்டிலும் மாதவியின் பாடல்கள் இசைநயம் மிக்கதாகக் காணப்படுகின்றன. காவிரியை முதலில் கோவலன் புகழ்ந்து

'உழவர் ஓதை மதகோதை உழுநீர் ஓதை தன்பதங்காள்
மழவர் ஓதை வளவன்றன் வளனே வாழி காவேரி' (சிலம்பு. கானல். *4)* எனப் பாடுகின்றான். மாதவி காவிரியை,
'மருங்கு வண்டு சிறந்தார்ப்ப மணப்பூ அடையாறு போர்த்தி
திருந்து செங்கோல் வளனென்றை அறிந்தேன் வாழி காவேரி'
*(சிலம்பு. கானல். 8)* என்று பாடுகின்றாள்.

கோவலன் பாடல்களில் ஆரவாரம் செய்கின்ற காவிரி, மாதவி பாடலில் அமைதியாக நடக்கின்றாள். கோவலனிடம் உள்ள உணர்வின் வெறி ஓசை நயங்களை வெளிப்படுத்துகின்றது. மாதவியின் மனம் காவிரியை ஒரு இல்லறப் பெண்ணாகக் காண்கின்றது. அவளது பாடல் வரிகள் பண்பாட்டின் களஞ்சியமாகவும், உயர்பண்புகளையும் விளக்குவதுமாக அமைகின்றன.

# மாயூரம் வேதநாயகம் பிள்ளையின் அறிவுரைக் கீர்த்தனைகள்

**இரா. கலைவாணி**

அவினாசிலிங்கம் பல்கலைக்கழகம்
கோயமுத்தூர் - 641 043

இம்மையில் மட்டுமின்றி மறுமையிலும் நற்பேரடைய இவ்வுலகில் வாழும்போது எப்படியெல்லாம் வாழவேண்டும் என்ற அடிப்படையான அறிவுரைகளைச் சொல்வதாக இவர் சில கீர்த்தனைகளை இயற்றியுள்ளார். ''சர்வ சமய சமரசக் கீர்த்தனைகள்'' எனும் வேதநாயகரின் கீர்த்தனைத் தொகுப்பில் 192 கீர்த்தனைகள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் 22 கீர்த்தனைகள் அறிவுறுத்தும் கீர்த்தனைகளாக அமைந்துள்ளன. அவற்றின் பட்டியல் வருமாறு :

| வ.எ. | பாடலின் தொடக்கம் | கரு | இராகம் | தாளம் |
|---|---|---|---|---|
| 1. | அனுதினம் இந்த | நெஞ்சோடு பிணங்கல் | அசாவேரி (8) | ஆதி |
| 2. | இனியாகிலுமனமே | கடவுளைத் தியானிக்கும் படி வற்புறுத்தல் | கல்யாணி (65) | ஆதி |
| 3. | உடலை நம்பாதே | உடலை வெறுத்தல் | இந்துஸ்தான் காபி (22) | ரூபகம் |
| 4. | உய்யும் வகையிது | உய்யும் வழி | சங்கராபரணம் (29) | ரூபகம் |
| 5. | ஓகோ காலமே | கால | தர்பார் (22) | ஆதி |
| 6. | செய்ய வேண்டுமானால் | துர்க்குணம் போன்ற நற்குணங்கள் | தன்யாசி (8) | ஆதி |
| 7. | நித்யானந்தத்தை நாடு | நித்யானந்தத் தேடல் | இந்துஸ்தான் காபி (22) | ஆதி |
| 8. | நீ மலைக்காதே | மனமயக்தந்தவிர்த்தல் | எதுகுலகாம் போதி (28) | அடதாள சாப்பு |
| 9. | நெஞ்சே இந்த | துர்குணங்களை வெளியிடல் | எதுகுலகாம் போதி (28) | ஆதி |
| 10. | பணமே உன்னால் | பண தூஷணை | சங்கரா பரணம் (29) | ரூபகம் |

| 11. | புண்ணியம் போல் | கள்ளஞானம் | இந்துஸ்தான் காபி (22) | ரூபகம் |
|---|---|---|---|---|
| 12. | புரட்டெல்லாம் எங்கே | மனவஞ்சகத்தைப் பற்றிக் கூறல் | பந்துவராளி (45) | ஆதி |
| 13. | பெண்ணாசையே | பரஸ்திரி கமனம் விலக்கல் | சௌராஷ்டிரம் (17) | ஆதி |
| 14. | பொருளை விரும்ப | பொருளாசை ஒழித்தல் | கனகவசந்தம் (20) | ஆதி |
| 15. | போனது போகட்டும் | நற்புத்தி கூறல் | சுருட்டி (28) | திரிபுடை |
| 16. | மனமே உனக்கு | பரஸ்திதி கமனம் விலக்கல் | கௌளிபந்து (15) | ஆதி |
| 17. | மனமே நீ ஈசன் | கடவுளைத் தியானிக்கும் படி கூறல் | குந்தலவராளி (28) | ஆதி |
| 18. | மனமே நீ மறவாதே | கடவுளைத் தியானிக்கும் படி கூறல் | அடாணா (29) | ஆதி |
| 19. | மயங்கிறாய் மனமே | மன மயக்கம் | வசந்தா (17) | ஆதி |
| 20. | மாதரை நினையாதே | பரஸ்திரிகமனம் விலக்கல் | கமாசு (28) | ஆதி |
| 21. | வாழ்வை நம்பாதே | உலக வாழ்வை வெறுத்தல் | இந்துஸ்தான் காபி (22) | ரூபகம் |
| 22. | வீண் கர்வம் ஏன் | செல்வச் செருக்கு | தேவமனோகரி (22) | ஏகம் |

மேற்குறிப்பிட்டுள்ள 22 பாடல்களின் 18 வகையான உட்கருத்து களைக் கொண்ட பொருளமைதியுடன் பாடல்கள் அமைந்துள்ளன. கடவுளை வேண்டும்படி வற்புறுத்தல் எனும் கருவில் 3 பாடல்களும் பிற, பெண்களின் மேல் ஈடுபாட்டைத் தவிர்த்தல் எனும் தலைப்பில் 3 பாடல்களும் ஏனைய தலைப்புகளில் தலா ஒவ்வொரு பாடலும் இயற்றப்பட்டுள்ளன.

**இசை அமைப்பு**

22 பாடல்களும் வெவ்வேறு இராகங்களில் அமைக்கப்படாமல் ஒரு குறிப்பிட்ட இராகங்களையே பயன்படுத்தி இசையமைப்பாக்கப் பட்டுள்ளன. 22 பாடல்களில் 3 பாடல்கள் சங்கராபரணம் (29) பந்துவராளி (45) கல்யாணி (65) என 3 மேளஇராகங்களும் ஏனையவை ஜன்னிய இராகங்களிலும் அமைக்கப்பட்டுள்ளன. அவை முறையே தோடி (8), மாயாமாளவகௌளை (15), சூர்யகாந்தம் (17), நடபைரவி (20), கரகரப்ரியா (22), ஹரிகாம்போஜி (28), சங்கராபரணம் (29) ஆகிய இராகங்களில் பிறந்துள்ள சேய் இராகங்களாகும். இரு மேள இராகங்களைத் தவிர பிற மேள,

ஜன்ய இராகங்கள் அனைத்தும் சுத்த மத்தியம மேளங்களாகவே அமைந்துள்ளன.

பக்தி, கருணை, சாந்தம் எனும் உணர்வுகளைத் தரும் இராகங்களாகக் கருதப்படும் இராகங்களிலேயே 22 பாடல்களும் அமைந்துள்ளன. ஒரே இராகம் மீண்டும் பயன்படுத்தப் பட்டுள்ளப் பாங்கைக் காணமுடிகிறது. காட்டாக எதுகுலகாம்போதி, சங்கராபரணம் ஆகிய இராகங்கள் இரு முறையும் இந்துஸ்தான் காபி நான்கு முறையும் திரும்பத் திரும்பப் பயன்படுத்தப்பட்டுள்ளன. 8-வது மேளமான தோடியில் பிறந்த இரு சேய் இராகங்கள் (அசாவேரி, தன்யாசி); 22-வது தாய் இராகமான கரஹரப்பாவில் பிறந்த மூன்று சேய் இராகங்கள் (இந்துஸ்தான் காபி, தேவமனோகரி, தர்பார்); 17-வது தாய் இராகமான சூர்யகாந்தத்தில் பிறந்த இரு சேய் இராகங்கள் (சௌராட்டிரம், வசந்தா); 28-வது தாய் இராகமான ஹரிகாம்போதியில் பிறந்த சேய் இராகங்கள் 4 (சுருட்டி, எதுகுலகாம்போதி, கமாசு, குந்தலவராளி); எனப் பாடல்கள் அமைந்துள்ளன.

**சுவை**

இராகங்களின் வகைப்பாட்டில் மிகவும் இன்றியமையாதது சுவை என்கிற ரசம். இசையைப் பொறுத்தவரை சுவை ஒன்பது வகைப்படும். காதல் (சிருங்காரம்), நகை (ஹாஸ்யம்), கோபம் (ரௌத்ரம்), கருணை (கருணா), வீரம் (வீரம்), வியப்பு (அற்புதம்), அருவருப்பு (பீபத்சம்), பயம் (பயாநகம்), பக்தி (சாந்தம்). ஒவ்வொரு சுவைக்கென ஒவ்வொரு இராகம் வரையறுக்கப் பட்டுள்ளது. சில இராகங்கள் பலவிதச் சுவைகளைத் தருபவையாக அமைந்துள்ளன. அதேபோல ஒரு சுவைக்கே பல இராகங்கள் பொருந்தி வருகின்றன. பக்திச்சுவைக்கு சாமா, மாயாமாளவ கௌளை, கௌளை, நாதநாமக்ரியா, பந்துவராளி, கல்யாணி, கரகரப்ரியா, எதுகுலகாம்போதி, தன்யாசி ஆகிய இராகங்கள் மிகவும் பொருத்தமுடையன. இந்த இராகங்கள் எல்லாவற்றையும் பயன்படுத்தி வேதநாயகம் பாடலியற்றியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

**இசை விரிவாக்கம்**

வேதநாயகம் பிள்ளை கிறித்தவ சமயத்தவர் என்பதால் அவரின் பாடல்கள் போதனைக் கீர்த்தனைகளாகத்தான் இருக்கும் என்று சிலர் கருதுவதுண்டு. ஆனால் ஒரு கருநாடக இசை நிகழ்ச்சியில் பாடுமளவிற்கு வேதநாயகம் அவர்களின் பாடல்கள் மிகவும் தரமான இசையமைதியுடன் அமைந்துள்ளன என்பதே உண்மை. அவ்வாறு செவ்விசையில் சிறப்பம்சமாகக் கருதப்படும்

இவை விரிவாக்கம் (சங்கதி) மிகச் செம்மையாக அமைந்துள்ளது. எடுத்துக்காட்டாக நித்யானந்தத்தை நாடு எனும் பாடலின் பல்லவி வரிகள் வருமாறு. இராகம் இந்துஸ்தான். தாளம் ஆதி.

| | | | |
|---|---|---|---|
| 1. | ; பா பா ; ; , ம கமாப | காரீ ரீ; | ; ; ரிநிசா \|\| |
| | .. நித்யா .. ... னந்தத்தை | நா.. டு,, | .. .. ப.ர. \|\| |
| | ; , ரி , மமா பா பா , நிமா | பா ; ; ; | கமரிகசரிரிச \|\| |
| | ...நிர்மல. சு.கம் .தே.. | டு... .... | ம..ன. மே.. \|\| |
| 2. | ரிமபா பா; தபாம கமநிநிப | கா,ரி ரீ; | ;;கரிகாரிஸநீ \|\| |
| | ..நித் யா.....னந் தத்தை | நா. டு... | .. ப. ர.. \|\| |
| | ஸா,ரி , ம மா பாபா பாஸ்நிநிம | பா;; ; | பாபாபாஸ்நிநிம \|\| |
| | ..நிர் .மல சு.கம் தே..... | டு... .... | ம..ன. மே.. \|\| |
| 3. | ரிமபா பா ச்ச் நிநிபப மநிநிப | கா,ரி ரீ; | ;;கரிகாரிஸநீ \|\| |
| | ..நித் யா.. னந் தத்தை | நா. டு... | ..ப. ர.. \|\| |
| | ரிநி ஸா ரீமப், நிமப ,ச்நிநி | ச்ா; ;ச்நி | பமகரிசரிநிச \|\| |
| | ... . நிர்மல.சுகம் தே.. | டு.. ம . | ன. மே... \|\| |
| 4. | ரிமபச் நிரிச்ா நிபா, கமநிதபா | கா,ரி ரீ; | ;;கரிகாரிஸநீ \|\| |
| | .. நி த் யா. ... ... னந் தத்தை | நா. டு.. | .. ப. ர.. \|\| |
| | சநி சரி மபநிம பநிச்ரி ரிமக்ரி | சா; பநிரிச் | நிபமக ரிசநிச \|\| |
| | ... நிர்மலசு.கம் தே... | டு... ம.ன. | .... மே... \|\| |
| 5. | ரிம பச் நீச்ரி நீபமபச்நீப | கா,ரி ரீ ; | ; ம க ம ரி க ச \|\| |
| | .. நித் யா.. . னந் தத்தை | நா. டு... . | .. ப. ர .... \|\| |
| | ரிநிசச , ககா காகச ,க மா | கமபதபநிதப | மதபம கரிநிச \|\| |
| | .. நிர் மல சுகம் தே . | டு ...... | ம. ன. மே... \|\| |
| | ரி ம \|\| | | |

செவ்விசைத் தகைமைக்கு இந்த ஒரு பாடலே போதுமானதாகும்.

**சுரமும் சொல்லும்**

சுரத்தை ஒத்த சொல் அதாவது இயல் அமைந்திருத்தல் செவ்விசையின் மற்றொரு சிறப்பு. அவ்வகையில் அமைந்த பாடல் பல உண்டு. ஒரு எடுத்துக்காட்டு வருமாறு. இராகம் சங்கராபரணம் தாளம் ரூபகம்.

| | | |
|---|---|---|
| கமபா | பமகரி | ஸாநீ |
| உய்யும் | வ.கை | . . |
| சாரீ | கா கா | கரிகா |
| செய்யு | மு பா | யங்கள் |

ரீகா    மா பா    தநிஸ்ா

செய்யு    மு பா    யங்கள்

சுரமும் சொல்லும் இணைந்து ஒலிக்கும்போது அதன் இனிமையே தனி.

**விரைவு நடை**

ஒரே நடையில் பாடிக் கொண்டிருக்கும்போது பாடலில் ஒரு இனிமையை ஏற்படுத்தவும் பொருள் செறிவிற்காகவும் சற்றே விரைவு நடையாக்கிப் பாடுதல் செவ்விசையின் சிறப்புத் தன்மைகளுள் ஒன்று. அதனை அப்படியே கையாண்டுள்ளார். எடுத்துக்காட்டாக ஒரு பாடல் வருமாறு. இராகம் அடாணா - தாளம் ஆதி.

மா , ரீ , மா பாபா பாபா | நீ , பா, . மா | பா மா பா பா ||

மண்ணும் ச ராச ரமும் | வி. ண்ணும் | படைத்தளித்து ||

ரீமா பாநிப நீ ; ; ; | ; ; ; ச்ா | ச்ா ச்ா ச்ா ச்ா ||

நீக் கும் .. .. .. .. | .. .. .. பரா | ப ரந் த ன் ||

பா,நீ ,ச்ா ரீமா நீ ச்ா | ச்ா, ரி ஸ்நிதா | தாதா பா மா ||

வண்ணம லர்ப்ப தத்தை | கா,ணும் பொ | ழு தி லின்பம் ||

ரிமபநி பமரீ ; ; ; ; | ; ; ; சா | ரீ மா பா பா ||

தே... க்கும் .. .. .. .. | .. .. .. ஆ | கையி னா லே ||

**மத்தியமகாலம்**

ம பா நீ, ச் ரீ மா ரீ ச்ா | ச் ரீ ச்ா , நீ | ச்ா ச்ா ச்ா ச்ா ||

உண்ணும் பொழுதும் வேலை | பண்ணும் பொ | ழுதுமொன்றை ||

ச் ரீ ச்ா, ச் ச்நிதா தா தா | கா, ரீ, சா | ரீ மா பா நீ ||

எண்ணும் பொழுதும் துன்பம் | நண்ணும்பொ | ழு து மே . ||

**முடிவுரை**

கிறித்தவ மதத்திற்கும் செவ்விசைக்கும் நல்ல ஒரு தொடர்பு உண்டு என்பதை நிரூபிக்கும் வண்ணம் வேதநாயகம் பிள்ளையின் பாடல்கள் அமைந்துள்ளன. அவர் வாழ்ந்த காலம் இந்துஸ்தானி இசை பரவலாகப் பேசப்பட்ட காலமாகையால் இந்துஸ்தானி இராகத்தின் ஆளுமையும் ஓங்கியுள்ளது. இராகமும் தாளமும் பொருத்தமுற அமைந்திருத்தல் மட்டும் ஒரு பாடல் சிறப்புற போதாது என்பதையுணர்ந்து செவ்விசை அரங்கிற்கேற்ற பல சிறப்புத் தகுதிகளுடன் இப்பாடல்கள் அமைந்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

# இசையியலில் இசைக்கலைச் சொற்கள்

**இரா. வசந்தமாலை**

பாரதிதாசன் மகளிர் கல்லூரி
புதுச்சேரி

இசைத்துறைக் கலைச்சொற்கள் பற்றி ஆய்வது இக் கட்டுரையின் நோக்கம்.

**கோவை (சுரம்)**

இன்று 'சுரம்' என்பதையே 'கோவை' என்று இலக்கியங்கள் குறிப்பிட்டுள்ளன. இக்கோவைகள் ஏழாகும். அவை குரல் (ச), துத்தம் (ரி), கைக்கிளை (க), உழை (ம), இளி (ப), விளரி (த), தாரம் (நி) என்பனவாம்.

''குடமுதல் இடமுறையாக் குரல், துத்தம்
கைக்கிளை உழை இளி விளரி தாரம்என
விரிதரு பூங்குழல் வேண்டிய பெயரே'' *(சிலம்பு. 17:13)*

என்று சிலம்பும்,

''குரலே துத்தம் கைக்கிளை உழையே
இளியே விளரி தாரம் என்றிவை
ஏழும் யாழின் இசைகெழு நரம்பே'' *(1402)*

என்று பிங்கல நிகண்டும் குறிப்பிட்டுள்ளன. தமிழிலக்கியங்களும், நிகண்டுகளும், இலக்கண நூல்களும் இவ்வாறு தமிழில் இசைத் துறைச் சொற்களைக் குறிப்பிட, நாம் வடமொழிச் சொற்களையே கையாண்டு வருகிறோம். அதாவது, 1. குரல் - சட்சம், 2. மென் துத்தம் - சுத்தரிடபம், 3. வன்துத்தம் - சதுசுருதி ரிடபம், 4. மென் கைக்கிளை - சாதாரண காந்தாரம், 5. வன்கைக்கிளை - அந்தர காந்தாரம், 6. மெல்லுழை - சுத்த மத்திமம், 7. வல்லுழை - பிரதி மத்திமம், 8. இளி - பஞ்சமம், 9. மென்விளரி - சுத்த தைவதம், 10. வல்விளரி - சதுசுருதிதைவதம், 11. மென்தாரம் - கைசகி நிடாதம், 12. வன்தாரம் - காகலிநிடாதம் என்கிறோம்.

**பண்ணுப் பெயர்ப்பு (சுருதிபேதம்)**

இன்று வடமொழியில் 'கிரகபேதம்' அல்லது 'சுருதி பேதம்' என்றழைப்பதைத் தமிழ் இலக்கியங்கள் 'பண்ணுப் பெயர்த்தல்' என்று குறித்துள்ளன.

''ஏழ்புணர் சிறப்பின் இன்தொடைச் சீறியாழ்
தாழ் பயற்கணை குரல் கடுப்பப் பண்ணுப்பெயர்த்து''
(மதுரை, 559 - 560)

''.....ஊர் தொறும் நல்லியாழ்ப்
பண்ணுப் பெயர்த்தன்ன காவும் பள்ளியும்'' (மலை, 451)

என்பன இலக்கியப் பதிவுகளாம்.

**ஆரோசை, அமரோசை (ஆரோகணம், அவரோகணம்)**

ஒரு பண்ணுக்குரிய நரம்புகளை ஏறு நிரலில் இசைப்பது 'ஆரோசை'. இறங்கு நிரலில் இசைப்பது 'அமரோசை'. ஆனால் நாம் பயன்படுத்துவது 'ஆரோகணம்', 'அவரோகணம்' எனும் பிற மொழியே.

''ஒத்தநிலை யுணர்ந்ததன்பின் ஒன்று முதல்படி முறையாம்
அத்தகைமை ஆரோசை அமரோசைகளில் அமைத்தார்''
(பெ.பு. ஆனாய. பா. 24)

என்று சேக்கிழார் 'ஆரோசை', 'அமரோசை' பற்றி இயம்பியுள்ளார்.

**ஆளத்தி (ஆலாபனை)**

ஆளத்தி என்பது இசைப்பாடலின் தொடக்கத்தில் அமைவதாகும். இன்றைக்கு இதனை 'ஆலாபனை' என்கிறோம். ஆலாபனைக் குரிய தமிழ் வழக்கு 'ஆளத்தி' என்பதாகும். ஆளத்திக்குரிய முழு இலக்கணத்தைப் பஞ்சமரபிலும், சிலம்பிலும் காணலாம். ஆளத்தி, வாய்ப்பாட்டுச் சொற்களாகிய 'தென்னா தெனா' எனும் சொற்களை வைத்துப் பண்ணை விரிவாகப் பாடுவதாகும்.

''தென்னா தெனா என்று பாடுவரேல் ஆளத்தி
மன்னாஇச் சொல்லின் வகை''
(சிலம்பு. 3:26, அடியார்க்கு. ப. 104)

''குன்றாக் குறிலைந்தும் கோடா நெடிலைந்தும்
நின்றார்ந்த மன்னகரம் தவ்வொடு - நன்றாக
நீளத்தால் ஏழும் நிதானத்தால் நின்றியங்க
ஆளத்தி யாமென் றறி'' (சிலம்பு. 3:26, அடியார்க்கு. ப. 105)

என அடியார்க்கு நல்லார் சிலம்பின் உரைவிளக்கத்தில் ஆளத்திக்கு உரிய இலக்கணத்தைக் குறிப்பிட்டுள்ளார்.

**பண்ணின் வகை**

இசை இலக்கணத்தில் ஏறு, இறங்கு நிரல்களில் முறையே 7 கோவைகள் (சுரங்கள்) மாறாது இடம்பெறின் அப்பண்களைப் 'பெரும்பண்' என்பர். தாய்ப்பண், தலைமைப்பண் எனவும்

குறிப்பிடுவர். ஏறு, இறங்கு நிரல்களில் முறையே 6 நரம்புகளை உடையவை 'பண்ணியல்' என்றும், 5 நரம்புகளைப் பெற்று வருவன 'திறம்' என்றும், 4 நரம்புகளைப் பெற்று வருவன 'திறத்திறம்' என்றும் இசைவல்லுநர்கள் வகுத்துள்ளனர்.

''பண்ணோர் பதினேழாம், பண்ணியல் பத்தேழாம்
எண்ணுந் திறமிரண்டும் பத்தென்ப - நண்ணிய
நாலாந் திறத்திறமோர் நான்கு முளப்படப்
பாலாய பண்ணூற்று மூன்று'' (வெண்பா - 24)

என்ற பஞ்சமரபு யாழ்மரபு வெண்பாவின் வழி, பண்கள் - 17, பண்ணியல் - 70, திறங்கள் - 12, திறத்திறம் - 4 ஆகமொத்தம் 103 பண்கள் தோற்றம் பெறுகின்றன என்பதை உணரலாம். வட மொழியில் இவை முறையே சம்பூர்ணம், சாடவம், ஔடவம், சதுர்த்தம் என்பர். எனவே,

| தமிழ் மொழி | வடமொழி | நரம்புகள் |
|---|---|---|
| பெரும்பண் | சம்பூர்ணம் | 7 - 7 |
| பண்ணியல் | சாடவம் | 6 - 6 |
| திறம் | ஔடவம் | 5 - 5 |
| திறத்திறம் | சதுர்த்தம் | 4 - 4 |

என்பதறியலாம்.

**இசை உருக்கள் (உருப்படிகள்)**

'உருப்படிகள்' என்று அழைக்கப்படுவன 'இசை உருக்கள்' என்று தமிழிலக்கியங்களால் குறிக்கப்பட்டுள்ளன. பல வடிவங் களில் அமைந்த இசைப்பாடல்களே இசை உருக்களாகும். சுர வரிசைகள், அலங்காரங்கள், கீதங்கள், வர்ணங்கள் ஆகிய உருக் களைப் 'பயிற்சி உருக்கள்' என்றும் கீர்த்தனை, பதம், தில்லானா போன்ற உருக்களை 'அரங்கிசை உருக்கள்' என்றும் கூறுவர். வீ.ப.கா. சுந்தரனார் தமது நூலில் 'கருவி இசையுரு' (Instrumental forms), 'நாட்டிய இசையுரு' (Dance forms), 'நுண்கலையுரு' (Art Music), 'தொழுகை யிசையுரு' (Sacred Music), 'நடன நாட்டிய இசையுரு' (Music for operas and dance dramas), 'சிற்றூர் இசையுரு' (Folk Music) என்றும் பலவகைப்படுத்தியுள்ளார் (தமிழிசைக் கலைக்களஞ்சியம் I, ப. 249).

''வாங்கிய வாரத்தியாழுங் குழலும்....சேர்த்தி'' (சிலம்பு. 3: 50-52 அடிகள்) என்பதற்கு ''உருக்களில் யாழ்ப்பாடலும், குழலிவிசையும், கண்டப்பாடலும்....'' (அரும்பதவுரை, ப. 64) என்றும்,

''கூடை நிலத்தைக் குறைவின்று மிகுத்தாங்கு'' (சிலம்பு. 3:48 அடி) என்பதற்கு ''உருவை இரட்டிக்கிரட்டி சேர்த்த விடத்து....'' (அரும்பதவுரை, ப. 64) என்றும் அரும்பதவுரையார் உரை வகுத்துள்ளார்.

இவ்வாறு, தமிழிசைக் கலைச்சொற்கள் பலவாக இருக்க, இலக்கியங்களில் சுட்டப்பெறாத சொற்களையும், பிறமொழி இசைச் சொற்களை மட்டுமே இன்று வரையில் நாம் கற்றும், கற்றுக்கொடுத்தும் வருகின்றோம். சான்றாக, சில சொற்களைக் காணலாம்.

| எண் | பிறமொழி வழக்கு | தமிழிலக்கிய வழக்கு |
|---|---|---|
| 1. | இராகம் | பண் |
| 2. | சுரம் | நரம்பு, கோவை |
| 3. | தாளம் | பாணி |
| 4. | சட்சம் (ச) | குரல் |
| 5. | ரிடபம் (ரி) | துத்தம் |
| 6. | காந்தாரம் (க) | கைக்கிளை |
| 7. | மத்திமம் (ம) | உழை |
| 8. | பஞ்சமம் (ப) | இளி |
| 9. | தைவதம் (த) | விளரி |
| 10. | நிடாதம் (நி) | தாரம் |
| 11. | ஆரோகணம் | ஆரோசை |
| 12. | அவரோகணம் | அமரோசை |
| 13. | ஆலாபனை | ஆளத்தி |
| 14. | பூர்வாங்கம் | முன்னர்ப்பாகம் |
| 15. | உத்தராங்கம் | பின்னர்ப்பக்கம் |
| 16. | கிரகபேதம் | பண்ணுப்பெயர்ப்பு |
| 17. | சம்பூரணம் | பெரும்பண் |
| 18. | சாடவம் | பண்ணியல் |
| 19. | ஔடவம் | திறம் |
| 20. | சதுர்த்தம் | திறத்திறம் |
| 21. | தாரம் | வலிவு |
| 22. | மத்திமம் | மெலிவு |
| 23. | மந்தரம் | சமன் |
| 24. | கர்த்தா ராகம் | தலைமைப் பண் |
| 25. | ஜன்னிய ராகம் | கிளைப்பண் |

| | | |
|---|---|---|
| 26. | கிருதி | இசைப்பனுவல் |
| 27. | ஜதி | தாளஅளவுச் சொற்கட்டு |
| 28. | காலை இராகம் | வைகறைப்பாணி |
| 29. | அலங்காரம் | கோவைஅணி |
| 30. | சுருதி அளவு | அலகு |
| 31. | தாள அளவு | இயவு |
| 32. | வாத்தியம் | இயம் |
| 33. | ஆர்மோனியம் | கட்டைச்சுருதி / ஒத்திசைப்பெட்டி |
| 34. | அவதாளம் | தப்புத்தாளம் |
| 35. | அபசுரம் | செம்பகை நரம்பு |
| 36. | அம்சசுரம் | உரிமைக்கோவை |
| 37. | அலங்காரம் | அருக்கணி |
| 38. | நுட்பஒலி | அரி |
| 39. | ஆடலாசிரியன் | கூத்துள் படுவோன் |
| 40. | அதிர்வு | கம்பித்தல் |
| 41. | இரசம் | இரதம் |
| 42. | பெண் இசைக்கலைஞர் | பாடிணி |
| 43. | இசைக்கலைஞர் | பாணன் |
| 44. | வாய்ப்பாட்டு | மிடற்றுப்பாடல் |
| 45. | ஸ்தாயி | மண்டிலம் |

இசைத்துறைக் கலைச்சொற்களை 'இசையியலில்' இடம் பெறச் செய்வதால்,

1. இயல், இசை, நாடகம் எனும் முப்பிரிவில் இசைத்தமிழின் மேன்மையை உணரலாம்.
2. இளைய இசை வல்லுநர்களுக்குத் தமிழிசைக் கலைச்சொற்களை அறிமுகப்படுத்தலாம்.
3. தமிழில் இசைத்துறைச் சொற்களே இல்லை என்பாரின் கருத்தை மாற்றலாம்.
4. இசை அரங்குகளில் தமிழிசைப் பாடல்களுக்குரிய 'துக்கடா' நிலை ஒதுங்கியதைப் போல, 'இசையியலில்' பிறமொழி இசைச் சொற்களின் ஆதிக்கம் அகலலாம்.
5. தமிழில் சிறந்த இசைக்கலைச் சொற்களை உருவாக்க சிலப்பதிகாரம், அதன் உரைகளையும் (அரும்பதம் - அடியார்க்கு நல்லார்) முன் மொழியலாம்.

# ராக ரஸம்

***வெ. ஜனகமாயாதேவி***

*அவினாசிலிங்கம் மகளிர் பல்கலைக்கழகம்*
*கோயமுத்தூர் - 641 043*

ஆய கலைகள் அறுபத்தி நான்கினுள் 'இசை'க்கலையை 'நுண் கலை' என்று உயர்வுறக் கூறியுள்ளது சாலச் சிறந்தது. ஏனெனில் இசை மட்டுமே விலங்கினங்களையும் மயக்க, தன்வயப்படுத்த வல்லது. ஓர் இசைக் கச்சேரியில், விஞ்ஞான ரீதியில் ஞானம் இல்லாத ஒருவன் அந்தக் கச்சேரியில் ஒரு நல்ல இடம் வரும் பொழுது தன்னை மறந்து ரஸித்து லயிக்கிறான். ஆதலால் ரஸனை என்பது, ரஸிப்புத் தன்மை என்பது பொதுவான ஒன்று.

இசையில் ஒவ்வொரு ராகமும் ஒரு பரந்து விரிந்த கடல். சாதனையாளன் ஒவ்வொரு முறையும் கடலில் மூழ்கும்போது, தனக்குக் கிடைத்தன எல்லாவற்றையும் அள்ளிக் கொணர்வான். அதாவது கடலில் நீந்தித் திளைத்து, கடலில் கிடைக்கும் பொக்கிஷமாம் ராகத்தின் வெவ்வேறு சஞ்சாரங்களை, வார்த்தை ஜாலங்களை யாம் பெற்ற இன்பம் இவ்வையகம் பெறுக என்று வாரி வாரி வழங்கி நம்மை ரஸிக்கச் செய்த ரஸானுபவர்கள் அநேகர். **'சங்கீத பிதாமஹர்'** என்றழைக்கப்படும் **புரந்தரதாஸர்**, **'சங்கீத மும்மூர்த்தி'**களாம் **தியாகராஜர், முத்துஸ்வாமி தீக்ஷிதர், ஸ்யாமாசாஸ்திரி** போன்றோரும் **அன்னமாச்சாரியார், கோபால கிருஷ்ணபாரதி, ஊத்துக்காடு வெங்கடசுப்பய்யர்** என்றும் அம்மஹான் களைப் பட்டியலிட்டுக் கொண்டே செல்லலாம்.

இவர்கள் அனைவரின் படைப்புக்களையும் இவர்கள் கையாண்டுள்ள அனைத்து ராகங்களையும் ஆராய்ந்து ரஸித்து எடுத்தியம்புவது என்பது கடலில் முத்துக் குளிக்கும் ஒருவன், இப்புவியைச் சூழ்ந்துள்ள ஸாகரம் முழுவதிலும் முத்தெடுக்க விழைவதே போல், விண்மீன் அந்தமில்லா பிரபஞ்சம் முழுவதிலும் ஸஞ்சரிக்க விழைவதுபோல், நீந்த நீந்த, இந்த சங்கீத ஸாகரம், பரந்து நீண்டு விரிந்து சென்று கொண்டே இருக்கிறது. கோபாலகிருஷ்ணபாரதியின் ஒரு குமுறலில், தியாகப்ரும்மத்தின் ஒரு கெஞ்சலில், தீக்ஷிதரின் ஒரு குழைவில் என்னை மறந்து நிற்கும் நான் 'ஓரளவு'கூட ஆராய்ச்சி செய்வது ஹிமாலய சாதனையாகத்

தான் தோன்றுகின்றது. கடலில் நீந்தும் மீன் குஞ்சு தன் குட்டிக் கண்களால் கண்ணுக்கெட்டிய தூரம் இருந்த இடத்திலிருந்தே துழாவுவது போல், குழந்தைப் பிரயத்தனமாக 'முகாரி' என்ற ஒரே ஒரு ராகத்தை மட்டுமே எடுத்து அந்த ராகத்தின் ஒரு சில பாடல்களுள் ஒரு சில முத்துக்களை மட்டுமே எடுத்துக் கோர்த்து மக்களின் ரஸனைக்கெனச் சமர்ப்பித்துள்ளேன்.

இசையில் உயிர் நாடியாக விளங்கும் ராகமும் ரஸமும் தந்தியும் நாதமும்போல் இணைந்து உணர்ச்சியைத் தூண்டி வாழ்வை ஜீவனுள்ளதாகச் செய்கின்றன. முகாரி ராகம் பொதுவாகக் கருணை, சோக ரஸத்தைச் சாரும். முகாரி ராகத்தின் கிரஹ ஸ்வரம் ரிஷபமாகும். இது விரிவான ஆலாபனைக்கு இடம் தராது.

**முகாரி ராகத்தின்** ஆரோஹணக் கிரமம் - ஸ ரி ம ப நி த ஸ்
அவரோஹணக் கிரமம் - ஸ் நி த ப ம க ரி ஸ.

முகாரியில் வரும் ஸ்வரங்கள் - சதுஸ்ருதி ரிஷபம், சாதாரண காந்தாரம், சுத்த சதுஸ்ருதி தைவதங்கள் மற்றும் கைசிகி நிஷாதம். 'பதஸ்' எனும் கிரமமாக வந்தாலும் சதுஸ்ருதியேதான் வரும். 'நீதமா', 'பதஸ்' - இவை விசேஷ சஞ்சாரங்களாகும். அவரோஹணத்தில் வரும் தைவதம், சுத்த தைவதமாகும். பச்சாதாபம், சோகம், மனவேதனை போன்ற கருணா ரஸ பாவங்களுக்குப் பொருந்தும் ராகமாகும்..

முகாரி ராகத்தில் அதிக பாடல்கள் புனைந்துள்ளது தியாகராஜர் அவர்கள்தான். தியாகராஜர் 10 பாடல்கள் இந்த ராகத்தில் இயற்றி ஒவ்வொன்றும் ஒவ்வொரு மெருகாக, ஒவ்வொரு விண்மீனாக வடிவமைத்துத் தந்துள்ளார். பாபநாசம் சிவன் அவர்கள் எட்டுப் பாடல்கள் புனைந்துள்ளார்கள். தீக்ஷிதர் அவர்களின் மூன்று பாடல்கள் பிரபலமாக உள்ளன. ஏனையோர் ஓரிரு பாடல்களே இந்த ராகத்தில் வடிவமைத்துள்ளார்கள். முகாரி ராகத்தின் கருணா ரஸமானது பாடலோடு எவ்வாறு இயைந்துள்ளது என்பவற்றைச் சற்றே காணலாம்.

19-வது அஷ்டபதியான **'வதஸியதி'**யில் கிருஷ்ணன் கொண்ட வருத்தமானது முகாரியில் சித்தரிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது. அவரது பச்சாதாபமும் (repentance) மன்னிப்பிற்காக வேண்டுவதும் ராகபாவத்தின் மூலம் நன்கு வெளிக் கொணரப்பட்டுள்ளது. இதில் கிருஷ்ணன் ராதையிடமிருந்து தாம் பிரிந்திருப்பதால் தனக்கு உண்டாகின்ற வருத்தத்தைப் பற்றிக் கூறி அவளிடம் மன்னிப்புக் கோருகிறார். இந்த அஷ்டபதி கருணா ரஸத்தைச் சித்திரிப்பதற்கு மிகவும் பொருத்தமானதாகக் கருதப்படுகின்ற முகாரி ராகத்தில் அமைந்துள்ளது.

குறவஞ்சி நாடகங்களுள் ஒன்றான **'த்யாகேசர் குறவஞ்சி'**யில் உள்ள 'காணேனே சிங்கிதனை' என்ற பாடல் சோக ரஸத்தையே காட்டுகிறது. சிங்கன் பாடும் இப்பாடலில், 'நல்ல மஞ்சள் மணத்துடன் வளம் பொருந்திய பொன் வளையல்களை அணிந்த வஞ்சியவள் கொஞ்சிப் பேசுபவள், காதளவோடிய விழியானது கருநிற வண்டைப் போன்றது, மார்பின் முலை செண்டு போன்றது' என்று சிங்கியானவள் சிங்கனின் மனமெனும் திரையில் பளிச்சிட, அவன் ஐயகோ! அத்தகைய அழகு மிக்கவளைக் காணவில்லையே! அழகு சிலையவள் என் நெஞ்சத்தில் காதலெனும் சுடரைத் தூண்டி விட்டுச் சென்று விட்டாளே! அவளை எங்கு சென்று தேடுவேன்? அவளைக் காணேனே! என்று சிங்கன் துடியாயத் துடிக்கின்றான்.

';பநி, நிததஸா; || ;தரிஸ்நிதா பாதப பம ||
கா - ணே.னே சிங்கி.த னை ...

**முகாரி ராகத்திற்கு உயிரூட்டும் ப்ரயோகமான பநி, நிததஸா**

தரும் சோக இசை 'காணேனே!' என்ற சொல்லின் பொருளோடு இயைந்து ராகத்திற்கு ரஸத்தையூட்டுகிறது. அவளின் ரூப லாவண்யத்தை விவரிக்கும் பொழுதும் அவளின் பெருமிதம் கூறப்பட்டாலும் சோகமே கோலோச்சுகிறது. உதாரணமாக அன்புக்குப் பாத்திரமானவர் காணவில்லையெனில் அல்லது இவ்வுலகை நீத்தார் எனில் அப்பொழுது அங்கு புகழ்ந்து கூறப் படும் அந்த நபரைப் பற்றிய உயரிய குணங்கள், சிறப்பம்சங்கள், அந்த நபரைப் பற்றிய நினைவினால் உள்ளத்தில் ஏற்பட்ட உன்னத அம்சங்கள் யாவும் தற்பொழுது தன்னருகில் இல்லையே என்ற உண்மையினால் ஏற்படும் ஏக்கச் சிதறல்களே! இத்தகைய அருமையான கருத்துப் பொக்கிஷத்திற்குரிய, மேலும் உணர்ச்சியைச் செவ்விய வகையில் தூண்டவல்ல இசையும் அமைந்து விட்டால் கூறவும் வேண்டுமோ!

இந்த முகாரி ராகப்பாடலின் தாதுவும் மாதுவும் சேர்ந்து அவன் மனக்குமுறல்களையெல்லாம், சோகத்தை யெல்லாம், சோகமெனும் அருவி போல் கொட்டித் தீர்க்கின்றன. இதைச் சொல்லால் விளக்குவது கடினமே. உணர்ந்து அனுபவித்தலே சிறப்பு. இப்பாடல் முகாரி ராகத்திற்குரிய லக்ஷணத்தையே கண்முன் எடுத்துக் கூறுகின்றது என்பதில் கேட்போரும் உறுதிப்படுவர்.

**'என்றைக்கு சிவகிருபை வருமோ'** என்ற நீலகண்ட சிவனின் சாபு தாளப் பாடலின் எடுப்பு 'ரீ' என்ற ஸ்வரத்தில் ஆரம்பிக்கின்றது.

,ரீ மா மா || பமாபா நிததா ||
என் றை க்கு சிவ க்ரு பை..

என்று பல்லவி ஆரம்பிக்க, அனுபல்லவியோ

,பத ஸ்ா, ஸ்|| ரி ரீ ரிக் க்ரிரீ ||
கன் று. கு ரலைக் கே ட் டு..

என முகாரி ராகத்தின் **விசேஷ சஞ்சாரத்தில் 'பத ஸ்ா'** என்று ஆரம்பித்து, பாடுபவர் தன்னை இறைவனின் குழந்தையாகச் சுட்டிக் காட்டி இருப்பது சிறப்பு வாய்ந்ததாகும். கன்று குரலைக் கேட்டு ஓடி வந்து துயர் தீர்க்கும் பசு போல், இறைவா என் துயர் தீர்க்க ஓடிவா என்று பாடியுள்ளார். இப்பாடலின் சரணத்தில் உலகில் உள்ளோர் பொன், பொருள், தனம் உள்ளவர்களையே கொண்டாடித் துதி பாடுவார்கள்; அப்படிப்பட்ட இவ்வுலகிலிருந்து செல்ல, என்றைக்குச் சிவகிருபை வருமோ? என்று உலகில் உள்ளோரைக் கண்டு நொந்து வெம்பிச் சொல்வது போல் உள்ளது. இப்பாடலானது 'ரீ' என்ற மத்திய ஸ்தாயி ஸ்வரத்தில் கீழிருந்து ஆரம்பித்து, அதாவது, ஆதார ஷட்ஜத்தைத் தொட்டு, அனுபல்லவியில் பஞ்சமத்திலிருந்து ஆரம்பித்துச் சற்றே மேல் நிலை எட்டி அதிலிருந்து தாரஸ்தாயிக்குச் சென்று பின் மீண்டும் சரணத்தில், உலகைப் பொல்லாததென நொந்து கொள்ளும்பொழுது மீண்டும் தாரஸ்தாயி நிலைக்குச் செல்கின்றது. பின் படிப்படியாகக் குறைந்து ஆதார ஸ்வரமான ஷட்ஜத்தை அடைவது வாழ்க்கையின் நடைமுறையைக் காட்டுகிறது. எடுத்துக் காட்டாக, மன உணர்ச்சியை எடுத்துச் சொல்லும் பொழுது முதலில் தாழ்ந்த ஸ்தாயியில் மெதுவாக அழுத்தமில்லாமல் வெளிப்படுத்திப் பின் உணர்ச்சியின் பாதிப்பினால் அந்தக் குரல் நிலை படிப்படியாக உச்ச எல்லையை (ஸ்தாயி) அடையும். பின் உச்ச ஸ்தாயியிலேயே நிற்காமல் படிப்படியாக இறங்கி வந்து கடைசியில் சிறிது சிறிதாகத் தேய்ந்து ஓய்ந்து விடும். சாதாரண நடைமுறை வாழ்க்கையில்கூட இதைக் காணலாம். சோகத்தை வெளிப்படுத்தும்போதோ கோபத்தை வெளிப்படுத்தும் போதோ முதலில் அவ்வுணர்ச்சி தாழ்ந்த நிலை யிலிருந்து படிப்படியாக ஏறி உச்ச எல்லையை அடைந்து உச்ச எல்லையிலேயே நிற்காமல் அதேபோல் படிப்படியாக இறங்கி மீண்டும் தாழ்ந்த ஸ்தாயிலேயே ஒலிக்கும். எனவே, **'என்றைக்கு சிவ கிருபை'** என்ற இப்பாடல் இறைவனின் அன்பை நாடித் துடியாய் துடிப்பதை நன்கு பறைசாற்றுவதாய் உள்ளது. எனில், முகாரி ராகமானது சோகம், கருணை, பச்சாதாபம் இந்த ரஸத்தில் மட்டுமேதான் சோபிக்குமா?

கோபாலகிருஷ்ணபாரதியின் நந்தனார் சரித்திரத்தில் முற்றிலும் மாறுபட்டதொரு உணர்ச்சியை வெளிக்கொணர்வதற்கு

உபயோகப்படுத்தப்பட்டுள்ளது. சிதம்பரத்திற்குச் செல்ல தன்னை அனுமதிக்குமாறு வேண்டும் நந்தனாரின் வேண்டுகோள் வேதியனால் **'சிதம்பர தரிசனமா?'**

ரிரி மம பப தத ஸ்
சிதம் பர தரி சன மா-

என்று கோபமாக மறுக்கப்படுகின்றது. இங்கே முகாரி ரௌத்ர ரஸத்தைச் சித்திரிக்கின்றது. இந்த எடுத்துக்காட்டு, இந்தக் கருத்தை நிரூபிப்பதற்கான பல எடுத்துக்காட்டுகளுள் ஒன்றெனக் கூறலாம். இந்த ரஸத்தின் வேறுபாடானது அதிலுள்ள ஸ்வரங் களைப் பாடும் வேறுபாட்டினாலும் ஸ்தாயி மாற்றங்களாலும் வேறுபடுகின்றது. பாடலில் அதிகப்படியான ஸ்வரங்கள் மத்யம ஸ்தாயி பஞ்சமத்துக்கு மேலும் தார ஸ்தாயியிலும் உள்ளன. இது அதிகமான கோபத்தை எடுத்துக்காட்ட பெரிதும் உதவுகின்றது. **'சிதம்பர தரிசனமா'** பாடல் ரிஷபத்திலிருந்து ஆரம்பித்து ஒரு கர்வத்தையும் அதிகாரத்தையும் காட்டுகிறது.

**முடிவுரை**

*'Aspects of Indian Music'* என்ற புத்தகத்தில் *Govinda S. Tembe* ஒவ்வொரு ஸ்வரத்திற்கும் ஒரு தனி ரஸம் உள்ளது என்றும் அவை கூட்டுச் சேர்ந்தால் எவ்வாறு மாறுதல் அடைகின்றன என்றும் விளக்கிக் கூறியுள்ளார். அதாவது, ஸ்வரங்களின் அசைவைப் பொறுத்து ராகத்தின் ரஸம் உண்டாகின்றது. ஒரு ராகத்தின் ஜீவ, நியாச ஸ்வரங்களும் ரஸத்தை மாற்ற உதவுகின்றன. ஒரு ராகத்தின் ஸ்வரங்களெல்லாம் ஜீவ ஸ்வரங்களானால் (தோடி, மோஹனம், சங்கராபரணம்) பல ரஸங்கள் ஏற்படும். ஸ்வரத்தினைக் கையாளும் விதத்தினாலும் அதாவது வேகத்தினாலும் ரஸம் மாறும். எனவே, ராகத்தின் ஸ்வர சேர்க்கைகளைப் படைப்பாளி எவ்வாறு குழைத்துச் சேர்த்து வடிவமைத்துக் கொடுக்கின்றாரோ அதுபோல் ரஸத்தின் தன்மை மாறுபடும். ஆனால், வார்த்தைகள் தரும் ரஸத்திற்கேற்ப ராகத்தை அமைத்துக் கருப்பொருளும் ராகபாவமும் இசைந்து ஒரு பாடலானது இயற்றப்பட்டால் அப்பாடலானது அதிக பொலிவுடன் விளங்கும் என்பது திண்ணம்.

# அழிந்து வரும் இலாவணி இசைக்கலை

**அ. கோபிநாத்**

*பிஷப் ஹீபர் கல்லூரி*
*திருச்சிராப்பள்ளி - 17*

பள்ளு, குறம், தென்பாங்கு, சிந்து, ஊசல், ஏர்ப்பாட்டு, ஏற்றப்பாட்டு, நடவைப்பாட்டு, களையெடுப்புப் பாட்டு, அறுவடைப் பாட்டு, பொலிதூற்றும் பாட்டு, பொங்கலிடப் பாட்டு என்ற கிராமிய இசைப்பாக்களைப் போன்றே எழுந்த பாடல்களுள் இலாவணி இசையும் ஒன்றாகும். ஏற்றமும் தோற்றமும் எழிலும், நடைச் சிறப்பும் கொண்டு பதினாறு பதினேழாம் நூற்றாண்டு களில் சிறப்புடன் விளங்கிய இக்கலை இன்று நலிந்து ஆற்றுவாரும், தேற்றுவாரும், ஆதரிப்பாருமின்றி நலிந்து - குறைந்து - நைந்து வருகின்றது.

**தோற்றம்**

தஞ்சையில் வாழ்ந்த சரபோஜி மன்னர்கள் காலத்தில் இலாவணி இசைக்கலை சிறப்புற அமைந்து விளங்கியது என்பதும், கொடிகட்டிப் பாடும் மரபு என வெற்றியுறப் பாடும் மரபும், மன்மதன் எரிந்தான் - எரியவில்லை எனக் கட்சிகட்டி வாதப் பிரதிவாத அமைப்பில் பாட்டால் நடந்த பட்டிமன்ற - விவாத மேடையாக இது அமையும். இதற்கு முன்னோடியாகச் சிலம்பில் காணலாகும் கானல் வரியில் கோவலன் மாதவி பாடிய பாடல் களைக் கூறுவாரும் உண்டு. வடமொழிப் பாங்கினைச் சொற்றொடர் களைச் சிலவிடத்துத் தழுவிப் பாடினும் தமிழின் சிறப்பை - நாட்டின் ஏற்றத்தை இவை போற்றத் தவறவில்லை. சான்றாக,

''சங்கம் வளர்த்த பாண்டி நகரமே - ஜெய
மங்கள மீனாள் தங்கி வாழும்மதுரை சிகரமே - கேள்
அங்கம் குளிர வைகை மூழ்கி அப்பன் சொக்கன் சந்நிதியேகி
தெண்டனிட்டு வாடி யூகிதேவி மீனா கருணைதியாகி
தங்கக்கலச கூடகோபுரம் சந்நிதி வாசல்
தையலே பொற்றாமரைக்குளம் - அதைத்
தாண்டியே அறுபத்துமூவர் தானுண்டு தேவார நால்வர்
வேண்டிடு பெண்ணே சங்கப் புலவர்''

என்ற அடிகளைக் காணலாம்.

**குருகுலம்**

குருகுலமாகக் கேட்டுப் பயிலும் இவ்விசைக்கலை வழி வழியாகக் கேட்டுப் பாடும் மரபில் அமைவதாம். தன் குருவிற்கு வணக்கம் கூறும் மரபிலமைந்த இலாவணி இசைப்பாடலொன்று :-

''மதுகிரண மதுபெருகி நிறை உப்பரிகை மணிமாட
கூடமோங்கும்
வரிசை குறையாத சிகரங்களும் தங்கமயமான சாளரங்களும்
கதிர்பரவும் சிற்றற நிலையங்களும் புங்ககுறும்
கனகமுத்தமிழ் சங்கிடும்

..... ......

அதியுன்னத பிரபல அதிமதுரவேல் இராமசாமியின்
அரியதொரு மாணவன்
அரங்கராசன் அமலகவி ஆர்வமிதே''

என வரும். எளியேன் கிராமிய இசைக்குழுவில் இலாவணி இசை பாடி வரும் திருவரங்கம் அரங்கராசன் தன் குருவணக்கப் பாடலாக இது அமைகின்றது.

**பாடல்களின் அமைப்பு முறை**

இலாவணி இசைக்கலை பல்வேறு பாடல்கள் கொண்ட அமைப்பாகும். இறைவனைப் போற்றிப் பாடும் பாடல்கள். புராண கண்டனமாகப் (புராண மறுப்பாக) பாடும் பாடல்கள் கண்டனப் பாடல் பாடுவதில் தஞ்சையில் பாபுதாஸ் என்பவர் வல்லவராக இருந்தார் எனக் கூறுவர். இயற்கை வர்ணனைப் பாடல்கள் - ரதி மன்மதன் எரிந்த எரியாத கட்சி கட்டிப் பாடும் பாடல்கள் - மெட்டுப் பாடல்கள், சிங்கார நடையலங்காரப் பாடல்கள் - போஜனப் பாடல்கள் - விருத்தப் பாடல்கள் பாடுவதில் வல்லவரான சி. இராமசாமி ஆகியோர் வல்லமை பெற்று வாழ்ந்துள்ளனர். கருநாடக இசைப்பாடல்களில் காணலாகும் பாடலாசிரியர் பெயர் முத்திரையுடன் இப்பாடல்கள் அமையும். அதில் ஆசான் பற்றிய குறிப்புகளும் அடங்கும்.

**பாடுவோரும் பாடும் முறையும்**

தொடக்க காலத்தில் இலாவணி பாடுவோர் இடது கையில் துந்தனா என்னும் இசைக்கருவி, வலது கையில் டேப் என்னும் தோல்கருவி காலில் தாளமிடும் கட்டை அல்லது ஜால்ரா என்ற இசைக்கருவி ஆகியன கொண்டு விடியவிடியப் பாடுவர் என்பதால் கூத்தாடி மட்டுமே கிழக்கே பார்ப்பான் என்பதல்ல; இலாவணி இசைக்கலைஞரும் கிழக்கே கதிரவன் ஒளியைக் காணும் வரை பாடுவர் என்பது தெரிகிறது. இப்பாடல்கள் கற்பனைச்

செறிவுடன் உடனுக்குடன் எடுத்து அல்லது மறுத்துப் பாட வேண்டி இருப்பதால் இக்கலைஞர்களால் அற்புத ஆற்றலைப் போற்றாமல் இருக்க இயலாது.

**பாடியோர்**

வாதம் செய்வோர் - எதிர்வாதம் செய்வோர் என இவரிடையே இருகுழுவினர் உண்டு. மெட்டுப்பாட்டுப் பாடுவோர், சிட்டா விருத்தம் பாடுவோர் எனவும் இவர்கள் அமைவர். சிறப்பான பாடல்கள் பாடியவருள் குறிப்பிடத்தக்கவர் தஞ்சை கோவிந்தசாமி நாவலர் ஆவர். திருச்சியில் வாதிகளே அஞ்சும் படியாக ·வாதிடவல்ல துரைசாமி நாவலர் குறிப்பிடத்தக்கவர். திருச்சியில் அருள்வாக்கு நிறைந்த மாமதிவாணரான யாதவபுர மதுரம் வடிவேல்சாமி, சரபம் பாடும் கோவிந்தசாமிப் பாவலர், தேவநகர் இலக்கணப் பெருங்கடல் என்று சிறப்பிக்கப்பட்ட சி. இராமசாமி நாவலர், கோடையிடிக் கோமான் என்று தன் சிம்மக்குரலால் சிறப்புப் பெற்ற நாகை தீனதயாளு, வேத ஆகம வித்துவான் கவிஞர் திருவாரூர் கோபால்சாமி, தஞ்சை சுப்புராயலு, நாகை மணிமுத்துதாசன், நீடாமங்கலம் இரத்தினம், திருச்சியில் மக்களால் போற்றப்பட்ட இலாவணி மங்களதாஸ், திருவரங்கத்தில் நடைசிருங்காரம் பாடுவதில் வல்லவரான போஜராஜகவிராயர் ஆகியோர் வளர்த்த இலாவணிக் கலையை மறக்க - மறுக்க வியலாது.

இவர்களுள் அண்மையில் வாழ்ந்து மறைந்த திருச்சி யாதவபுரம் மதுரம் வடிவேல்சாமியின் சீடர் இலக்கணப் பெருங் கடல் என்று பல்லோரால் போற்றப்பட்ட தேவநகர் சி. இராமசாமிப் பிள்ளை எரிந்த - எரியாத இரு கட்சிகளுக்கும் பாடும் ஆற்றல் பெற்றவர். இனிமை எளிமை இவர் பாட்டில் நிறைந்திருக்கும். கூற்றோரும் மற்றோரும் ஏற்கும் பாங்கும் தர்க்கவாத அமைப்பில் பாட்டுக் கட்டிப் பாடும் பாங்கினர். வேதங்கள், புராணங்கள், இதிகாசங்கள் இவர்கள் பாடல்களில் செறிந்திருக்கும்.

இத்தகைய சிறப்புப் பெற்ற இலாவணிக் கலையும் - கலைஞரும் ஆற்றுவாரும் போற்றுவாருமின்றி ஆதரிப்பார் இன்றிப் பலர் வறுமையில் அல்லாடுகின்றனர். சிலர் விடிய விடியப் பாடவேண்டும் என்பதால் மதுப்பழக்கத்தை மேற்கொண்டு உயிரை இழக்கின்றனர். இக்கலை வாழவேண்டுமெனில் இக்கலைஞரைப் போற்றி இலாவணி இசையைப் பாடமாக்கி திறன் பெற்றவரை அழைத்து இளைஞர்க்குப் பயிற்சி கொடுத்துச் செழிக்கச் செய்ய வேண்டும்.

# இசைநாடகக் கலைஞர்களின் குழூஉக்குறி

**பனையவயல் கா. காளிதாஸ்**

மா. மன்னர் கல்லூரி
புதுக்கோட்டை

இசை நாடகக் கலைஞர்கள் தங்களுக்குள் பேசிக் கொள்ளும் (இரகசிய மொழி) குழூஉக்குறியைப் பற்றி இக்கட்டுரை எடுத்தியம்புகிறது.

| **சொற்கள்** | **பொருள்** | **தமிழில் மூலச்சொற்கள்** |
|---|---|---|
| நெளிவு | = நாடகம், கூத்து | = நடி>நளி>நெளி>நெளிய>நெளிவு. |
| ஊளம் | = ஆர்மோனியம் | = ஊளி+அம் = ஊளம் (ஊளி = குரல்) |
| முழக்கம் | = மிருதங்கம், மேளம் | = முழக்கம் (ஆரவாரம், ஒலி, குடமுழா, மேளம்) |
| இணைய முழக்கம் = | | பக்கமேளம். |
| கிணிக்கம் | = தாளம் | = கிணி+அம் = கிணிக்கம் (கைத்தாளம்) |
| கெந்தா | = ஆடை, திரைச்சீலை, துணி | = கந்தா (கந்தை) சீலை, நல்லாடை |
| கொக்கரை | = குரல், சங்கு, தொண்டை | = கொக்கரை (சங்கு, ஒலித்தல், வாத்திய வகை, கெற்சிப்பு). |
| கீத்தம் | = பாட்டு, இசை, பாட்டுப்படி | = கீதம் கீத்தம் = கீதம் (பாட்டு) |
| கனத்தி | = அரிதாரம், பூச்சு | = கனத்தி = வைப்பரிதாரம். |
| கும்பநெளிவு | = கரகாட்டம் | = கும்பம்+நெளிவு = கும்பநெளிவு (கரகாட்டம்) |

வாகடம் = வசனம், பேச்சு, சொல் (வாகடம் = மொழி, வைத்திய நூல்)

**நடிகர்களின் பெயர்கள்**

கொண்டிக்காளீய் = இராசவேடதாரி = கொண்டி+காளீய்
(காளீய்>காளை) = கொண்டி = அடங்காதவன், கொண்டையுடையன் மேன்மையுள்ளவன்,

நாடகத்தைக் கொண்டு செல்பவன்.

கொண்டிமசைய் = இராணிவேடக்காரி = மேன்மையுடையவன்
(மசைய் மனுசை) (கொண்டி) அடங்காதவன், கொண்டையுடையவன், நாடகத்தைக் கொண்டு செல்பவன்.

வீத்யக் காளீய் = (நாரதவேடதாரி, அந்தணர், சோதிடர், அறிஞர், கம்மாளர், குயவர்) = வித்தகம் வீத்யம் வீத்திய = அறிவு, ஞானம், படைப்பு.

நாமக்காளீய் = கோமாளி = நாப்பு>நாப>நாம>நாமக்காளீய்
நாப்பு = எத்து, பரிகாசம், கேளிக்கை
நாம = அச்சம்.

(எத்து, ஏய்ப்பு, பரிகாசம், கேளிக்கை, அச்சம் போன்ற குணங்கள் கொண்டவர்)

சலங்கை மசைய் = நாட்டியக்காரி, நடனக்காரி (காலிற் சதங்கை கட்டி ஆடுபவர்)

ஊளங்காளீய் = ஆர்மோனியக்காரர், குழல் வாத்தியக்காரர்.

முழக்கங்காளீய் = மிருதங்கம், முழவு, மேளம் போன்றவற்றை வாசிப்பவர்.

இணைய முழக்கம் = (ஆல்ரவுண்ட்) பக்கமேளக்காரர்.

கிணிக்கங்காளீய் = தாளக்காரர்

**உயர்ந்த, தாழ்ந்த, மிகுதி, குறைவு எனும் சொற்கள்**

எத்து = பெரிய, சிறந்த, உயர்ந்த

பூதி = சிறிய, ஒன்றுமில்லாத, தாழ்ந்த.

**மூவிடப் பெயர்கள்**

எந்தி எனீய் = என், எனது, எனக்கு, நான். (தன்மை)

ஒந்தி, ஏனீய் = உன், உனது, உனக்கு, நீ (முன்னிலை)

அம்மாங்காளீய் = அவன்
அம்மாம் மசைய் = அவள் } (படர்க்கை)

**சுட்டுப்பெயர்கள்**

அக்கதீய் = அங்கு, அது (சேய்மைச்சுட்டு)

இக்கதீய் = இங்கு, இது (அண்மைச்சுட்டு)

உசத்தீய் = மேலே, உயரே

தாழீய் = கீழே, அடியில்.

**விளிச்சொற்கள்**

ஙீது = பாடு, கெங்காத்து = தூங்கு

ஆய் = செய், பாடு, அணி, புணர், வாங்கு, கொடு, ஒட்டு, அழு,

வதி = செல், நட, போ, வா,

தொடீஇ = தொடர்,

வாகடந்தொடீஇ = வசனம் பேசு

சல்லி விதி = மலங்கழி.

**தொழிற் பெயர்கள்**

ஆய்த்தல் = சாப்பிடுதல், செய்தல், பாடுதல், புணர்தல், அணிதல், வாங்கல், கொடுக்கல், அழுதல், சிரித்தல், பெறுதல் இன்னும் பிற தொழில்களைக் குறிக்கும் சொல்.

தொடித்தல் = தொடர்தல், பேசுதல்.

**வினாச் சொற்கள்**

எம்மாமத்தி? = எந்த ஊர்?

எம்மா நாதம்? = எவ்வளவு பணம்?

எம்மாங் காளீய்? = எந்த ஆள்?

**வியப்புச் சொற்கள்**

எம்மா மத்தி = எவ்வளவு பெரிய ஊர்!

எம்மா நாதம் = நிறைய பணம்! நிறையச் சம்பளம்!

எம்மாங் காளீய் = எவ்வளவு பெரிய ஆள்!

**இடப் பெயர்கள்**

கோட்டம் = இடம், ஊர், நாடு, நகரம்.

மத்தி = நாடகம், கூத்து நிகழுமிடம் (ஊர் நடுவில்)

**எண்ணுப் பெயர்கள்**

நிருத்தம் = கால் ¼

அரவாடி = அரை ½

சூல அரவாடி = முக்கால் ¾

ஏகம் = ஒன்று

இணையம் = இரண்டு

சூலம் = மூன்று

நாமுக (வேதி) = நான்கு

ஐமுக, (பஞ்ச) = ஐந்து

அறுமுக = ஆறு

எழுமுக = ஏழு

எம்முக = எட்டு

எம்முக ஏகம் = ஒன்பது

பதியம் = பத்து

கொண்டிப்புள்ளி = நூறு

எத்துகொண்டிப்புள்ளி, பதியக்கொண்டிப்புள்ளி = ஆயிரம்

* கொண்டிப்புள்ளி என்பது ஒரு இராசவேடதாரியின் ஒரு நாள் சம்பளமாகிய ரூ. 100 என்பதாகும்.

நாதம் = சம்பளம், பணம், ரூபாய், காசு (நாதம் = நாணயக்கயிறு)

**உணவுப் பெயர்கள்**

கும்மாயம் = சோறு, சாப்பாடு, உணவு = கும்மாயம் = பச்சைப் பருப்புச் சிற்றுண்டி.

இடியாரம், அட்டு = பலகாரம்

நீலு = தண்ணீர் நீர்>நீரு>நீலு

சித்தி = மது

தூள்சித்தி = கஞ்சா

**ஆண்பால், பெண்பால்**

காளீய் = ஆண் = காளை>காளைய்>காளீய் (காளை = ஆண் மகன்)

மசைய் = பெண் = மனுசை>மசைய், (மனுசை = பெண்).

கனதி மசைய் = இறுமாப்புப் பெண்.

கனதிக்காளீய் = பெருமைக்காரன்

பூதக்காளீய் = வெறும்பயல், கீழானவன்

பூதி மசைய் = ஒழுக்கங்கெட்டவள், கீழானவள், வேசி

நாட்டமசைய் = வேசி

நாட்டக் காளீய் = பொம்பளை பொறுக்கி, பெண்விரும்பி

எத்துக்காளீய் = நல்லவன், உயர்ந்தவன், மேல்சாதிக்காரன்

பொக்கயக்காளீய் = தாழ்ந்த சாதிக்காரன்

உதரமசைய் = கருவுற்ற பெண், வயிறு பெருத்தவள்

**உடலுறுப்புக்களின் பெயர்கள்**

நமரி = முடி, மயிர் = நமை>நமரி (நமை = செரிவு, அடர்த்தி)

துலக்கம் = கண், நெற்றி, காது, மூக்கு, அணிகலன்கள்.
(துலக்கம் = தெளிவு, ஒளி)

உதரி = வயிறு, கொப்பூள் = உதரம்>உதரி (உதரம் = வயிறு, கருப்பம்)

அதரி = உதடு = அதரம்>அதரி (அதரம் = உதடு)

வாகு = வாய் (நாணயம், நாநயம், சொல், நேர்மை சாமர்த்தியம்)

இசை நாடகக் கலைஞர்களான இவர்கள் அனைவருக்கும் தாய்மொழி தமிழேயாகும். அனைவரும் பொதுவாக வீட்டிலும் வெளியிலும் தமிழிலேயே பேசுகின்றனர். தேவை ஏற்படும் பொழுது இந்த இரகசிய மொழியைப் பேசுகின்றனர்.

இக்குழூஉக்குறியான மொழி பின்வரும் சூழல்களில் பேசப்படுகிறது.

1. நிகழ்ச்சி ஏற்பாடுகள் செய்ய வருபவர்களுக்கு முன் தமக்குள் ஊதியம் குறித்துப் பேசும் பொழுதும்,
2. நிகழ்ச்சி ஏற்பாடு செய்ய வந்திருப்பவரின் செல்வாக்கு, சமூக, பொருளாதார நிலைகுறித்துத் தமது குழுவுக்குள் பேசும்பொழுதும்,
3. நிகழ்ச்சி ஏற்பாடு செய்தவர்கள் வழங்கும் உணவின் தரம் பற்றிப் பேசும் பொழுதும்,
4. நிகழ்ச்சியைப் பார்த்துக் கொண்டிருக்கும் ரசிகர்களைப் பற்றியும் அவர்களது ரசிப்புத்தன்மை பற்றித் தமக்குள் பேசிக் கொள்ளும் போதும்,
5. நிகழ்ச்சி நடைபெறும்போது சக நடிகர்களுக்குள் ஏற்படும் நிறைகுறை பற்றித் தமக்குள் பேசும் போதும்,
6. நிகழ்ச்சி முடிக்கும் நேரத்தைக் குறித்துப் பேசும்போதும்,
7. நடிப்பு, பாட்டு, அடவு, தாளம் போன்றவைகளில் தவறும் போதும், தக்கவாறு செய்யும் போதும்,
8. தம்குழுவில் ஒரு கலைஞர் வராத நிலையில் அவருடைய பாத்திரத்தை வேறொருவர் ஏற்கும் நிலையிலும்,
9. தம் குழுவுக்குள் ஒருவரை ஒரு புகழவும், இகழவும்,
10. தம் குழுவுக்குள் ஏற்படும் பிரச்சினைகள் வெளியாருக்குத் தெரியாமல் ஒழுங்கு செய்யும் சூழலிலும் ஆகிய நிலையில் இக்குழூஉக்குறியாகிய இரகசியமொழி பேசப்படுகிறது.

# சிலம்பக் கலையின் வளர்ச்சி

**பா. பொன்னுராஜன்**

*அய்யநாடார் ஜானகி அம்மாள் கல்லூரி*
*சிவகாசி*

**சிலம்பம் - பெயர்க்காரணம்**

'சிலம்பம்' என்ற சொல் 'சிலம்பல்' என்ற சொல்லினடியாகப் பிறந்தது எனலாம். 'சிலம்புதல்' என்ற சொல்லுக்கு 'ஒலி எழுப்புதல்' என்று பொருள். கம்பை வேகமாகச் சுழற்றும் பொழுது ''விர்ர்...விர்ர்'' என்று ஒலி வரும். அவ்வாறு ஒலி எழுப்பி ஆடும் ஆட்டமாதலால் இது சிலம்பம் ஆயிற்று எனலாம். சிலம்பம் என்பது கம்பிற்கு மட்டும் உரிய பெயரன்று; அனைத்து ஆயுதப் போர் முறைகளையும் குறிக்கும் ஒரு பொதுவான சொல். எனினும், அனைத்து ஆயுதங்களிலும் கம்பே முதன்மையானதும், தாய் ஆயுதமாகவும் இருந்து வருகிறது.

தமிழர்களின் தற்காப்புக் கலைகளில் தலைசிறந்து விளங்குவது சிலம்பக்கலை ஆகும். வீர விளையாட்டுக்களில் முதன்மையானது சிலம்பாட்டமாகும். ''தேகப் பயிற்சிக்காகவும் தம் எதிரிகளை வெல்லுதற் பொருட்டும் ஒற்றை இரட்டைக் கொம்புகளாலும் மற்றும் பல கருவிகளாலும் பழகும் பழக்கம்''[1] என்று சிலம்பம் என்ற சொல்லுக்கு அபிதான சிந்தாமணி விளக்கம் தருகிறது.

**தோற்றம்**

ஆதிமனிதன் காட்டில் விலங்குகளோடு விலங்காக வாழ்ந்த காலத்தில் கொடிய விலங்குகளிடமிருந்து தன்னைத் தற்காத்துக் கொள்ள காட்டில் கிடைத்த கழிகளை ஆயுதமாக்கிக் கொண்டான். சற்றே நாகரிகம் அடைந்த பின்னர், குரங்குகளிடமிருந்தும், கரடி, புலி, யானை, முள்ளம்பன்றி, ஆடு, மீன், பூனை ஆகியவற்றின் அசைவுகளிலிருந்தும், செயல்களிலிருந்தும் கம்பு விளையாட்டிற்கு ஒரு கலைவடிவம் கொடுக்க முற்பட்டிருக்க வேண்டும். அவ்வாறே காட்டு விலங்குகளிடமிருந்து கற்ற பாடத்தின் வழியே, கம்பு விளையாட்டு ஒரு கலைவடிவம் பெற்றிருக்கலாம். பின்னர் ''கம்பு சூத்திர நூலை'' எழுதிய அகத்தியர் சிலம்பாட்டத்தின் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவினார் எனலாம்.

**வளர்ச்சி**

சிலம்பத்தின் கைவரிசைக்குரிய 'நடசாரி'யையும், கம்பு அடிமுறைகளுக்குரிய ''அகத்தியர் கம்பு சூத்திரம்'' என்ற நூலையும் அழியாமல் பாதுகாத்து வைத்திருப்பவை தென் மாவட்டங்களே. சிலம்பத்தைப் பள்ளி வைத்து நடத்தியதில் இப்பகுதிகளே முதன்மை பெறுகின்றன.

''சிலம்பப் பள்ளிக்கூட மதில்
சேர்ந்து படித்து வாரான்
ஆணுக்கான ஆணழகன்
அழகு மிக்கியம் பெருமாள் தேவன்
கூடுவிட்டுக் கூடு பாய்வான்
குறளி வித்தை தாணுமுண்டு''[2]

என்ற நெல்லை மாவட்டத்தைச் சேர்ந்த மெச்சும் பெருமாள் கதைப்பாடல் மூலமாக இச்செய்தி தெரிய வருகிறது. கதைப் பாடல்கள் தோன்றிய காலம் வெவ்வேறாக இருப்பினும், அவை எழுதப்பட்ட காலம் சுமார் பதினாறாம் நூற்றாண்டாக இருக்கலாம் என்று கூறப்படுகிறது.

கன்னியாகுமரி மாவட்ட நாட்டுப்புறக் கதைப்பாடலான 'ஒட்டன் கதை'யில் ஆண்மை விளங்கச் செயலாற்றும் ஆனந்த நாடார் சிலம்பப் பள்ளி நிறுவிப் பலருக்கும் பயிற்சி கொடுத்த விரிவான செய்தி இடம் பெற்றுள்ளது. சிலம்பப் பள்ளியைக் ''களரி'' என்று அக்கதைப் பாடல் கூறுகிறது.

சிலம்பப் பயிற்சி தமிழகத்தில்தான் பெருமளவில் வளர்ந்தது. வீர விளையாட்டுகளில் சிலம்பப் பயிற்சியும் போட்டியும் தமிழகத்தில் முதலிடம் பெற்றிருந்தன; பெற்றிருக்கின்றன. மூவேந்தர்கள் ஆண்ட காலத்தில் சிலம்பப் பயிற்சிகளும், போர் களும் தமிழகத்தில் பெரும் புகழ் பெற்றிருந்தன. தமிழகம் முழுவதும் சிலம்பக் கூடங்கள் இருப்பதை இன்றும் நாம் காணலாம்.

தமிழகத்தில் தோன்றிய இக்கலை இந்தியாவின் மற்ற மாநிலங்களிலும் வேகமாகப் பரவியது. மராட்டிய மாநிலத்தில் சிலம்பப் பயிற்சியை 'லாட்டி' என்றும் ஆந்திரப் பிரதேசத்தில் 'கரடி ஆட்டமு' என்றும் அழைக்கிறார்கள். சிலம்பம் இந்தியாவில் மட்டுமின்றி அமெரிக்கா, இங்கிலாந்து, ஜெர்மன், சீனா, ஜப்பான் போன்ற உலக நாடுகளிலும் கூடப் பரவி வருகிறது.

ஒரு கம்பைச் சுழற்றி அதன் மூலமே தம்மைப் பாதுகாத்துக் கொள்ளவும், எதிரியை விரட்டியடிக்கவும் முடியும் என்பதால்

வீரமிக்க இளைஞர்கள் மத்தியில் இவ்விளையாட்டுப் பெரும்புகழ் பெற்றுப் பரவியது. சிலம்பம் பயிலுபவர்கள் நல்ல உடற்கட்டுடன் விளங்குவார்கள் என்பதாலும், சிறந்த தேகப் பயிற்சி கிடைக்கிறது என்பதாலும் கிராமங்களில் எல்லோராலும் பெரிதும் விரும்பப்பட்டு, மிகவும் பரவலாக இக்கலை இருந்து வந்தது.

**சிலம்பத்தில் உத்தி முறைகள்**

சிலம்பாட்டத்தில் எதிரியைத் தாக்கவும் எதிரியின் தாக்குதல் களினின்று தன்னைத் தற்காக்கவும் சிலம்பக் கம்பில் பல விதமான பிடிமுறைகள் கையாளப்படுகின்றன. துருத்திப்பிடி, சம்மட்டிப்பிடி, இருகைப் பக்கப்பிடி, நடுக்கம்புப் பிடி போன்ற பிடி முறைகள் உள்ளன.

**1. கால்வரிசை முறை**

சிலம்பாட்டத்தில் மிக முக்கியமாகக் கருதப்படுவது கால் வரிசை முறையாகும். ''கம்பு சுழற்றும் வேகத்திற்கு ஏற்றபடிக் கால்களும் சுழன்று அடிவரிசை தப்பாது கால்வரிசையைக் காக்க வேண்டும்''[3] என்பர்.

**2. அடிவரிசைகள்**

வீச்சு, அறுப்பு, குத்து, வெட்டு ஆகிய நான்கு வகைத் தாக்குதல் களையும் ஒரு சிலம்ப வீரன் தொடர்ச்சியாகக் கையாளும்போது அஃது அடிவரிசை எனப்படுகின்றது.

**3. எதிரியின் திறமையைக் கணித்தல்**

சிலம்பாட்டத்தில் மிகவும் முக்கியமான செயல் எதிரியின் சிலம்பாடத் திறனைச் சோதித்தறிவதாகும்.

> ''வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
> துணைவலியும் தூக்கிச் செயல்''[4]

என்பார் திருவள்ளுவர். அவ்வாறே சிலம்பாட்டம் தொடங்கும் போதே எதிரியின் பலம், பலவீனம் ஆகியவற்றை ஒரு சிலம்ப வீரன் கணித்தறிய வேண்டும். சிலம்பாட்டத்தில் பாவ்லா ஒரு முக்கிய இடம் வகிக்கிறது.

**4. சுவடு முறைகள்**

'சுவடு' என்பது சிலம்பத்தில் உள்ள எல்லா வகை ஆட்ட முறைகளையும் குறிக்கும் ஒரு பொதுவான சொல்லாகும். சிலம்பாட்டத்தின் பல்வேறு வகைகளைக் குறிக்கும் சொல் சுவடு என்பதாகும். சிலம்பக் கலையில் சுமார் 64 வகைச் சுவடுகள் இருப்பதாகக் கூறப்படுகிறது.

**சிலம்பத்தில் வர்ம அடிமுறைகள்**

''மறவன் வாள், வீமன் வாள், விசயன் வாள், கீழத்தாரை வாள், கதிரவன் வாள், கேட்டுவாள், நேர்வாள், வீமன் அடங்கல், சந்திரக்கால வாள், கூட்டி வாள், கண்ட வாள், ஊட்டிக் கொல்லி, மந்திர வாள், கண்ணவாள், எருமை வெட்டு, பன்றி மறிப்பு, நேத்திர வாள், ஒத்தைவாறு, இரட்டைவாறு, பத்தி வெட்டு''[5] ஆகிய வர்மப் புள்ளிகளில் தாக்கி விளையாடும் முறை 'கிளவிவரிசை' என்ற விளையாட்டில் முன்பு இருந்துள்ளது.

**சித்திரச் சிலம்பம்**

இவ்வகைச் சிலம்பம் போர் முறைக்கு ஏற்றதன்று. மேடையில் அல்லது திருவிழாக் கூட்டங்களில் ஆடும் அழகுச் சிலம்பம் சித்திரச் சிலம்பம் எனப்படுகிறது. இதில் சிலம்பக் கம்பின் இரு முனைகளிலும் தீப்பந்தங்களைக் கட்டிச் சுழற்றுவது சிறப்புக் கூறாகக் கருதப்படுகிறது.

மேலும் சிலம்பாட்டத்தில் பொட்டு வைத்தல், காசு எடுத்தல், தொடை தட்டுதல், இரட்டைவால் கட்டுதல், உட்கார்ந்து கொண்டு சாதித்தல் ஆகியவை மான _ணர்ச்சிமிக்கதாகக் கருதப்படுகின்றன. மேலும் புலி வேடம், குரங்கு வேடம், கரடிவேடம், சுருள் பட்டா வீசுதல், வாள் வீச்சு, வேல்கம்பு சுழற்றுதல், கவராட்டம், வளரி, கோபட்டா போன்றன சிலம்பத்தூள் தொடர்புடைய கலைகளாக வடிவம் பெற்றுள்ளன.

**முடிவுரை**

விஞ்ஞான முன்னேற்றத்தினால் அணு ஆயுதங்களைக் கொண்டு மனிதனை மனிதன் அச்சுறுத்தி வரும் இந்த இருபதாம் நூற்றாண்டில் கராத்தே எப்படி மீண்டும் ஒரு பயனுள்ள கலையாக வேகமாக வளர்ந்ததோ அதுபோல் சிலம்பமும் வேகமாக வளரும் வாய்ப்புள்ளது. 'துப்பாக்கிக் கலாச்சாரம் நிறைந்த இக்காலத்தில் இக்கலை சிறப்புறுமா?' என்ற கேள்வி எழுவது இயல்பே. ஆனால் எல்லோருக்கும் எல்லா நேரத்திலும் துப்பாக்கியைப் பயன்படுத்து வதென்பது இயலாத ஒன்றாகும். ஆதலால் இக்கலையைத் தற்காப்புக் கலைகளுள் தலை சிறந்தது என்று கூறலாம்.

**குறிப்புகள்**

1. ஆ. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப. 650
2. ந. பெருமாள், தமிழில் கதைப் பாடல், ப. 75
3. அ. அருணாசலம், தென்பாண்டித் தமிழரின் சிலம்ப வரலாறும், அடிமுறைகளும், தொகுதி - 2, ப. 79
4. குறள் - 471
5. அ. அருணாசலம், மு.நூ., ப. 21

# வர்மக்கலை - ஒரு பார்வை

**பொ.நா. கமலா**
*சிவகாசி - 626 189*

வர்ம மருத்துவமுறை பற்றி விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமன்று; வர்மத்தின் வகைகளைப் பற்றிச் சுருக்கமாக எடுத்துரைப்பது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

வர்மக் கலையின் முன்னோடி அகத்தியர் என்பர் ஒரு சாரார். திருமூலரின் மாணவரான மாலங்கரின் சீடரான போகர் எனும் சித்தரே வர்மக்கலைக்கு முதல்வர் என்பது பிறிதொரு சாரார் கூற்று.

**வர்மங்களின் வகை**

வர்மக் கலை பற்றிய ஓலைச்சுவடிகள், நூல்கள் வர்ம வகைகளைப் பலவாறாக விரித்துரைக்கின்றன.

'வர்மசூத்திரம்' என்ற ஓலைச்சுவடி வர்மத்தைப் படுவர்மங்கள் 12 என்றும், தொடுவர்மங்கள் 96 என்றும் பகுக்கிறது.

வர்மத்தின் தோற்ற காரண அடிப்படையிலும், அகத்தில் காணப்படுவது, புறத்தில் காணப்படுவது என்ற அடிப்படையிலும் ஐந்து பிரிவுகளாக்கி 'வர்மசூத்திரம்' என்ற நூல் கூறுகிறது. வாத வர்மம் 64, பித்தவர்மம் 26, சிலேற்பன வர்மம் 6, உள்வர்மம் 6, தட்டு வர்மம் 6 ஆகிய மொத்த வர்மங்கள் 108 என்பது இந்நூலின் கருத்து.

'வர்ம பீரங்கி' என்ற ஏட்டுச் சுவடி வர்மப் பாதிப்பு உறும் உறுப்புகள் அடிப்படையில் 108 வர்மங்களாகப் பிரிக்கிறது. சிரசு முதல் கண்டம் வரை 25, கண்டம் முதல் உந்தி வரை 45, நாபி முதல் மூலம் வரை 9, கைகள் 14, கால்கள் 15 என்பன அவை.

'வர்ம காவியம்' என்ற நூல் படுவர்மம் 12-இல் பெண்களுக்கு ஒரு வர்மம் குறைவு என்றும், அப்பன்னிரண்டனுள் மூன்று வர்மங்களுக்கு மருத்துவம் செய்ய இயலாதென்றும், ஒன்பது வர்மங்களுக்குச் சிகிச்சை செய்ய இயலுமென்றும் கூறுகிறது. தொடுவர்மங்கள் 96-இல் குணமாக்கக் கூடியவை எண்பது என்றும் குணமாக்க இயலாதவை பதினாறு என்றும் குறிப்பிடுகிறது. (பா. 19).

சிவகாசி வைத்தியர் கோவிந்தனிடமுள்ள ஓலைச்சுவடி,

'பாரப்பா படுவர்மம் பதினெட்டு
பாங்கான தொடுவர்மம் தொண்ணூத்தி ஆறு
தட்டு வர்மம் எட்டு'

என வர்மங்களை 122 வகைப்படுத்துகிறது.

'அஷ்டாங்க ஹ்ருதய' என்ற வடமொழி நூல், மனித உடலில் வர்மங்கள் 107 ஆவன. அவற்றுள் ஒவ்வொரு காலிலும், கையிலும் தனித்தனியே 11 (மொத்தம் 44) என்றும், கோஷ்டத்தில் 3, மார்பில் 9, முதுகில் 14, தோளுக்கு மேல் உள்ள உறுப்புகளில் 37 ஆக மொத்தம் 107 என வரையறுக்கிறது.

பலவாறாக வரையறுக்கப்படினும், வர்மங்கள் மொத்தம் 108 என்ற பொதுக்கருத்து வர்மக்கலை வல்லுநரிடையே நிலவுகிறது.

விரிவஞ்சி படுவர்மங்கள், தொடு வர்மங்கள், தட்டு வர்மங்கள், நோக்கு வர்மம், ஒடுக்கி வர்மம் என்ற 5 வர்மங்கள் பற்றிச் சுருக்கமாக இங்குக் கூறப்பெறுகிறது.

**படுவர்மங்கள்**

சித்தர் பாடலொன்று உயிருக்கு ஊறு விளைவிக்கின்ற, கொல்லுந்தன்மையுள்ள படுவர்மங்களை நிரல்படுத்துகிறது.

'கேளப்பா சிரசுநடு கொண்டைக் கொல்லி
கீர்த்தி பெற ஒட்டையின்கீழ் சீறுங்கொல்லி
நாளப்பா, விரல் நால்கீழ் பிடரிக்காலம்
நாலிறைமேல் முன்சரிதி வர்மம்,
பாளப்பா, இரண்டிறைக் கீழ் பொச்சி வர்மம்
பகராத ஓரிறை வலம் குற்றிக் காலம்
கேளப்பா, செவிக்குற்றிக் காலம் சொல்வேன்,
பிடரியின் மேல் இறைநாலில் முடிச்சி வர்மம்!'

என்பது அப்பாடல் (ம.நி.வ.க., ப. 113).

1. உச்சி வர்மம் 2. சீறும்கொல்லிவர்மம் (உச்சியிலிருந்து 16-17 செ.மீ. கீழே) 3. பிடரிக்காலம் 4. முன்சரிதி வர்மம் (முன் சுவாதி வர்மம் - நெற்றிக்கும் உச்சிக்கும் இடையில்) 5. லிங்கவர்மம் 6. காரீரல் வர்மம் (liver) 7. செவிக்குற்றிக் காலம் (காதுத் தண்டுப் பகுதி) 8. முடிச்சி வர்மம் (பிடரிக்கு நால் விரலளவு மேல்) என எட்டு வகைப் படுவர்மங்களை இப்பழமையான சித்தர் பாடல் குறிப்பிடுகிறது.

சிவகாசிவாழ் தமிழ் வைத்தியர் கோவிந்தனிடமுள்ள ஓலைச்சுவடி,

'உறுமிக் காலம் அடிபட்டால் பிழைக்கமாட்டான்
சதாசிவம் அடிபட்டால் பிழைக்கமாட்டான்

அடப்பகாலம் அடிபட்டால் பிழைக்கமாட்டான்
கரு ஈரல் அடிப்பட்டால் பிழைக்கமாட்டான்
வெள்ளை ஈரல் அடிப்பட்டால் பிழைக்கமாட்டான்'

எனப் படுவர்மங்கள் ஐந்து எனக் கூறுகிறது.

1. தொண்டைக்குழியின் நேர் கீழே உள்ள உறுமிக்காலம் 2. சதாசிவம் என்ற உச்சி வர்மம் 3. விலா எலும்புகள் முடியும் இடத்திற்கு நான்கு விரலளவுகள் மேலே உள்ள அடப்ப காலம் 4. காரீரல் வர்மம் (Liver) 5. வெள்ளை ஈரல் வர்மம் (Spleen) ஆகிய படுவர்மங்களில் அடிபட்டால் பிழைக்க மாட்டான் என்பது அந்த ஓலைச்சுவடியின் கருத்து.

வர்ம வித்தகரிடையே படுவர்மங்கள் பற்றிக் கருத்து வேறுபாடு நிலவுவது இதிலிருந்து புலனாகிறது. 'மர்மம் நிறைந்த வர்மக்கலை' நூலாசிரியரும், 'வர்மசாஸ்திரம்' நூலாசிரியரும் படுவர்மங்கள் பற்றிய தம் கருத்துகளில் முரண்படுகின்றனர் என்பதை அடியிற் கண்ட அட்டவணை மூலம் உணர இயலுகிறது.

| மர்மம் நிறைந்த | வர்மசாஸ்திரம் | பாதிப்புறும் இடம் |
|---|---|---|
| 1. திலர்த்த காலம் | 1. திலக பந்தன வர்மம் | திலகம் வைக்கும் இடத்திற்குச் சற்றுக் கீழே |
| 2. நட்சத்திர காலம் | 2. நட்சத்திர காலம் | கடைக்கண் பகுதி யிலிருந்து ஒரு விரலளவு தள்ளி |
| 3. செவிகுத்திக் காலம் | 3. செவிகுத்திக் காலம் | காதுத் தண்டுப் பகுதி |
| 4. பிடரிக் காலம் | 4. பிடரிக் காலம் | பிடரி-முடி முடியும் இடம் |
| 5. உறக்க காலம் | 5. உறக்க காலம் | குரல் வளையின் இடப்பகுதி |
| 6. தும்மிக் காலம் | ... | குரல் வளையின் கீழ் குழிவான பாகம் |
| 7. அடப்ப காலம் | 6. அடப்ப காலம் | விலா எலும்புகள் முடியும் இடத்திற்கு 4 விரலளவு மேலே |
| 8. உறுமிக் காலம் | --- | தொண்டையின். நேர் கீழே |

| 9. அத்தி சுருக்கிக் காலம் வலிது | 7. வலிய அத்தி சுருக்கி வர்மம் | விலா எலும்புகள் முடியும் இடத்திற்கு 2 விரலளவு கீழ் |
|---|---|---|
| 10. அத்தி சுருக்கிக் காலம் சிறிது | 8. சிறிய அத்தி சுருக்கி வர்மம் | விலா எலும்புகள் முடியும் இடத்திற்கு 3 விரலளவு கீழ் |
| 11. கல்லடைக் காலம் | 9. கல்லடைக் காலம் | கொப்பூழிலிருந்து 4 விரலளவு கீழ் |
| 12. நேர் வர்மம் | --- | தொண்டையின் கீழே உள்ள கூம்புப் பகுதிக்கும் கீழே |
| | 10. சிறுமூளை வர்மம் | பிடரிக் காலத்திற்கு ஒரு அங்குலம் இடப்புறம் |

இவற்றிலிருந்து வெவ்வேறு கல்வியியல் குழுக்கள் (Schools of Thought) இடையே படுவர்மங்கள் பற்றிய கருத்து வேறுபாடு நிலவுகின்றமை தெரிய வருகிறது.

இதுபோன்று தொடு வர்மம், தட்டு வர்மம் பற்றியும் கருத்து வேறுபாடுகள் உள்ளன. எனினும் வர்ம சாஸ்திரம் நூலாசிரியரும், மர்மம் நிறைந்த வர்மக்கலை நூலாசிரியரும் ஒன்றுபட்டுக் கூறுகின்ற தொடுவர்மங்கள், தட்டு வர்மங்கள் சில மட்டுமே இங்கு எடுத்துரைக்கப் படுகின்றன.

**தொடு வர்மங்கள்**

உடலின் நரம்புகளை இணைத்து நிற்கும் உயிர்த் தலங்கள் தாக்கப் பெறுவதால் ஏற்படும் பாதிப்புத் தொடுவர்மம் ஆகும். ஒரு சில தொடுவர்மங்களாவன:

1. கண்ணாடி காலம் (மூக்கின் நடுநாயகமான நடுப்பகுதி 2. எட்டுமுக வர்மம் (மார்புக்கு இரண்டு விரலளவு மேல்) 3. மணிபந்த வர்மம் (கையின் மணிக்கட்டிலிருந்து மூன்று விரலளவு மேல்) 4. மொழி வர்மம் (மணிக்கட்டு ரேகை முடியுமிடம்) 5. கொம்பேறி வர்மம் (முழங்கால் மையத்துக்குக் கீழும் பாத முடிச்சுக்கு நான்கு அங்குலம் மேலும் என்பன தொடுவர்மங்களாம்.

ஒரு சில தொடுவர்மங்கள், படுவர்மங்கள் ஆவதும் உண்டு என்பர்.

**தட்டு வர்மங்கள்**

ஒரே ஒரு விரலால் தட்டி, உடலின் தசைகளில் பாதிப்பு களை உண்டாக்குவது தட்டு வர்மம் எனப்படும். ஒரு சில தட்டு வர்மங்களாவன:

*1. மத்தி வர்மம் (முதுகு மையம்) 2. சிறுநீரக வர்மம் (கொப்பூழிலிருந்து ஒரு விரலளவு கீழ்) 3. மூர்க்க வர்மம் (திலகத்திற்கு ஒரு விரலளவு மேல்) 4. சிரசு பெருமூளை வர்மம் (உச்சியிலிருந்து 1 ½'' மேல்) என்பனவாம்.*

பலவாகிய தொடுவர்மங்களும், தட்டு வர்மங்களும் விரிவஞ்சி இங்கு விவரிக்கப்படவில்லை.

**நோக்குவர்மம்**

கண்களால் உண்டாக்கப்படும் வர்மம் நோக்குவர்மம் ஆகும். நெருப்பை உமிழும் பார்வை மூலம் பகைவரை வீழ்த்துவது நோக்குவர்மம் ஆகும்.

**ஒடுக்கி வர்மம்**

பெண்களுக்கு ஏற்படும் ஒடுக்கி வர்மங்கள் ஆறு என வர்ம காவியம் கூறும். இதனால் பெண்களுக்கு நீரிழிவு, யோனி சூலை, கருப்பை நோய்கள், நிதம்பப்புண், நிதம்பக் குத்து ஆகியன ஏற்படும் என்பது அந்நூலின் கருத்து (பா. 21).

**இறுவாய்**

சித்தர்கள் கூறும் வர்மக்கலை பற்றிய தமிழ் ஓலைச் சுவடி களையும், நூல்களையும் தொகுத்து, தமிழர் கண்ட உயிர்த்தலங் களாகிய வர்மங்கள் பற்றியும், அவற்றில் பகைவராலும், விபத்தாலும் பாதிப்புறும் வகை பற்றியும், அவற்றுக்கான தமிழ் மருத்துவ முறை பற்றியும் ஆராய்ந்து உலகறியச் செய்வது தமிழர்தம் கடனாகும்.

**துணைநூல்கள்**


1. சிதம்பரதாணுப் பிள்ளை, எஸ்., டாக்டர், வர்மகாவியம், இண்டர்நேஷனல் இன்ஸ்டிடூட் ஆப் தானுவாலஜி, சென்னை - 102.
2. நாகர்கோயில் வர்மானிய வித்தகன், மர்மம் நிறைந்த வர்மக்கலை, திருமகள் நிலையம், சென்னை - 17.
3. ஜெய்ராஜ், டி., டிராகன், வர்மசாஸ்திரம், குமரன் பதிப்பகம், சென்னை - 17.
4. வைத்தியர் கோவிந்தனிடமுள்ள ஓலைச்சுவடி, சிவகாசி.

# தமிழ் இலக்கியங்களில் கைரேகைக் கலை

**கா. சத்தியபாமா**

*குந்தவை நாச்சியார் அரசினர் மகளிர் கலைக் கல்லூரி*
*தஞ்சாவூர் - 7*

கைரேகைக் கலை என்பது ஒருவருடைய கையின் அமைப்பு, நகங்களின் அமைப்பு, உள்ளங்கையில் அமைந்துள்ள இரேகைகள், மணிக்கட்டு, விரல்கள் ஆகியவற்றின் அமைப்பு முதலானவற்றைக் கொண்டு பலன் கூறுவதாகும். உறுப்புகளின் அமைப்பைக் கொண்டு ஒருவருக்கு வரவிருக்கும் நன்மை தீமைகளை உணர்த்தும் சாமுத்திரிகா இலட்சணத்தின் ஒரு பகுதியாக இது விளங்குகிறது. நெற்றி, கழுத்து, கை முதலானவற்றில் அமைந்துள்ள இரேகைகளின் பலன்களைக் கூறும் இரேகை சாத்திர நூல்களை நந்தி, கமலமுனி, மச்சமுனி, இராமதேவர் முதலான சித்தர்கள் இயற்றியுள்ளனர்.

சீவக சிந்தாமணியில் ஏமாங்கத நாட்டையாண்ட மன்னனாகிய சச்சந்தனுக்கு நிமித்திகன் என்ற அமைச்சன் அறிவுரை கூறுமிடத்துச் சச்சந்தனை, ''வலம்புரி பொறித்த வண்கை மதவலி'' (பா. எண் 175) என்று குறிப்பிடுகிறான். இங்கு வலம்புரி என்பது சங்க ரேகையைக் குறிப்பதை உ.வே.சா அவர்களின் குறிப்புரையால் அறியலாம்.

கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட கம்ப இராமாயணத்தில் கிட்கிந்தா காண்ட நட்பு கோட்படலத்தில் இராமனின் கை களிலும் கால்களிலும் இருந்த இரேகைகள் கூறப்பட்டுள்ளன.

இராமனுடைய பெரிய கைகளிலும் கால்களிலும் சங்கு சக்கர இரேகைகள் உள்ளன. இத்தகைய உயர்ந்த இலக்கணங்கள் எந்த உலகத்திலும் யாருக்கும் இல்லை. ஆகையால் சிவந்த கண்களுடன் வில்லை ஏந்திய கைகளை உடைய இராமன் இப்பொழுது அறத்தை நிலை நிறுத்துவதற்காக இவ்வுலகத்தில் தோன்றியவனான திருமாலே ஆவான் என்கிறார். இதனால் சங்கு சக்கரதாரியான திருமால் சங்கு சக்கர இரேகைகளை உடையவர் என்பது பெறப்படும்.

முல்லைப் பாட்டிற்கு உரையெழுதிய நச்சினார்க்கினியர் ''நேமியொடு வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை'' என்பதற்கு

உரை கூறும்பொழுது. சக்கரத்தோடு வலம்புரியைத் தாங்கும் பெரிய கைகளை உடைய மால் என்று கூறி, நேமியோடே வலம்புரியாகிய உத்தம இலக்கணங்களைப் பெற்றிருக்கின்ற திருமகளை அணைத்த கையை உடைய மால் என்று மற்றொரு விளக்கத்தையும் தருகிறார். இதற்கு ''நேமி'' என்பது ''சக்கரரேகை'', ''வலம்புரி'' என்பது ''சங்க ரேகை'' என்னும் உ.வே.சா. அவர்களின் குறிப்புரை கம்பரின் கருத்திற்கு அரண் சேர்ப்பதாக அமைந்துள்ளது.

மேலும் பெருங்காப்பியமான சீவகசிந்தாமணி தோன்றிய கி.பி. பத்தாம் நூற்றாண்டில் இயற்றப்பட்டதாகக் கருதப்படும் சிறுகாப்பியமான சூளாமணியில்,

> ''சங்க ரேகையும் சக்ர லேகையும்
> அங்கை உள்ளன வையற்கு'' (சூளா. குமார. 45)

என்று கூறப்பட்டுள்ளது.

இதனால் மன்னர்களாக விளங்கியோருக்குத் திருமாலின் கைகளில் இருந்தமைப் போன்று சங்கு சக்கர ரேகைகள் இருந்தது பெறப்படும். ''சக்ர லேகை'' எனச் சூளாமணியில் குறிப்பிடப் பட்டுள்ளதால் ''இரேகை'' என்பது ''லேகை'' எனவும் கூறப்படும் என்பதை அறியலாம்.

**சிற்றிலக்கியங்களில் கைரேகைக் கலை**

கி.பி. 17-ஆம் நூற்றாண்டிலும் அதற்குப் பிறகு தோன்றிய குறவஞ்சி, உலா, கலம்பகம் முதலான சிற்றிலக்கியங்களில் குறத்தி குறி கூறும் நிகழ்வுகள் அமைந்துள்ளன. சங்க காலத்தில் குறி கூறும் மகளிரைக் 'கட்டு விச்சி' எனவும் 'அகவன் மகள்' எனவும் அழைத்தனர்.

களவொழுக்கத்தில் ஈடுபட்ட தலைவியின் வேறுபாட்டிற் குரிய காரணத்தை அறிய விரும்பிய செவிலித்தாய், கட்டுவிச்சியை அழைத்துக் குறி பார்த்தும் வேலனை அழைத்து வெறியாடல் நிகழ்த்தியும் உண்மையை உணர்வர்.

> ''கட்டினும் கழங்கினும் வெறியென இருவரும்
> ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும்''
> (தொல். பொ. களவியல் - 24)

என இதனைத் தொல்காப்பியர் சுட்டுவர்.

இவற்றுள் ''கட்டு'' என்பது நெல்லை வைத்துக் கொண்டும் ''கழங்கு'' என்பது கழங்காடும் காய்களை வைத்துக் கொண்டும் தெய்வங்களைப் பாடி கட்டுவிச்சி கூறும் குறிகளாகும். பின்னாளில் இதுவே குறத்திப் பாட்டாக - குறவஞ்சி இலக்கியமாக உருப்பெற்றது.

''இறப்பு நிகழ்வெதிர் என்றுமுக் காலமும்
திறம்பட வுரைப்பது குறத்திப் பாட்டே''

(பன்னிரு பாட்டியல் - 217)

எனப் பன்னிரு பாட்டியல் இதற்கு இலக்கணம் கூறுகின்றது.

தலைவன் உலா வந்ததைக் கண்ணுற்ற தலைவி, தலைவனின் மீது மையல் கொள்ளுகின்றாள். தலைவனை மணக்க விரும்பும் தலைவி துயரில் வருந்தும் பொழுது, அவளுக்குக் குறிபார்த்து அவள் விரும்பிய தலைவனே மணாளனாக வருவான் என்று குறத்தி கூறும் பகுதி குறவஞ்சி இலக்கியங்களில் சிறப்பான - சுவை மிகுந்த பகுதியாக அமையும்.

திருக்குற்றாலக் குறவஞ்சியில் குறத்தி, தலைவியாகிய வசந்தவல்லிக்கு நற்சொல் கேட்டல், ஆந்தையின் ஒலி, தும்மல் ஒலி, காக்கை பறத்தல், மூச்சுக்காற்று, கைரேகை முதலான பல குறிகளைக் கண்டு எதிர்காலப் பலன்களைக் கூறுகின்றாள். ''செங்கமலச் சங்கரேகைக் கையைக் காட்டாய்'' (பாடல் - 68) என்று கூறும் குறத்தி கையைப் பார்த்து, உன்கை இருநிலத்தில் அறம் வளர்க்கும், மனையறத்தால் அறம்பெருக்கித் திறம் வளர்க்கும்; நவநிதி விளைக்கும், பாலமுதல் அளையும், மக்களின் பசியாற்றும், தெய்வ மகளிரை வணங்கும், குற்றால நகரத்தைக் காக்கும் (பா. 70). இந்தச் சிறந்த கையைப் பிடிக்கும் மணவாளர், எட்டுத் திசைகளும் தமக்கே உரிமை உடையவராவார், நீ இந்த உலகம் முழுதுக்கும் சிறந்த அரசியாவாய் (பா. 71) என்று கைக்குறிகளின் பலன்களை எடுத்தோதுகின்றாள்.

தியாகேசர் குறவஞ்சியில், திருவாரூர் தியாகேசர் வீதியுலா வரும்பொழுது இராசமோகினி அவர்மீது காதல் கொள்ளுகின்றாள். இராசமோகினிக்குக் குறத்தி குறி கூறும் பொழுது, அவள் கையில் சங்கு சக்கரம் சமரம் தருமம், சந்தானம், சௌபாக்கியம், மங்களம், விமானம், நரவாகனம் முதலான இரேகைகள் இருந்தன.

மச்ச இரேகையினால் எட்டு ஆண் குழந்தைகளும் வச்சிர ரேகையினால் ஐந்து பெண் குழந்தைகளும் பிறக்கும் சந்திரரேகை மாங்கல்யத்தையும், தனரேகை மகிழ்ச்சியையும், அங்குச ரேகை அரியாசனத்தையும் கொடுக்கும் என்று எடுத்தோதுகின்றாள்.

முத்துக் கவிராயரின் (1684 - 1712) சகசிராசன் குறவஞ்சியில், வரும் குறவஞ்சி இங்கிதக் குறி, உச்சிதக்குறி, கைக்குறி ஆகிய குறிகளைக் கொண்டு தஞ்சையை ஆண்ட மராட்டிய மன்னனாக விளங்கிய சகசிராசன் மீது இராசகன்னிகை கொண்ட காதல்

நிறைவேறும் என்பதை எடுத்துரைக்கிறாள். பதுமரேகை, சுவர்ண ரேகை, தானிய ரேகை, புத்திரரேகை, வித்தியா ரேகை, ஐய ரேகை ஆகிய இரேகைகள் இராச கன்னியின் கையில் இருக்கின்றன.

கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகரின் (1798 - 1832) சரபேந்திர பூபால குறவஞ்சியில் வரும் குறத்தி மன்னருடைய கையிலுள்ள இரேகையையும் காணுகின்றாள். கைரேகை, கால்ரேகை, மறு தழும்பு, சுழிகள், கவுளி, ஆந்தைசொல், மனக்குறி ஆகியவற்றைக் கொண்டு குறி சொல்பவளாகக் குறத்தி வருகின்றாள். மராட்டிய மன்னன் சரபோசி ராசனின் கையைக் கண்டு, இந்திரன் போல் வாழ்வாய் என்று கூறுகிறாள். மேலும் தலைவியின் கையில் வச்சிர ரேகை, மகுட ரேகை, சூல ரேகை, சக்கர ரேகை, குலவி ரேகை, கமல ரேகை, சங்க ரேகை ஆகிய இரேகைகள் இருப்பதைக் காணுகின்றாள்.

குறவஞ்சி இலக்கியத்தின் சுவை மிகுந்த பகுதியாக விளங்கும் குறத்தி குறி கூறும் பகுதி தனி இலக்கிய வகையாக - குறமாக வளர்ச்சி பெற்றுள்ளது. குறத்தியின் கூற்று மட்டுமே அமைந்துள்ள இவ்வகை இலக்கியங்களுள் குறிப்பிடத்தக்க மீனாட்சியம்மை குறத்தில், குறத்தியானவள் தங்கள் குறசாதி மூன்று காலங்களையும் தெளிவாக ஆராய்ந்து நன்மை தருகின்ற காலத்தை எடுத்துரைப்பது (பா. 24) என்கிறாள். தலைவியின் கைக்குறி, முகக்குறி, கவுளி, நற்சொல், துடி, தும்மல், ஆந்தை ஒலி போன்ற பலவற்றையும் கண்டு குறி கூறுகின்றாள். கைரேகையைப் பார்த்து, மதுரையில் எழுந்தருளியுள்ள சொக்கநாதர் மணவாளராக வருவார் என்று தான் கூறியதை எடுத்துரைத்ததோடு, ''அங்கைத் தலத்துத் தனரேகை அளவில் செல்வம் தரும்'' ''இங்கிப் படிபுத் திரரேகை எவர்க்கும் இலை'' (பா. 30) எனத் தலைவியின் கையில் உள்ள தனரேகை புத்திரரேகை முதலானவற்றை எடுத்துரைக்கிறாள்.

குறவஞ்சி இலக்கியங்களில் இன்றியமையா இடம்பெறும் குறத்தி குறி கூறல் பகுதி உலா, கலம்பகம் முதலான இலக்கியங் களில் குறைவாகவே இடம் பெறுகிறது.

கொட்டையூர் ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகரின் தஞ்சைப் பெருவுடையார் உலாவில் தஞ்சைப் பெருவுடையார் உலா வரும் பொழுது ஏழு பருவத்து மகளிரும் அவரைக் கண்டு காதலில் மயங்கி வாடுகின்றனர். காதலில் மயங்கி வருந்தும் மடந்தைப் பெண் ஒருத்திக்கு மலைக் குறவஞ்சி குறி கூறுகிறாள். அப்பெண்ணின் இடக்கையைக் கண்டு, மீன இரேகையினாலும் இடபரேகையினாலும் பெருமையும் வெற்றியும் பெற்ற ஒரு மன்னரை மணம் புரிவாய். குற்றமற்ற சூலரேகை தோன்றுவதால் பொற்குவியல்களை

விரும்பிக் கேட்கின்ற உலக மக்களுக்கு நல்குவாய் என்கிறாள் (ப. 195).

கலம்பக இலக்கியங்களில் காணலாகும் பல்வேறு உறுப்பு களுள் ஒன்றாக விளங்குவது குறம். மங்கையொருத்தியின் கைக்குறி, முகக்குறி ஆகியவற்றைக் காணும் குறத்தி, பெருமாளை நீ சென்று சேர்வாய் என்று கூறுகிறாள்.

**ஆய்வு முடிவுகள்**

1. கி.பி. பத்தாம் நூற்றாண்டு முதற்கொண்டு தமிழ் இலக்கியங் களில் கைரேகையைக் குறித்த செய்திகள் காணப்படுகின்றன.
2. திருமால், மன்னர், மன்னரை மணக்கும் தலைவியர் கைகளில் சங்கு சக்கர இரேகைகள் அமைந்திருக்கும் என்பதை அறிய முடிகிறது.
3. பிற இலக்கியங்களைக் காட்டிலும் சிற்றிலக்கியங்களில் குறிப்பாகக் குறவஞ்சி இலக்கியங்களில் கைரேகை தொடர்பான செய்திகள் மிகுந்த அளவில் கிடைக்கின்றன.
4. குறத்தி கைரேகைகளைக் கண்டு மட்டும் குறிகூறுதல் இல்லை. கைரேகை, கால்ரேகை, கவுளி சொல், ஆந்தை சொல், நற்சொல், முகக்குறி முதலான பல்வேறு செய்தி களையும் கருத்தில் கொண்டு பலன் கூறுகிறாள்.
5. குறத்தியிடம் பெரிதும் பெண்களே குறி கேட்போராக விளங்கியுள்ளனர். குறிப்பாகச் சிற்றிலக்கியங்களில் கடவுளை, மன்னரை மணக்கக்கூடிய தலைவிகளுக்குக் குறத்தி குறி கூறுவதாக அமைந்துள்ளது.
6. சரபேந்திர பூபாலக் குறவஞ்சியில் புதுமையாக மன்னனுக்குக் குறத்தி குறி கூறுவதாக அமைந்துள்ளது.
7. இவற்றுக்கெல்லாம் மேலாக 17-18-ஆம் நூற்றாண்டுகளில் குறி கூறுதலில் கைரேகைகளைக் கண்டு பலன்களைக் கூறுதல் முதன்மை இடத்தைப் பெற்றுள்ளது என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

# பண்பு

**க.ஆ. முருகேசன்**

*ஈரோடு கலைக் கல்லூரி*
*ஈரோடு - 638 009*

'இயற்கைப் பொருளை இற்று எனக் கிளத்தல்' (தொல். சொல்.கி.ஆ) என்பார் தொல்காப்பியர். இயற்கைப் பொருளை இப்பண்பு கொண்டது எனச் சுட்டச் சொல்கிறார். நிலம் வலியது, நீர் தண்ணியது என அதனதன் பண்பால் குறிக்கவேண்டும். 'செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்' என்கிறார். நீர் சூடாயிற்று; வழி அகலமானது என்பது போல் காரணத்தால் சுட்ட வேண்டும்; புதிதான ஒரு பண்பு அப்பொருளுக்கு ஊட்டப்பட்டது என்பது புலனாகிறது.

ஒன்று அறிவதுவே உற்று அறிவதுவே
இரண்டு அறிவதுவே அதனொடு நாவே
மூன்று அறிவதுவே அவற்றொடு மூக்கே
நான்கு அறிவதுவே அவற்றொடு கண்ணே
ஐந்து அறிவதுவே அவற்றொடு செவியே
ஆறு அறிவதுவே அவற்றொடு மனனே (தொல். - 1526)

என தொல்காப்பியர் உயிர்களை அவ்வவ்வற்றின் பண்புகளின் அடியொற்றிப் பாகுபடுத்துகிறார். 'மக்கள் தாமே ஆறு அறிவுயிரே' என்று மன அறிவு என்ற பண்பினைக் கொண்டவன் மனிதன் என்கிறார். எனவே அனைத்துப் பொருள்களுக்கும், உயிர்களுக்கும் இயற்கையான அடிப்படைப் பண்புகள் உள என்பதும், செயற்கையாக ஊட்டப்படும் பண்புகளும் உள என்பதும் பெறப் படுகின்றன. பொருள்களை நற்பயன் பாட்டிற்கேற்ப ஆக்கிக் கொள்வதும், மக்களுக்கு நற்பண்புகளை ஊட்டுவதும் இன்றைய கட்டாயத் தேவையாகும்.

**பண்புகளில் படியும் அழுக்குகள்**

இன்று உலக மக்களிடையே மதம், நாடு, மொழி, இனம், நிறம், சாதி போன்ற அடிப்படையில் வேறுபாடுகள் தோன்றி நாகரிக மனிதனின் இயற்கை எனக் கருதப்பட்ட நற்பண்புகளின் மீது மாசு படிந்துள்ளது. மதம், நாடு, மொழி, இனம், நிறம், சாதி போன்றவை மனித குலம் தங்களைத் தாங்களே நிர்வகித்துக்

கொள்ள ஏற்படுத்திக் கொண்ட வழிமுறைகள் என்ற நியதி மறக்கப்பட்டு மனமாச்சரியங்களால், இயற்கை எனக் கருதப் பட்ட நற்பண்புகள் மண் மண்டிகிடக்கின்றன. எனவே ஓர் அகழ்வாய்வு செய்து நற்பண்புகளை மீட்டெடுப்பது இப்போதைய இன்றியமையாத் தேவையாகும்.

**அழுக்குகளை நீக்கும் அறச்சவுக்காரங்கள்**

மறக்கப்பட்ட பண்புகளை நினைவுபடுத்தி நடைமுறைப் படுத்தவும், பண்புகளின் மீது படிந்துள்ள மாசுக்களைப் போக்கவும் பண்டைய அறக்கருத்துக்களை மக்கள் மனங்களில் மீண்டும் பதியமிடவேண்டும். அவ்வாறான அறக்கருத்துக்களுக்குப் புதிய வீரியத்தை ஊட்டவேண்டும். கால மாறுபாட்டிற்கேற்ப உருவாகிற நுகர்வுக் கலாச்சாரத்தை மானுடப் பண்பு என்ற எல்லைக்குள் கட்டுப்படுத்த வேண்டும். அறிவியல் வளர்ச்சியை மனிதன் தன் மன அறிவு கொண்டு ஆயவேண்டும். வாழ்க்கையை எளிமை யாக்கவும், மகிழ்விக்கவும் பயன்படும் அறிவியல் மானுடப் பண்புகளின் வேர்களைத் தாக்கி அழித்துவிடாமல் காக்க வேண்டியது தலையாய கடமையாகும்.

**இல்வாழ்வின் பண்பு**

> ''அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
> பண்பும் பயனும் அது.'' (குறள். 45)

திருவள்ளுவர் இல்வாழ்வின் பண்பாக அன்பைச் சுட்டுகிறார். பயனாக அறத்தைக் குறிப்பிடுகிறார். குடும்பம் என்ற நிறுவனமே மனித சமுதாயத்துக்கு அடித்தளமாகும். அவ்வடித்தளம் அன்பால் ஆக்கப்படவேண்டும் என்கிறார். ஆதிக்க உணர்வுகளுக்கு அங்கு இடமில்லை. ஒருவரை ஒருவர் புரிந்து கொள்வதும், விட்டுக் கொடுத்து வாழ்வதும் இல்லறத்தின் நல்லறக் கோட்பாடுகள்.

'பண்பெனப்படுவது பாடறிந்தொழுகல்' என்று கலித்தொகை தெரிவிக்கிறது. ஒருவரின் உள்ளம் கோணாமலும், இடம், பொருள், ஏவல், அறிந்து நடப்பதுமே பாடறிந்தொழுகல் ஆகும். பாடறிதல் இன்றைய சமுதாயத்தில் மங்கிவிடுவது கண்கூடு. இதற்கு அடிப்படைக் காரணம் நுகர்வுக் கலாச்சாரமே ஆகும். அறிவியல் கண்டுபிடிப்புகளை நுகர்ந்து இன்புறும் அதேவேளையில் மானுடப் பண்புகளை மறந்துவிடக்கூடாது. அறிவியல் புதிதாக முளைத்து வேர்விடலாம்; கிளைப்பரப்பலாம்; ஆனால் மனிதப் பண்பின் வேர்களைத் தாக்கமலும், கிளைகளை ஒடிக்காமலும் அதன் வளர்ச்சி இருக்கவேண்டும்.

> ''அரம்போலும் கூர்மையே ரேனும் மரம்போல்வர்
> மக்கட்பண்பு இல்லா தவர்'' (குறள் - 997)

எனக் கூர்த்த மதி மட்டுமே படைத்த அறிவியலார்க்குப் புதிதாக ஊட்டப்பட வேண்டியது மானுடப் பண்பு என்பதை வள்ளுவர் தெள்ளிதின் விளக்குகிறார்.

### புதியதோர் உலகம்

''சாதி மத பேதங்கள் மூடவழக்கங்கள்
தாங்கி நடை பெற்றுவரும் சண்டையில் கிதனை
ஊதையினில் துரும்புபோல் அலைக்கழிப்போம்; பின்னர்
ஒழித்திடுவோம்; புதியதோர் உலகம் செய்வோம்''

என்கிறார் பாரதிதாசன். இந்தப் புதிய உலகம் உருவாக்கப் பட்டால்தான்,

''யாதும் ஊரே, யாவரும் கேளிர்''

என்ற சங்கப்புலவன் கணியன் பூங்குன்றனாரின் கருத்துச் செறிவு வெளிப்படும்.

''மண்பயனுற வேண்டும்
வானகம் இங்கு தென்படல் வேண்டும்
எண்ணிய முடிதல் வேண்டும்
நல்லவே எண்ணல் வேண்டும்
திண்ணிய நெஞ்சம் வேண்டும்
தெளிந்த நல்லறிவு வேண்டும்''

என்பதுவே பாரதியின் பேரவா. மானுடம் பயனுற வாழ்வதற்கு இறைவனிடம் பாரதி வேண்டுகிற நல்லெண்ணம், திண்ணிய நெஞ்சம், தெளிந்த நல்லறிவு ஆகிய முன்றின் உள்ளடக்கமும், அவற்றின் விரிவுகளுமே மானுடப் பண்பு எனப் பொருத்த முடைத்து.

### மனிதர்களுள் 'மனிதன்'

கிரேக்க நாட்டில் இரவு பகலாக அகல்விளக்கைக் கையிலேந்தி மனிதர்கள் அனைவரிடத்தும் எதையோ தேடிக்கொண்டிருந்தார். யவன ஞானி ஒருவர், ஒருவேளை மனிதர்களுள் கடவுளைத் தேடுகிறாரோ என்ற ஐயம் எழுந்தது. ஞானியிடமே அதைப் பற்றி வினவியபோது, கடவுளைக் காணும் அவா எனக்கில்லை. எண்ணிலடங்கா மக்கள் கூட்டத்தில் ஒரு 'மனிதனை'க் காண மாட்டோமா? என்றுதான் தேடுகிறேன். தேடிக்கொண்டே இருக்கிறேன். 'மனிதனை'க் கண்டுவிட்டால், அகல்விளக்கை அணைத்து விடுவேன் என்று பதிலளித்தார். தேடவேண்டிய அளவிற்கு, மனிதப் பண்பு நிறைந்தோர் அருகிவிட்டனர்; அரிதாய் போய் விட்டனர்; பரம் பொருளைக்கூட எளிதில் கண்டு விடலாம். மனிதனைக் காண்பது தான் கடினமாகிவிட்டது. வெளித்தோற்றத்தில் மனிதர்களாகவும்

உள்ளதால் கள்ளம் மிகுந்து விலங்கினும் கீழானது பண்புகளைக் கொண்டவர் மிகுந்துவிட்ட காலமிது. இன்று யவன ஞானி அகல்விளக்கேந்தி மனிதனைத் தேட முனைந்தால் அன்று போல் விலங்கிட்ட விடமிட்டு அவர் உயிரை விலக்கமாட்டார்கள். மாறாகத் 'தான் தான் மனிதன்' எனக் காகிதச் சான்றுகள் காட்டி அங்கிகாரம் வாங்கி அரசுக் கட்டிலேறி முரசு கொட்டிவிடுகிறார்கள். அவருக்கும் 'ஞானபிரசங்கி' பட்டம் வழங்கி, 'முக்கியப் பதவி' கொடுத்து மூளைச்சலவை செய்து மூலையில் அமர்த்திவிடுவர்.

**சித்தர் தத்துவம்**

'ஒன்றே குலமும், ஒருவனே தேவனும்' என்பது சித்தரின் கோட்பாடு. தமிழகச் சித்தர்கள் 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' எனத் தங்கள் கருத்துக்களைப் பரப்பி வந்தனர். அவர்களின் கொள்கைகளையும் பழம்கோட்பாடுகளையும் கடைப் பிடித்தால் கடைதேறலாம் மனிதத்தை - மனிதனை மனிதருள் எளிதில் காணலாம்; எங்கும் காணலாம்; மரமாக, விலங்காக, பறவையாக இருக்கும் மனிதர்களையும் மனிதனாக்கும் பயிற்சியைப் பயிற்று விப்பவர்கள் சித்தர்கள். விண்ணவர் இறங்கி வந்து மனிதனாய்த் தோன்றுவதைச் சுட்டி காட்டி மானுடப் பண்பின் மகத்துவம் உணர்த்துபவர்கள்.

திருமூலர், இறைவன் உறையும் இடமாக உடம்பினைக் குறிப்பிடுகிறார். எனவே, இதனைக் கோயில் போலப் போற்றிக் காத்தல் கடமையாகும். சுவர் இருந்தால்தான் ஓவியம் என்பது போல உடம்பினை ஆதாரமாக்குகிறார். சித்தர்கள் உடலின் நுட்பங் களையும், அதைப் பேணுகிற வைத்திய முறைகளையும் விளக்கி உள்ளனர். உடல் தத்துவத்தோடு, மனத் தத்துவங்களையும் உயிர் தத்துவங்களையும் விளக்கிப் பயிற்சி முறைகளை வகுத்து மானுடப் பண்புகளை அடையாளப் படுத்தியுள்ளனர். அவற்றை அடைந்து அடைகாத்துப் பயன்களை நுகர்வதே மானுடப் பண்பாகும்.

**உணவே மருந்து**

''உணவே மருந்து; மருந்தே உணவு'' என்பதுதான் சித்தர்கள் கைக்கொள்ளும் உணவு முறையாகும். இதனையே,

> ''மருந்துஎன வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
> அற்றது போற்றி உணின்'' (குறள். 942)

என்கிறார் வள்ளுவர். விலங்குகள், பறவைகள்கூட உண்ட உணவு செரித்த பின்னே உண்ணும். மனிதனை அள்ள அள்ளக் குறையாத அட்சயபாத்திரம் போல் உள்ளே தள்ளத்தள்ள விரிந்து விரிந்து வாங்கிக்கொள்ளும் 'விரி பாத்திரமாய்' தன் உடம்பைக்

கருதிக் கொண்டான். அருந்தியது போக்கல் பற்றிய கவனம் இல்லை. எனவேதான் பலரின் யாத்திரைகள் மாத்திரைகளில் நடந்து கொண்டிருக்கின்றன.

**படியாக்கம்**

மனிதன் தன் பண்புகளைப் படியெடுத்துப் பறவைகளுக்கும் விலங்குகளுக்கும் ஊட்டி அவற்றிற்கும் மன ஆற்றலையும், சிந்திக்கும் சித்தியையும், சிரிக்கும் சிறப்பையும் ஊட்டுவதற்குப் பதிலாகத் தன்னை ''க்ளோனிங்'' படியெடுத்துப் பார்த்தாயா மானிட சக்தியை என்கிறான். ஆண், பெண், கூட்டுறவு வேண்டும். அன்பு, ஆசை, காதல், பாசம், நேசம் எதுவுமே இல்லாத் 'தாய்' கருவாகிறது. பெண்களை வெறும் கருத்தாங்கிகளாக்கி ஆய்வுக் கூடத்தில் ஆணி அடித்துத் தொங்கவிடும் அபாய அறிவியல் இது. அறிவியலின் உச்சம் என உச்சிமோந்து கொள்ளும் அதே வேளையில் விட்டு விடக்கூடாத மானுடப் பண்புகளின் அடித்தளத்துக்கு வெடி வைக்கும் போகத்தைத் தடுக்கவேண்டும் என்ற எண்ணம் மேலோங்கிச் செயல்படுத்தப்பட்டால் மட்டுமே மண்டிலம் நிலைக்கும்; மானுடம் சிறக்கும் என்பதை உணர வேண்டிய காலமிது.

**முடிவுரை**

பண்புகளின் சீரழிவு மனிதனைத் தற்கொலைக்குத் தள்ளு கிறது; விலங்கொத்த வாழ்விற்கு வித்திடுகிறது. அடிப்படையாக ஆண், பெண் கூட்டுறவில் நிகழும் இல்லறம், உண்மை தேடும் ஞானிகளின் துறவறம் ஆகிய நல் அறங்களில் திளைப்பதும், நிலைப்பதுமே மானுடப் பண்பு.

# பண்பாட்டின் அளவுகோல்

**மா.பா. குருசாமி**
திண்டுக்கல்

''அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது'', என்பது தமிழ் மூதாட்டி ஔவையாரின் வாக்கு. எல்லா உயிரினங்களிலும் மானிடப் பிறவி உயர்ந்தது; சிறந்தது. ஏனெனில் மனிதனிடம் அறிவு, ஆற்றல், ஆக்கத்திறன், ஆவல், எண்ணம், உயர்வுள்ளல் ஆகியவை அடங்கியுள்ளன. ஆதலால் மனிதனால் வளர, மேன்மை யடைய, மாண்பு பெற இயல்கின்றது.

மனித சமுதாயத்தின் மேன்மை அதன் மாற்றத்தில், வளர்ச்சியில் இருக்கின்றது. தேக்க நிலையில் இருக்கும் சமுதாயம் வளராது. ஓட்ட நிலையில் காலச் சூழலுக்கேற்ப மாறும் சமுதாயம் வளரும்; உயரும்.

ஒரு சமுதாயத்தின் வளர்ச்சியை அதன் பண்பாட்டின் (Culture) நிலையிலிருந்து அறியலாம். பண்பாடு நாகரிகமாக (Civilisation) வெளிப்படுகின்றது.

பண்பட்டு வருவது பண்பாடு. நிலம் பண்பட, பண்பட நல்ல விளைச்சல் கிடைக்கும். ஒரு சமுதாயம் நற்பண்புகளில் பண்பட பண்பட, சமுதாயத்தில் அமைதியும், மகிழ்ச்சியும் நிலைத்து நிற்கும். இந்தப் பண்பாடு மக்களின் வாழ்க்கை முறையிலும், மனித உறவுகளிலும் பட்டொளி வீசிப் படரும்.

**பண்பாட்டுக் கனிகள்**

புற வளர்ச்சியின் விளைவு செல்வ வளமாக மக்களின் நலனைக் கட்டிக் காக்கும்; பேணி வளர்க்கும். அக வளர்ச்சி கலை, இலக்கியமாக, அறம், ஆன்மீகமாக ஆக்கம் பெற்று மன வளத்திற்கு வழி வகுக்கும். இதுதான் பண்பாட்டின் உள்ளடக்கமாக, உருவமாகக் காணக் கிடைக்கின்றது.

மொழியிலும் வாழ்வியல் முறைகளிலும் தனித் தன்மை களை வளர்த்துக் கொண்ட தமிழினம் பண்டைக் காலத்திலேயே பண்பாட்டை வளர்த்துக் கொண்டது. அந்தப் பண்பாட்டு மரத்தில் பூத்து, காய்த்து, கனிந்தவைதான் நமது சங்க இலக்கியங்கள்.

அவற்றினை அறிய, ஆய, உட்பொருளை உணர, மதிப்பிட, இக்காலத்திற்கேற்பப் பயன்படுத்த அன்றைய பண்பாட்டினைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

பண்பாட்டுப் பின்புலத்தை, தாக்கத்தை, ஆக்கத்தை மறந்து எந்த இலக்கியத்தையும், கலையையும் ஆராய இயலாது. இந்த ஆதார உண்மை எக்காலத்திற்கும், எல்லா மொழி இலக்கியத் திற்கும் பொருந்தும்.

இன்றைய தமிழ் இலக்கியத்தின் உருவமும் உள்ளடக்கமும் விரைந்து மாறிக் கொண்டிருக்கின்றன. கவிதை, சிறுகதை, புதினங் களின் கருவிலும் உருவிலும் மொழி நடையிலும் காண்கின்ற சில மாற்றங்கள் மரபு வழிச் சிந்தனையாளர்களை அதிர வைக்கலாம். ஆனால் அவற்றை மதிப்பிட இன்றைய பண்பாட்டின் நிலையை நாம் அறிய வேண்டும். நமது பண்பாடும் மாறிக் கொண்டிருக் கின்றது என்ற உண்மையை முதலில் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

**அடிப்படை இயல்பு**

பண்பாடு என்பது ஓர் இயல்பு; உள்ளார்ந்த தன்மை. அவற்றை உணரலாம்; அறியலாம். அதனைச் சொற்களின் மூலம் முழுமையாக விளக்க இயலாது.

மேற்போக்காக நோக்கின் பண்பாடு ஒரு சிலவற்றில் வெளிப்படுவது போல் தோன்றலாம். சான்றாக, சங்ககாலத் தமிழர் களின் பண்பாடு காதல், வீரம் என்ற இரண்டு அடையாளங்களில் வெளிப்படுவதாகச் சிலர் கருதுவதைக் கூறலாம். ஆனால் இது முழு உண்மையாகாது. சங்ககால நாகரிகம் விருந்தோம்பல், அறஞ்செயல், சான்றோரைச் சிறப்பித்தல், கற்றோரை ஏற்றுதல், பெண்மையைப் போற்றுதல், ஒழுக்கம் ஓம்புதல் என்று பலவற்றில் மலர்ந்தது; மணம் பரப்பியது. ஒரு முழுமையான, ஒருங்கிணைந்த கண்ணோட்டத்தின் மூலமாகத்தான் ஒரு கால கட்டத்தில் ஒரு நாட்டில் நிலவுகின்ற பண்பாட்டின் இயல்பை, தரத்தை அறியலாம்.

மேலும், பண்பாடு நாட்டுக்கு நாடு, இனத்துக்கு இனம், காலத்திற்குக் காலம் மாறுபடுவதுபோல் தோன்றலாம். இந்தத் தோற்ற வேறுபாடு தோன்றக் காரணம் மக்களின் நடை, உடை, பாவனைகளில் வெளிப்படும் கூறுபாடுகள்தான். இவை உண்மையான பண்பாடு அல்ல.

உண்மையான பண்பாடு உள்ளத்தில் உறைவது. வான் முட்ட உயர்ந்த ஒரு பெரிய கட்டடத்தின் அடித்தளம் பூமிக்கடியில்

இருக்கும்; கண்ணுக்குத் தெரியாது. ஆனால் அந்த அடித்தளத்தின் வலுவில்தான் அந்தக் கட்டடம் நிலைபெற்றிருக்க வேண்டும். அடித்தளம் ஆட்டம் கண்டால் கட்டடம் இடிந்து விழும். பண்பாடு அடித்தளம் போன்றது. சமுதாயத்தின் செயல்பாடுகள் - அதன் வெளிப்பாடுகள் - கட்டடம், மேற்கூரை போன்றவை.

ஆதலால், பண்பாட்டின் அடிப்படை மனித சமுதாயம் முழுமைக்கும் ஒன்றாகத்தான் இருக்க முடியும். பண்பாட்டின் இயல்புகளைச் சுட்டிக்காட்ட இயலுமானால், ஒரு நாட்டின் பண்பாட்டினை, இனங்காண்பது எளிதாகும். பண்பாட்டின் தன்மைகளைச் சுட்டிக் காட்டலாம்.

**மதிப்பிட ஓர் அளவுகோல்**

இலக்கியத்தின் தரத்தைப் பண்பாட்டின் அடிப்படையில் கணிக்க, முதலில் பண்பாட்டினை மதிப்பிட ஓர் அளவுகோல் வேண்டும். பண்பாட்டின் இயல்புகள் பலவாக இருக்கலாம். அவற்றை எல்லாம் அளக்க இயலாது. ஆனால் அவற்றை ஊடுருவி இருக்கின்ற ஒன்றை இனங்கண்டு, அதனை அளக்கும் முறையை அறிந்து கொண்டால், அளவிடைச் சிக்கலைத் தீர்க்க இயலும்.

பண்பாட்டின் ஆதாரமாக இருப்பது அன்பு. அன்பு என்ற பண்பு அகத்தில் தோன்றி வளர்ந்த பொழுதுதான் பண்பாடு என்ற மொட்டு கண்ணில் பட்டது. காலத்தால் அது மலர்ந்து மணம் பரப்பியது.

ஆதிகால மனிதன் - கற்கால மனிதன் - வேட்டையாடி, மீன்பிடித்து வாழ்ந்தான். காடு மலைகளில் அலைந்து திரிந்தான். காய், கனி, கிழங்குகளை உண்டு வாழ்ந்தான். அவனது வாழ்க்கை விலங்கின் வாழ்க்கையைப் போலிருந்தது. பெரும்பாலும் தனி மனிதர்களின் வாழ்க்கை, விலங்குகளைப் போன்றே, ஆண்-பெண் சேர்க்கையும், இனப்பெருக்கமும் கொண்டதாக இருந்திருக்கலாம். உடல் தேவைகளை உணர்ந்த மனிதன் உள்ளத் தேவைகளைப் புரிந்திருக்கவில்லை. அது அன்பு தோன்றாத காலம்.

அடுத்த நிலையில் மனிதன் ஆடு மாடுகளை மேய்த்து வாழ, வேளாண்மை செய்யக் கற்றுக் கொண்டான். தனித்திருப்பதை விட கூட்டமாக வாழ்ந்தால் நிறைய விலங்குகளை அடக்கியாள, மிகுதியான இடத்தில் வேளாண்மை செய்ய இயலுமென்பதால் சேர்ந்து வாழத் தொடங்கினான். தன் கூட்டம் என்ற எண்ணம் அன்பாய் முளைவிட்டது. கூட்டு வாழ்க்கையில் குடும்பம் தோன்ற அன்பு ஒரு சின்ன வட்டத்தில் அடர்த்தியாகி, சமுதாயம் என்ற பெருவட்டத்தில் தன்னை இணைத்துக் கொண்டது.

அன்பு என்பது உள்ளத்தில் தோன்றும் சிறிய தீப்பொறி. இது கனிந்து, கனிந்து பெருந்தீயாகும் ஆற்றலை உள்ளடக்கியது. அணுவைப் பிளந்து ஆற்றலைப் பெருக்கியதைப் போல, அன்பென்ற ஊடுசரடால் மனித உறவுகள் என்ற வண்ண மலர்களை இணைக்க சமுதாயம் என்ற பெரிய மாலை உருவாகின்றது.

மொழி தோன்றி வளர எண்ணங்கள் ஆக்கமும் ஊக்கமும் பெற்றன. கற்பனையும் கருத்துக்களும் மொழியின் துணையால் இலக்கியமாய் இசையாய் வடிவெடுத்தன. ஆய கலைகள் வளர்ந்தன. எல்லா வற்றின் உயிர் மூச்சாய் அன்பு இருந்தது; எழுந்தது; செழித்தது.

**உயிர் நாடி**

தனிமனித, குடும்ப, சமுதாயப் பண்பாட்டின் உயிர்நாடி அன்பு. ஆதலால்தான் வான் புகழ் வள்ளுவர் 'அன்புடைமை' என்று ஒரு தனி அதிகாரம் படைத்தார்.

அன்பு என்ற பண்பின் முதிர்ச்சியில் கிடைப்பது அருள். ''அருளென்னும் அன்பின் குழவி'', என்றும் வள்ளுவர் வாக்கு ஆன்மீகத்தின் அடிப்படை அன்பென்பதை உணர்த்துகின்றது. அன்பற்ற நெஞ்சினர் மெய்யறிவாளர்களாக விளங்க முடியாது.

''பகைவனுக்கருள்வாய் நன்னெஞ்சே'' என்று மகாகவி பாரதியார் கூறுகின்ற பொழுது 'பண்பாட்டின் உயர் நிலையைத் தொட்டுக் காட்டுகிறார்.

திருவள்ளுவப் பெருந்தகை பண்பாட்டின் தலையாய பண்பை,

''பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை''

என்று எடுத்துரைக்கின்றார்.

**நிலைகளும் அளவும்**

ஒரு குழந்தை பிறந்து, வளர்ந்து, இளைஞனாகி, முதிர்ச்சி பெற்று முதுமையை அடைகின்றது. அதன் வளர்ச்சி நிலைகளில் வியத்தகு மாற்றங்கள் ஏற்படுகின்றன. இதனைப் போன்றுதான் அன்பு என்ற விதை முளைத்து வளர்ந்து விரிந்து பரவுவதிலும் பல நிலைகள் உள்ளன.

ஒருவனின் அன்பு மனைவி, மக்களென்று நான்கு சுவர் களுக்குள் - குடும்பத்திற்குள் - முடங்கிவிட்டால் அவன் உள்ளம் - அன்பு - கடுகு போன்றது. தெரு, ஊர் என்று சிறிய வட்டத்திற்குள் சுழல்வது கடுகைவிடச் சிறிது. பெரிய துவரை அளவிலான உள்ளம் - அன்பு. நாட்டளவில் நிற்பது தேங்காய் அளவு பெருத்த அன்பு - உள்ளம். ஆனால் உலகை வாழ வைப்பது தாயுள்ளம் - அளவற்ற பேரன்பு.

இந்த அன்பின் நிலைகளை மூன்றாக வரையறுத்துக் கூறலாம். கீழ்நிலை - தாழ்நிலை - அன்பு விலங்கியல்பானது. விலங்குகள் தங்களது குட்டிகளின் மீது அன்பு காட்டுகின்றன. மனைவி, மக்கள் மீது காட்டுகின்ற அன்பும் இத்தகையதுதான். இந்த அன்பில் தந்நலம் மிகுதி. இத்தகைய அன்பு கொண்டவர்கள் வழிமுறையைப் பற்றிக் கவலைப்பட மாட்டார்கள். இதனால்தான் அறமற்ற செயல் களுக்கும் அன்பு ஏதுவாகி விடுகின்றதென்று கூறுகின்றோம்.

இந்த அன்பு நிலையிலும் ஒரு பண்பாடு இருக்கும். இது கீழ் மக்கள் பண்பாடாக (ஆசாரமாக) அமையும். புலி, குரங்கு போல கொலை செய்தும், கொள்ளையடித்தும் வாழ்கின்ற மக்களின் வாழ்க்கை முறையைப் பார்த்தால் இந்த உண்மை புலப்படும். இவர்கள் உழைக்க மாட்டார்கள். மற்றவர்கள் உழைப்பில் வாழ்வார்கள். இவர்களின் வாழ்க்கை ஆடம்பரமாக இருக்கும். ஆனால் இவர்களின் மனிதத் தொடர்புகளில் அன்பு இருக்காது. இத்தகைய பண்பாட்டை நியாயப்படுத்தும் இலக்கியம் கடைநிலை இலக்கியமாக இருக்கும்.

இரண்டாவது, நடுநிலை - இடைநிலை - சார்ந்த அன்பு - பண்பாடு. இது குடும்பம் என்ற நிலையிலிருந்து விரிவடைந்து இனம், மொழி, சாதி, சமயம், நாடு என்ற நிலையில் நிற்கும். இந்தப் பற்றுக்களும், கட்டுகளும் ஒருவகைத் தந்நலத்தை வளர்த் திருக்கும். தங்களுக்குள் அறம் பேணுபவர்கள் மற்றவர்களிடம் மறத்தைக் காட்டுவார்கள். குழு மனப்பான்மையை வளர்ப்பார்கள். முயற்சியும் உழைப்பும் பண்பாட்டின் உரமாக இருக்கும். இந்த அன்பு ஒரு வரையறைக்கு உட்படுவதால் ஒரு நிலையில் நின்று விடும்.

மூன்றாவது, உயர்நிலை - உயிர்நிலை - அன்பு. இதனைத் தாயன்பு என்று கூறலாம். இது அருளாகக் கனிந்து, சுடராகி ஒளிபரப்பும். எள்ளளவும் வேறுபாடு கருதாது. எல்லா உயிரையும் தன்னுயிர் போல் என்னும். தன் உடல், பொருள், ஆவியை உலக நலனுக்காக வழங்கும். இத்தகைய பேரன்பு கொண்டவர்கள் தொண்டர்களாக அருளாளர்களாக விளங்குகின்றார்கள். இவர்களைக் கொண்ட சமுதாயப் பண்பாடு வளர்ந்து கொண்டிருக்கும். இந்த வளர்ச்சிக்கு வானம்தான் எல்லை.

# இலக்கியங்கள் காட்டும் பண்பாட்டில் மனித உயிர் நேயம்

**மு. கோமதி**

*சி. கந்தசாமி நாயுடு மகளிர் கல்லூரி*
*கடலூர் - 607 001*

ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுத்துப் போதலும், பிறருக்கு வந்த துன்பத்தைத் தனக்கு வந்ததாக ஏற்றுக் கொள்வதும் பிற உயிர்களைப் பேணும் பண்பும், இயற்கையைப் பாதுகாப்பதும் தொன்மைத் தமிழரின் இயல்பாக அமைந்திருந்ததைத் தொல் தமிழ் இலக்கியங்கள் சித்திரிக்கின்றன. தமிழரிடையே மனித நேயப்பண்பு வாழ்க்கையின் அடிப்படைப் பண்பாக விளங்கியமையைத் தொடர்ந்த மனிநேயம் கமழ்ந்திருப்பதை உணரலாம்.

**அகப்புற இலக்கியங்களில் மனிதநேயப் பண்பு**

அகப்புற இலக்கியங்கள் மனிநேயப் பண்பினைச் சுட்டிக் காட்டுவதில் சிறப்புப் பெற்று விளங்குகின்றன. ஓரறிவுயிரையும் தன் உடன் பிறப்பாகக் கருதும் செம்மை உள்ளத்தை,

''விளையாடு ஆயமொடு வெண் மணல் அழுத்தி
மறந்தனம் துறந்த காழ்முளை அகைய
நெய் பெய் தீம்பால் பெய்தினிது வளர்ப்ப
நும்மினும் சிறந்தது நுவ்வை ஆகுமென்று
அன்னை கூறினள் புன்னையது சிறப்பே'' (நற். 172)

என்ற நற்றிணைப் பாடல் நமக்குச் சிறப்பாக விளக்குகிறது.

எந்த பொருளாயினும் அதைப் பயன்படுத்துவார்க்கே உரியது என்பதனை உணர்த்திய மக்கள் ஆறுதல் கூறி தேற்றுதல் சிறந்த பண்பாகக் காணப்படுகிறது. இதனைக் கலித்தொகைப் பாடல் வழி அறியலாம். தன் மகள் காதலனுடன் உடன் போக்கிற் சென்றுவிட்டதால் தேடிச் சென்ற செவிலித்தாய் வழியிடையே கண்ட மாந்தர்களிடம் ''என் மகளும் மற்றொருத்தியின் மகனும் இவ்வழியாகப் போகக் கண்டீர்களா? என்று கேட்கின்றாள். அதற்கு அவர்கள் காணோம் அல்லேம், கண்டனம்'' என்று கூறிவிட்டுச் ''சந்தனம் மலையிற் பிறந்தாலும், முத்துக் கடலிற் பிறந்தாலும் இசை யாழிற் பிறந்தாலும் பயன்படுத்துவார்க்கே அது உரியனவாதல்

போல நும் மகள் நுமக்கும் ஆங்கு அனையளே'' என்று அறிவுரை கூறி வழியனுப்பி வைக்கின்றனர்.

அல்லல் உற்று வாழும் எந்த ஜீவனும் அமைதியைத் தேடித் தான் அலையும். அதற்கு அமைதி கிடைப்பதோடு ஆறுதலும் கிடைத்தால் அடையும் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. அந்த நிலையில் செவிலிக்குக் கிடைத்த இந்த ஆறுதல் மொழி தன் மகள் பற்றிய கவலையை மறக்க அருமருந்தானது.

**காதலுணர்வில் மலரும் நேயம்**

காதலுணர்வில் மலரும் நேயம் அஃறிணை வாழ்விலும் உண்டு என்பதனை 'ஐந்திணை ஐம்பது' பாடல் வரிகள் நமக்குத் தெளிய வைக்கின்றன.

ஆண்மானை விட்டுக்கொடுக்காத பெண்மானும், பெண்மானை விட்டுக்கொடுக்காத ஆண்மானும் தங்களுக்குள்ளே அன்பைப் பரிமாறிக் கொள்கின்றன. சுனையில் உள்ள சிறிய நீர் இரண்டு மான்களும் குடிக்கப் போதாது. ஒன்று மட்டுமே பருகக்கூடிய நீரை அன்பின் காரணமாக இரண்டுமே குடிக்காமல் நிற்கின்ற காட்சி இரண்டையும் இணையாக நேய நிறைகோலில் நிறுத்துகிறது.

**இல்லற வாழ்வில் மனிதநேயம்**

பதிற்றுப்பத்துக் காட்டும் சேர நாட்டு மக்கள் பிறர் பொருளைச் சிந்தையாலும் விரும்பாதவர்கள். குற்றமில்லா அறிவு சான்ற நெஞ்சை உடையவர்கள். அன்பு நெறியைப் போற்றியவர்கள். அருள் நெறியில் நின்றவர்கள். பல்லுயிர் ஓம்பிய பண்பை உடையவர்கள். கடமை நினைத்துப் பணியாற்றிய செம்மை சிறந்த வாழ்வை மேற்கொண்டவர்கள். அனைவரும் சூழ்ந்து இருந்து சுற்றத்தாருடன் இன்பம் துய்த்த இனிய பண்பை உடையவர்கள். மனிதனை மனிதனாக மதிக்கும் பண்புடையவர்கள். இதனை,

> ''நின்மலைப் பிறந்து நின்கடல் மண்டும்
> மலிபுனல் நிகழ்தரும் தீநீர் விழவிற்
> பொழில் வதி வேனிற் போரெழில் வாழ்க்கை
> மேவரு சுற்றமோ டுண்டினிது நுகரும்'' *(- 5-8)*

என்ற பதிற்றுப்பத்துப் பாடல் வழி அறிந்து கொள்ளலாம்.

இல்லற வாழ்க்கை இனிதே நடைபெற வேண்டுமாயின் தலைவனும் தலைவியும் ஒத்துச் செயல்பட வேண்டும். அன்பும் அறனும் மேற்கொண்ட வாழ்க்கை மிகவும் சிறப்புறும் என்பதை,

> ''அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
> பண்பும் பயனும் அது'' *(45)*

என்ற வள்ளுவரின் வாக்கின் மூலம் உணரலாம்.

**விருந்தோம்பலில் மனிதநேயப் பண்பு**

விருந்தினரைப் போற்றுதல் என்பது மனிநேயப் பண்புகளுள் தலைசிறந்த ஒன்றாகும். தொல்காப்பியம் விருந்து போற்றலைத் தலைவியின் சிறந்த கடமைகளுள் ஒன்றாகக் குறிக்கின்றது.

''விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்
பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்'' (தொல். கற்பு - 11)

சங்கப் புலவர்கள் விருந்தோம்பலைப் பல இடங்களில் போற்றிக் குறிக்கின்றனர்.

எந்த வேளையில் விருந்தினர்வரினும் முகம் கோணாமல் விருந்தினரை வரவேற்றுப் பேணும் பண்புடைய தலைவியைப் பற்றி நற்றிணைப் பாடல் வழி அறியலாம்.

''அல்லி லாயினும் விருந்துவரின் உவக்கும்
முல்லை சான்ற கற்பின் மெல்லியல்'' (நற். 142)

திருக்குறள் உள்ளிட்ட அற இலக்கியங்கள் விருந்தோம்பலைத் தலையாய அறங்களுள் ஒன்றாகப் போற்றுகின்றன. திருவள்ளுவர் விருந்தோம்பல் என்னும் ஓர் அதிகாரத்தையே படைத்துள்ளார்.

''உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே'' (புறம். 18)

என்பதற்கு ஏற்ப பிற உயிர்களைப் பாதுகாக்க விழைவோர் உணவு வழங்குவதை உயிர் காக்கும் பண்பாகக் கொண்டிருந்தனர் என்பதை இலக்கியங்கள் வழி அறியலாம்.

**புற ஒழுக்கங்களில் மனிநேயம்**

தனி மனிதனின் சிறந்த செயல்களே பண்பாடுகளாக மாறுகின்றன. உலக மக்கள் இனத்தவர் பலர்; அவர்களுடைய வடிவும் பண்பும் வாழ்வியல் நெறிகளும் பல. பண்டைத் தமிழர்கள் நல்லொழுக்கத்தில் நாட்டமுடையவர்கள். உயிரினும் சிறந்தது ஒழுக்கமே என்ற உண்மையை உணர்ந்திருந்தனர். அறநெறிக்கு மாறான செயல்களால் நன்மையில்லை என்பதையும் அறிந்து இருந்தனர். இரு பெருவேந்தர் போர் புரிந்த காலத்து ஒருவர் ஒருவர் நாட்டு வாழும் அந்தணர், பெண்கள், பிணியுடையோர் புதல்வரைப் பெறாதோர், அருங்கடன் ஆற்றுபவர் போன்றோரை நாட்டைவிட்டு விலகிச் செல்ல (புறம். 9) அறிவித்த பண்பு மன்னர் களின் பெருந்தன்மையைப் பறைசாற்றும் மனிதநேயப் பண்பாகும்.

கணியன் பூங்குன்றன் பாட்டு மெய்யுணர்வு தலை வந்த பாட்டாகும். உலகில் நடுநிலை மனம் எய்தத் துணை செய்யும் கருத்துக்கள் அப்பாடலில் அடங்கியுள்ளது. உலகில் எல்லோரும்

மனிதம் என்ற உயிர் அடிப்படையில் உறவுடையவர்கள். மக்களிடையே உயர்வு தாழ்வு என்ற வேறுபாடு இல்லை. நன்மையும், தீமையும் வருத்தமும், மகிழ்வும் பிறர் உண்டாக்கி வருவன அல்ல. சாதல் என்பது தொன்று தொட்டு இருப்பது. அது நமக்குப் புதியது அன்று. வாழ்வு என்பது இனிது என மகிழ்தலும் இன்னாது என இகழ்தலும் தேவையற்றவை. ஆற்றில் நீர் செல்லும் வழியில் போகும் தெப்பம் போல் உயிரானது விதி வழிச் செல்லும். எனவே, பெரியர் என்று வியத்தலும் சிறியோர் என இகழ்தலும் இல்லை. நடுவு நிலையில் அறவழி வாழ்தலே சிறந்த மனித நேயப் பண்பாகும் (புறம். 191).

**வாணிகத்தில் நேர்மை நேயம்**

வாணிக உலகில் இன்று எத்தனையோ பொருட்கள் கலப்படம் மிகுந்ததாகவும், போலியாகவும் அதனால் மக்களுக்குப் பக்க விளைவுகளை உண்டாக்குவதாகவும் உள்ளன. காசுக்காக, வியாபாரத்திற்காகக் கலப்படம் செய்து மக்களிடம் எந்த வித அனுதாபமும் காட்டாமல் விளங்கும் வணிகர்கள் இன்று பெருகி உள்ளனர். ஆனால் இலக்கியங்களைப் படிக்கும் போது அங்கு மனிதநேயம் எப்படி காக்கப்பட்டது என்பது அறிய முடிகிறது.

> தமவும் பிறவும் ஒப்ப நாடி
> கொள்வதூஉம் மிகை கொளாது
> கொடுப்பதூஉம் குறைகொடாது
> பல்பண்டம் பகர்ந்து வீசும் (பட்டினப்பாலை - 208-211)

இங்கு வாணிக நேர்மை, மனித நேயத்தின் மீது நிற்கிறது.

**சமய உணர்விலும் சிறக்கும் நேயம்**

'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற திருமூலரின் வாக்கிற்கிணங்க தெய்வம் உலகில் ஒன்றுதான். ஆனால் அது போற்றக் கூடிய மனநிலையைப் பொறுத்து அமையும்.

> ''மல்லர் கடந்தான் நிறம்போன்று இருண்டெழுந்து
> செல்வக் கடம்பமர்ந்தான் வேல் மின்னி - நல்லாய்
> இயங்கெயில் எய்தவன் தார்பூப்ப ஈதோ
> மயங்கி வலனேருங் கார்'' (ஐந்திணை ஐம்பது - 1)

இதில் திருமால் நிறம் போலக் கருத்தெழுந்து, முருகன் வேல்போல் மின்னி சிவன் மாலையாகிய கொன்றைப்பூக்கள் மலர மேகம் எழுந்தது என்ற கற்பனையை நோக்கும்போது சமயப் பொதுமை யுணர்வு உணரப்படுகிறது. 'அன்பே சிவம் அவனே எல்லாம்' என்று வாழும் மக்களிடமும் நம்மை மீறிய ஒரு சக்தி நம்மை ஆட்டுவிக்கிறது. நாம் செயல்படுகிறோம். இதில் சாதிப் பாகுபாடு

இனப்பாகுபாடு அற்று வாழும்போது அங்கு ஒற்றுமையுணர்வு போற்றப்படுகிறது.

''வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம்
வாடினேன் வருந்தினேன்''

என்ற வள்ளலாரின் கூற்று ஆழ்ந்து கவனிக்கத்தக்கது. பயிர்தானே என்றில்லாமல் அது வாட்டமுற்றபோது வருந்திய வள்ளலாரின் மனம் போலவும், இயல்பாக ஆடிய மயிலைக் குளிரால் நடுங்கிற்று என்று போர்வை கொடுத்த பேகனின் உள்ளம் போலவும், முல்லைக்குத் தேர் கொடுத்த பாரியின் உள்ளமும் போல் எல்லோர் உள்ளமும் இருந்துவிட்டால் ஜீவகாருண்ய ஒழுக்கம் மேலோங்கி நிற்கும். இவையெல்லாம் இலக்கியங்களைப் படிக்கும்போது, சுவைக்கும்போது தான் உணர முடியும். கன்றுக்காக மனமிரங்கித் தன் மகனைத் தேர்க்காலில் இட்டுக் கொன்ற மனுநீதிச் சோழனும், புறாவுக்காகத் தன் தசையை அரிந்து கொடுத்த சிபிச் சக்கரவர்த்தியும் போல பிற உயிர்களுக்காக வாழும் மனிதர்களால் தான் இவ்வுலகம் இன்றும் நிலைத்து நிற்கிறது.

இந்தியப் பண்பாட்டின் உயிர்த்துடிப்பில் உன்னதமானது தமிழ்ப் பண்பாடு. அறவழியில் செயல்பட்டுத் தேவையான பொருளை ஈட்டித் தானும் நுகர்ந்து மற்றவருக்கும் பகிர்ந்து கொடுத்து இன்பம் காண்பதன் மூலம் வாழ்க்கை நிறைவெய்து பண்டைத் தமிழர்கள் கண்ட பண்பாட்டு இலட்சியம். அகம், புறம் என்ற பண்பாட்டுக் கூறுகள் பண்டைத் தமிழரின் உணர்வு மேம்பட்ட நாகரிக வளர்ச்சியின் சின்னங்கள். தனி மனிதனைச் சார்ந்த இல்லற வாழ்விலும் சரி, சமுதாயம் சார்ந்த பொது வாழ்விலும் சரி சங்கத்தமிழன் தன்னலம் குறைத்த தங்கத் தமிழனாகவே மிளிர்கின்றான். கடந்த கால மானுட வாழ்வியல் ஒழுகலாறுகளை நிகழ் காலத்தில் நம் மனக்கண்முன் காட்டும் தமிழ் இலக்கியங்கள் தமிழர்தம் மனித நேயத்தைப் பண்பாடு களைப் பறைசாற்றும் பெட்டகங்கள் என்று போற்றலாம்.

# உமறுப்புலவர் காட்டும் மகளிர் பண்பாட்டு நெறிகள்

**ஹ. அல்தாஜ் பேகம்**
*யாதவர் இருபாலர் கல்லூரி*
*மதுரை*

தமிழ்க் காப்பிய வரலாற்றில் இசுலாமியத் தமிழ்க் காப்பியங்களுள் முதலில் வைத்துப் போற்றத்தக்கது சீறாப்புராணம். உமறுப்புலவர் இக்காப்பியத்தில் மகளிரைப் பெருமைப்படுத்தும் பண்பாட்டு நெறிகளை எவ்வாறு புலப்படுத்தியுள்ளார், சீறாப் புராணத்தில் மகளிரைப் படைத்துக் காட்டுவதில் மகளிர் பண்பாட்டு நெறிகள் எந்த அளவில் காக்கப்பட்டுள்ளன (அ) மீறப்பட்டுள்ளன என்பதனை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**'பண்பாட்டு நெறி' - விளக்கம்**

'பண்பாடு' = பண்பு + அடுதல். அடுதல் என்றால் சமைத்தல் அல்லது 'பக்குவப்படுத்தல்' பண்பைப் பக்குவப்படுத்துவது பண்பாடாகும். ''பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகுதல்'' என்பர் பழந்தமிழர் *(கலி. 33.16)*.

''இறைவா! உன்னையே வணங்கி உன்னிடத்திலே உதவி தேடும் எங்களை நன்னெறியில் நடத்துவாயாக'' (குர்ஆன் மஜீத் திருக்குர்ஆன், மூலமும் தமிழ் உரையும், எஸ். முஹம்மது ஜான் (உரை. ஆ), 1983, அத்.1, வசனம். 3), என்னும் திருக்குர்ஆன் வசனம் இசுலாமியர்கள் தீய நெறியை விரும்பாத நன்னெறியாளர்களாய் வாழவே விரும்பினர் என்பதைக் காட்டும்.

**மகளிர் பண்பாட்டு நெறிகள்**

சீறாப்புராணத்தை வைத்துப் பார்க்கும்போது இரண்டு நெறிகள் தெளிவாகும். அவை தமிழ் மற்றும் இசுலாமிய நெறிகள்.

சீறாவினை எழுதிய உமறுப்புலவர் அடிப்படையில் ஒரு தமிழர், அதோடு இசுலாமியர். எனவே இக்காப்பியத்தில் அவர் தமிழ், இசுலாமிய இரு நெறிகளையும் கலந்து கொடுப்பினும் இசுலாமிய மகளிரின் சில சிறப்பு நெறிகளையும் அவர் உணர்த்தியுள்ளார். அவை 1. கற்பு, 2. நாணம், 3. அச்சம், 4. மடம்,

5. மனையுறை வாழ்க்கை, 6. தற்கொண்டான் பேணுதல், 7. சொற்காத்தல், 8. சோர்வு இன்மை, 9. பொறை, 10. நிறை, 11. விருந்து புறந்தருதல், 12. சுற்றம் ஓம்பல், 13. அடக்கம், 14. தற்புகழின்மை, 15. எளிமை, 16. இரவலர்க்கு ஈதல், 17. இறைவனைத் தொழுதல் எனும் பதினேழு நெறிகளைத் தமிழ்-இசுலாமியப் பொது நெறிகள் எனலாம். சீறாவின் மகளிர் இருநெறிகளைப் பின்பற்றி வாழ்ந்தனர் என்பதை இக்காப்பியத்தில் தெளிவாகக் காணலாம்.

தெய்வம் தொழஅள் கொழுநன் தொழுவாள்' (குறள்: 55) போன்ற இசுலாத்திற்கு எதிர்நிலையான சில நெறிகளும் தமிழ் மகளிர் ஒழுக்கங்களில் உண்டு. பொது நெறிகள் தவிர்த்து இசுலாமியப் பெண்களுக்கென்று சில சிறப்பு நெறிகளும் உண்டு. அவை

1. கைம்மை மறுத்த மறுமணநெறி
2. 'மகர்' எனும் மண உரிமம்
3. கொள்கைக்காக உயர்த்தியாகம்

**கைம்மை மறுத்த மறுமணநெறி**

கைம்மை மறுப்பும் மறுமணமும் இசுலாமியப் பெண்களின் உரிமையாகும். சீறாகாட்டும் நபிகளாரின் திருமணங்களில் பல விதவையர் மறுமணங்கள் ஆகும். ''நபிகளார் மணமுடித்தவர் களுள் கன்னிப்பெண்ணாய் இருந்த ஒரே மங்கை ஆயிஷா'' ஆவார் (ஏ.என். ஹாபிஸ் முஹம்மது யூசுப், பெண் ஸஹாபாக்கள் வரலாறு, 1995, ப. 36). காப்பியநாயகி கதீஜாவை விதவை எனக் குறிப்பிடாததைக் கூடக் காப்பியநயம் கருதி அவ்வாறு உமறு சுட்டவில்லை எனக் கருதலாம். ஆனால் சௌதா, அபுசா, செயினபு, உம்முசல்மா, சுவைறா, செயினபு நாச்சியார் ஆகியோரை விதவையர் எனச் சுட்டாதது ஏன்? ''கணவனை இழந்து கைக்குழந்தையுடன் ஆதரவற்ற நிலையிருந்த சௌதாவையும் செயினபுவையும் நபிகளார் மணந்து பாதுகாத்தனர்'' (சு. செல்லப்பனார், நெஞ்சையள்ளும் சீறா, 1985 ப. 568-569, பக். 772-773). இந்த உண்மையினைக் குறிப்பிடாது ''ஆயிழைசௌதா'' என்று மட்டுமே உமறு சுட்டுவார் (சீறா, உகுபான்படலம், பாடல்-3).

இந்தச் செய்திகளை எல்லாம் உமறுப்புலவர் மறைத்துவிட்டார். இவ்வாறு கதீஜா, சௌதா என நபிகளார் மணம் புரிந்த மகளிரை கூறிய உமறு, இவர்கள் கணவனை இழந்தவர்கள், தீர்த்துப் பிரிந்தவர்கள் (விவாகரத்து) என்பதை மறைத்துவிட்டார். இதனால் காப்பியச்சுவைக் கெட்டுவிடும் எனக் கருதினாரோ? இவை முழுவதையும் உமறு கூறியிருந்தால் சீறாப்புராணம் ''கைம்மை

மறுத்த மறுமணத்தை வலியுறுத்தும் புரட்சிக் காப்பியம்'' எனப் புகழ் பெற்றிருக்கும். மாறாக, சீவக சிந்தாமணியில் சீவகன் வரிசையாகப் பல பெண்களை மணந்ததால் 'மணநூல்' என அழைக்கப்பட்டதுபோல சீறாவின் மதிப்பும் சுருங்கிற்று எனக் கருதலாம். உண்மை வரலாறு அறியாத பிறசமயச் சான்றோர் சீறாவைப் பயிலும்போது பெருமகனார் வரிசையாகப் பல கன்னியரை மணந்து துய்த்தார் என்றே பிழைபடக் கருதுவர். உமறு அரிய வரலாற்றுச் செய்திகளைச் சொல்லாமல் விட்டது இசுலாமிய மகளிரின் மறுமண நெறிக்குப் பேரிழப்பாகும்.

**'மகர்' என்னும் மண உரிமம்**

வரதட்சணைக்கு எதிர்மாறானது 'மகர்' பெண்ணை மணக்கும் முன் ஆண்மகன் ஒரு குறிப்பிட்ட தொகையை ஊரார் சாட்சியாக மணமகளுக்குக் கொடுப்பது 'மகர்' எனப்படும். மணஉரிமம். இசுலாமியத் திருமணத்தில் இது கட்டாயச் சடங்காகும். பெண்ணை மதிக்கின்ற மேம்படுத்துகின்ற முறையாக இது உள்ளது.

கதீஜாவை நபிகள் மணமுடிக்கும்போது ஐந்நூறு 'இரசிதம்' (வெள்ளி) மகராக அளித்தனர்.

''இருகிளையவரும் சம்மதித் தைந்நூறிரசிதம் மகரெனப் பொருந்திக்

...... பிரியமுற்றுரைத்தனரன்றே''

(சீறா. மணம்புரிபடலம், பாடல்-113)

நபிகளாரின் மகள் பாத்திமா அவர்கள் அலியின் மகரை ஏற்க மறுத்தார். இப்படி ஒரு மணமகள் மகரை ஏற்கவும் மறுக்கவும் உரிமை உண்டு. பாத்திமா கேட்ட மகர் யாதெனில், உலக இறுதி நாளில் மகளிர் யாவருக்கும் இறைவன் 'ஷபாஅத்' என்னும் சிபாரிசு செய்து அவர்கள் சொர்க்கம் அடைய ஒப்புதல் அளித்தானே யானால் அதுவே நான் விரும்பும் 'மகர்' என்றார் பாத்திமா.

இதனை உமறு,

''இறுதியில் பவத்தின் மாதர் என் ஷாபாஅத்தீடு ஏற்றம்

.............................................

உறுதிநன்மகர் பெற்றேனென்று உரைத்தனர்''

(சீறா. பாத்திமா திருமணப்படலம், பாடல்-51)

என்று போற்றுகிறார் உமறு. இந்நிகழ்ச்சி மகர் என்பது மணமகன் ஈயும் கொடையல்ல அது மணமக்களுக்கு மனநிறைவு தருமளவில் அளிக்கப்படும் உரிமத்தொகை என உணர்த்தும் சான்றாகும்.

**கொள்கைக்காக உயிர்த்தியாகம்**

''பெண்கள் மென்மையானவர்கள் பெண்களிடம் கனிவாக நடந்துகொள்ளுங்கள்'' என்பது திருக்குர்ஆன் வசனம் (குர்ஆன் மஜீத் திருக்குர்ஆன், மூலமும் தமிழ் உரையும், எஸ். முஹம்மது ஜான் (உரை. ஆ), *1983. அத். 4,* வசனம். *5,* ப. *119).* ஆனால் சுமையாவிற்கு நடந்ததோ எதிர்மாறானது.

சுமையா ஆசிறு என்பவரின் மனைவி. சுமையா தீன் நெறியைத் தழுவியதால் காபிர்கள் (இறை மறுப்பாளர்கள்) அவர்களைச் சுடுபரல் வெயிலில் கிடத்திச் சொல்லமுடியாத அளவுக்குச் சித்திரவதை செய்தனர். வெந்தழலில் கருகினாலும் அவர்கள் தீன்நிலை மறுத்திலர். இதனை,

''வேனலில் தழுவிநீர் வெதும்பிச் செல்வரி

.....................................

தீனிலை மறுத்திலர் செவ்வியோர்களே''

*(சீறா. தீனிலை கண்ட படலம், பாடல் - 127)*

என்று சுமையா குடும்பத்தினரைப் பாராட்டுகிறார் உமறு. சுமையா துயரும் தன் கணவனை நோக்கினார்; தன் பிள்ளைகளை நோக்கினார்; இறுதியில் விண்ணை நோக்கி வீடு நோக்கினார். அவர் உயிர் துறந்த சோகத்தைப் பெருமைபடுத்துகிறார் உமறுப்புலவர்.

''மண்ணிடை கணவனை நோக்கி மைந்தனை

.........................................

விண்ணினை நோக்குபவள் வீடு நோக்குவாள்''

*(சீறா. தீனிலை கண்ட படலம், பாடல்-130)*

இத்தியாகத்தைப் பெருமைப்படுத்தக் கருதிய உமறு, சுமையா உலகத்தார், யாவர்க்கும் தாயானார் என்று புகழ்கிறார்.

''தெரிமறை முகம்மதின் தீனுக்காகவே

.......................................

தருஅம்மா றுடையதாய் எவர்க்குந் தாயரே''

*(சீறா. தீனிலை கண்ட பலடம், பாடல் - 132)*

என்று உமறு பாராட்டும் அளவிற்குப் பேறு பெற்றவர் சுமையா.

இந்நிகழ்ச்சி இசுலாமிய மகளிர் கொள்கைக்காக உயிர்த்தியாகம் செய்யத் தயங்க மாட்டார்கள் என்பதற்குச் சான்றாகத் திகழ்கிறது.

**முடிவுரை**

மகளிர் நெறிகளில் தமிழ், இசுலாம் ஆகிய இரண்டு பண்பாடு களையும் இணைக்கும் பண்பாட்டுக்கூடலைச் சீறாவில் காணமுடிகிறது.

சீறாப்புராணம் இசுலாம் வலியுறுத்தும் கைம்மை மறுப்பையும் விதவையர் மறுமணத்தையும் வெளிப்பட பேசவில்லை. இது சீறா சித்திரிக்கும் காப்பிய நாயகரின் பெருமையையும் மகளிரின் உரிமையையும் சிதைக்கிறது எனக் கருதலாம்.

'மகர்' என்பது மணமகனின் விருப்பமன்று. மணமகளுக்கு மனநிறைவளிக்கும் உரிமம் என்பதனைச் சீறாப்புராணம் அழுத்த மாகச் சொல்கிறது.

இசுலாமியக் கொள்கைக்காக உயிரைத் தியாகம் செய்வதற்கும் தயங்காத மகளிரைச் சீறாவில் பார்க்கிறோம்.

இசுலாமிய மகளிர் வீரவுணர்ச்சியும் குறிப்பிடத்தக்கது. எளிமையும், மார்க்கநெறியும் அவர்களுக்கு இரு கண்கள் போன்றவை.

# தனியே அவர்க்கோர் குணம் உண்டு

**க.ப. அறவாணன்**
புதுச்சேரி

தமிழ் இலக்கியங்கள் பொதுவாகவும் அறஇலக்கியங்கள் குறிப்பாகவும் தமிழர் நடத்தைகளை எந்த அளவு பாதித்தன? ''போதிய அளவு பாதிக்கவில்லை அல்லது தமிழர்கள் இலக்கியங் களைப் பெரிதாகப் பொருட் படுத்துவதில்லை. தமிழ் இலக்கியங் களைப் பொறுத்த அளவிற்குப் பெரும்பான்மை தமிழ் மக்களின் கண்ணாடியாக விளங்குவதில்லை'' என்பனவே இக்கட்டுரையின் கருதுகோள்.

உடலோடு ஒட்டிய அங்கங்கள்; உடல்மேல் மாட்டிய ஆடைகள். இவை இரண்டிற்கும் வேறுபாடு உண்டு. தோலின் நிலைமை வேறு; ஆடையின் நிலைமை வேறு. தோல் உடலின் உயிரின் ஒன்றிய அங்கம்; ஆடை அத்தகையது அன்று. தமிழரைப் பொறுத்தவரை இலக்கியங்களும், அறங்களும், சமயங்களும், அவை சொல்லும் கோட்பாடுகளும் தமிழரின் அங்கம் ஆனதில்லை; தோல் ஆனதில்லை. அவை வெறும் அலங்கார ஆடை மட்டுமே.

சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய அற இலக்கியங்கள், திருக்குறள், இவற்றின் பின் தோன்றிய அற இலக்கியங்கள், அவற்றில் சொல்லப்பட்ட வாழ்க்கை வழிகாட்டும் நெறிமுறைகள், கடந்த நூற்றாண்டுகளில் பெரிய அளவு மக்களைப் பாதித்ததாகத் தெரியவில்லை. அற இலக்கியங்கள் மட்டுமின்றி, கம்பராமாயணம், வில்லிபாரதம் முதலாய இதிகாசங்களும் சிலம்பு, மணிமேகலை முதலாய காப்பியங்களும் பெரியபுராணம், கந்தபுராணம் முதலாய புராணங்களும் இன்ன பிறவும் கூட இலக்கிய அரங்குகளிலும், கோயில் மேடைகளிலும் பயன்படுத்தப்பட்டன. அவை மக்களால் சுவைத்து இரசிக்கவும் பட்டன. ஆனால் மக்கள் வாழ்க்கையோடு செரிமானம் ஆகவில்லை, இரத்தத்தில் கலக்கவில்லை; நாடி நரம்புகளில் ஏறவில்லை. தமிழருடைய கடந்த நூற்றாண்டு வாழ்க்கையைக் கிடைத்திருக்கும் சான்றுகளை வைத்து ஆராயும் பொழுது மேற்கண்ட இலக்கியங்கள் எதுவும் அவர்களை அசைத்ததாகத் தெரியவில்லை. சான்றாகக் கள் குடித்தல், புலால் தின்னுதல், அதற்காக உயிர்களைக் கொல்லுதல், ஆண் பெண்

பால் உறவுச் சிக்கல்கள், பரத்தையர் பெருக்கம், பொய், ஏமாற்று, திருட்டு, முதலாய சமுதாயக் குற்றங்கள். குறைந்தனவாகத் தெரியவே இல்லை; நாளும் பெருகி வருகின்றன.

இலக்கியங்கள் வழிப் பரப்பப்பட்ட சமுதாய அறங்கள் மட்டுமின்றி இந்தியச் சமயங்கள் வழியாகவும் பரப்பப்பட்ட அறங்களும் மக்களைச் சென்று அடையவில்லை. சான்றாகக் கி.பி. 3 முதல் 6 வரையிலான 300 ஆண்டுகளில் தமிழகத்தில் சமண பௌத்த மதங்கள் மேலோங்கி இருந்தன. அவற்றின் நெறிகள் இலக்கியம், நடைவழிப் பயணம், மக்களிடம் கதை சொல்லிப் பிரச்சாரம் செய்தல் வழி மேற்கொள்ளப்பட்டன. விளைவாகச் சமண பௌத்தச் சடங்குகள், கோயில்கள், சிலை வழிபாடுகள் ஆகியன பெருகின. அந்த அளவு அம்மதச் சான்றோர் பரப்பிய ஜைன அறமோ, பௌத்த அறமோ பெருகவில்லை, நிலைக்கவில்லை என்பதைக் கி.பி. ஆறாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்ட தமிழருடைய தொடர் வரலாறு இன்றுவரை நிறுவி வருகிறது. விதி விலக்காக ஆங்காங்கே சில ஊர்களில் இருக்கும் மத நெறிகளைப் பெரும்பான்மை மக்கள் பின்பற்றும் நெறிகளாகக் கொள்ள முடியாது.

சைவர்கள் தேவாரங்களையும் திருவாசகத்தையும் போற்றினர். வைணவர், திவ்வியப் பிரபந்தத்தைப் போற்றினர். ஆனால் இவை இறைவனை நோக்கிய போற்றிகளாக மட்டும், பக்தி போதை தரும் இறைவனின் அருட்செயல்களைப் பற்றிப் பேசுவனவாக மட்டும் அமைந்துள்ளன. இப்பாடல்களில் அறக்கூறு களின் பங்கு மிகமிகக் குறைவு. கிறித்துவ விவிலியத்தையும், அதில் உள்ள நீதி மொழிகளையும், இசுலாமியரின் திருக்குரானையும் அதிலுள்ள பலவேறு நெறியுரைக்கும் கருத்துகளையும் ஒப்பிடும் போது தேவாரம், திருவாசகம் திவ்விய பிரபந்தம் ஆகியவற்றில் அடங்கி உள்ள அறக்கருத்துகள் மிகக் குறைவு. எனவே இவற்றால் மக்களிடம் அறநெறிகள் பரவவில்லை பக்தி உணர்வுவயமாதல் மட்டுமே பெருகிற்று.

ஆக, இலக்கியங்கள், அற இலக்கியங்கள் இந்திய சமயங்கள், இந்திய சமய இலக்கியங்கள் மக்கட் சமுதாயத்தை அறக்கோட் பாட்டில் பெரிதாக மாற்றி அமைத்துவிட வில்லை. ஐரோப்பியர் வரவிற்குப் பிறகு சட்டம் மேற்கண்டவற்றின் இடத்தைப் பெற்றுக் கொண்டது. வெளிப்படையான தண்டனை முறைகள் காவல்துறையினாலும் நீதித் துறையினராலும் வழங்கப்படுவதால் ஓரளவு இச்சட்டங்கள் மதிக்கப்படுகின்றன. ஆனால் சட்டங்களை

மதிக்காத மக்கள் என்றே தமிழர்கள் மற்றவர்களால் கணிக்கப்படு கின்றனர். சிங்கப்பூர் முதலிய நாடுகளை ஒப்பிடும்போது அக்கணிப்புச் சரி என்றே கருதத் தோன்றுகிறது. ஆகத் தமிழரைப் பெரிய அளவோ பெரும்பான்மை அளவோ இலக்கியங்கள், பாதிப்பதில்லை. கல்லாதவர்களும் இதில் அடக்கம்; கற்றவர்களும் இதில் அடக்கம். கற்றவர்களிடம் இலக்கியம் சொல்லும் செய்தி (Message) கொய்யாப் பழத்தின் தோல் போல அங்கமாவதில்லை. புளியம்பழம், தோல் வேறு பழச்சதை வேறு வேறாக இருப்பது போல் படித்த இலக்கியம் கருத்துரை வாழ்வு வேறாக அயன்மை யுற்று வாழுகின்றனர்.

சமுதாய ஒழுங்குகளைப் பயிற்றுகின்ற நடைமுறைப்படுத்த விரும்புகின்ற மதங்களையும், தத்துவங்களையும், இசங்களையும், புறக்கணிக்கும் குணம் உடையவர்களாகவே தமிழர்கள் வரலாறு நெடுகத் தென்படுகின்றனர். சான்று: பௌத்த சமணம், கம்யூனிச இயக்கம், பெரியார் இயக்கம். மாறாகத் தலைமை வழிபாட்டிலும் உணர்ச்சிவயத்திலும் தங்களை நிலை நிறுத்தும் மதங்களையும் கோட்பாடுகளையும், இயக்கங்களையுமே பின்பற்றுகின்றனர். சான்று: பக்தி இயக்கம், வேத சமயம், சினிமா இயக்கம், கதாநாயகர்களை முன்னிறுத்தம் அரசியல் இயக்கங்கள்.

# பாய்ஸ் படுத்தும் (பண்)பாடு

***நா. சந்திரசேகரன்***

*இந்துக் கல்லூரி*
*சென்னை - 74*

பக்திப் படங்களைப் பரவசத்துடன் பார்க்கும் அதே பார்வை யாளிகள்தான் 'ஷ'ங்கர் படங்களைப் படுகவர்ச்சியுடன் பார்க்கின்றனர். இதற்குக் (செயற்கையாகத் தெரிந்தாலும்) கணினி வரைகலைச் சட்டகங்களை (Computer Graphical Frames) ஒவ்வொரு படத்திலும் (குறிப்பாகப் பாடல்களில்) திணித்து கணினித்துறை பார்த்தறியா மேற்படி பரவசப் பார்வையாளிகளைப் புல்லரிக்கச் செய்ததும் ஒரு முக்கியமான காரணம். இவ்வாறு 'ஷ'ங்கராகவும் 'ச'ங்கராகவும் ஒருவரே கொள்ளும் இயக்க அவதாரம் அவர் (எந்தமாதிரி திரைப்படம் இயக்கினாலும்) படத்தைப் பார்த்துவிட வேண்டும் என்ற ஆவலூட்டப்பட்ட தமிழ்ப்பரவசப் பார்வையாளிகளுக்குச் சமர்பிக்கப்பட்டதுதான் 'பாய்ஸ்' (விடலைப் பையன்கள்) திரைப்படம்.

பாய்ஸ் படத்தின் மூலம் தமிழர் பண்பாட்டுச் சமூகவியல் (நகரமயம் - தனியார்மயம் - உலகமயமாதல் - சார்பு பின்னணியில் பணம் கொழிக்க வளர்ந்துவிட்ட) ஒரு திரைப்பட இயக்குனரால் கேள்விக்குட்படுத்தப்படுவது மட்டுமல்ல அபாயமானது என்றும் அநாவசியமானது என்றும் பறை சாற்றப்பட்டுள்ளது; இல்லை 'பாப்' பாடப்பட்டுள்ளது.

காட்சிகளின் இடையிடையே கொடுக்கப்பட்ட பாடல், திரைக்கதைக்காக வைக்கப்பட்ட பாடல்கள், கம்ப்யூட்டர் கிராஃபிக்ஸ்க்காகத் திணிக்கப்பட்ட பாடல் முதலியனவும் பாடல் களுக்காகப் படமாக்கப்பட்ட சட்டகங்கள் மற்றும் காட்சிகள் பற்றி மட்டும் தனியானதொரு 'ஷங்கர்' ஆலாபனை செய்யலாம்.

பாய்ஸ் படத்தில் நகரத்துச் சிறுபான்மை விடலைகளின் அந்தரங்கங்கள் காட்சிகளாய்ப் பெரும்பாலும் சேகரிக்கப்பட்டுள்ளன. தமிழ்மொழி பேசும் அத்தனை மக்களின் வாழ்வையும் யதார்த்தக் காட்சி வெளிப்பாடுகளாய் நியாயப்படுத்துவதோ சித்திரிப்பதோ இயலாத ஒன்றுதான். அதேசமயம் ஒரு படைப்பாளன் தன்

படைப்புக்கான தரவுகளை ஒரே ஒரு மனிதனிடமிருந்தோ குடும்பத்திடமிருந்தோ, தெருவிடமிருந்தோ, ஊரிடமிருந்தோ பெறுவதில்லை அல்லது தருவதில்லை. பல்வேறுபட்ட பாத்திர, இட, நேர கலப்புகளிலிருந்துதான் அப்படைப்புகள் அழகியல் தன்மையுடையதாகவோ, நடப்பியல் தன்மையுடையதாகவோ படைப்பாக்கம் பெற்றுள்ளன. இவ்வாறு கலைக் கலவை செய்யும் ஒரு படைப்பாளன் தன்னைப் பற்றியோ, தன் விருப்பு வெறுப்பு பற்றியோ (இவற்றில் ஏதேனும் ஒன்றிரண்டு அல்லது அத்தனையுமாய்) அமைந்த படைப்பாக்கம் தான் காலம்தோறும் வெளிவந்து கொண்டி ருக்கின்றன. ''ஒரு படைப்பு உருவாகும்போது அப்படைப்பாளன் செத்து விடுகிறான்'' என்ற பின் நவீனத்துவச் சார்பு வாதம்கூட வாசக நோக்கிற்குரியதேயன்றி படைப்பு விமர்சன நோக்கிற்குரியதல்ல. 'சங்கர்' என்ற தனிமனிதனும் உதவியாளர்களும் தேர்ந்தெடுத்த சமகால நிகழ்வுகள் 'பாய்ஸ்' படத்தில் கலைக்கலவையாய் இயக்குனர் 'ஷங்கர்' தரப்பில் தருவிக்கப்பட்ட காட்சிகளாக்கப்படும் நோக்கமும் அதற்கான தொனி (Tone)யும் தான் ஷங்கரை (உலகமய ஏகாதி பத்தியத்தின் பொருளாதார/அரசியல் சுரண்டல்களைப் பற்றிய சொரணையற்றுப் போவதற்கான பார்வையாளர்களை உருவாக்கும் தீவிரமானதொரு தமிழர் பண்பாட்டுச் சமூகவிரோத வேலை செய்பவரென) விழிப்புடன் பார்ப்போருக்கு அடையாளம் காட்டு கிறது. இதில் வேடிக்கை என்னவென்றால் 'கனவுத் தொழிற்சாலை' நாவலில் திரைப்படத் தொழிலில் உள்ள பெரும்பான்மைக் கூறுகளை விமர்சிக்கும் நாவலாசிரியர் சுஜாதா, வசனகர்த்தாவாக வளர்ச்சியடைந்தவர், வயது முதிர்ந்த பட்டறிவாளர் விடலைப் பையன்கள் உரையாடலைத் தரும் வசனகர்த்தா ஆனதுதான்.

சமீபகாலப் படங்களில் ஒரு குறிப்பிட்ட விழுக்காட்டுப் பகுதி, விவேக்கின் நகைச்சுவைக்கு என்று ஒதுக்கப்பட்டுச் சின்னக் கலைவாணர் என்று பாராட்டப்படுகிறார். ''சாமி''-யில் அவர் பாரதியைப் போல நடிப்பதில் ஒவ்வொரு நகைச்சுவைக் காட்சியின் கடைசித் 'தெறிப்பு' வசனம் அந்தந்தக் காட்சியின் தீவிரத்தை மழுங்கடிப்பது மட்டுமன்றிப் படிக்காத பஞ்ச பாரதியாய் ஒடுக்கப் பட்ட ஏழைச் சிறுவர்களும், ஒரு யானையும் கேவலப்படுத்தப் படுவதும் நினைவிலிருந்து தட்டவில்லை. அவர் நகைச்சுவைக் காட்சிகளின் (ஒரு சில முந்தையவற்றைப் போன்றதல்லாமல்) 'தொனி'யை மாற்றிக் கொண்டு தயாரிப்பாளர்களின்/முதலீட்டார் களின் 'தொனி'யைப் பெற்றது இங்கு அதாவது 'பாய்ஸ்' படத்தில் தன்னை ஒரு நகைச்சுவை நடிகரிலிருந்து மாற்றிக் கொண்ட தன்மை வெளிப்படையாகிறது. 'அய்யப்பன்' பாடல் கேசட் தயாரித்து

வெளியிடும் போது 'பாய்ஸ்'களை உற்சாகப்படுத்துகிறார். புரட்சிக்குப் பாட்டெழுதிச் சிறை போகும் 'பாய்ஸ்'களைத் திட்டுகிறார். மேலைநாட்டு கம்பெனியான மேற்கத்திய 'பாப்' கலாச்சாரத்தை வன்மையாகத் திணிக்கும் நிறுவனத்தின் காலில் விழுந்து வாய்ப்பு வாங்கிக் கொடுக்கிறார்.

இங்கு 'விவேக்'ன் பூத உடலுக்குள் 'ஷ'ங்கரின் ஆவி புகுந்து கொண்டுதான் ஆட்டுகிறது என்றாலும், வேறு புது சினிமா இயக்குனர் ஆவிகள்ளைப் புகுத்திக் கொள்ளாது ''அடப்பாவிகளா இத்தனூண்டு எலுமிச்சைப் பழத்த வெச்சு ஏழாயிரம் ஸ்பேர் பார்ட்ஸ் கொண்ட லாரி ஓடுதுன்னு நம்புறீங்களாடா''னு நடித்த நகைச்சுவை நடிகர் நினைவுக்கு வருகிறார்.

இயக்குனர் 'ஷ'ங்கர் இப்படி ஒவ்வொரு பாய்ஸ்-ன் (அந்த ஒரு கதாநாயகியின்னுள்ளும்) பூத உடலுக்குள்ளும் புகுந்து புகுந்துதான் தன் படைப்புத் தொனியை வெளிப்படுத்தியுள்ளார்.

ஒவ்வொரு கல்லூரி இளைஞனும் மல்லாந்து படுத்துக்கொண்டு எச்சில் துப்பி சுயம் அசிங்கமடைந்து கொள்வதை ஒரு தொடர்ந்த பண்பாட்டு மரபெனக் கொள்ளும்படியாகப் படம்பார்த்து விட்டு வந்து மயக்கத்தில் புலம்பும் பாமரப் பார்வையாள ''பாய்ஸ்''களின் மனநிலை ஒரு சேர நமக்குக் கிடைக்கிறது.

ஒரு சில பாமரப் பார்வையாள பாய்(ஸ்) பக்கத்துப் பார்வை யாளனுக்குரியதுதான் அசிங்கமாய் வெளிப்படும் காட்சி என்று எண்ணிக் கொண்டு வந்துள்ளான்.

சமீப காலமாய்த் தமிழ்ச் சமூகத்தில் பல்வேறு தொழிலாளர் அமைப்புகள் (மக்களின் ஏகோபித்த இரக்கத்தைப் பெறாதபடியால் தாங்கள் பணிபுரியும் களம் - கணங்களில் முரண்பட்ட வழியும்) தனியார் மயப்பற்றுடைய அரசு நிர்வாகத்தால் கொசுவிலும் கேவலமாக ஒடுக்கப்பட்டு உள்ளனர். கல்வி நிறுவனங்களின் ஆசிரியப் பணியாளர்கள் தவிர இன்னபிற வேலைகளில் முழு மூச்சாய் ஈடுப்பட்டவர், தத்தம் துறைசார் அறிவு மேம்படுத்தலும் கற்பித்தலில் புதுமை புகுத்தலும் செய்யாத வழி மாணவர்களின் ஆதரவையும் பெறாது போனார்கள். மாணவர்களோ குறிப்பாகக் கல்லூரி மாணவர்களோ தத்தம் பட்டப்படிப்பு என்பது பாதி அறிவுக்குத்தான் மீதிக்குப் பட்டறிவுதான் அடிப்படை என்பதை உணராது பட்டறிவுக்குப் பகுத்தறியும் திறனும் உரிமைக்காகப் போராடும் குணமும் தேவை என்பதை அறியாமலேயே உடல் வளர்க்கும் தலைமுறை மாணவர்களாய்ப் பட்டங்கள் பெற்றுக் கொண்டு வீதிகளில் திரிகிறார்கள்.

மேலைநாடுகளின் நவீனக் கண்டுபிடிப்புக் கழிவு (Use & Throw) உற்பத்தி முறைமை நேரடி முழு உற்பத்திப் பொருள் விற்பனைச் சந்தைகளாலும் பகுதித் தொழில்நுட்பப் பிரிவுச் சந்தைகளாலும், முழு தொழில்நுட்ப உற்பத்தி முறைச் செயல் பாடுகளாலும் (இவற்றுக்கு இணையாக அல்லது தேவையாக அரசு மயத்தை அழித்தும் நவீனமாக்கியும்) சமகாலம் மாறி வந்து கொண்டிருக்கும் சூழலில் நாம் நிற்கிறோம். மேலைநாட்டு உற்பத்தி முறைமைகளுக்கானவை, வாழ்க்கை முறைக்கானவை அவற்றை நியாயப்படுத்துபவை அங்குள்ள கலை - இலக்கியம் - சினிமா உள்ளிட்ட பொழுதுபோக்கு வெளிப்பாடுகள். இவை ஒன்றையொன்று (பரஸ்பர) சார்புத்தன்மை மற்றும் (பரஸ்பர) தாக்கம் ஏற்படுத்தும் தன்மை கொண்டவை.

பந்து முனைப் பேனா (Use & Throw Ball Point Pen) புழக்கத்திலுள்ள இன்றளவிலும் பேனாவின் வயிற்றுக்குள் மை ஊற்றி எழுதிடும், (விரல்கள் வரை மை கசிந்தாலும் தாள் வைத்து மீண்டும் இறுக்கி எழுதிடும்) மாணவர்களும் வாழும் நிலையுண்டு. வாகனங்களில் வட்டமடித்து, கற்கும் பருவ வாலிபத்தைக் காமக் களிப்பாய்க் கழித்திடும் ஒருசிலர் படிக்கும் அதே ஏக காலத்தில் இன்று, கடன்பட்டும், இரவல் பெற்றும், வேலை செய்தும், இலவசப் பயணம் செய்தும், நெடுந்தூரம் பயணித்தும் படிப்போர் கோடிக் கணக்கிலுள்ளனர்.

படிக்கும் படிப்பு பள்ளியளவானாலும் பட்டம் ஆனாலும் பெற்றோர் கொண்டிருக்கும் இன்னல் மிகுந்த வாழ்க்கை முறை யினும் மேம்பட்டதான வாழ்வைப் பெற பயன்பட வேண்டும் என்றுதான் பல ஆயிரம் லட்ச மாணவர்கள் உழல்கின்றனர். பகுதிநேரம் உழைத்துக் கொண்டே தத்தம் படிப்புக்கான செலவைத் தாமே கைக்கொள்ள வேண்டுமென்ற துடிப்போடே முயன்று துவண்டு படிக்கும் மாணவர்கள் ஏராளமானவர்கள். மேலே சொல்லப்பட்ட அத்தனை பேருக்கும் காதல் - காமம் - நட்பிலும் நாட்டமுண்டு. இந்த உணர்வுகளை வாழ்க்கைப் போக்கில் இயல்பாய்க் கொள்ள முயன்று தோற்பதும் உண்டு. அதன் பாதிப்பால் எதிர்கால இலட்சிய இலக்கை மறந்து பாதை தவறிப் பயணிப்பதும் உண்டு. சமகால மாணவர்கள் பாதை தவறிப் போவதற்கு ஒரு பெரும்பங்கு சினிமா மற்றும் தொலைக்காட்சி ஊடகங்களுக்கு உண்டு. அதிலும் மாணவர்கள் செயல்பாடு களைத்தானே யதார்த்தமாய் வெளிப்படுத்துகிறோம் என்று கூறி விட்டு அம்மாணவர்களின் பலவீனங்களைப் படுகவர்ச்சியுடன் காட்சிப்படுத்தும் போது பின்னால் எத்தகைய அறிவுரையோ

வழிமுறையோ இருந்தாலும் அத்தகைய அறிவுரை வழிமுறைகள் சம்பந்தப்பட்டவர்களைச் சென்றடைய வாய்ப்பேயில்லை.

அந்த வாய்ப்பை அதாவது சமகால மாணவர்கள் முன்னேறு வதற்கான அறிவுரை மற்றும் வழிமுறைகளை எந்த விதத்திலும் பெற்றுவிடக்கூடாது என்பதில் கங்கணம் கட்டிக் கொண்டு ''பாய்ஸ்'' படம் பரவுகிறது. ஒரு வேளை வேறு பல நல்ல நூல்கள் மூலம் அல்லது குடும்பத்தினர் கல்வியாளர்கள் போன்றோரால் அறிவும் தெளிவும் பெற்று உரிமையுள்ள, மானமுள்ள, போராடும் குணமுள்ள, தமிழ்ப் பண்பாட்டைத் தக்க வைத்துள்ள மாணவச் சமுதாயம் மேலும் மேலும் பெருகவேண்டும். மயக்க உற்பத்தித் தொழில்களை முறைகளை ஏற்காது போனால் சுயநினைவடைந்த நிலையில் அந்தச் சமூகம் தன் இனத் தேவையையும் பண் பாட்டையும் கருத்தில் கொள்ளும் இதனை மனத்தில் எண்ணி ஈடுபடும் உற்பத்தி முறைகளை மேற்கொண்டால் ஆதிக்கம் செய்யத் துடிக்கும் அந்நிய சக்திகளின் அடி வயிற்றில் புளி கரைக்கும்.

# பஞ்சவாசம்

***அ. சரசுவதி***

*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்*
*சென்னை - 113*

சங்ககால மக்கள் தங்கள் உணவிலும் ஒப்பனையிலும் அகில், சந்தனம், புழுகு, பன்னீர், குங்குமம், இலவங்கம், சாதிக்காய், ஏலம் போன்ற பல்வேறு வகையான நறுமணப் பொருள்களைப் பயன்படுத்தினர். இங்ஙனம் தமிழர்கள் பயன்படுத்திய இம்மணப் பொருட்களுள் 'பஞ்சவாசம்' எனச் சில மணப்பொருட்களை உரையாசிரியர்களின் உரை சுட்டுகிறது. அவை எவை? இவை மட்டும் பஞ்சவாசப் பொருள்கள் எனத் தனித்து அழைக்கப் பட்டதன் காரணம் என்ன? போன்றவற்றை ஆராயும் நோக்கில் இக்கட்டுரை அமைகிறது.

சங்க `காலத்தில் 'வாசம்' எனும் சொல்லுக்கு மணம் என்ற பொருள் மட்டும் காணப்பட்டது. சங்க இலக்கிய நூல்களும் மணம் என்ற பொருளை மட்டுமே குறித்தது. சான்றாக,

''சுரும்புண மலர்ந்த வாசங் கீழ்ப்பட
......................'' *(குறு. 309:2)*

எனும் வரியில் இடம்பெற்றுள்ள 'வாசம்' என்ற சொல்லுக்கு 'மலரின் மணம்' என்ற பொருள் அமைகிறது. இவ்வாறே பரிபாடலிலும்,

''வாச மணத்துவர் வாய்க் கொள்வோரும்
இடுபுணர் வளையொடு தொடுதோள் வளையர்''
*(பரி. 12:22-23)*

எனும் வரியில் வாசம் என்ற சொல் 'மணமுடைய பாக்கு' என்பதைக் குறிக்கிறது. இருப்பினும் உரை எழுதும் பரிமேலழகர் 'பஞ்சவாசத்தோடும் கூட்டியிடித்த பாக்கு' எனப் பொருள் உரைக்கிறார். இன்று வாசம் என்பது மணத்தைக் குறித்தது போல அன்றும் மணத்தையே குறித்தது. எனினும் வாசம் எனும் சொல் சிலப்பதிகாரத்தில் மணமுடைய பொருள்களைக் குறிக்கிறது.

அகிலுந் துகிலு மாரமும் வாசமும்
தொகு கருப்பூரமும் சுமந்துடன் வந்த
*(சிலம்பு. ஊர். கா. 108 - 109)*

இதில் வாசம் எனும் சொல்லிற்குத் தக்கோலம், சாதிக்காய் முதலியன எனப் பொருள் தருகிறார் அரும்பத அரையாசிரியர். வாசம் எனப் பொதுவாகக் குறிப்பிட்டதனால் பலவகையான தொகுதி என அடியார்க்கு நல்லார் குறிப்பிடுகிறார்.

> வாசம் - அம்பர், எச்சம், கத்தூரி, சவ்வாது, சாந்து, குங்குமம், பனிநீர், புழுகு, தக்கோலம், நாகப்பூ, இலவங்கம், சாதிக்காய், வசுவாசி, நிரியாசம், தைலமென்று சொல்லப்பட்ட பலவகைத் தாகிய தொகுதியும். *(சிலம்பு. அடிந. உரை. 375)*

என வாசத்திற்கு விளக்கம் தருகிறார் அடியார்க்கு நல்லார். மணத்தைக் குறித்த இச்சொல் சிலம்பு காலத்தில் மணப் பொருள் களின் தொகுதியைக் குறிக்கும் பாங்கு தெரிகிறது. தவிர அன்று பல வாசனைப் பொருள்கள் இருந்ததும் தெரிகிறது. இருப்பினும் இங்கு இவ்வாறு உரை எழுதும் இவ்வுரையாசிரியர்,

> ''மீன் விலைப் பரதவர் வெள்ளுப்புபகருஞர்
> பாசவர் வாசவர் மைந்திண விலைஞரே''
>
> *(சிலம்பு. இந்தி. கா. 25 - 26)*

மேற்கண்ட பாடல்வரியில் வாசவர் என்பதற்குப் 'பஞ்சவாசப் பொருள்களை விற்பவர்' என உரை எழுதுகிறார். அரும்பதவுரை யாசிரியரும் இவ்வாறே பொருள் கூறுகிறார். 'வாசவர்' என்னும் சொல் சிலப்பதிகாரத்தில் முதன் முதலில் கையாளப்பட்டுள்ளது. இதனைத் தொடர்ந்து மணிமேகலையிலும் இச்சொல் பயிற்சி பெற்றுள்ளது *(கச்சி. பு. கா. 32 - 34)*.

**பஞ்சவாசம்**

வாசப் பொருள் பலவற்றை அடியார்க்கு நல்லார் தொகுத்துக் கூறுகிறார். இருப்பினும் குறிப்பிட்ட ஐந்து பொருள்கள் மட்டும் 'பஞ்சவாசம்' என உரையாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர்.

> ''தக்கோலந் தீம்பூ தகை சாலிலவங்கம்
> கப்பூரஞ் சாதியோடைந்து'' *(சிலம்பு. இந்தி. கா. உரை. 137)*

என அரும்பதவுரையாசிரியரும் அடியார்க்கு நல்லாரும் (ப. 154) உரை எழுதுகின்றனர்.

**தக்கோலம்**

தக்கோலத்தின் பயன்பாடு பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களில் காணப்படவில்லை. பழந்தமிழர் கடல் கடந்து வாணிகம் செய்த நாடுகளுள் தக்கோலத்தினையும் மயிலை சீனி. வேங்கடசாமி குறிப்பிட்டுள்ளார் *(56:1990)*. இந்நாட்டிலிருந்து

தக்கோலம் கிடைத்த காரணத்தினால் இதற்குத் 'தக்கோலம்' எனும் பெயர் ஏற்பட்டது போலும்.

''அம்பொதி புட்டில் விரைஇக் குளவியொடு
வெண் கூதாளந் தொடுத்த கண்ணிய'' *(திருமுரு. 191-192)*

எனும் பாடல் வரிகளில் 'அம்பொதிபுட்டில்' என்பதற்கு, அழகினை யுடைத்தாகிய பொதிதலையுடைய தக்கோலமென்னும் முதலின் காய்' என்று குறிப்பிட்டதோடு 'அது புட்டில் போன்றிருத்தலால் புட்டிலென்றார்' என்ற சிறு குறிப்பையும் உரையாசிரியர் தருகிறார். தக்கோலம் தாவர வகையைச் சார்ந்தது என்ற குறிப்புடன் தக்கோலக் காயின் வடிவத்தையும் நமக்குத் தெரியப்படுத்துகிறார். முப்பத்திருவகை ஓமாலிகையிலும் தக்கோலம் இடம் பெறுகிறது. தக்கோலம் ஒப்பனைகளிலும் நறுமணக் கலவைகளிலும் சேர்க்கப் பட்டுள்ளது.

**தீம்பூ**

''பூக்கமழ்த் தேறல் வாக்குபு தரத்தர
வைகல் வைகல் கைகவி பருகி'' *(பொரு. 157-158)*

மேற்கண்ட பாடல் வரிகளில் 'பூக்கமழ்த் தேறல்' என்பதற்குப் பூவின் மணம் நாறுகின்ற கட்டெளிவு என்பது நேர் பொருளாக இருப்பினும், தீம்பூ நாறுகின்ற கட்டெளிவு என உரையாசிரியர் விளக்கம் தருகிறார். இத்துடன் தீம்பூ என்பதற்குப் 'பஞ்சவாசத்துள் ஒன்றான குங்குமப்பூ எனவும் விளக்கம் அளிக்கிறார்.

சங்ககால மக்கள் உடம்பில் பூசிக்கொண்டும், கொடியும் வரியும் போன்ற சித்திரத் தொய்யில் எழுதிக்கொள்ள இக்குங்குமத்தைப் பயன்படுத்தியுள்ளனர். பரிபாடலில் குங்குமச் சேறு *(10:80-84)*, குங்குமக் குழம்பு *(6:14-24)*, குங்குமம் *(19:85)* எனக் குங்குமத்தைப் பலவகைகளில் பயன்படுத்தி உள்ளதைக் காணலாம். சந்தனக் குழம்பு போன்ற கலவைகளிலும் பூச்சுக்களிலும், பொட்டிடும் குங்குமம், சாந்து போன்றவைகளில் சேர்த்துக்கொண்டதாகவும் செய்திகள் கிடைக்கின்றன. இங்ஙனம் குங்குமப்பூவை ஒப்பனைக்கும், உணவுகளின் சுவைக்கும், சங்க கால மக்கள் பயன்படுத்தி யுள்ளனர். இன்றும் கூடக் குங்குமப்பூ பயன்பாட்டில் உள்ளது. இக்குங்குமப்பூ ''சீன முதலிய இடங்களிலிருந்து வந்தது'' என்ற குறிப்புப் பட்டினப்பாலையில் உரையாசிரியர்களின் மூலம் கிடைக்கிறது *(உரை.ப. 550)*.

**இலவங்கம்**

இலவங்கம் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில் காணப்படவில்லை. சிலப்பதிகார உரையாசிரியர்களான அரும்பதவு

ரையாசிரியரும், அடியார்க்கு நல்லாரும் பஞ்ச வாசத்துள் ஒன்றாகவும், முப்பத்திருவகை ஓமாலிகையில் ஒன்றாகவும் இலவங்கம் பற்றிய குறிப்பைத் தருகின்றனர். இலவங்கம் பற்றிய குறிப்புத் தேவாரத்தில் முதலில் பயிற்சி பெறுவதாகத் தெரிகிறது. இன்றும் இலவங்கம் (கிராம்பு) உணவிற்கு மணமூட்டும் நறுமணப் பொருளாகவும், மருத்துவப் பொருளாகவும் பயன்படுகிறது.

**கருப்பூரம்**

''கருப்பூரம் என்பது சாவக நாட்டில் சில இடங்களில் உண்டான ஒரு வகை மரத்தின் பிசின்'' என மயிலை சீனி. வேங்கடசாமி குறிப்பிடுகிறார் (93:1990). ''சீன முதலிய இடங் களிலிருந்து வந்த கருப்பூரம், பனிநீர், குங்குமம் முதலியன'' (பட். 191-193), ''சுண்ணத்தை இடிக்கப் பயன்படுத்திய தாதுக்களுள் ஒன்றாகக் கருப்பூரம் இருந்தது'' (மது. 399-400), ''மரத்தினின்றும் சிதறி யுதிர்த்த பருத்த நிகரமாகிய கருப்பூரம்'' (மலை - 516) என்ற குறிப்புகள் சங்க இலக்கிய உரையாசிரியர்களின் மூலம் கிடைக்கின்றன. பரிபாடலில், வையையில் புனலாடச் சென்ற மகளிருள் சிலர் அகில், குங்குமச்சேறு, பச்சைக் கருப்பூரம் ஆகிய இவற்றைச் சாந்தம்மியிலிட்டு அரைத்தனர் என்ற குறிப்புக் கிடைக் கிறது. பச்சைக் கருப்பூரத்திற்குப் பளிதம் என்றும் பெயர் உண்டு. இது மணமுள்ளது, விலையுயர்ந்தது, பளிதம் வெற்றிலையோடு சேர்த்து அருந்தப் பெற்றது என்ற செய்தியும் கிடைக்கிறது. கருப்பூரம் வாசப் பொருளாக இருப்பினும், சிலப்பதிகாரப் பாடல் வரிகளில் தனித்துப் பயிற்சி பெற்றுள்ளதைக் காணலாம்.

''அகிலுந் துகிலு மாரமும் வாசமும்
தொகுகருப்பூரமும் சுமந்துடன் வந்த''

(சிலப். ஊர்.கா. 106-107)

இதற்கு உரை எழுதும் அடியார்க்கு நல்லார்,

> கருப்பூரம் : மலைச்சரக்கு, கலை, அடைவுச்சரக்கு, மார்பு, இளமார்பு, ஆரூர்க்கால், கையொட்டுக்கால், மாரப்பற்று, வராசன், குமடெறிவான், உருக்குருக்கு, வாறோசு, சூடன், சீனச் சூடனென்று பெயர் கூறப்பட்ட பல வகைத்தாகிய தொகுதியுமெனத் தொகுத்தும் விரித்தும் பொருளுரைக்க.
>
> (சிலப். அடி. நல். உரை. 375)

எனக் கருப்பூரத்தின் தொகுதியைக் கூறுகிறார். கருப்பூரத்தில் பலவகையுண்டு. ஆதலால் இதனைத் தொகு கருப்பூரம் என்று கருப்பூரத்தைத் தனித்த ஒரு தொகுதியாகக் கூறுகிறார் உரையாசிரியர். கருப்பூரம் மருத்துவப் பொருளாக, ஒப்பனைப் பொருளாக,

உணவுகளில் மணமூட்டும் பொருளாகச் சங்ககாலம் முதல் இன்று வரையிலும் பயன்படுகிறது.

**சாதிக்காய்**

''பைங்கொடி நறை காயிடையிடுபுவேல'' (திருமுரு. 190)

எனும் வரியில் 'நறைகாய்' என்பதற்கு நறுநாற்றத்தையுடைய காய்; அது சாதிக்காய் எனும் குறிப்புடன் விளக்கம் தருகிறார் உரையாசிரியர். சிலம்பில் வாசத்திற்குப் பொருள்கூறும் அரும்பதவுரை யாசிரியர், 'தக்கோலம், சாதிக்காய் முதலியன' என இவ்விரண்டு பொருள்களையும் குறிப்பிடுகிறார். இக்காய் உணவின் சுவைக்கும், மணத்திற்கும் பயன்படுத்தப்படுகிறது. மருந்துப்பொருளாகவும், கூந்தல் தைலங்களிலும் விரைப்பொருள்களிலும் நறுமணம் கூட்டவும் இன்றும் பயன்படுகிறது.

**முடிவுரை**

சங்ககால மக்கள் குங்குமம், சாதிக்காய், தக்கோலம், கருப்பூரம் ஆகிய வாசப் பொருள்களைப் பயன்படுத்தி உள்ளனர். இலவங்கம் பற்றிய குறிப்பு சங்க இலக்கியங்களில் காணப்படவில்லை. ''வாசம் என்பது வாசனைப் பொருள்கள். அவை 'கிராம்பு(இலவங்கம்) குங்குமப்பூ, தக்கோலம், சாதிக்காய் முதலியவை. இந்த வாசப் பொருள்கள் அக்காலத்தில் சாவக நாட்டில் மட்டும் உண்டாயின; வேறெங்கும் இவை அக்காலத்தில் கிடைக்கவில்லை.'' (92:1990) என்று மயிலை சீனி. வேங்கடசாமி குறிப்பிடுவதைக் கொண்டு நோக்க இவ்வைந்து பொருள்களும் சாவக நாட்டிலிருந்து கொண்டு வரப்பட்ட காரணத்தால் இவை 'பஞ்சவாசம்' எனத் தனித்துக் கூறப்பட்டதோ எனத் தோன்றுகிறது.

# நாட்டுப்புறவியல் பார்வையில் பாரி மகளிரின் கையறுநிலைப் பாடல்

**ஓடை. தமிழ்ச்செல்வன்**

*யாதவர் கல்லூரி*

*மதுரை - 625 014*

**பறம்பு மலை**

2500 அடி உயரமுள்ள 'திருக்கொடுங்குன்றம்' மலையை,

''ஈண்டு நின்றோர்க்கும் தோன்றும் சிறுவரை
சென்று நின்றோர்க்கும் தோன்றும் மன்ற''[1]

எனக் கபிலர் புகழ்ந்து பாடியிருப்பதைக் காணுகின்றோம். இக்குன்றத்தின் தென்மேற்கு அடிவாரத்தில் எழுந்து நிற்கும் எழிலார்ந்த திருக்கோயிலும் அதன் அடுக்குகளும் 50 கி. மீ. தொலைவில் வடகிழக்குத் தவிர எந்தத் திசையிலிருந்து பார்த்தாலும் கவினுறு காட்சியாகக் கண்களைக் கவரும் மாட்சிமை கொண்டவை.

'திருக்கொடுங்குன்றம்' என்னும் இத்திருத்தலம் சிவகங்கை மாவட்டம் திருப்பத்தூர் வட்டம், திருப்பத்தூர் - திண்டுக்கல் வடக்கே 12 கி.மீ. தொலைவில் உள்ளது. தமிழக வரலாற்றில் வள்ளல் பாரியை நினைவில் கொண்டு 'பறம்பு மலை' என்றும், சமய உலகில் எழுந்தருளியுள்ள பரம்பொருளை மனத்தில் கொண்டு 'திருக்கொடுங்குன்றம்' என்றும் பேசப்பெற்ற இத்திருத்தலம் இன்று 'பிரான் மலை' என அழைக்கப்பெறுகின்றது. இத்தலத்தைத் திருப்புகழில் அருணகிரியார்,

''கொழுங் கொடுதின் குன்றம் தங்கும் தம்பிரானே!''

எனப் பாடியுள்ளார். அவரது காலத்திற்குப் பின்னர், 'பறம்பு மலை > பிறா மலை > பிராய் மலை > பிரான் மலை' எனவும் வழங்கப்பெற்றது. இங்கு எழுந்தருளியுள்ள இப்பெருமானை மட்டும் 'திருக்கொடுங்குன்ற நாதர்' என்றே மக்கள் அழைத்து மகிழ்கின்றனர்.[2] சங்க காலத்தில் இப்பகுதியை ஆண்ட குறுநில மன்னன் வள்ளல் பாரி ஆவான்.

**பறம்பு நாடும் பாரியும்**

'இவரு பெரிய பாரி!', 'பெரிய பாரி வள்ளலு' என்றெல்லாம் நாட்டுப்புற மக்கள் பேசுமளவிற்குத் தனிப்பட்டு இன்றளவும்

நன்கறியப்பெற்ற மன்னன் வேள் பாரி ஆவான். வேளிர் குலத்தில் எவ்வி என்பான் குடியில் தோன்றிய இவன், கடையெழு வள்ளல்களில் ஒருவன் ஆவான். பாண்டிய நாட்டுப் பறம்பு மலைக்குத் தலைவன். பறம்பு மலையையும் அதனைச் சுற்றிய முந்நூறு ஊர்களையும் கொண்டது பறம்பு நாடு. கொடைக்குணம் குன்றாப் பெரு வீரம் செறிந்தவன் பாரி. அவன் 300 ஊர்களையும் பரிசிலர்க்கு வழங்கிவிட்டுப் பறம்பு மலையொடும், பறம்பு மக்களோடும், வாதவூர்க் கபிலரோடும் வாழ்வாங்கு வாழ்ந்தவன்.[3]

'முல்லைக்குத் தேரீந்தான் பாரி'

என இக்காலக் கவிஞனுக்கும் பாடுபொருளானவன்.

''பாரி பாரி என்று பல ஏத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி ஒருவனும் அல்லன்
மாரியும் உண்டு ஈண்டு உலகு புரப்பதுவே''[4]

என்னும் கபிலரின் புறநானூற்றுப் பாடல் பாரியின் புகழை என்றென்றும் நிலைக்கச் செய்வதாகும்.

**ஆய்வின் நோக்கம்**

மூவேந்தர் தம் சூழ்ச்சியால் பாரி இறந்ததும் கபிலர், அவனுடைய பெண் மக்கள் இருவரையும் அழைத்துச் சென்று வேறோர் இடத்தில் இருத்தினார். அங்கு வெண்ணிலவு தண்ணென ஒளிர்ந்தது. அது கண்ட பாரி மகளிர் தம் தந்தையை நினைந்து வருந்தி,

''அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவின்
எந்தையும் உடையேம் எம் குன்றும் பிறர்கொளார்
இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவில்
வென்று எறி முரசின் வேந்தர் எம்
குன்றும் கொண்டார் யாம் எந்தையும் இலமே''[5]

எனும் கையறுநிலைப் பாடலைப் பாடினர். இப்பாடலை நாட்டுப் புறவியல் நோக்கில் அணுகி விளக்குவதே இவ்ஆய்வுக் கட்டுரையின் நோக்கமாகும்.

**பாடலின் அமைப்பு**

மேல் குறிப்பிடப்பெற்ற புறநானூற்றுப் பாடலில் 'நாட்டுப்புறப் பாடல் மரபை'க் காண முடிகின்றது. தொடக்கத்தில் தமிழ்நாட்டில் பிறமொழியாரின் தாக்குறவும் (Infulence), பிறமொழி இலக்கியத்தின் தாக்குறவும் குறைவாக இருந்த காரணத்தால், ஆங்காங்கே வழங்கி வந்த நாட்டுப் பாடல்களிலிருந்தே புலவர்களின் பாடல்கள் அமைக்கப் பட்டுத் தோன்றின என்பார் மு. வரதராசன்.[6]

பாரி மகளிர் பாடிய இப்பாடல் முதலில் நாட்டுப்புற வடிவி லிருந்து, பின் செம்மொழி இலக்கிய வடிவை அடைந்திருக்கக் கூடும் எனக் கருதலாம்.

மிக எளிய சொற்களால் அடுக்கடுக்காகவும் இயல்பாகவும் அமைந்து இசை நயமும் பொருள் நயமும் பயக்கவல்லதே நாட்டுப் பாடல் (Folk Song). இப்பாடல் பாரி மகளிரின் ஒப்பாரிப் பாடலே யாகும். உணர்வுமயமாகப் பாடப்பெற்ற இப்பாடலில்,

''அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவில் எந்தையும்
↕ ↕ ↕ ↕ ↕
இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவில் எம்குன்றும்

உடையேம் எம்குன்றும் பிறர்கொளார்
↕ ↕ ↕
கொண்டார் யாம் எந்தையும் இலமே''

என அமைந்த இவ்வடிகள், 'அற்றை-இற்றை,' 'திங்கள்-திங்கள்', 'அவ்வெண்-இவ்வெண்', 'நிலவில்-நிலவில்', 'எந்தையும்-எம்குன்றும்', 'உடையேம்-கொண்டார்', 'எம்-யாம்', 'குன்றும்-எந்தையும்', 'பிறர் கொளார்-இலமே' என அடுக்கடுக்காகவும் இயைபாகவும் முரண்படவும் அமைந்து, உணர்ச்சியை வெளிப் படுத்திப் பா நலம் பயப்பதை அறிகின்றோம். இப்பாடலில், இடம்பெற்றுள்ள 'வென்றெறி முரசின் வேந்தர்' எனும் தொடரே இப்பாடலைச் செம்மொழி இலக்கிய (Classical Literature) வகைத்தாக்கியுள்ளமை நோக்கத்தக்கது.

**அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவில் முற்றுகைப்போர்**

'இகல் வெல்லும் வேந்தர்க்கு வேண்டும் பொழுது'[7]

என்பார் வள்ளுவர். 'மாரி' (மழை) மாட்டு மட்டுமே ஒப்பிடத்தக்க பெரும்புகழ்பெற்ற குறுநில மன்னன் பாரியின் பெருமை கண்டு பொறாமைகொண்ட சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் பாரியையும் பறம்பு மலையையும் முற்றுகையிட்டு வஞ்சித்துக் கொல்ல முயன்றனர் என்பர் உரையாசிரியர்களும் ஆய்வாளர்களும்.

பறம்பு நாடு நெடிதுயர்ந்த மலையும் அடர்ந்த காடும் சூழ்ந்ததாகும். நெடிய சிகரந்தோறும் மூங்கில் கணுவில் புள் செருகிய கண் ஏணிகள் காணப்படும் என்பதை, 'மால்புடை நெடுவரை'[8] என்னும் பா வரிகள் உணர்த்தும். இயற்கையின் ஏதும், மக்களின் ஆதரவும், புலவரின் போற்றுதலும் பாரிக்கு அரணாக அமைந்தன. எதிரியால் எளிதில் வெல்லமுடியாத சூழலில் வாழ்ந்தான். எனவே, பறம்பு மலையை முற்றுகையிட்டுப் பாரியைக்

கொன்ற நிகழ்வு ஒரு முழு நிலாக் காலத்தில்தான் நிகழ்ந்திருக்க வேண்டும் என்பது பெறப்படும்.

**இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவில் முப்பதாம் நாள் நிகழ்வு**

இறப்பு நிகழ்ந்த குடும்பத்தினர் முப்பது நாள் முடிந்தே எக்காரியத்திலும் ஈடுபடுவர். 'எதற்கும் முப்பது நாள் முடியட்டும்', 'முப்பது செல்லட்டும்' என்ற நாட்டுப்புற வழக்காறுகள் உண்டு. இறந்து முப்பதாம் நாள் இரவு தொடங்கும் வேளையில், 'மோட்ச விளக்கேற்றி, வானோக்கி வணங்குதல்' இன்றும் தொடரும் மரபாகும்.[9] உலகு உவப்ப வாழ்ந்து வீரமரணமுற்ற பாரி வள்ளலுக்குப் பாரி மகளிர் முப்பதாம் நாள் மோட்ச விளக்கேற்றி வானோக்கி வணங்கியிருக்க வேண்டும்; அப்பொழுது முழுநிலவைக் கண்டிருக்க வேண்டும்; அதனால், அவர்தம் வேதனைக் கருத்துக்கு முழுநிலவு கருப்பொருளாக அமைந்ததெனலாம். இச்சூழலில் தான் பாரி மகளிர், 'இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவில்' என்று பாடியிருப்பர் என்று தோன்றுகிறது.

நாகரிகம் வளர்ந்த - விரைவுணர்வுடைய இக்காலத்திலும் பண்டைய வழக்காறுகள் நின்று நிலவுவதை மறுக்கமுடியாது.

**முடிபுரை**

சங்க இலக்கியங்களில் புறநானூற்றுப் பாடல்களில் வாய்மொழி இலக்கியக் கூறுகள் மிகுதி என ஆய்வாளர்கள் சுட்டிக்காட்டியுள்ளனர்.

பாரி மகளிரின் கையறுநிலைப் (ஒப்பாரி) பாடல் நாட்டுப் புறப் பாடலாக இருந்து செம்மொழி இலக்கிய வடிவமடைந்ததாக இருக்கலாம்.

உயர்ந்த செங்குன்றமாகத் திகழும் பறம்பு மலையையும், அடர்ந்த இயற்கைச் சூழலை உடைய பறம்பு நாட்டையும், பறம்பு மக்களின் மிக்க போற்றுதலையும் உடைய அஞ்சா நெஞ்சினனான பாரியை முற்றுகையிட்டு வீழ்த்தவும் படை நடத்தவும் ஏற்ற காலம் முழு நிலாக் காலமே எனல் பொருந்தும்.

'அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவில்' பாரி வீழ்த்தப் பட்டான் என்பதும், 'இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவில்' என்பதனால் முப்பது நாள் முடிவுற்றது கொண்டு (*Full Moon to Full Moon Thirty days*) பாரிமகளிர் பாடிய கையறுநிலைப் பாடல் பாரி இறந்த முப்பதாம் நாள் பாடியதென்று கொள்ள முடியும்.

மேலும், இறப்பு நிகழ்வில் முப்பதாம் நாள் இயற்றும் பழக்கம் சங்க காலம் தொட்டுத் தமிழ் மக்களிடையே கடைப்பிடிக்கப்படுகிறது என்பது பெறப்படும்.

**குறிப்புகள்**

1. புறம். 114.
2. குன்றக்குடி பெரிய பெருமாள், குன்றக்குடி ஆதீன ஐந்துகோயில்கள், ப. 3, 4.
3. புறம். 110
4. புறம். 107
5. புறம். 112
6. மு. வரதராசன், தமிழ் இலக்கிய வரலாறு, ப. 18
7. குறள். 481
8. புறம். 105
9. நேர்காணல்: ஓடை, அழகம்மாள், தெற்குத்தெரு, மேலூர் வட்டம், மதுரை மாவட்டம் (நாள்: 25. 12. 2003)

# நாட்டுப்புறவியல் அறிவுக்கு விருந்து

**மொ. பத்மாவதி**

*கந்தசாமிக்கண்டர் கல்லூரி*
*வேலூர், நாமக்கல் - 638 182*

நாட்டுப்புற இலக்கியத்தின் தோற்றம் பற்றி அறுதியிட்டுக் கூற இயலாது. மனித இனம் தோன்றிய அன்றே நாட்டுப்புற இலக்கியங்களும் தோன்றிவிட்டன எனக் கூறலாம். மண்ணின் மைந்தர் தம் மனக்கருவறையில் கருக்கொண்டு உருப்பெற்று உயிர் பெற்று உலாவரும் உள்ளத்தின் உண்மையான வெளிப்பாடுகளே நாட்டுப்புற இலக்கியங்கள்.

ஒரு நாட்டின் வாழ்வையும், வரலாற்றையும், குறையையும், நிறையையும் தெளிவாகக் காட்டுவன நாட்டுப்புற இலக்கியங்கள். மக்களின் பண்பாடு பழக்க வழக்கங்கள், பழமையான எண்ணங்கள் ஆகியவற்றை வெளிப்படையாகக் காட்டும் கண்ணாடியாகும். இவைகள் ஏட்டில் ஏறாவிடினும் எழுத்திலே வராவிடினும் பாட்டிலே இடம் பெறாவிடினும் நம் நெஞ்சிலிருந்து மட்டும் நீங்காது நிற்கும்.

பழங்காலப் பண்பாட்டின் எச்சமே நாட்டுப்புறவியல் என வில்லியம் ஜான் தாமஸ் குறிப்பிடுகிறார். இவர் நாட்டுப் புறவியலை *'Folklore'* என்ற சொல்லால் குறிப்பிட்டார். இதற்கு ஜெர்மன் மொழியில் *'Die Folklore'* என்றும் பிரெஞ்சு மொழியில் *'Lefolklore'* என்றும் இத்தாலிய மொழியில் *'Iltalklore'* என்றும் ஸ்பானிஷ் மொழியில் *'Elfolklore'* என்றும் ரஷ்ய மொழியில் *'Folklor'* என்றும் பல சொற்களால் வழங்கி வருகின்றன.

வில்லியம் பாஸ்கம் என்பவர் இதற்கு *'verbal Art'* என்ற சொல்லை உருவாக்கினார். டான்யோடர் என்பவர் *'Fok Life'* என்ற சொல்லை உருவாக்கினார்.

எனினும் மற்ற சொற்களைக் காட்டிலும் *"Folklore'* என்ற சொல்லை நிலைபெற்று வழக்கில் பயின்று வருகின்றது.

நாட்டுப்புறவியல் பற்றிப் பல அறிஞர்கள் பலவாறு விளக்கம் தருகின்றனர். நாட்டுப்புறவியலை நாட்டுப்புற இலக்கியம், நாட்டுப் புறக் கலை, நம்பிக்கைகள் என இரு பிரிவாகப் பிரிக்கின்றனர்.

வில்லியம் பாஸ்கம் நாட்டுப்புறவியலை வாய்மொழிக்கலை, வாய்மொழி சாராக்கலை என இருவகையாகவும், விருண்வாரட் வாய்மொழிக்கலை, ஓரளவு வாய்மொழிக்கலை, வாய்மொழி சாராக்கலை என மூன்று வகையாகவும், போக்ஸ் என்பவர் செயல்வகை, அறிவியல் வகை, மொழியியல் வகை, இலக்கிய வகை என நான்கு வகையாகவும், பிரான்சிஸ் லீ உட்லி என்பவர் இலக்கியம் நம்பிக்கைகள், கைவினைப் பொருட்கள், மொழி அல்லது நாட்டுப்புறப் பேச்சு என நான்கு வகையாகவும் ரிச்சார்ட் டார்சன் உடல் செயல்சார் நாட்டுப்புறவியல், உடல்செயல் சாரா நாட்டுப்புறவியல் என இருவகையாகவும் வகைப்படுத்தியுள்ளனர்.

நாட்டுப்புறப் பாடல்கள் சேகரிப்பு நிலை, விளக்கநிலை, ஒப்பாய்வு நிலை என்ற வகையில் ஆய்வு செய்யப்படுகின்றன. நாட்டுப்புற ஆய்வுத் துறையானது தமிழகப் பண்பாட்டு வரலாற்றை மீட்டுருவாக்கம் செய்யப் பெரிதும் துணைபுரியும்.

நாட்டுப்புறப் பாடல்கள் நாட்டுப்பாடல், நாடோடிப் பாடல், நாட்டார் பாடல், கிராமியப் பாடல், கல்லாதார் பாடல், மக்கள் பாடல், ஏட்டில் எழுதாக் கவிதை, மலையருவி, காட்டுப்பூக்கள், வனமலர், காற்றிலே மிதந்த கவிதை என்றெல்லாம் அழைக்கப்படுகின்றன.

நாட்டுப்புறப் பாடல்கள் முன்னைப் பழைமைக்கும், பழைமையாய் பின்னைப் புதுமைக்கும் புதுமையாய் விளங்கு கின்றன. மனிதர்கள் ஏடும் எழுத்தாணியும் கொண்டு கவிதை புனைவதற்கு முன்பே நாட்டுப்புறப் பாடல்கள் தோன்றிவிட்டன என்பதைத் தொல்காப்பியம் மூலம் அறியலாம். ஏழுவகையான யாப்புப் பற்றிக் கூறும்போது,

பாட்டு உரை நூலே வாய்மொழி பிசியே
அங்கதம் முது சொல்லோடு அவ்வேழ் நிலத்தும்
(தொல். செய். 79)

என்கிறார். அவற்றுள் அடிவரையறை இல்லாத செய்யுட்கள் ஆறு என்கிறார் (தொல். செய். 164). அவற்றை

''நூலி னான உரையி னான
நொடியோடு புணர்ந்த பிசியினான
ஏது நுதலிய முதுமொழி யான
மறைமொழி கிளந்த மந்திரத் தான
கூற்றிடை வைத்த குறிப்பி னான'' (தொல். செய். 165)

எனக் குறிப்பிடுகிறார். இதில் கூறப்படும் நூல் என்பது புலவர் இயற்றிய இலக்கணம். உரை என்பது உரைநடை. பிசி என்பது

விடுகதை முதுமொழி என்பது பழமொழி மந்திரம் என்பது தமிழில், வழங்கிய மந்திரம் குறிப்புமொழி என்பது குறிப்பால் பொருளை உணர்த்தும் வகையாகும்.

நாட்டுப்புறப்பாடல்களை மரியா லீச் ஐந்து வகையாகவும், பௌரா ஆறு வகையாகவும், ஸ்ரீமத் பீக்காக் இருபது வகையாகவும், மு. அருணாசலம் பன்னிரண்டாகவும், கி.வா. ஜெகநாதன் இருபத்தி யொன்பதாகவும், அன்னகாமு பதினான்காகவும், டாக்டர் ஆறு. அழகப்பன் ஏழுவகையாகவும், மா. வரதராசன் பத்தாகவும், பெ. தூரன் பத்தாகவும், ச. வளவன் மூன்றாகவும், க. கிருஷ்ணசாமி அவர்கள் ஏழாகவும், நா. வானமாமலை அவர்கள் பத்தாகவும், சு. சண்முகசுந்தரம் ஒன்பதாகவும், ஆறு. இராமநாதன் அவர்கள் எட்டாகவும், சு. சக்திவேல் அவர்கள் எட்டாகவும் வகைப்படுத்தி யுள்ளனர்.

**பழமொழிகள்**

நாட்டுப்புறப் பாடல்களுள் ஒன்றாகிய பழமொழிகள் மூதறிவிலிருந்து தோன்றியவையாகும். நினைப்பிற்கு எட்டாத பழங்காலத்திலிருந்தே மக்கள் வாழ்வில் வாழ்ந்து வருபவை என்பதைப் பழமொழியிலுள்ள ''மொழி'' என்னும் சொல் உறுதிப் படுத்துகின்றது. சமுதாயத்தின் அனுபவ முதிர்ச்சியையும் அறிவுக் கூறுகளையும் விளக்கும் சான்றாகப் பழமொழிகளும் விடுகதை களும் திகழ்கின்றன. இவை அறிவுக்கு விருந்தாக, அறிவைத் தூண்டக்கூடியதாக, சிந்தனையை தட்டி எழுப்புவதாக அமைந் துள்ளன எனில் அது மிகையன்று.

பழமொழிக்கு மூதுரை, முதுமை, மொழிமை, முன்சொல், முதுசொல், பழஞ்சொல் என ஆறு பொருள் இருப்பதாகச் சேந்தன் திவாகரம் கூறுகின்றது. தமிழ் இலக்கிய இலக்கணங்களை ஆராய்ந்தால் பழமொழியைக் குறிக்க 34 சொற்கள் இருப்பதாக டாக்டர் வ. பெருமாள் அவர்கள் குறிப்பிடுகிறார்.

நாட்டுப்புற இலக்கியங்களிலே குறுகிய அமைப்புக் கொண்ட பழமொழிகளும், விடுகதைகளும் ஒன்றோடொன்று நெருங்கிய தொடர்புடையனவாகும். பலரது அறிவையும் ஒருவரது நுண்ணுணர் வையும் அறியமுடியும் அறிவின் சுருக்கமே பழமொழி எனலாம்.

அறிவு வளர்ச்சியிலே பிறந்து சுருக்கம், தெளிவு, பொருத்தம் ஆகிய பண்புகளால் என்றும் இறவாமல் இவ்வுலகில் வாழ்கின்றன என்கிறார் அரிஸ்டாட்டில் என்னும் பேரறிஞர்.

தொல்காப்பியர் பழமொழிக்கு விளக்கம் தருகிறார்.

நுண்மையும் சுருக்கமும் ஒளியும் உடைமையும்
மென்மை என்றிவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்ததற்கு வருஉம்
ஏது நுதலிய முதுமொழி (தொல். செய். 165)

தொல்காப்பியர் பழமொழியை முதுசொல் என்றும், இளங்கோவடிகள் நெடுமொழி என்றும் திருவெம்பாவை பழஞ்சொல் என்றும், குமரேச சதகம் உலகமொழி என்றும், கொன்றை வேந்தன் மூத்தோர் சொல் என்றும், கம்பர் மூதுரை என்றும், நச்சினார்க்கினியர் பழம் வார்த்தை என்றும், படிக்காசுப் புலவர் பழமொழி என்றும், முத்தப்ப செட்டியார் ''பழைமைச் சொல்'' என்றும் வழங்கியிருப்பதைக் காணும்போது பழமொழியானது மிகப் பழமையானது ஒன்று என்பது விளங்கும்.

பழமொழிகளின் தொகுப்பு நூல்கள் மொத்தம் 13 ஆகும். பழமொழிகளைப் பல்வேறு வகையாக வகைப்படுத்தியுள்ளனர்.

வாழ்க்கையின் உயிர்ப்பண்பும் அறிவுப் பண்பும் உணர்வுப் பண்பும் பழமொழிகளில் கருவாக அமைந்துள்ளன. சிந்தனை ஆற்றலுக்கும் அறிவு வளர்ச்சிக்கும் பெருந்துணையாக உள்ளன. தமிழ்ப் பழமொழிகளைத் தமிழ் மக்களின் அறிவுக் களஞ்சியம் என்றே கூறலாம்.

பழமொழிகள் சூழலை ஒட்டிப் பல்வேறு பொருள் தரலாம். இவற்றிற்குப் பல காரணங்கள் உண்டு. பழமொழி உணர்த்தும் பொருளும் உண்மையும் அது பயன்படுத்தும் சூழலை ஒட்டியே அமையும்.

ஒரு நிகழ்வு நடைபெறும்போது அந்த நிகழ்வுக்குத் தொடர்புடைய பொருத்தமான பழமொழி ஒன்றைக் கூறுவர். உலகத்தோடு ஒட்ட ஒழுகல் என்ற நியதிக்கேற்ப அண்டை அயலில் இருப்பவர்களுக்கு ஏற்ப நாமும் நடந்து கொள்ள வேண்டும் அப்பொழுதுதான் நமக்கும் மரியாதையும் மதிப்பும் இருக்கும் என்பதை,

''பக்கத்து வீட்டுக்காரி உப்புக் கண்டம் தட்டினால்
நாம் ஒரு ஊஞ்சப்பட்டையாவது தட்ட வேண்டும்''

என்ற பழமொழி உணர்த்துகிறது.

வேளாண்மை, பொருளாதாரம், கல்வி, மருத்துவம், சாதி, சமுதாயம் எனப் பல்வேறு பொருள் பற்றிய பழமொழிகள் உண்டு.

பழமொழியைப் போலவே சிந்தனையைத் தூண்டக் கூடிய நாட்டுப்புறப் பாடல் விடுகதையாகும்.

''செம்பு நிறையக் கெம்பு அது என்ன?
உச்சானித் தாவுலே உலக்கை கட்டித்
தொங்குது அது என்ன?
கோண கோணத் தடி
கொங்கு நாட்டுத் தடி
உங்க நாட்டிலே இருந்து எங்க நாட்டுக்கு வருது''
அது என்ன?

இதுபோல வினா எழுப்பி விடை கூறவைக்கும் அமைப்பு உடையன விடுகதைகள்.

அறிவுக்கு உரை கல்லாகவும், சிந்தனைக்குத் தூண்டு கோலாகவும், அறிவுக்கு விருந்தாகவும் அமைந்திருப்பவை பழமொழியும், விடுகதையும் ஆகும் என்பதில் ஐயமில்லை. மக்களின் மனதில் புதைந்து கிடக்கும் இவற்றை நம்முடைய தூண்டுகோளால் வெளிக்கொண்டுவரப் பாடுபட வேண்டும்.

# நாட்டுப்புற இலக்கியத்தில் நகைச்சுவையுணர்வு

**நீ.வ. கருப்புசாமி**

*கோபி கலை அறிவியல் கல்லூரி*
*கோபிசெட்டிபாளையம் – 638 453*

மனிதன் மட்டுமே நகைச்சுவைத் தெரிந்தவன், நகைச்சுவையே மனிதனுக்கு மிகவும் இன்பம் தருவதாகும். தொல்காப்பியர் கூறும் மெய்ப்பாடுகளுள் நகைச்சுவைக்கு முதலிடம் தருகிறார். அதன்பின்னர், எள்ளல், இளமை, பேதமை, மடம் என்ற நான்கின் வழியே நகைச்சுவை தோன்றும் எனக் கூறுகிறார்.

பிற இலக்கியங்களிலும் நகைச்சுவை இருப்பதைப் போன்றே நாட்டுப்புற இலக்கியங்களிலும் நகைச்சுவையைக் காணலாம். சங்க இலக்கியங்களிலும், சிற்றிலக்கியங்களிலும், பள்ளு, குறவஞ்சி போன்ற நூல்களில் நகைச்சுவை அதிகமாக உள்ளது. வீரமா முனிவரின் ''பரமார்த்த குரு கதை'' நகைச்சுவை உரைநடை இலக்கிய மாகும். பாரதிதாசனின் ''இருண்ட வீடு'' ஒரு நகைச்சுவைக் காப்பியமாகும். இன்றைய செய்தித்தாள்கள், வாரயிதழ்கள், மாத இதழ்கள், மாதமிருமுறை இதழ்கள் முதலியவைகளில் நகைச்சுவைத் துணுக்குகளைக் காணலாம்.

குழந்தைகளுக்குத் தாலாட்டுப் பாடும் தாய், காரணத்தைக் குழந்தையிடம் கேட்கிறாள். யார்? யார்? அடித்திருப்பார்கள் என எண்ணி, தானே அவர்கட்குத் தண்டனை கொடுக்கும் வழியையும் சொல்கிறாள். பாவம்! மழலைக் குழந்தைக்கு அதன் பொருள் புரியவில்லை. பொருள் தெரிந்த தாயோ தன் குழந்தை மீது கொண்ட பாசத்தால் தானே நகைத்துச் சொல்கிறாள்.

''வெண்ணெயால் விலங்கு பண்ணி
வெய்யிலிலே போட்டு வைப்போம்,
மண்ணால் விலங்கு பண்ணித்
தண்ணீரில் போட்டு வைப்போம்''

பணத்துக்கு மிகவும் ஆசைப்பட்டுச் சீர்குலைந்த பெண்ணைப் பற்றி நாட்டுப்புறப்பாடல் வெள்ளைக்காரர்களின் ஆதிக்கத்தையும், மக்களின் அடிமைத்தனத்தையும், நகைச்சுவையோடு இணைத்துக் காட்டுகிறது.

''ஊரான் ஊரான் தோட்டத்திலே
ஒருவன் போட்டான் வெள்ளரிக்காய்
காசுக்கு ரண்டா விக்கச் சொல்லி,
கடிதம் போட்டானாம் வெள்ளைக்காரன்
வெள்ளைக்காரன் பணம் சின்னப் பணம்
வேடிக்கை காட்டுதாம் வெள்ளிப் பணம்
வெள்ளிப் பணத்துக்கு ஆசைப்பட்டு
வேஷங் குலைஞ்சாளாம் மாராயி''.

மக்களின் பல்வேறு விதமான தோற்றத்தைக் கண்டு ஏற்படும் சிறப்புகளாக,

''மொட்டையும் மொட்டையும் கூடிக்கிச்சாம்,
முருங்க மரத்தில் ஏறிக்கிச்சாம்,
நம்ப மொட்டையும் கூடிக்கிச்சாம்,
நாவமரத்தில் ஏறிக்கிச்சாம்''.

மேலும்,

''சின்னக்குட்டி நாத்தனா,
சில்லரையை மாத்தினா,
குன்னக்குடி போற வண்டியில்,
குடும்பம் பூரா ஏத்துனா''

இங்கு நகைச்சுவை பேச்சுவழக்கில் கையாளப்படுகிறது.

கிராமப்புறத்தில் நாடகத்தைத் தொடங்க சரசுவதியின் அருளை வேண்டிப் பாடும் கோமாளி,

''தட்டுவாணித் தாயே - கிட்ட வந்து கேளேன்''

என்று பாடுவான். இன்னொருவன் வந்து, இப்படித் திட்டினால் சரசுவதி வரமாட்டாள் என்று கூறுவான். அதற்கு அவன், தட்டு என்பது கமலம், வாணி என்பது சரசுவதி. எனவே, தாமரையில் வீற்றிருக்கிற சரசுவதியே என்று பொருள். அதனால் தான் அழைத்தேன். இவ்வாறு இலக்கியத்தில் இடம்பெறும் வஞ்சப் புகழ்ச்சி நகைச்சுவைப் பாடல்களிலும் காணலாம். திருப்பதிக்குப் போய் வந்தவர் பாடும் மற்றொரு நகைச்சுவைப் பாடல் இது,

திருப்பதிக்குப் போய் வந்தேன் நாராயணா,
திருமொட்டையடித்து வந்தேன் நாராயணா,
அங்கொரு கம்பங்கொல்லை நாராயணா,
அதிலே ஒரு கதிரொடிச்சேன் நாராயணா,
கொல்லக்காரன் கண்டுக்கிட்டான் நாராயணா,
கோலாலே அடிச்சுப்புட்டான் நாராயணா.

கோழை மனம் கொண்ட ஒருவரின் நகைச்சுவையைப் படம் பிடித்துக் காட்டுகிறது.

இன்றைய மக்கள் உழைக்காமல் வாழவேண்டும் என எண்ணுவாரே இன்றும் மிகுந்து வருகின்றனர். உழைப்பு இல்லாமல் வாழ வேண்டிய நிலைக்கு இளைஞர்கள் உள்ளாகி வருகின்றனர். முதியவர்களின் உடல் உழைப்பை இன்றைய சமூகம் உறிஞ்சுவதே குறிக்கோளாக உள்ளது. நாட்டுப்புறப் பாடலில் பாட்டிற்கும், குட்டிக்கும் உள்ள மாறுபாட்டினைக் காட்டுவதாக அமைந்துள்ளது. நகைச்சுவை விருந்தாயிருந்தாலும் சிந்தனையைத் தூண்டும் சிறப்பையும் பெற்றுள்ளது.

''ஆட்டி ஆட்டி மிளகாயரைச்சுப் பாட்டி வந்தாளாம்
ஆட்டினதை எடுத்துப் போடக் குட்டி வந்தாளாம்
நீட்டி நீட்டி வேலை செய்யப் பாட்டி வந்தாளாம்
நின்று நின்று சிரித்துப் பேசக் குட்டி வந்தாளாம்
கேணித் தண்ணி இறைச்சு வக்கப் பாட்டி வந்தாளாம்
கிழக்கு மேற்குப் பார்த்து நிற்கக் குட்டி வந்தாளாம்
வெள்ளை ஆப்பம் சுட்டு விக்கப் பாட்டி வந்தாளாம்
வித்த காசில் பூவு வாங்கக் குட்டி வந்தாளாம்''

என்ற நாட்டுப்புறப்பாடலிலும் நகைச்சுவை உண்டு என்பதற்கு நாட்டுப்புறங்களில் பாடல் நிறைய உண்டு. கோலம் போடுவதால், பெண்களுக்கு அழகுணர்ச்சி ஏற்படுவதோடு ஒருமைப்பாடு உணர்வு வளர்க்கப்படுகிறது.

''வெள்ளி மலே மேலே
வெளஞ்சிருக்கும் சீரகங்கள்
சீரகத்தை உருவியல்லா சீதெ
வெளிவாசல் திண்ணையிலே
வெச்சுப் பொடி நுனிக்கி
வீதியெங்கும் கோலமிட்டாள்''.

மற்றொரு பெண்

''தங்க மலெ மேலே
தழஞ்சிருக்கும் சீரகங்கள்
சீரகத்தை மயிலி உருவியல்லா
தனி வாசல் திண்ணையிலே
தட்டிப் பொடி நுனிக்கி
தடமெங்கும் கோலமிட்டாள்''

மக்களைச் சொல்லிப் பாடாமல் இயற்கைப் பொருட்களைச் சொல்லிப் பாடுகிறார்கள். அந்தக் காலத்துப் பெண்கள் பாட்டியின்

கருத்துக்கேற்பக் கோலம் போடுவார்கள். இன்றைக்குப் பொதுவாகக் கோலம் போடுவதே குறைந்துவிட்டது. நமது பண்பாடு சிதைந்து விட்டது. மேலும்,

மருமகள் : ''பந்தலிலே பாவக்காய்
பார்த்து அறு மாமியாரே

மாமியார் : போகும் போது பார்த்துக்கலாம்
பொறுத்திருப்பாய் மருமகளே

வீட்டுக்காரி : விதைக்கல்லோ வீட்டாருக்கு
விரலாலே தொட்டிடாதே!''

இன்றைய இழவுக்குச் செல்பவர்களில் கிடைத்தவரை சுருட்டிக் கொண்டு செல்லும் குணமுடையவர்கள் உண்டு. இப்பண்பினைத்தான் இப்பாடல் படம்பிடித்துக் காட்டுகிறது.

பட்டணத்தைப் பார்க்கப் போகும் மாமனைப் பார்த்து, மைத்துனன் பாடும் நாட்டுப்புறப்பாடல்,

''பட்டணத்தைப் பார்க்கப்போகும் சின்ன மாமா – இந்த
பையனை நீ மறந்திடாதே சின்ன மாமா,
பல்லேயில்லாப் பாட்டிக்குச் சின்ன மாமா,
பல்வரிசை வாங்கி வாராய் சின்ன மாமா,
எனக்கும் ஒரு சைக்கிள் வண்டி சின்ன மாமா – நீ
இல்லை என்றால் விடவே மாட்டேன் சின்ன மாமா,
சொன்னதெல்லாம் மறந்திடாதே சின்ன மாமா – உன்
துணியைச் சுற்றி முடிச்சுப் போடு சின்ன மாமா.''

நகைச்சுவையுணர்வுடன் கூடிய நாட்டுப்புறப்பாடல். மறக்காமல் துணியில் முடிச்சுப் போட்டுக்கொண்டு தான் சொன்ன பொருட் களை எல்லாம் வாங்கி வரச் சொல்கிறான்.

இன்றைக்கு வெளிநாடு சென்ற இளைஞர்களைப் பார்த்து பெற்றோர் கூறும் சொல்,

''வெள்ளிக்கிழமை வெளிநாடு
போன மகனே நீ விடிஞ்சுது
போன் பண்ண வேண்டுமடா! – எனவும்

''பெத்த மனம் பித்து, பிள்ளை மனம் கல்லு
என்பதை மறந்து விடாதே''

எனத் தாய் வருந்தும் நிலையைக் காணலாம்.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு கண்ட நகைச்சுவையுணர்வு,

''மகாராஜராஸ்ரீ, மண்டையிலே பிளாஸ்திரி,
அண்டையிலே ஆஸ்பத்திரி
உன் பெண்டாட்டி கர்ப்பத்தில்.

கேட்டு மகிழ்ச்சி அடையலாம். மதுபானக்கடையை நோக்கிக் காலை நேரத்திலேயே சென்று மதுக்குடிப்பவர் இன்றும் இருக்கின்றனர். ''குடிகாரன் பேச்சு பொழுது விடிந்தால் போச்சு'' என்ற பழமொழி அவர்களது உறுதிமொழியை உணர்த்தும் குடிகாரன் காசுக்குக் கணக்குப் பார்க்காமல், கவலைப்படாமல் வாங்கிக் குடிக்கிறான். இவ்வாறு ஒரு குடிகாரன் பாடல் :

''பிராந்திக் கடை அண்ணாச்சி – என் கணக்கு என்னாச்சு
காந்திப்பணம் ஒண்ணாச்சு – விடியற்கால நேரமாச்சு
ஆரப்பா கடையிலே – ஏனப்பா பேசலை
போடப்பா ஒண்ணரை – புன்னகை போட்ட பாட்டில்,
'எடுப்பா' என்று சொல்லி எடுப்பா''.

இவ்வாறு வாழ்வின் பல நிலைகளிலும் நாட்டுப்புற மக்களின் நகைச்சுவையுணர்வு பாடல்களிலும், பழமொழிகளிலும் மலிந்திருப்பதைக் காணலாம்.

# காவல் தொழிலும் கட்டுப்பாட்டு மீறலும்
## (கதைப் பாடல்கள் வழி)

**சு. நிர்மலாதேவி**

*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்*
*சென்னை – 113*

*16–18-ஆம் நூற்றாண்டுகளில் 'காவல் தொழில்' என்ற ஒரு தொழிலைக் குறிப்பிட்ட இனத்தார் செய்து வந்ததைக் கதைப்பாடல்கள் வெளிப்படுத்துகின்றன. மறவர் அல்லது தேவர் என்ற இனத்தார் காவல் காக்கும் தொழிலைச் செய்து வந்தனர். இவர்கள் செய்து வந்த காவல் தொழிலையும் அதில் நிகழ்ந்த பல கட்டுப்பாட்டு மீறல்களையும் விளைவுகளையும் இக்கட்டுரை கதைப்பாடல்கள் வழிநின்று ஆய்வு செய்கின்றது.*

**காவல் தொழில் பற்றிக் குறிப்பிடும் கதைப்பாடல்கள்**

காவல் தொழில் பற்றிக் குறிப்பிடும் கதைப்பாடல்களாகச் சின்னத்தம்பி கதை, மதுரை வீரன் கதை, முத்துப்பட்டன் கதை, வன்னியராயன் கதை, பலவேச சேர்வைக்காரன் கதை, ஈன முத்துப்பாண்டியன் கதை, அரவமுத்துவீரன் கதை, மெச்சும் பெருமாள் பாண்டியன் கதை போன்ற கதைப்பாடல்கள் அமைந்துள்ளன. இவற்றுள் காவல் தொழில் கட்டுப்பாட்டு மீறல்களை எடுத்துக்காட்டும் சின்னத்தம்பி கதை, மதுரைவீரன் கதை, முத்துப்பட்டன் கதை என்ற மூன்று கதைப்பாடல்கள் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

**காவல் தொழில் – ஒரு விளக்கம்**

நாடு காவல், காடு காவல் என்ற இரு நிலையினதாகக் காவல் தொழில் அமைந்திருந்தது. நாடு காவல் பற்றி மதுரை வீரன் கதையும் நாடு காவல், காடு காவல் என்ற இரண்டையும் பற்றிச் சின்னத்தம்பி கதையும் காடு காவல் குறித்து முத்துப்பட்டன் கதையும் குறிப்புகள் தருகின்றன.

**காவல் தொழில் உரிமையுடையோர்**

"முற்கால மன்னர்களிடம் படைவீரர்களாக இருந்து நிலத் தொடர்பை இழந்துவிட்ட மறவர் இனத்தார்[1] பாண்டியர் ஆட்சி மறைந்து நாயக்கர் ஆட்சி ஏற்பட்ட பின்னர் அவர்களிடமும்

அவர்களின் பிரதிநிதிகளாக இருந்து நாட்டின் பல பகுதிகளை ஆட்சி செய்தவர்களிடமும் காவல் தொழில் புரிபவர்களாகப் பணியாற்றினர். தலையாரிகளாகவும் வாயிற் காவல் தளபதிகளாகவும் காடு, கரைகளில் விளையும் பயிர்களுக்குப் பாதுகாப்பு அளிப்பவர் களாகவும் இவர்கள் அமைந்திருந்தனர். காவற்பணி செய்த இவர்களே, தங்கள் காவலுக்குட்படாத பகுதிகளில் களவு செய்யும் கள்ளர் களாகவும் இருந்திருக்கின்றனர். காவல்காரர்களாக இருந்ததும் மறவர் இனம் தான். கொள்ளைக்காரர்களாக இருந்ததும் மறவர் இனம் தான். இது ஒரு ''வரலாற்று வேடிக்கை'' என்பார் டாக்டர் சு. சண்முக சுந்தரர் அவர்கள்.[2] 'ஒரு சில நிலப் பிரபுக்கள் இவர்களை ஆதரித்துப் பெரும்பணம் திரட்டினார்கள்; நிலம் திரட்டினார்கள்[3].

### காவல் தொழிலும் கட்டுப்பாட்டு மீறலும்

16–18-ஆம் நூற்றாண்டுகளில் சாதிய அமைப்பு முறை மிக வலுவானதாக அமைந்திருந்தது. அந்தந்தக் குலத்துக்குரியோரின் தொழிலை அவரவர்களே செய்தல் வேண்டும் என்ற நிலை மிகுந்த கட்டுப்பாட்டுடன் கடைபிடிக்கப்பட்டது. இதில் எக்காரணம் கொண்டும் மாறுதல் வருவதைச் சமூக அமைப்பு ஏற்றுக் கொள்ள மறுத்தது. இத்தகு கட்டுப்பாடுகளை மீறியவர்கள் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர். ஏதாயினும் ஒரு காரணம் காட்டி அவர் களைக் கொலை செய்திருக்கின்றனர். இத்தகு நிகழ்வுகளைக் கதைப்பாடல்கள் கொண்டிலங்குகின்றன.

### சின்னத்தம்பி கதையில் காடு காவல், நாடு காவலும் கட்டுப்பாட்டு மீறலும்

சின்னத்தம்பி கதையில்[4] வரும் சக்கிலியர் குலத்தவனான சின்னத்தம்பி தன் குலத் தொழிலைவிட்டுக் காடு காவல், நாடு காவல் தொழிலுக்கு வர, அதனால் விளையும் சிக்கலே கதையின் கருப்பொருளாகியுள்ளது. நெல்லை மாவட்டம் நாங்குனேரி தாலுகாவைச் சேர்ந்த வேப்பிலாங்குளம் என்ற ஊரைச் சேர்ந்தவன் சின்னத்தம்பி. 'களக்காடு, பணகுடி மலைப்பகுதிகளிலிருந்து இறங்கி வந்து, பயிர்களுக்கும் மக்களுக்கும் இடுக்கண் விளைவித்த காட்டுப்பன்றி, கடுவாய் போன்ற கொடிய விலங்குகளை ஊர்க்காவல்காரர்களான தேவர்களால் அடக்க இயலவில்லை.[5] சின்னத்தம்பி தன் நண்பர்களுடன் அப்பகுதிகளில் வேட்டையாடி விலங்குகளைக் கொன்று மக்களையும் பயிர்களையும் காத்தான். அழிந்த அப்பகுதிகளை ஆட்சி செய்து வந்த திருக்குறுங்குடி மாணிக்கவாசகம்பிள்ளை தன்னிடமுள்ள அடங்காக் குதிரையை அடக்கி வைத்துக்கொண்டு வடக்கு வாசல் கோட்டை காவல் தளபதி பதவியில் வந்து அமர்ந்து காவற்பணி செய்யுமாறு அழைத்தார். 'இது அவன் அழிவிற்கு ஊன்றிய வித்து. வேண்டு

மென்றே ஆட்சியாளர் இவ்வாறு செய்தார். ஏனெனில் பரம்பரைப் பாத்தியதையாக இப்பதவியை நம்பித் தலைவன் பட்டயம் என்ற ஊரில் உள்ள தேவர்களின் தலைவர் வகித்து வந்தார். இப்பொழுது அவரும் அவர் சாதியாரும் சக்கிலியன் ஆணைக்கடங்கி நடக்க வேண்டும். அவர்களது காவல் படையின் தலைவன் சக்கிலியன்.'[6] மாணிக்கவாசகம் பிள்ளையின் மைத்துனர் பாப்பாக்குடியிலிருந்து ஆட்சி செய்யும் தருமராசா, பதவியிழந்த வடக்கு வாசல் காவல் தளபதி வைத்தியநாதன் மூலம் சக்கிலியன் படைத்தலைவனாக இருப்பதை அறிந்தார். நாடு காவல் தொழிலுக்கு வந்த சக்கிலியர் குலத்தவனான சின்னத்தம்பியை நரபலியிடத்தக்க சூழலாகப் புதையலொன்று கிடைத்தது.

> ''திருக்குறுங் குடியதிலே வடக்குவாசல் தலைவனவன்
> சூராதி சூரனென்றும் சுத்தவீர மன்னனென்றும்
> சாதியிலே கீழ்ச்சாதி சக்கிலியப் பகடைச் சாதி – அவனை
> வைத்திருக்கக் கூடாதென்று மந்திரிமார் சொன்னதுண்டு
> இச்சமயம் வரவழைத்துப் பெலியிட வேணுமென்று''[7]

புதையலெடுக்க நரபலியாகச் சின்னத்தம்பியைத் தருவதற்குத் தருமராசாவும் மாணிக்கவாசகம் பிள்ளையும் ஏற்பாடு செய்து அவனைப் பலியிட்டனர். தன் குலத்தொழிலைவிட்டுக் காடு காவல், நாடு காவல் தொழிலுக்குத் தன் தனிப்பட்ட வீரம், திறமையால் வந்த சின்னத்தம்பி, காவல் தொழில் புரிந்து வந்த தேவர்களின் தூண்டுதலின் பேரில் ஆட்சியாளர்களால் நரபலி என்ற பெயரில் கொலை செய்யப்பட்டான்.

**மதுரைவீரன் கதையில் காவல் தொழிலும் கட்டுப்பாட்டு மீறலும்**

சின்னத்தம்பியைப் போன்றே மதுரைவீரன் கதையில்[8] *(1628–1659)* வரும் மதுரை வீரனும் சக்கிலியர் குலத்தவன். 'மலைகளில் மாடு மேய்ப்பதும் செத்தமாட்டை அறுப்பதும் தோல் பதனிடுவதும் செருப்புத் தைப்பதும் குதிரைச் சேணம் தைப்பதும் சக்கிலியர்களது வேலையாயிருந்தன. இவர்கள் நாயக்கர் ஆட்சிக் காலத்தில் அவர்களோடு வந்து குடியேறியவர்கள். நாயக்கர் பாளையங்களில் தோலால் சாமான்கள் செய்து ராணுவத்துக்கும் மக்களுக்கும் விற்பனை செய்து வந்தார்கள்.'[9] மதுரை வீரன் தன் குலத்தொழிலைவிட்டுத் தன் தனிப்பட்ட வீரம், திறமையால் ராணுவத்தில் பணியில் சேர்ந்தான். தன் நாட்டைக் கொள்ளையிடும் அழகர் மலைக் கள்ளர்களை அடக்கத் தகுதியானவன் மதுரைவீரனே என அறிந்த மதுரைத் திருமலை நாயக்கர் திருச்சி விசயரங்க சொக்கநாத நாயக்கருக்கு மதுரைவீரனை அனுப்புமாறு ஓலை அனுப்பினார். மதுரைவீரன் வந்து கள்ளர்களின் கொட்டத்தை

அடக்கி நாடு காவற் பணியைச் சிறப்பாகச் செய்தான். 'கள்ளர் களை அடக்கிய பிறகு மதுரை வீரனைக் கள்ளர்களின் பகைவனாக்கிவிட்டுத் திருமலை நாயக்கர் கள்ளர்களோடு சமாதானம் செய்து கொண்டார். தன் காதற்கிழத்தியான வெள்ளை யம்மாளுடன் மதுரைவீரன் கொண்டிருந்த தொடர்பைக் காரணமாகக் காட்டிச் சாதியில் தாழ்ந்தவனான மதுரைவீரன் மீது கள்ளர்களும் நாயக்கர்களும் கொண்ட பகைமையுணர்ச்சிக்கு மதுரை வீரனைப் பலியிட்டனர்.'[10] சின்னத்தம்பி கதையில் நரபலி காரணமாகக் காட்டப்பட்டது. மதுரைவீரன் கதையில் பொம்மண நாயக்கன் மகள் பொம்மி மீது காதல், திருச்சி விசயரங்க நாயக்கரின் மகள் மீது காதல், திருமலை நாயக்கரின் காதற்கிழத்தி வெள்ளையம்மாள் மீது காதல் என்பன காரணங்களாகக் காட்டப்பட்டு, அவன் காமுகனானதால் கொலை செய்யப்பட்டான் என்ற மேற்பார்வையில் தன் குலத் தொழிலைவிட்டு நாடு காவல் தொழிலுக்கு வந்த மதுரைவீரன் மாறுகால், மாறுகை வாங்கப்பட்டு ஒழித்துக் கட்டப்பட்டான்.

**முத்துப்பட்டன் கதையில் காவல் தொழிலும் கட்டுப்பாட்டு மீறலும்**

முத்துப்பட்டன் கதையில் (கி.பி. 1658–1738)[11] வரும் முத்துப்பட்டன் அந்தணர் குலத்தவன். சக்கிலியப் பெண்கள் இருவர் மீது கொண்ட காதலால் சக்கிலியனாகவே மாறி, அவர்கள் குலத் தொழிலைச் செய்து வந்தான். 'தன் மாமன் வாலப்பகடையுடன் சேர்ந்து பசுக்களை மலைகளில் கொண்டு சென்று மேய்ப்பது, தோல் பதனிடுவது, செருப்புத் தைப்பது, கொடிய மிருகங்களின் தொல்லை இல்லாமலிருக்க அவற்றைத் தன் நண்பர்களுடன் சென்று வேட்டையாடிக் கொல்வது ஆகிய பணிகளைச் செய்து வந்தான். 'பகடைக்குப் பின் இவனே சக்கிலியர் தலைவனாக ஆனான். பட்டவராயன் என்று பெயரும் பூண்டான்.'[12] 'தென்பாண்டி நாட்டிலிருந்து திருவனந்தபுரம் செல்லும் பொதிமாட்டு வாணிபர் களுக்குக் காட்டுப் பாதையில் பாதுகாப்பு அளித்தான். கள்ளர் பயமும் விலங்குகளின் தொல்லையும் இல்லாமல் வணிகர்களின் போக்குவரத்துக்கு வசதி செய்து, அவர்கள் தங்கவும் ஏற்பாடு செய்து தந்தான். அவ்விடம் 'குறும்பிலாக் களவு' என்று அழைக்கப்பட்டது.[13]

இந்த வாணிபர்களது பொருட்களைப் பக்கத்து ஊர்களிலுள்ள ஜமீன்தார்களின் உதவியோடு வன்னியக் கரந்தைத் தேவர்கள் கொள்ளையடித்து வந்தனர். உயர்சாதியில் பிறந்து சக்கிலியனாகி விட்ட முத்துப்பட்டனின் பாதுகாவற்பணியால் அவனின் பாதுகாவலிலுள்ள காடுகளில் கொள்ளையடிக்க முடியாமல் ஆனது. எனவே அவன் மீது பகைமைகொண்ட அவர்கள், அவனைக்

கொன்றுவிடத் திட்டம் தீட்டினர். ஒருநாள் அவன் உடல் நலமின்றி இருக்கும் பொழுது, அவனுடைய பாதுகாவலிலுள்ள மாடுகளை ஓட்டிச் சென்றனர்.

> ''ஊத்துமலையில் வன்னியரும் உப்பரங்கோட்டை யானுங்கூடி
> உன்கிடை மாட்டை திசைசாய்த்துப் போகிறார் ஓடிப்போ
> முத்துப்பட்டா''[14]

என்றொருவன் விவரம் கூறினான். கள்வர்களை மறித்துப் போர் செய்த முத்துப்பட்டனை மறைந்திருந்த ஒரு கள்வன் முதுகில் குத்திக் கொன்றான். குலத்தொழிலைவிட்டுக் காடுகாவற் பணிக்கு வந்த முத்துப்பட்டனின் வாழ்வுக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது.

**முடிவுரை**

தத்தம் குலத்தொழிலைவிட்டுக் காவற்பணிக்கு வந்தவர்கள் கீழ்க்குலத்தாராயினும் மேற்குலத்தாராயினும் அன்னாருக்கு மரணமே பரிசாக அளிக்கப்பட்டது. சாதிய அமைப்பும் சாதிக்குரிய தொழில்கள் மீதிருந்த கட்டுப்பாடுகளும் மிகக் கவனமாக இவ்விதம் காக்கப் பட்டன. நாயக்கர்கள் ஆட்சிக் காலத்தில் அவர்களுடன் வந்த சக்கிலியர் குலத்தவர், நாட்டில் ஏற்கனவே இருந்தவர்களின் சாதித்தொழில்களை மேற்கொள்வது இவ்வாறு கடுமையாகத் தடுக்கப்பட்டமை இக்கதைப்பாடல் நிகழ்வுகளின் வழி வெளிப் படுத்தப்பட்டுள்ளது. வரலாற்று, சமூக மரபுகளை, மாற்றங்களை ஆராய்பவர்கள் இத்தகு கதைப்பாடற் போக்குகளைக் கவனத்தில் கொள்ள வேண்டியது மிகத் தேவையான ஒன்றாகும்.

**குறிப்புகள்**

1. நாட்டுபுறக் கலையியல், நா. வானமாமலை, ப. 124.
2. மெச்சும் பெருமாள் பாண்டியன் கதை, டாக்டர் சு. சண்முகசுந்தரம் (பதிப்), ப. 53.
3. நாட்டுப்புறக் கலையியல், ப. 124.
4. The Wandering Voice, Editor: A Nirmala Devi.
5. ஆராய்ச்சி (இதழ்) தமிழ்நாட்டுக் கதைப்பாடல்களில் சோக முடிவு, நா. வானமாமலை, ப. 142.
6. மேற்படி
7. The Wandering Voice, ப. 30, வரி : 419–423.
8. மதுரைவீரன் கதைகள் ஓர் ஆய்வு, வே.ச. திருமாவளவன், ப. 93.
9. நாட்டுப்புறக் கலையியல், ப. 153.
10. ஆராய்ச்சி, ப. 135.
11. முத்துப்பட்டன் கதை, நா. வானமாமலை (பதிப்.), ப. 135.
12. ஆராய்ச்சி, ப. 136.
13. நாட்டுப்புறக் கலையியல், ப. 123.
14. முத்துப்பட்டன் கதை, ப. 47.

# கதைப்பாடல் பதிப்பாசிரியர்கள் - ஒரு பார்வை

**மு. பெரியசாமி**

*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்*
*சென்னை - 113*

நா. வானமாமலை முதன் முதலில் கதைப் பாடல்களை ஆய்வுடன் கூடிப் பதிப்பிக்கும் பணியினைத் தொடங்கினார். இதற்கு முன்பு ஆய்வுரை இன்றிக் கதைப் பாடல்கள் மட்டும் பெரிய எழுத்துக் கதைப்பாடல் சென்னையில் இருந்து தனியார் புத்தகக் கம்பெனிகளால் பதிப்பிக்கப் பெற்றன. அதில் கதையின் சில நிகழ்ச்சிகளை - பாடங்களும் இருக்கும். பின்னர் நாட்டுப் புறவியலில் நாட்டம் கொண்ட நா.வா. மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தின் மூலம் சில கதைப்பாடல்களை ஆய்வுரை இணைத்துப் பதிப்பித்தார். அவ்வாறு அவர் பதிப்பித்த அனைத்துக் கதைப் பாடல்களும் வரலாறு மற்றும் சமூகக் கதைப்பாடல்கள் ஆகும். மேலும் இவர் தொடங்கி வைத்த பணியினைப் பலரும் மேற்கொண்டுள்ளது காண முடிகிறது. நா.வா. பதிப்பித்தக் கதைப்பாடல்கள் காத்தவராயன் கதைப்பாடல் (1971), கட்டபொம்மன் கதைப்பாடல் (1971), முத்துப்பட்டன் கதை (1971), கான்சாகிப்பு சண்டை (1971) ஐவர் ராசாக்கள் கதை (1974) கட்டபொம்மன் கூத்து (1972). இதற்கு முன்பு வீணாதி வீணன் கதை (1967) சென்னை யிலுள்ள என்.சி.பி.எச். நிறுவனம் வெளியிட்டது. நா.வா. அடுத்து பேராசிரியர் சு. சண்முகசுந்தரம் கதைப்பாடல் பதிப்பிக்கும் பணியைத் தொடர்ந்து செய்து கொண்டுள்ளார். இவர் பதிப்பித்தக் கதைப் பாடல்கள் தேசிங்குராஜன் கதை (1984) ஈனமுத்துப் பாண்டியன் கதை (1974). இதனைச் சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்டது. பழையனூர் நீலிக் கதை மெச்சுப் பெருமாள் பாண்டியன் கதை, சுடலை மாடன் கதை, பாயம்மாள் கதை, சிவராமப் பாண்டியன் கதை, மதுரை வீரன் கதை (1984) ஆகிய கதைப்பாடலை மிகவும் சிறந்த ஆய்வுரைக் கொண்டு வெளி யிட்டுள்ளார் என்பதை அறியலாம். தி.சு. நடராசன் என்பவர் கதைப்பாடலைப் பதிப்பிக்கும்போது சிறந்த முறையில் பதிப்பித் துள்ளார். இவர் பதிப்பித்தக் கதைப் பாடல்களாவன; குருசாமி கதை (1976). இக்கதைப்பாடலை மதுரையிலுள்ள சர்வோதய

இலக்கியப் பண்ணை வெளியிட்டது. இக்கதைப்பாடல் புராணக் கதைப்பாடல் ஆகும். பின்னர் வன்னியடி மறவன் கதை (1977), தம்பிமார் கதை (1978) ஆகியவற்றைச் சர்வேஸ்வரன் அவர்களோடு சேர்ந்து பதிப்பித்துள்ளார். கட்டப்பொம்மு கும்மிப்பாடல் என்னும் கதைப்பாடலை 1978-இல் நாகர்கோவில் ஈஸ்வரி பதிப்பகம் வெளியிட்டது. கோவலன் கண்ணகி கதையை 1979-இல் அதே பதிப்பகம் வெளியிட்டுள்ளது.மேலும் 1980-இல் உடையார் கதைப் பாடலைக் கூடல் பப்ளிஷர்ஸ் வெளியிட்டனர். பத்திரகாளியம்மன் கதையை இவர் 1980-இல் வெளியிட்டார். ஒவ்வொரு கதைப் பாடலுக்கும் உண்டான ஆய்வுகளுடன் சேர்ந்து அதன் தொடர்புடைய வரலாறும் இணைத்துள்ளது இவருடையப் பதிப்பின் சிறப்பாகும்.

கதைப்பாடல்களின் பதிப்பாசிரியர்கள் என்ற வரிசையில் அடுத்து வருபவர் அ.நா. பெருமாள். இவர் சில க்தைப் பாடலை இவர் வெளியிட்டுள்ளார். வெள்ளைக்காரன் கதை என்ற ஒன்றை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிட்டது. மேலும் இவருடைய தமிழ்க் கதைப்பாடல் என்னும் நூல் கதைப்பாடல் பதிப்பிக்கும் அனைவருக்கும் வழிகாட்டி உதவுகிறது.

ஆறுமுகப் பெருமாள் நாடார் என்பவர் தனிப்பட்ட முறையில் பல கதைப்பாடல்களை வெளியிட்டுள்ளார். இவர் பதிப்பித்தக் கதைப் பாடல்கள் பிச்சைக்காரன் கதை, வள்ளியம்மன் கதை, பார்வதியம்மன் கதை, பெருமாள் சுவாமி கதை, வெங்கலராயன் கதை, சாஸ்தா கதை, வல்லரக் கதை, சின்னத்தம்பி கதை, சங்கிலிபூத்தார் கதை போன்றன ஆகும். இவர்களது பணியினைத் தொடர்ந்து அ. தங்கத்துரை என்பவர் சில கதைப்பாடல்களைப் பதிப்பித்துள்ளார். இவர் பதிப்பித்துள்ள கதைப்பாடல்களுள் ஒன்று சிதம்பர நாடார் கதை (1982). இதில் நன்றியுரை, முன்னுரை, கதை, கதைச் சுருக்கம், கதை ஆராய்ச்சி குறிப்பு மூலம் அனைத்தும் உண்டு. அடுத்துப் பலவேசச் சேர்வைக்காரன் கதையை (1983)இல் பதிப்பித்துள்ளார்.

சூ. நிர்மலாதேவி அவர்கள், சின்னத்தம்பி, உச்சினி மாகாளி கதை, குருக்குளாஞ்சி கதை, மூன்றையும் இணைத்து the wandering voice என்ற ஆங்கிலத் தலைப்பிலும், வெங்கலராசன் கதை, பலவேச சேர்வைக்காரன் கதை, முத்தாரம்மன் கதை, தடிவீரசுவாமி கதை, வன்னியராயன் கதை, சின்னனைஞ்சான் கதை, அழகன் பெருமாள் கதை, கோவலன் கதை ஆகிய கதைப் பாடல்களைப் பதிப்பித்துள்ளார். மேலும் இவரின் முத்தாரம்மன் கதைப் பாடலிலும் பிற கதைப்பாடல்களிலும் சிறந்த ஆய்வுரைகள் வழங்கியிருப்பது இவரின் பதிப்பிற்குச் சிறப்பு என்று கூறலாம்.

சு. சக்திவேல் (1992), புலமாடன் கதையையும் ஆந்துமுடையார் கதைப் பாடலையும் பதிப்பித்துள்ளார்.

சக்தி கனல் அவர்கள், கொங்கு நாட்டில் வழங்கி வரும் அண்ணன்மார் சுவாமி கதையைப் பதிப்பித்துள்ளார்.

மு. சண்முகம் பிள்ளை 1993-இல் பெருமாள் சுவாமி கதையை ஆசியவியல் நிறுவனத்தில் பதிப்பித்துள்ளார்.

அறு. இராமநாதன் கதைப்பாடல்களைப் பதிப்பித்துள்ளார். இவர் கதைப்பாடல் ஆய்வு என்ற ஆய்வு அறிக்கையில் சில சிறுகுறுங்கதைப் பாடல்களைப் பதிப்பித்துள்ளார். இதன் முன்னுரையில் கதைப்பாடலைப் பற்றி விளக்கம், கதைப் பாடல்கள் தோற்றம், வளர்ச்சி, கதைப் பாடலின் வகைப்பாடுகள் கதைப் பாடல் பாடும் முறைகள், கதைப்பாடல் பதிப்புகள் அனைத்தும் அதில் காண முடிகிறது. வள்ளி முருகன் என்னும் புராணக் கதைப் பாடலை இவர் பதிப்பித்துள்ளார். இக்கதைப் பாடல் வாய்மொழி தரவில் சேகரிக்கப்பட்டது என்றும் கூறியுள்ளார். இவர்களையடுத்து ச. முருகானந்தம் என்பவர் கதைப்பாடலைப் பதிப்பித்துள்ளார். இவர் ஆரவல்லி, சூரவல்லி, மாதாவல்லி கதைப்பாடலையும் (1991), மன்னான் என்னும் சின்னாண்டித் தேவர் கதைப்பாடல் (1991), அழகுத்தேவர் கதைப்பாடல் (1991) என்னும் கதைப்பாடல் களைத் தேன்மழை, வெளியீடு மூலமும் பதிப்பித்துள்ளார். இக்கதைப் பாடல்கள் அனைத்தும் திண்டுக்கல் மாவட்டத் தலைமையகமாகிய திண்டுக்கல்லுக்கு அண்மையிலுள்ள மல்லையபுரம் என்னும் ஊரில் சேகரிக்கப்பட்டன என்பதை அழகுதேவர் கதைப்பாடல் முன்னுரையில் கூறுகிறார். இவர் பதிப்பின் முன்னுரையில் கதையைப் பற்றிய ஆய்வுரையும் அதைத் தொடர்ந்து கதைச் சுருக்கமும் உண்டு. மேலும் இவர் பதிப்பித்த கதைப்பாடல்கள் அனைத்தும் சமூகக் கதைப்பாடல்களே.

சிவ. விவேகானந்தன் என்பர் ஒரு சில கதைப்பாடலைப் பதிப்பித்துள்ளார். அவற்றில் ஒன்று பிரமசக்தி அம்மன் கதை (1987). இக்கதைப்பாடலிலே ஆய்வு முன்னுரை, வில்லுப்பாட்டு, இலக்கியம், கதை ஆராய்ச்சி, பா, பாநலன், முடிவுரை, மூலம் எனக் கொடுக்கப்பட்டுள்ளன.

''தன்னனானே'' இதழில் குருக்கேந்திரன் கதைப்பாடல் பதிப்பித்துள்ளார். இக்கதைப்பாடல் புராணக் கதைப்பாடல் ஆகும். எனினும் மற்றொன்று இக்கதைப் பாடலிலும் ஆய்வுரை, புராணக் கதைப்பாடல் வாழ்த்து, கதைச்சுருக்கம், கதைத் தொடர்புடைய கிருஷ்ணஜீன் யுத்தம் என்னும் மலையாளக் கதைப்பாடலில்

உள்ள ஒற்றுமை மற்றும் வேற்றுமை அனைத்தும் உண்டு. இந்தக் கதையின் ஆய்வுரை புராணக் கதைப்பாடல் ஆய்வுக்குச் சிறந்த எடுத்துக்காட்டு என்று கூறலாம்.

சென்னைப் பல்கலைக்கழகத்தின் பேராசிரியர் இ. சுந்தரமூர்த்தி என்பவர் அல்லி கதை என்னும் பேரில் அல்லியரசாணிமாலை என்னும் புராணக் கதைப்பாடலில் வரும் கதையை எடுத்துச் சொன்னார். கோவை மாவட்டத்தில் வழங்கு இக்கதையைப் பதிப்பித்துள்ளார். இப்பதிப்பின் ஆய்வுரை உண்டு. மேலும் கதைப் பாடல்கள் பட்டியல் ஒன்றும் தயாரித்துக் கொடுத்துள்ளார்.

நா. இராமச்சந்திரன் என்பர் பிச்சைக்காரன் கதை *(1987)* என்னும் கதைப்பாடலைப் பதிப்பித்துள்ளார். இக்கதைப் பாடலில் கதைச்சுருக்கம் களஆய்வு பற்றிய செய்திகளைக் கூறியுள்ளார். இக்கதைப் பாடல் ஒரு சமூகக் கதைப்பாடல் ஆகும்.

*ச.* வரதராசலு *(1979)* தன் கட்டுரையொன்றில் சின்னண்ணன் சின்னத்தம்பி கதைப்பாடலைப் பதிப்பித்துள்ளார். இதே கதைப் பாடலை இவர் ஆராய்ச்சி *(மலர் - 5; இதழ் - 4)* இதழில் வெளியிடும்போது சொற்களில் வேறுபாடு காணப்படுகின்றது.

கே.ஏ. குணசேகரன் *(1988)* வெளியிட்ட நகர்சார் நாட்டுப்புறக் கதைப்பாடல்கள் என்ற நூலில் கருவாய்த்தேவன் கதை, மணிக் குறவன் கதை, மைக்கேலம்மா கதை ஆகிய இதைப் பாடல்கள் பதிப்பிக்கப்பட்டுள்ளன. பாடலைப் பாடியோர் பற்றிய விவரங்கள், சேகரித்த முறை, பதிப்பித்த முறை முதலிய விவரங்கள் நூலில் தரப்படவில்லை.

நசீம்தீன் *(1992)* கோவலன் சரித்திரம் என்னும் நூலை வெளியிட்டுள்ளார். கதைச் சுருக்கம், கதைப்பாடல் பற்றிய ஆய்வுரை முதலியவை நூலில் இடம் பெற்றுள்ளன.

எஸ். வையாபுரிப் பிள்ளையைப் பதிப்பாசிரியராகக் கொண்டு சென்னைப் பல்கலைக்கழகத்தாரால் வெளியிடப்பட்ட இராமப்பையன் அம்மானை என்னும் கதைப்பாடலில் முன்னுரை முதலான விவரங்கள் காணப்படுகின்றன.

ஆ. தசரதன் என்பார் பத்துக்கும் மேற்பட்ட கதைப்பாடல் களைப் பதிப்பித்துள்ளார். அவற்றுள் சில, மாரியம்மன் கதைப் பாடல், அரிப்பாங்கதைப்பாடல்கள், மார்க்கண்டேயன் கதைப்பாடல். முப்புராதி அம்மான் கதைப்பாடல் *(1995)* அய்யனார் கதைப்பாடல் *(1994)* என்பவை ஆகும்.

# நாட்டார் நாடகங்களின் அமைப்பு

**ந. விஜயசுந்தரி**

*சிதம்பரம்பிள்ளை மகளிர் கல்லூரி*

*மண்ணச்சநல்லூர், திருச்சிராப்பள்ளி - 621 005*

நாட்டுப்புற மக்களின் பழக்கவழக்கங்களையும் வழிபாட்டு முறைகளையும் அடிப்படையாகக் கொண்ட நாடகங்கள் நாட்டார் நாடகங்கள் எனப்படும். நாட்டுப்புறங்களில் வாழ்ந்து வரும் மக்களைச் சிறப்பாக நாட்டார் என்று குறிப்பிடுவர். எனவேதான் வாய்மொழியாக நாட்டுப்புற மக்கள் வழங்கி வந்த பாடல்கள் நாட்டார் இலக்கியம் எனப்படும். தொடக்கக் காலத்தில் பலவகையான கூத்துக்களும், ஆடல்களும் நிகழ்த்தப்பட்டன. இத்தகைய தெருக்கூத்துக் கலையின் வளர்ச்சி பெற்ற நிலையில் நாட்டார் நாடகங்கள் விளங்குகின்றன. கதை தழுவிய தன்மை, இசைப்பாடல்களின் இடையீடு, நாட்டார் மக்களின் வழக்கில் காணப்படும் சொற்கள், நகைச்சுவைக் காட்சிகள் ஆகியவை நாட்டார் நாடகங்களின் சிறப்பியல்புகளாகும்.

**நாட்டார் நாடகங்களின் உட்பொருள்**

நாட்டார் நாடகங்கள் கிராமங்களில் நிகழ்த்தப்பட்டதால் இராமாயணம், மகாபாரதம் போன்ற இதிகாசங்களிலிருந்தும், கந்தபுராணம், திருவிளையாடற் புராணம், பெரியபுராணம் போன்ற புராணங்களிலிருந்தும் சிறுசிறு நிகழ்ச்சிகள் எடுக்கப்பட்டு அவை சிற்சில மாற்றங்களுடன் நாடகங்களாக எழுதப்பட்டன. அக்காலத்தில் நாட்டுப்புறங்களில் வழங்கி வந்த கதைகள் பலவும் நாடகக் கருக்களாயின. சோழன், பாண்டியன் போன்ற மன்னர்களின் வாழ்க்கை வரலாறுகளும் நாடகங்களாக்கப்பட்டன.

கிராமப்புறங்களில் ஒருசில கதைகளையே மக்கள் அறிந்திருத்ததால் மீண்டும் மீண்டும் அவற்றையே வெவ்வேறு ஆசிரியர்கள் நாடகங்களாக எழுதினர். புராணக் கதைகளில் மிகப்பெரிய அளவில் பல்வேறு நாடகங்களாக ஆக்கப்பெற்ற கதை அரிச்சந்திரன் கதை ஆகும். அரங்கப் பிள்ளைக்கவிராயரின் அரிச்சந்திர விலாசம், பரசுராமக்கவிராயரின் அரிச்சந்திர விலாசம், முத்துசாமிப்பிள்ளையின் அரிச்சந்திர விலாசம், சிவகாமி எழுதிய

அரிச்சந்திரன் நாடகம், நரசிம்மையரின் அரிச்சந்திரோ பாக்யான நாடகலங்காரம் ஆகியவற்றை உதாரணங்களாகக் கொள்ளலாம்.

தமிழ்நாட்டில் சிறு தெய்வங்களை வழிபடும் மரபு உண்டு. இவர்கள் மண்ணில் வாழ்ந்து பின் விண்ணுலகை எய்திய தேவர் களைப் போன்றோர். மதுரைவீரன், சுடலைமாடன், காத்தவராயன், ஆரவல்லி போன்றோர் கதைகள் நாட்டார் நாடகங்களாக எழுதப் பட்டன.

**நாட்டார் நாடகங்களின் பெயர்கள்**

நாடகம், விலாசம், சபா, அலங்காரம், சரித்திரம், வாசகப்பா, சரித்திரப்பா ஆகிய பல பெயர்கள் நாட்டார் நாடகங்களுக்கு வழங்கப்படுகின்றன. இவை பெயரளவிலேயே வேறுபட்டுள்ளன. ஒரு குறிப்பிட்ட தலைவன் அல்லது தலைவியின் புகழைச் சிறப்பித்துப் பேசும் நாடகம் விலாசம் எனப்பட்டது. அரிச்சந்திர விலாசம், இரணிய விலாசம், சகுந்தலை விலாசம் ஆகியவற்றை உதாரணமாகக் கொள்ளலாம். இடையிடையே வசனங்கள் விரவப் பெற்று வரும் வாசகப்பாக்களாலாகிய நாடகங்கள் 'வாசகப்பா நாடகம்' எனப்படும். தேவசகாயம் பிள்ளை வாசகப்பா இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டு. நாடகத் தலைவனின் வாழ்க்கை வரலாற்றைக் கூறுவது சரித்திரிப்பா ஆகும். மனுநீதிச்சோழச் சக்கரவர்த்தி, சரித்திரப்பா, சாரங்கதாரா சரித்திரப்பா போன்றவை உதாரணங்கள். போர், வீரம், வெற்றிச் சிறப்பு ஆகியவற்றை எடுத்துக் கூறுவது சண்டை நாடகம் எனப்படும். பீஷ்மர் போர்க்களத்தில் சண்டை யிட்டு பின் மடிந்த வரலாற்றைப் பீஷ்மர் சண்டை நாடகம் கூறும். மாலையிட்ட நாடகம் என்பது எல்லோராலும் படிக்கத் தகுந்தது. தலைவனும், தலைவியும் மணம் புரிந்துகொள்ளும் கதையமைப்பு உடையது. சுந்தரி மாலையீடு நாடகம் சிறப்பு வாய்ந்தது. பிரம்மாண்டமான காட்சியமைப்பை மேடையில் கொண்ட நாடகம் சபா நாடகம் எனப்படும். அப்பாவுப் பிள்ளையின் நூதன பவளேந்திர சபா, பத்மினி சபா சிறப்பு வாய்ந்தவை. மேலும் நல்லதங்காள் நாடகம், தமயந்தி நாடகம் என்று என முடியும் நாடகங்கள் எழுதப்பட்டன. பின் பெயர்கள் எதையும் கொள்ளாமல் நேரடியாக உட்பொருளை உணர்த்தும் நாடகங்களும் உண்டு. பம்மல் சம்பந்த முதலியாரின் இரு சகோதரிகள், பரிதிமாற் கலைஞரின் கலாவதி இவற்றைக் குறிப்பிடலாம்.

**நாட்டார் நாடகங்களின் கட்டமைப்பு**

நாட்டார் நாடகங்கள் தொடக்கம் முதல் இறுதி வரை சீராகச் செல்லும். சொல்லுமளவிற்குப் பெருஞ்சிக்கல் எதுவுமிராது.

இடவொருமை, காலவொருமை, செயலொருமை எதுவும் இல்லை. ஒரு நாடகம் ஐந்து சந்திகளைக் கொண்டிருக்க வேண்டும் என்ற மரபும் காணப்பெறவில்லை. முடிவு இன்பியலாகத்தான் இருக்க வேண்டும் என்பதில் முக்கியத்துவம் காட்டப்பட்டுள்ளது.

பெரும்பாலும் இந்நாடகங்கள் ஒருவித மரபு முறையைப் பின்பற்றுகின்றன. காப்புச் செய்யுள், கடவுள் வாழ்த்து, விநாயகர் வருகை, கட்டியங்காரன் வருகை, அரசன் தேச விசாரணை செய்தல், நடனமாதர் ஆடல் என வரிசையாக நிகழ்ச்சிகள் எல்லா நாடகங்களிலும் காணப் பெறுகின்றன. காப்புச் செய்யுளில் விநாயகரை நூல் வெற்றி பெறுவதற்கு வேண்டுவர். பின் அவையடக்கம், ஆக்கியோன் குறிப்பு, தோடையம், மங்களம் ஆகியவை தொடர்ந்து பாடப்பெறும் சில நாடகங்களில் நூல் பற்றிய விளக்கமும், பாடலாக இடம்பெறும்.

விநாயகர் வருகிற விதம், காத்தவராயன் சண்டை நாடகத்தில்,

'நற்றவக் காத்தவராயன் நாடகமதை நடத்த
அத்திமா முகவன்தானும் அன்புடன் வருகின்றாரே'[1]

என்ற நாடக வருகை புனைந்துரைக்கப்படும்.

தொடர்ந்து கட்டியங்காரன் வருவான். சில நாடகங்களில் கட்டியங்காரனுக்கும், விநாயகருக்கும் நகைச்சுவையாக உரையாடல் நடைபெறும்.

'காட்டிலே திரிகிற யானையைப் பிடித்து வந்து கட்டி
வைத்துக் கொண்டு கணநாதரென்று வணங்கலாமா காணும்'[2]

என்று கேட்கிறான். சில நாடகங்களில் விநாயகருக்குப் பின் திருமகள் வருவாள். பின் மோகனனும், மோகினியும் கதை நிகழப் போவது குறித்து உரையாடுவர்.

'புத்தியில்லா மட்டியே பூதம்போல தட்டியே
புலம்புறாய் கிட்டியே போட வப்பாலெட்டியே'

என்று மோகினி கூற, மோகனன்,

'காமன்கணை பொல்லாது காணேன் துணையுனையல்லாது
காதல் தீம்பாய் நில்லாது கண்ணே தடை சொல்லாது'[3]

என்கிறான்.

**தேச விசாரணை செய்தல்**

ஒவ்வொரு நாடகத்து மாந்தர்களுக்கேற்றவாறு இது அமையும். மக்களைப் பொறுத்து அமையாமல், கேட்கின்ற அரசனின்

பண்பு நலன்கள் அடிப்படையில் மாறுபடும் தன்மை உடையது இப்பகுதி.

ஸ்ரீவெங்கடேசப் பெருமாள் நாடகத்தில் வரும் தேசவிசாரணைப் பகுதியில்,

இடையில் கச்சையும் இறுக்கியே கட்டிடும்
'எஜமான் ஷேக்முகமது செயலாவுத்தர்
துப்பாக்கி துக்கித் தோளில் வைத்து
தடாலென்று கடும் நவாப்புகள் வந்தனர்களா'[4]

என்று தன் படைவீரர்களின் நலனைக் குறித்தே வினவுகிறான்.

நாட்டார் நாடகங்கள் நடிக்கப் பெறுகின்ற காலத்திற்கேற்பச் சுருக்கமாகவும், விரிவாகவும் அமைக்கப்படுகின்றன. நாடகத்தை விரிவாக நடத்த வேண்டுமெனில் நாடகத் தலைவனின் பிறப்பு, வளர்ப்பு தொடங்கி கதை எழுதப்பெறும். இடையிடையே நகைச்சுவைக் காட்சி, நடனம் ஆகியவை இணைக்கப்பட்டு நாடகம் நீண்டு அமையும். நாட்டார் நாடகங்களில் அங்க, களப்பிரிவுகள் இல்லை. பெரும்பிரிவு எனப்படும் காண்டமாகப் பிரிக்கும் மரபு மட்டும் உள்ளது. நாடகங்களில் தொடக்கம், முடிவு இன்றிச் சில குறிப்பிட்ட நிகழ்ச்சிகளையே நாடகமாக எழுதியுள்ளனர். பெரும்பாலும் இதிகாச புராணங்களை நாடகங் களாக எழுத வேண்டியிருப்பதால் நாடகத்துள் முன், பின் நிகழ்ச்சிகளை நீக்க வேண்டிய நிலையும் ஏற்படுகிறது.

**பாத்திர அறிமுகம்**

நாட்டார் நாடகங்களை மக்கள் முன் நடிக்கையில் சில குறிப்பிட்ட பாத்திரங்களே மீண்டும் மீண்டும் வேடத்தை மாற்றிக் கொண்டு மேடையில் தோன்ற வேண்டும். விநாயகர், நாரதர், கட்டியங்காரன் ஆகிய பாத்திரங்களைக் குறிப்பிட்ட வேடங்களின் மூலம் வேறுபடுத்திக் காட்ட வேண்டும் என்றாலும் ஒரு நாடகத்தில் இந்த பாத்திரங்களை மிக எளிமையாக மக்கள் இனம் கண்டு கொள்வர். அரசனுக்கென்று ஒரு குறிப்பிட்ட ஆடை அலங்காரம் உண்டு. ஒரு காட்சியில் அரசனாகத் தோன்றியவன், மூன்றாவது காட்சியில் சாதாரணக் குடிமகனாகத் தோன்ற வேண்டும் எனில் அவன் தோற்றத்தை மாற்றிக் கொள்ள வேண்டும். தொலைவிலிருந்து காணும் மக்களுக்கு இவன் இன்னார் என்பதும் அடையாளம் காணப்பட வேண்டும். எனவேதான் தங்களைத் தாங்களே பாத்திரங்கள் அறிமுகம் செய்து கொள்ளும் முறை தோன்றியது.

கட்டியங்காரன் முன்னர் தோன்றி அரசன் அல்லது இறைவனின் வருகையை அறிவிப்பான். பின் அந்த பாத்திரம் பாடிக் கொண்டே மேடைக்கு வரும். வேங்கட்ராமா உபாத்தியார் எழுதிய மார்க்கண்டேயர் விலாசத்தில் பிரம்மதேவன் வருகையைக் கட்டியங்காரன் இவ்வாறு கூறுகிறான்.

'அருமறை முனிவாடி பணிந்திடும் ஐயனே மெய்யா பராக்கு
கரமதில் கமலம் காணவே ஏந்தும் கார்த்தனே பராக்கு
மறையவர் யாவரும் வந்தடிதாழும் மாயனே நேயா பராக்கு
திறமுடன் எதுவும் சிருஷ்டிக்கும் பிரமதேவனே தேவா
பராக்கு'[5]

என்று பாடி முடிக்கும்போது மேடையில் பிரமதேவன் தோன்றுவார்.

நாடகத்தின் இடையில் சில குறிப்பிட்ட ஆண்டுகள் கழித்து நடைபெற உள்ள காட்சியைக் காட்டுவதாய் இருந்தால், அத்தகைய காலக்கழிவைப் பாத்திரங்களின் கூற்றாகவே வெளிப்படுத்துவர்.

கோவலன் கண்ணகி நாடகத்தில்,

'கன்னலெனும் கணையால் கடையூரேகி
கணக்குப் பனிரெண்டு வருஷங்களாச்சு'[6]

என்று கூறுவதில் சில குறிப்பிட்ட ஆண்டுகள் கழிந்தது உணர்த்தப்படுகிறது.

**குறிப்புகள்**

1. ஏ.என். பெருமாள், தமிழ் நாடகம், ஓர் ஆய்வு, ப. 89.
2. மேற்படி, ப. 90
3. மேற்படி, ப. 91
4. மேற்படி, ப. 106
5. மேற்படி, ப. 196
6. வீரபத்திரன், கோவலன் கண்ணகி நாடகம், ப. 60

# நாட்டுப்புறப் பாடல்களும், தமிழ்ப்பண்பாடும்

**ஜா. வளர்மதி**

*ஆற்காடு ஸ்ரீ மகாலட்சுமி பெண்கள் கலைக் கல்லூரி*
*ஆற்காடு*

நாட்டுப்புறவியல் என்பது மக்களால் பரம்பரையாக மரபு வழி உண்டாக்கப்பட்ட ஆக்கங்கள் (creation). எழுத்துருவமில்லா மொழிகளைக் கொண்ட மக்களிடையே காணப்படுவன எல்லாம் இதில் அடங்கும். எழுதப்பட்ட இலக்கியம் காலத்தைக் காட்டும் கண்ணாடி என்றால், நாட்டுப்புற இலக்கியம் சமுதாயத்தைக் காட்டும் கண்ணாடி எனலாம். நாட்டுப்புறப் பாடல்கள் கிராமத்து மக்களின் அனுபவங்களை மட்டுமின்றி அவர்களது உணர்வு களையும் பிரதிபலித்து நிற்கின்றன. பொதுவாகக் கள்ளம் கபடமற்ற மக்களின் உள்ளத்தின் வெளிப்பாடே நாட்டுப்புற இலக்கியம் எனக் கொள்வது சிறப்பாகும். நாட்டுப்புறப் பாடல்கள் மக்களின் பொருளாதார, சமய வரலாற்றை அறியவும் உயர்ந்த நோக்கங் களையும், பழக்க வழக்கங்களையும் இன்ப, துன்ப உணர்ச்சி களையும், ஆசை கனவுகளையும் வெற்றி, தோல்விகளையும் உணர்ந்து போற்றவும் பயன்படுகின்றன.

வாழ்வின் தொடக்கமாம் குழந்தையின் பிறப்பு முதல் இறப்பு வரையுள்ள அனைத்து நிலைகளையும் இவை சுட்டி நிற்கின்றன. ஏற்றமிறைப்போர், நாற்று நடுவது, களை பறிப்போர் போன்ற தொழிலாளர்கள் பாடும் பாடல்கள், தாலாட்டு, ஒப்பாரி, காதல் பாடல்கள், பூசாரிப் பாடல்கள், கடவுளை வணங்கும் பாடல்கள், பழக்க வழக்கம், நம்பிக்கை பாடல்கள், நாடோடி வீரர்கள் பற்றிய பாடல்கள் என இவை குறித்து வகைப்படுத்தி காணலாம்.

**தாலாட்டு**

தாலாட்டு பாடல்கள் நாட்டுப் பாடல்களில் முதலிடம் வகிப்பவையாகும். செல்வங்களில் சிறந்த செல்வம் குழந்தைச் செல்வம் உலகில் இதற்கு ஈடில்லை என்றே கருதலாம். மான் போலத் துள்ளி குதிக்கும், மலர் போலச் சிரித்து மகிழும், தேன் போலப் பேசித் திரியும் பருவம் குழந்தைப் பருவமாகும். ஆடும்

மலர், தவழும் மேகங்கள், அன்பு வடிவங்கள், ஆசைத்தேர்கள் பாசக்கொடி தளிர்கள், பௌர்ணமி நிலவுகள் என்று புகழ்ந்தாலும், போற்றினாலும் அது மிகையாது. குழந்தை சோற்றால் வளர்கிறது என்பதைவிட, பாட்டால் வளர்கிறது எனலாம். தானாக வந்தமையும், எதுகை மோனையும், நினைக்க இனிக்கின்ற இலக்கிய நயங்களும் வாழ்க்கையில் தோய்ந்த அனுபவ முத்திரைகளும் நிலைத்த உண்மையும் பழகு தமிழிலே வழங்குகின்ற உவமை முதலிய அழகுகளும் நல்ல சொல்லாட்சியும் தடையில்லா நடைப் பெருக்கமும் கொண்டவை இலக்கியம் என்றால் தாலாட்டுச் சிறந்த இலக்கியமே.

குழந்தையின் உடலுறுப்புகளை அழகுள்ளதாகவும் மிகைப் படுத்தியும் சொல்லுதல்.

ஏலக்காய் ஏன்அழுதாய் இளந்தோப்பு வாய்நோக
ஜாதிக்காய் ஏன்அழுதாய் சந்தனப்பூ வாய்நோக
கொத்து மரிக் கொழுந்தே
கோமளமே கண் வளராய்
கண்ணே கமலப் பூ
கண்ணீரண்டும் தாமரைப் பூ
மேனி மகிழும் பூ மேற்புருவம் சண்பகப் பூ.

ஏழ்மை என்பது மானிட வாழ்க்கையில் நிரந்தரமானது. தன் குழந்தையை உறங்க வைக்க ஏழ்மைத் தாய் தன் நிலையைத் தான் பெற்றெடுத்த அன்பு செல்வத்திடம் இவ்வாறாகப் பாடுகிறாள்.

'வெத்து குடிசையில் வெளையாட வந்தாயோ
ஆட்டுப் பால் கொடுத்து ஆளாக்கப் பாத்தாலும்
ஆடு கடிக்கும் செடி அத்தனையும் மொட்டையடா
மாட்டுப் பால் கொடுத்து மனுஷனாக்கப் பார்த்தாலும்
மாடுமேயும் புல்லு மாய்ந்து போனதடா.

ஏழையாக இருந்தாலும் அவர்கள் கற்பனை செய்து பாடும் பாடல் தாலாட்டுக்கு எல்லையே இல்லை.

தங்க கதவுகளாம் என் ராஜாவே
தனி தாப்பா பூட்டுக்களாம்
அதட்டி தொறக்க - நீ
அதிகாரியா பொறந்தாயா
வைரக் கதவுகளாம் என் - ராஜாவே
வாயில் படியில் பூட்டுக்களாம்
வளைச்சி தொறக்க - நீ
வரத்துல பொறந்தாயா

ஒரு தாய் தன் பிறந்த வீட்டின் பெருமையும், குழந்தையின் தாய் மாமனின் பரத்தமை பெருமைகளையும் எடுத்துச் சொல்லும் தாலாட்டுப் பாடல் இது.

வெள்ளி குடை பிடிச்சி
வேசிகளை முன்னவிட்டு - உன் மாமன்
வேசிக்கே விட்ட பணம் - ரெண்டு
வெள்ளி மாடம் கட்டலாமே
மேல் வீடாம் கீழ் வீடாம்
போக வர ரஸ்தாவாம்
தாசிகள் வந்திறங்க
தாமரை பூஞ்சோலை.

**ஒப்பாரி**

வாழ்வின் முடிவு சாவாகும். மானிட உறவின் ஆழத்தையும், அழுத்தத்தையும் காட்டுவது ஒப்பாரி. வாழ்வின் துன்ப உணர்ச்சிகள் அனைத்தும் உருக்கொண்டு வெளிப்படும் ஒப்பாரிகள் நம் நாட்டுத் தாய்மார்களின் ஒப்பற்ற படைப்பாகும். பிள்ளையில்லாக் குறை, மாமியார், நாத்தனார் கொடுமை, காதல் தோல்வி, கைம்மைத் துன்பம், ஏமாற்றம் முதலிய அனைத்தும் ஒப்பாரியில் நிரம்பி யுள்ளன.

கிராமங்களில் சிறுவயதிலே மணம் முடித்து விடுவது சாதாரணம். குழந்தை மணத்திற்கான குறிப்புகளும், அம்மணத்தினால் ஏற்படும் துன்பங்களும் காணப்படுவதை அறியலாம்.

அஞ்சி வயசிலே
அறியாத நாளையிலே
அம்மி மித்தே அருந்ததி பாத்தி
அத்தி மகனுக்கின்னு
அடுக்கு மல்லி சூடனிங்கோ

**காதல்**

நாட்டுப்புறங்களில் வயது வந்த ஆடவரும் பெண்களும் கூடித் தொழில் செய்வர். மாமன் மகன் அத்தை மகள் இவர்கள் உரிமையோடு பழகுவர். அவர்கட்குள் காதல் மலர்வதுண்டு. செல்வம் சமூக நிலை காரணமாக மறுப்பதும் உண்டு. சில போது பெண்கள் சில ஆண்களுக்கு இரண்டாம் தாரமாக மணம் முடித்து விடுவதும் உண்டு. அத்தகைய அவல நிலையில் பெண்ணின் புலம்பல்.

பூத்து மலர்ந்தவருக்குப்
பொண்டாட்டி போனவர்க்குப்

பொழுது சாய்ந்தவர்க்குப்
பொண்ணு நான் சம்மதிச்சேன்
சம்மதிச்ச நாள் மொதலா
சாதி சனம் சிரிப்பாச்சி - என்
சரிகிலம் புண்ணாச்சி.

**கண்ணேறு கழித்தல்**

கடவுளைப் பற்றிய நம்பிக்கை போன்றே கண்ணேறு பற்றிய நம்பிக்கையும் உலகத்தில் நோக்குமிடமெல்லாம் நீக்கமற நிறைந்திருப்பதாகும். 'கல்லடி பட்டாலும் பரவாயில்லை, கண்ணடி படக்கூடாது என்பர் குழந்தை முதல் பெரியோர் வரை கிராமங்களில் அனுசரிப்பர். அதைக் குறித்த பாடல்.

பாவி கண்ணு
பரப்ப கண்ணு
அப்பா கண்ணு
அம்மா கண்ணு
அக்கா கண்ணு
அசூட்டு கண்ணு
மூளி கண்ணு
பேய் கண்ணு
பாட்டி கண்ணு
மொர்ல கண்ணு
திருட்டு கண்ணு
சீபோ... சீபோ... சீபோ...

**சகுனங்கள்**

சங்ககால இலக்கியங்களிலே நன்னிமித்தம், தீநிமித்தம் பற்றிய குறிப்புகள் உள்ளன. கிராமப்புற மக்களும் நகர்ப்புற மக்களும் நல்ல காரியங்களைத் தொடங்கும்போது சகுனம் பார்ப்பது குறிப்பிடத்தக்கது. தும்முதல், நாய் குரைத்தல், காக்கை கரைதல், பல்லி கத்துதல், பூனை குறுக்காதல், தீ எதிரே வருதல் போன்றவைகளைத் தீய சகுனங்களாகக் கொள்ளலாம். இவற்றை வெளிப்படுத்தும் பாடல்.

'காக்கா காக்கா கத்துதுடா
காளை மாடு வருதுங்கடா
காத தூரம் போகாதே
கால் ஒடிஞ்சி வாராதே'
'பூன பூன குறுக்காச்சி
போன இடம் வெறுப்பாச்சி.

**பலவகை**

இன்னும் விளையாட்டு, தொழில், காதல் பலவற்றைப் பற்றிய பாடல்களும் உள்ளன. மாமியார், நாத்தனார் கொடுமை, அண்ணி கொடுமை, பிள்ளைபேறு இல்லாமல் அனைவரின் கொடுமைக்கும் ஆளாகும் பெண்ணின் அவல நிலை மற்றும் கிண்டல் பாடல்கள் என நாட்டுப்புறப் பாடல்களை வகைப்படுத்தி காணலாம்.

சுருக்கமாகச் சொன்னால் நாட்டுப்புறப் பாடல்கள் பாமர மக்களின் வாழ்வைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாகத் திகழ்கின்றன. செயற்கை மணம் இன்றி இயற்கையாக எல்லா நிலையினையும் அழகாகச் சமூகத்தைக் காட்டி நிற்கும் வண்ண மலர்கள்தான் இந்த நாட்டுப்புறப் பாடல்கள் என்றால் மிகையாகாது.

# நாட்டுப்புற வேளாண் பாடல்கள்

**து. வெள்ளைச்சாமி**

*அய்யநாடார் ஜானகி அம்மாள் கல்லூரி (தன்னாட்சி)*
*சிவகாசி*

நாட்டுப்புறவியல் என்ற சொல் "Folk lore" என்ற சொல்லின் தமிழ் பயன்பாட்டுச் சொல்லாகும். நாட்டுப்புறவியலைக் குறிக்கும் "Folklore" என்ற இச்சொல்லை 1846-இல் வில்லியம் ஜான் தாமஸ் என்பவர் ''Popular Antiquiteis'' என்ற இலத்தீன் சொல்லிற்கு மாற்றீடாக உருவாக்கினார்.[1]

நாட்டுப்புற இயல் என்பது நாட்டுப்புற மக்களின் மரபு வழிப்பட்ட படைப்புகள் (Traditional Creation) எனலாம். ''தமிழக நாட்டுப்புற இலக்கியத்தைப் பாடல்கள், கதைகள், கதைப்பாடல்கள், விடுகதைகள், பழமொழிகள் என்று ஐந்து வகையாகப் பகுத்துக் கொள்ளலாம்''[2] என்று சு. சண்முகசுந்தரம் கூறுவார்.

**நாட்டுப்புறப் பாடல்கள்**

வாய்மொழி இலக்கியமாகி நாட்டுப்புறப் பாடல்கள் ஏட்டில் எழுதிவைக்கப்படாத கல்லாத பாமர மக்களால் பாடப்படுகின்ற பாடல்களாகும். இப்பாடல்கள் வரையறை அற்றவை. பொதுவாக மனிதன் பிறந்ததையடுத்துப் பாடும் தாலாட்டு முதல் இறப்பிலே பாடும் ஒப்பாரி வரை மனிதனின் வாழ்வினை ஒட்டிய பாடல் களாக அவை வகைப்படுத்தப்படுகின்றன.

**தாலாட்டுப் பாடல்கள்**

தாலாட்டு, நாட்டுப்புறப்பாடல் அமைப்பில் முதன்மையானது. மனித இனத்தின் வளர்ச்சிகள் அடிப்படையில் வகுக்கும் போது தாலாட்டுதான் முதலிடம் பெறுகிறது. இத்தாலாட்டில் அகப்படாத பொருளே இல்லை எனலாம். அப்படிப்பட்ட தாலாட்டுப் பாடல் களில் வேளாண்மைச் செய்திகளும், வேளாண்மைச் செயல்முறை களும் அவை தொடர்பான தொழில் நுணுக்கங்களும் நிறையவே உள்ளன.

மழை பற்றிக் கூறும் தாலாட்டாக,

''மாசி மழ பெய்யாதோ - என்கண்ணே
மலையில் வெள்ளம் சாயாதோ

ஏத்து மீனு ஏறாதோ - என் கண்ணே
எங்க பஞ்சம் தீராதோ''

என்பதால் மழை பற்றிக் கூறுவதை அறிந்துகொள்ள முடிகின்றது. இப்பாடல் மழைக்கான தாலாட்டு என்பது போலத் தோன்றினாலும் உற்றுநோக்கும்போது சிறப்பான கருத்தைக் கூறும் தாலாட்டாக உள்ளது.

**தாலாட்டில் உழவு**

''தங்க கலப்ப கொண்டு எங்க தருமதுர போகயில
காடுமேடு உழுதுவர எங்க தங்கமகன் தானுறங்க
பொன்னு கலப்ப கொண்டு ஒங்கய்யா புழுதி உழுக போகயில
அங்க புழுதி உழுது வாரயில அங்க பொன்னு மகன் தூங்கயில''

என்ற பாடலால் உழவுச் செய்தியை அறிந்துகொள்ள முடிகிறது. தரிசு நிலத்தைத் தங்கக்கலப்பைக் கொண்டு உழச் செல்லும் உழவன் நிலையைப் புலப்படுத்துவதாக இப்பாடல் அமைந்துள்ளது எனலாம்.

**காதல் பாடல்கள்**

காதல் மனித இனத்தின் முதல் இயக்கம். காதல் மனித இனத்திற்கு மட்டும் சொந்தமானதன்று. இவ்வுலகின் அனைத்து உயிரினங்களுக்கும் பொதுவானது காதல். காதலைப் பற்றிப் பாடாத புலவர்களே இல்லை எனலாம்.

அத்தகைய காதல் பாடல்களிலும் வேளாண் செயல்பாடுகள் காணப்படுகின்றன. காதல் நிகழ்வுகள் வேளாண் தொழிலை யொட்டியே அமைந்திருந்தன என்பதையும் அறிந்துகொள்ள முடிகிறது. அவ்வகையில் நாட்டுப்புறப் பாடல்களில் வேளாண்மை சார்ந்த காதல் பாடல்கள் நிறையவே உள்ளன.

காதல் பாடல்களில் மழை பற்றிய பாடல்கள் மழையின் போக்கைக் காட்டுகின்றன. காதலியின் நெற்றியில் வைத்த பொட்டுக் கூடக் கரையுமளவிற்கு மழையில்லை என்று கீழ்வரும் பாடல் சுட்டுகின்றது.

''பொட்டு மேல பொட்டு வச்சு
பொட்டலில போர புள்ள
ஒம் பொட்டலில பேஞ்சு மழ
ஒம் பொட்டழியப் பெய்யலயே''

**ஏர்**

வேளாண்மைப் பணிகளில் முதல்பணி நிலத்தைப் பண் படுத்துதல். அதற்கு உறுதுணையாக இருப்பது உழுகருவிகள் மற்றும்

மாடுகள். அவைகளின் பயன்பாடுகளைச் சுட்டுவதாகக் காதல் பாடல்கள் அமைந்துள்ளன.

''முன்னத்தி ஏருக்காரா
முதலாளி பண்ணக்காரா
பின்னத்தி ஏருக்காரா
பிழைமோசம் வந்திராம''

என்று காதலி தன் காதலனிடம் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

**களை எடுத்தல்**

காதலி தான் செய்யும் வேலையைக் கூறி தன் கள்ளக் காதலனை மாலை நேரத்தில் வரக்கூறுகிறாள். அப்படிக் காதலன் காதலியைக் காணவரும் சூழ்நிலையைக் காதலன் காதலி உரையாடலாக இப்பாடல் அமைந்துள்ளது. களையெடுக்கும் வேளாண் தொழிலைப் புலப்படுத்துவதாகக் கீழ்வரும் பாடல் அமைந்துள்ளது.

**ஆண்**

''கானக் கரிசலிலே
களைஎடுக்கும் பெண் மயிலே
நீலக் கருங்குயிலே
நிக்கட்டுமா? போகட்டுமா?

**பெண்**

''உன்ன நிக்கச் சொன்னா
என்ன நெட்டூரி என்ப
உன்ன போகச் சொன்னா பொல்லாப்பு
நானொருத்தன் பொண்டாட்டி
நானென்னத்தச் சொல்ல''

**அறுவடை**

களை எடுப்புப் பணிக்குப் பின்னால் அறுவடைப் பணி நடைபெறும். அறுவடைக்குத் தேவையான அரிவாளின் பயன்பாடு பற்றி,

''வெள்ளிப் புடி அருவா
வெடப்புள்ள கையருவா
சொல்லி அடிச்சருவா
சொலட்டுதடி நெல்லுக் கருத்த''.

என்ற பாடல் சுட்டுகிறது எனலாம்.

**வண்டிப் பாட்டு**

வேளாண்மைத் தொழில் விளைந்த பொருட்களை வீடு சேர்க்கும்போதும் விற்பனைக்காகச் சந்தைக்குக் கொண்டு செல்லும் போதும் பயிர்த்தொழிலுக்குத் தேவையான இடுபொருள்கள் கொண்டு வரச் சொல்லும் போதும் வண்டிப்பாட்டுப் பாடப்படுகின்றது. இப் பாடலில் காதலன், காதலி உரையாடல் போன்ற செய்திகள் இடம் பெறும்.

**பெண்**

''வண்டியில பஞ்சுப் பொதி
வலதுபுறம் சாட்டக் கம்பாம்
இன்நேரம் போர வண்டி
எதுல போயி தங்கிறது''

**ஆண்**

''தங்குறது தட்டப்பாற
தள்ளுறது தூத்துக்குடி
வாங்குறது வெள்ளி ரூபா
வருகிறது சாலப் பாத''

என்ற பாடல் விளைந்த பொருளை விற்பனைக்காகச் சந்தைக்குக் கொண்டு செல்லும் பயன்பாட்டைச் சுட்டுவதாக அமைந்துள்ளது.

**ஒப்பாரிப் பாடல்கள்**

நாட்டுப்புறத்திலே சாவுப்பாட்டு, இழவுப்பாட்டு, அழுகைப் பாட்டு, ஒப்பு என்று ஒப்பாரிப் பாடல்கள் வழங்கப்படுகின்றன.

ஒப்பு வைத்துப் பாடும்போது, வேளாண்மைச் செய்திகளை இணைத்துப் பாடுவது வழக்கமாக உள்ளது. தோட்ட வெள்ளாமை விளையும் முன்பாக, தோட்டக்காரன் இறந்து விடுகிறான். அவன் இழப்புப் பற்றி மனைவி பாடும் பாடலாகக் கீழ்வரும் பாடல் அமைந்துள்ளது.

''எட்டுக்காணி நெலம் வாங்கி
எள்ளுவெத வெதச்சீங்க
எள்ளுவெத மொளைக்கு முன்னே
எமலோகம் போனீங்களே!
பத்துக்காணி நெலம் வாங்கி
பருத்திவெத வெதச்சீங்க
பருத்திவெத மொளைக்கு முன்னே
பரலோகம் போனீங்களே!''

இவ்வகைப் பாடல்கள் பெண்களால் பாடப்படுவது எனினும் சில இடங்களில் ஆண்களும் பாடுவது உண்டு. இருப்பினும் இது பெண்களுக்கான பாட்டு வகையாக உள்ளது.

மனித வாழ்வில் இடம்பெறும் தாலாட்டுப் பாடல்கள் முதல் ஒப்பாரிப் பாடல்கள் வரை வேளாண்மைச் செய்திகள் இல்லாத பாடல்களே இல்லை என்பதைக் கண்டு உணர முடிகிறது.

**குறிப்புகள்**

1. சக்திவேல், சு., நாட்டுப்புற இயல் ஆய்வு, ப. 14.
2. சண்முக சுந்தரம். சு., தமிழில் நாட்டுப்புறப் பாடல்கள், ப. 9.

★ ஆய்வில் இடம்பெற்றுள்ள நாட்டுப்புறப் பாடல்கள் அனைத்தும் சிவகாசி வட்டாரத்தில் கள ஆய்வில் கிடைத்த பாடல்கள் ஆகும்.

# நாட்டுப்புறச் சிறார் வழக்காறுகள் 'திருவிழாவும் திருநாளும்'

**மூ. கருணாநிதி**

*புதுவைப் பல்கலைக்கழகம்*
*புதுச்சேரி - 605 014*

நாட்டார் வழக்காறுகள் அனைத்திற்கும், நிகழும் சூழல்கள் மிக முக்கியமானதாகும். சிறார் வழக்காறுகளுக்கும் இது பொருந்தும். சிறார் வழக்காறுகள் நிகழ்வதற்கு அடிப்படையாகவும், ஆதார மாகவும் இருக்கின்ற சிற்றூர்களில் நிகழும் சூழல்கள் பல. அவற்றில் திருவிழா, திருநாள் சூழலும் குறிப்பிடத்தக்கது. நடுநாட்டுப்[1] பகுதியில் உள்ள சிற்றூர்களில் நடைபெறும் திருநாள் திருவிழா சூழல்கள் குறித்தும் அப்பொழுது நிகழும் சிறார் வழக்காறுகள் குறித்தும் விளக்குகிறது இக்கட்டுரை.

**தேர்த்திருவிழா**

நடுநாட்டுப் பகுதியில் அய்யனார், பெருமாள், மாரியம்மன் முதலான தெய்வங்கள் உள்ளன. இந்தத் தெய்வங்களுக்குப் பங்குனி, சித்திரை, வைகாசி மாதங்களில் பொங்கல் வைத்துத் தேர்த்திருவிழா கொண்டாடப்படுகின்றது. தனிப்பட்டவர்களின் மகிழ்ச்சி, குடும்பத்தில் களிப்பு ஊரின் குதூகலம் இவைதான் திருவிழாக்களின் குறிக்கோள்கள் ஆகும். ஓர் ஊரில் தேர்த்திருவிழா நடைபெறுகிறது எனில், அதன் அருகில் உள்ள ஊர்களில் இருந்தும் சிறார்கள் தேர்[2] பார்க்கச் செல்வர்.

**பொருள்களை வாங்கி மகிழ்தல்**

தேர்த்திருவிழா என்றாலே சிறார்களுக்குக் கொண்டாட்டம். இவர்களுக்கு உறவினர்கள் காசு கொடுப்பர். சிறார்கள் பல பொருள்களை வாங்கி மகிழ்வர்.

தேர்த்திருவிழாவின் சிறப்பம்சம் அங்கு நிகழும் நிகழ்த்துக் கலைகளையும் விற்கப்படும் கைவினைப் பொருட்களையும் குறிப்பிடலாம். ஏனெனில், 'நாட்டார் கலைகளும் கைவினைப் பொருட்களும் நம் வாழ்வோடு இணைந்துவிட்டன. நம்முடைய இல்லங்களிலும், திருவிழாக்களிலும், சடங்குகளிலும் அழகுணர்ச்சி யுடன் சாதி மத பேதமின்றிக் காணப்படுகின்றன'[3]

தேர்த்திருவிழாவில் விற்கப்படும் ஊதுவா, கண்கண்ணாடி, விசில், கைக்கடிகாரம் முதலான சில பொருட்களைக் குழந்தைப் பருவத்துச் சிறார்கள் வாங்கி மகிழ்கின்றனர். முதிர்ந்த பருவத்துச் சிறுவர்கள், திருவிழாக்கடைகளில் பந்து, பம்பரம் இவற்றை வாங்கி விளையாடுகின்றனர். திருவிழாக்காலங்களில் பந்து கிடைக்கும் போது மட்டுமே பந்து விளையாட்டை முன்பு சிறுவர்கள் விளையாடினர். கிரிக்கெட் மோகம் சிற்றூர் சிறுவர்களையும் பிடித்துவிட்டது; ஆகவே, இவர்கள் பேரூரில் உள்ள கடைகளில் விற்கப்படும் பந்துகளை வாங்கி கிரிக்கெட் விளையாட்டை எந்தக் காலங்களிலும் விளையாடுகின்றனர். சிறுமிகள், திருவிழாவில் விளையாட்டுப் பொருட்களை அதிகம் வாங்க மாட்டார்கள். அவர்கள் அணிந்து கொள்ளும் பொருள்களான வளையல், பொட்டு, மணி முதலானவற்றையே விரும்பி வாங்குகின்றனர். 'திருவிழாக்கள் மதத்தின் கூறுகள் மட்டுமல்ல. கடைகளை வளர்க்கவும் வியாபாரத்தைப் பெருக்கவும்கூட திருவிழாக்கள் இன்றியமையாதன, அவை மக்களுடைய வாழ்வில் ஒன்றிவிட்டன',[4] *(சோமலே, 1981 118)* இது சிறார்களுடைய வாழ்விற்கும் வழக்காறுகளுக்கும் பொருந்தும்.

**விளையாடிமகிழ்தல்**

தேர்த்திருவிழாவிற்காகக் கோவில் முன் பெரிய பந்தல், அதற்குள் விசிப்பலகை முதலியன போடப்பட்டிருக்கும், சகட நிறுத்தப்பட்டிருக்கும். சிறார்கள், பந்தல் கால்களைப் பிடித்துச் சுற்றியும், பந்தலுக்குள் ஓடிப்பிடித்தும், விசி, சகடம் இவற்றில் ஏறிக் குதித்தும் விளையாடி மகிழ்வர். ஊரிலுள்ள அனைத்துக் குடும்பங்களும் ஆற்றோரங்களில் அமைந்திருக்கும் கோயில்களுக்குச் சென்று மாலையில் பொங்கல் வைத்துப் படைப்பர். அதுவரை சிறுவர்கள் ஆற்று மணலில் கபடி விளையாடுவர். சிறுமிகள் 'தும்பிப்பறத்தல்', 'ஆலா சூலா' முதலிய விளையாட்டுகளை விளையாடி மகிழ்வர். இளம் சிறுவர்கள் ஆற்று மணல் மேட்டி லிருந்து பள்ளத்தில் குதித்தும், மணலில் குட்டிக்கரணம் போட்டும் மகிழ்வர். ஊர் முழுவதும் உள்ள சிறார்கள் ஓரிடத்தில் கூடுவதற்கும் தேர்த்திருவிழா நல்ல வாய்ப்பாக அமைகிறது. திருவிழாவில் கூடியிருக்கும்போது, சிறார்கள் கேலி சொற்களைக் கூறியும் சிரித்தும் விளையாடி மகிழ்கின்றனர்.

**திருநாள்**

சிற்றூரில் அனைத்துக் குடும்பங்களும் அவரவர் வீட்டில் மகிழ்ச்சியோடு கொண்டாடுவது திருநாள் எனலாம். சிற்றூரில் இதனை 'நல்ல நாள் பெரியநாள்' என்றும் 'நோன்பு' என்றும்

அழைக்கின்றனர். அதாவது, பண்டிகை நாளைத் 'திருநாள்' என்று கூறலாம். இவையும் சிறார் விளையாட்டுகளில் பல்வேறு தாக்கங்களை ஏற்படுத்துகின்றன. சிற்றூர்களில் சித்ரா பௌர்ணமி, ஆடிப் பதினெட்டு, தீபாவளி, கார்த்திகை தீபம், தைப்பொங்கல் முதலியன குறிப்பிடத்தக்க திருநாள்களாகும்.

**திருநாளில் தேர்**

சில சிற்றூர்களில் சில திருநாளின் போது தேர் இழுத்துத் திருவிழா கொண்டாடப்படுகிறது. சில பண்டிகை நாளோடு சேர்ந்து தேர்த்திருவிழா அமைந்துவிடுகிறது. நடுநாட்டுப் பகுதிகளில் 'பங்குனி உத்திரம்', 'சித்ரா பௌர்ணமி' திருநாள்களின் பொழுது சில ஊர்களில் மட்டும் இவ்வாறு கொண்டாடப்படுகின்றது. தேர்த்திருவிழா கொண்டாடாத சிற்றூர்களில் சிறுவர்கள் சிறிய தேர் செய்து ஊரைச் சுற்றி வரும்பொழுது வீடுகள்தோறும் பெண்கள் 'சிறப்பு' கொடுத்து வழிபடுவர். சிறுவர்கள் ஆடிப் பதினெட்டு அன்றும் தேர் இழுத்து மகிழ்கின்றனர். இந்தத் திருநாளில் சிறுவர்கள் தேர் செய்வதில் முனைப்புடன் ஈடுபட்டிருப்பர். பிற விளையாட்டுகளில் அவ்வளவாக ஈடுபடமாட்டார்கள்.

**தீபாவளித் திருநாள்**

தீபாவளித் திருநாளில் சிறுவர்கள் வெடி வெடித்து மகிழ்வர். சிற்றூர்களில் ஒரு வீட்டில் வெடி வெடித்தால் பல சிறார்கள் வேடிக்கை பார்ப்பர். இந்தத் திருநாளில் சிறார்கள் வெடி வெடிப்பதிலும், பிறர் வெடிப்பதை வேடிக்கைப் பார்ப்பதிலும் பொழுது போக்குவர். பிற விளையாட்டுகளில் சிறார்கள் அவ்வளவாக ஈடுபடமாட்டார்கள்.

சிறுவர்கள் தாங்களாகவே சில பொருட்களைச் செய்து அதில் கல் பட்டாசுகளை வைத்து வெடிக்கின்றனர். தீபாவளி வருவதற்கு இரண்டு, மூன்று நாட்களுக்கு முன்பே இத்தகைய பொருட்களில் கல் பட்டாசுகளை வைத்து வெடித்து மகிழ்வர். பிற விளையாட்டு களில் ஈடுபடமாட்டார்கள். இந்தப் பொருட்களின் மதிப்பு தீபாவளி திருநாளோடு சரி. மற்ற நாட்களில் சிறுவர்கள் கண்டு கொள்ளவே மாட்டார்கள். இந்தப் பொருள்களின் வழி சிறுவர்களின் அறிவுத் திறன் வெளிப்படுகிறது.

**தீபத்திருநாள்**

கார்த்திகை தீபத் திருநாளில் சிறுவர்கள் 'காத்தீ' சுற்றி மகிழ்வர். சிறுவர்கள் தீபம் வருவதற்கு மூன்று நாட்களுக்கு முன்னதாகவே காத்தீ தயாரிப்பில் முனைப்புடன் ஈடுபடுவர். திருநாளான மூன்று நாட்களும் சுற்றி மகிழ்வர். இந்த நாட்களில்

சிறுவர்கள் பிற விளையாட்டில் ஆர்வம் காட்ட மாட்டார்கள். இன்று சிறுவர்களிடையே காத்தீ சுற்றும் வழக்கமும் மிகக் குறைந்துவிட்டது.

**தைத்திருநாள்**

தமிழர் திருநாளான தைப் பொங்கல் சிற்றூர்களில் மிகுந்த உற்சாகத்துடன் கொண்டாடப்படுகிறது. சிறுமிகள் இந்தத் திருநாள் கொண்டாடப்படும் நான்கு நாட்களும் வாசல் முழுவதும் வண்ண வண்ணக் கோலம் போட்டு மகிழ்வர். இதற்காகவே மார்கழி மாதம் முழுவதும் ஓய்வு நேரங்களில் சிறுமிகள் கோலம் போட்டு மகிழ்வர். பிற விளையாட்டுகளில் ஆர்வம் காட்ட மாட்டார்கள்.

பொங்கலின் இறுதி நாள் 'காணும் பொங்கலாகக் கொண்டாடப்படுகிறது. நடுநாட்டுப் பகுதியில் இந்த நாள் 'கரிநாள்' என்று அழைக்கப்படுகிறது. இந்த நாளில் சிறார்களின் மாமன் முறை யுள்ளவர்களிடம் 'பால்' பொங்குச்சா' என்று கேட்பர். அப்பொழுது மாமன்மார்கள் காசு கொடுப்பர். இவ்வாறு கிடைக்கும் காசுகளைச் சடல் சுற்றுவதற்கும் இளம் சிறார்கள் பயன்படுத்திக்கொள்வர். கரிநாளில் சடல் சுற்றுவதையே விரும்புவர். இந்த நாளில், சிறுவர்கள் மாமன் முறையுள்ளவர்களிடம் திருமணத்திற்குப் பெண்கேட்டு[5] மகிழ்வதுண்டு.

**திரைப்படத்தால் சூழல் மாறுதல்**

திருவிழாவின்போது முன்பு 'கரகாட்டம், தெருக்கூத்து' முதலிய நாட்டார் நிகழ்த்துக்கலைகள் நிகழ்த்தப்பட்டன. ஆனால், இன்று சிற்றூர்களில்கூட இந்தக் கலைகளுக்கு மாற்றாகத் திரைப் படங்களை வெண்திரை அல்லது சின்னத்திரையின் மூலமாகவே காட்டப்படுகின்றன. திரைப்படம் காட்டும் இடத்தில், சிறார்கள் மாலைப் பொழுதிலேயே குவிந்துவிடுகின்றனர். ஆகவே, திருவிழா சுழலில் விளையாடிய பல நாட்டார் விளையாட்டுகள் மறைந்து வருகின்றன. ஒவ்வொரு திருநாளிலும்கூடச் சிற்றூர்களில் திரைப் படங்கள் காட்டப்படுகின்றன. இதனால் திருவிழா, திருநாளின் சூழல்கள் மாறி வருகின்றன. இத்தகைய சூழல் மாற்றங்களினால், சிறார் வழக்காறுகளும் மறைந்து வருகின்றன. அவை முழுவதும் மறைவதற்குமுன் பதிவு செய்து ்பாதுகாக்கப்பட வேண்டியது நம் கடமையாகும்.

**குறிப்புகள்**

1. 'சோழ நாட்டிற்கும் பல்லவ நாட்டிற்கும் நடுவில் அமைந்துள்ள நாடே நடுநாடு' *(செந்துறைமுத்து, 1989, 35).*

   'முடிமன்னர் மூவரினும் வள்ளல் மலையமான் சிறந்து விளங்கினான். அவன்

இந்நாட்டை ஆண்டவன். அவனது விறலினை வியந்து வேந்தர் மூவரும் தங்கள் நாடுகளிலிருந்து ஒவ்வொரு பகுதி அன்பளிப்பாக அளித்தனர். இந்தப் பகுதிகளின் நடுவாக அமைந்தாலும் அதற்கு 'நடுநாடு' என்று பெயர் அமைந்தது. (கலைக்களஞ்சியம், தொகுதி - *8. 184*).

2. கம்மஞ்சோறு கருவாட்டுக் கொழம்பு
   திங்கவாடா மாமா தின்னதெல்லாம் போதும்
   காசு குட்ரா மாமா தேரு பாக்கப் போவம்
   வ. சின்னப்பிள்ளை, *12*, பெத்தாசமுத்திரம்.

3. *Folk arts and crafts are an integral part of our life. They are closely mingled with our everyday life in term of objects which we use in the home, in our festivals in our ceremonious and rituals and also as a means of self expression, on matter to what caste or creed we belong. (Jasleen Dhamija, 1970:1).*

4. சோமலே *1981*, ப. *118*

5. போகியும் போச்சு பொங்கலும் போச்சு
   பொண்ணு தாடா ஒக்கால ஓழி, சி. வேணு, *8*, ஊராங்காணி.

**துணைநூல்கள்**


1. செந்துறைமுத்து, நடுநாட்டுக் கோவில்கள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, *1989*, கலைக்களஞ்சியம், தொகுதி - *8, 184*, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, *1963*.
2. கலைக்களஞ்சியம், தொகுதி - *8*, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, *1963*.
3. *Jasleen Dhamija, Indian Folk arts and craftrs, National Book Trust, New Delhi, 1970.*
4. சோமலே, தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், நேஷனல் புக் டிரஸ்ட் ஆப் இந்தியா, *1981*.

# தெய்வங்களின் சடங்கியல் உணவுகள்

**யோ. தர்மராஜ்**
*ஸ்காட்கிறிஸ்தவக் கல்லூரி*
*நாகர்கோவில்*

வாழ்க்கையில் நலன்களைப் பெறச் சடங்குகள் மிகவும் அவசியமென்று மக்கள் கருதினர். மழை பெய்யவும், பயிர் வளரவும், கிழங்குகள் கிடைக்கவும், வேட்டை சிறப்பாக நடைபெறவும், புயல், பூகம்பம் போன்ற இயற்கை விபத்துக்கள் நேராமல் இருக்கவும், சடங்குகளை நடத்தி தெய்வங்களுக்கு உணவு களைப் படைத்தனர் (வானமாமலை, 91). நாட்டுப்புறமக்கள் இறைவனுக்கு உணவு படைப்பதை, படையல், பலி, சாமிக்குக் கொடுத்தல், பொங்காலை கொடை, கொடுதி, அன்னம் வழங்குதல், ஊட்டு என்றெல்லாம் வழங்குகின்றனர். தெய்வங்களுக்குப் படைக்கப் படும் சடங்கியல் உணவுகள் இடத்திற்கு இடம், சாதிக்குச்சாதி, சமயத்துக்குச் சமயம், வேளாண்மை, பருவ காலங்கள், சுற்றுச்சூழல் போன்றவற்றிற்கேற்ப வேறுபடுகின்றன. காணி இனத்தவர்கள் தெய்வங்களுக்குப் படைக்கும் சடங்கியலில் உணவுகள் இடம் பெறும் பாங்கினை இவ்வாய்வில் காண்போம்.

**வழிபாடும் உணவுப்படையலும்**

பழங்குடி இனத்தவர்களிடம் காணப்படும் இயற்கை வழி பாடுகள்தான் உலகின் தொன்மையான வழிபாடுகளாகும். இவர்கள் ஐம்பெரும் பூதங்களையும், முன்னோர்களையும் வழிபட்டு அவர் களுக்கு உணவு படைத்தனர். இயற்கை வழிபாட்டை அனிமிசம் (Animism) விலங்கு வழிபாட்டை டோட்மிசம் (Totemism) என்றும் முன்னோர் வழிபாட்டை (Ancesterworship) என்றும் மானிடவியலார் குறிப்பிடுகின்றனர். ''ஞாயிறு போற்றுதும், ஞாயிறு போற்றுதும்'' (சிலம். 1:11-15) என வரும் பாடலடிகள் இயற்கை வழிபாட்டை மெய்ப்பிக்கின்றன. அரசமர வணக்கம், வேப்பமர வணக்கம், பாம்பு வணக்கம் போன்றவற்றிற்குப் படையலிடுதலும், பால்வார்த்துக் கற்பூரம் ஏற்றுவதும் இன்றும் பெரும்பான்மையான மக்களிடம் காணப்படுகின்றன.

பெருந்தெய்வங்களுக்குத் தேங்காய், பழம், அவல், பொரி கடலை போன்ற சைவ உணவுப் பொருட்களைப் படைக்கின்றனர்.

சிறு தெய்வங்களுக்கு அசைவ உணவு வகைகளுடன் மாமிச உணவும், சுருட்டு, கஞ்சா, சாராயம், அரிஷ்டம் போன்ற போதைப் பொருட்களையும் படைத்து வழிபடுகின்றனர்.

''காளி மகமாயி எங்க ஆத்தா நித்தம்
கையெடுத்து கும்பிடுகிறோம் மாரியாத்தா
கள்ளு சாராயம் வச்சி கற்கண்டு கூடவச்சி
ஆடு வெட்டி கோழி வெட்டி நாங்க ஆடுவோம்
ஆத்தாளைப் பாட்டு பாடி நாங்க ஆடுவோம்''.

என்பதால் அறியலாம்.

**கொடுதிச் சடங்குகள்**

காணிக்காரப் பழங்குடி இனத்தவர்கள் தெய்வங்களுக்கு உணவு படைப்பதைக் கொடுதிச் சடங்குகள் என்றும் வரம் பெற்ற தெய்வங்களுக்கு உணவு படைப்பதை 'ஊட்டு' என்றும் குறிப்பிடுகின்றனர். இவர்கள் வேட்டை சிறப்பாக நடைபெறுவதற்குக் 'குருக்கன்மார் கொடுதி' நடத்துகின்றனர். விவசாயம் நல்லமுறையில் நடைபெறுவதற்குக் காட்டை அழித்தல் புதுக்காடு வெட்டுதல், விதை விதைத்தல், திவசம் வைத்தல், கதிரு எடுத்தல், அறுவடை செய்தல், சாவுக்குக் கொடுதல் போன்ற சடங்குகளை நிகழ்த்துகின்றனர். இவை தொடர்பாக நடைபெறுகின்ற முத்திக்கொடுதி, கச்சிக்கொடுதி, கார்த்திகைக் கொடுதி, மீனக் கொடுதி, மகர கொடுதி, அம்மங் கொடுதி போன்ற சடங்குகளில் சைவ அசைவ உணவு வகைகளைப் படைத்து வழிபடுகின்றனர்.

**காட்டை அழித்தல்**

பழங்குடி இனத்தவர்கள் வருடத்திற்கு ஒருமுறை காட்டை அழித்து அதை விளைநிலமாக மாற்றுகின்றனர். இத்தகைய சடங்கில் தெய்வங்களால் தங்களுக்குத் தீமை ஏற்படாமல் இருப்பதற்கு உணவு படைத்து வழிபடும் வழக்கம் அனைத்துப் பழங்குடி இனத்தவர்களிடமும் காணப்படுகின்றது. இச்சடங்கின் போது காணிக்காரர்கள் காட்டை அழிப்பதற்குப் பயன்படும் தோட்ட, கோடரி, அரிவாள் போன்ற ஆயுதங்களையும், பழம், சந்தனம், பூ, தேங்காய், கமுகம்பூ போன்றவைகளையும் படைப்பர்.

**மீனக் கொடுதி**

நிலத்தைச் சுத்தம் செய்தபின் விவசாயத் தொழிலில் ஈடுபடுகின்றவர்கள் விதைகளைத் தெய்வங்களுக்குப் படைத்து வேண்டுவதை மீனக் கொடுதி என்று குறிப்பிடுகின்றனர். மரவள்ளி, வாழைக்கன்று, கிழங்கு வகைகள், பயறு வகைகள் போன்றவற்றை ஒரு பக்கமும்,

நெல், தேங்காய், அவல், பழம், கமுகம்பூ போன்றவற்றை மற்றொரு பக்கமும் படைப்பர். இதனை,

''மீனப் பொய்து வந்தடுத்துக் கொள்ளினிது
ஏழாங்கால் வேலம்மாரு நின்ன பூமி நமஸ்கரிக்கினது
கொடுதி கொடுக்கணுமிண்ணு அவரு ஒரு மொழியா பறயினது
விதவிதமான வித்துக் குலம் வாரிக் கட்டிய செல்லினது
தெள்ளியும் தீயுமிட்டு இரக்கத்தானே செய்யினது''

என வரும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

**கச்சிக்கொடுதி**

தானியங்கள் முற்றியதும் அறுவடை செய்யுமுன் இறைவனுக்கு நன்றிப் படையல் செலுத்துகின்றனர். இதனை இவர்கள் கச்சிக் கொடுதி என்று வழங்குகின்றனர். இத்தகைய உணவுப்படையலை விளைநிலங்களில் நடத்துகின்றனர். ஒவ்வொரு குடியிருப்பில் உள்ளவர்களும் தனித்தனியாகத் தங்கள் குடியிருப்புகளில் உள்ள தெய்வங்களுக்கு உணவு படைக்கின்றனர். ஒவ்வொரு குடும்பத் தினரும் அவரவர் விளைநிலங்களிலிருந்து சேகரித்து வந்த முற்றிய தினை, சோழம், நெல், காணம், கிழங்குகள் போன்றவற்றைப் பக்குவம் செய்து படைக்கின்றனர். இதனை,

''கதிர்கள் சவுட்டிப் பாத்தினது
ஓடும் உலக்கையும் எடுத்து வறுத்திடிச்சினது
அவலுமா துருவிப் பாத்தி இட்டெண்ணிக் கொடுக்கினது''

எனவரும் பாடலடிகள் தெரிவிக்கின்றன.

**மகரக்கொடுதி**

அறுவடை முடிந்தபின் தெய்வங்களுக்கு நன்றிப் படையலாக உணவு படைக்கின்றனர். இதனை 'முக்திக் கொடுதி' என்பர். சில குடியிருப்புகளில் 'முக்திக் கொடுதி' நடைபெறுவதில்லை. பொதுவாக அனைத்துக் குடியிருப்புகளிலும் 'மகரக் கொடுதி' விழாவைச் சிறப்பாக நடத்துகின்றனர். மலைத் தெய்வங்கள் அனைத்திற்கும் உணவு வழங்கும் நிகழ்வாக இது காணப்படுகிறது. படையலுடன் உயிர்ப்பலியும் நடைபெறுகின்றது. ஆழப்பனையின் கள், சாராயம், கஞ்சா, சுருட்டு போன்ற போதைப் பொருட்களையும் சந்தனம், தெள்ளி (குந்திரிக்கம்) போன்றவற்றையும் படைத்து வைக்கின்றனர். இக்கொடுதியில் படைக்கப்படும் உணவுவகைகள் தெய்வத்திற்குத் தெய்வம் வேறுபடுகின்றன. சில தெய்வங்களுக்கு அவல், பழம் பொரி மட்டும் படைக்கப்படுகின்றன. இளநீரை மட்டும் உணவாகப் பெறும் தெய்வங்களும் உள்ளன. சைவ

உணவு வகைகளுக்குப் பதில் மாமிச உணவுகளையும் போதைப் பொருட்களையும் பெற்றுக் கொள்ளும் தெய்வங்களும் காணப் படுகின்றன. தெய்வங்களுக்கு உணவு படைப்பதிலும் இடவொழுங்கும் காணப்படுகிறது. முதன்மையான தெய்வத்திற்கு முதலிலும் துணைத் தெய்வத்திற்கு அடுத்தும் குடியிருப்பிலுள்ள அனைத்துத் தெய்வத்திற்கும் சேர்த்து இறுதியிலும் அதையடுத்துக் கன்னி தெய்வத்திற்கும் இவைகளுடன் ஒத்துப் போகாத பிற தெய்வங் களுக்குத் தனியாகவும் உணவுகள் படைக்கப்படுகின்றன.

**அம்மங்கொடுதி**

ஆரம்ப காலங்களில் இப்பழங்குடி இனத்தவர்களில் பெரும் பான்மையானவர்கள் அம்மை நோயினால் பாதிக்கப்பட்டு இறந்துள்ளனர். அம்மை நோய் ஏற்படாமல் இருப்பதற்கு ஆண்டு தோறும் 'அம்மங்கொடுதி' நடத்துகின்றனர். இச்சடங்கில் தெய்வங் களுக்குப் பச்சரிசி சோற்றுடன் சேவலைப் பலியாகப் படைக்கின்றனர். சில குடியிருப்பில் உள்ளவர்கள் நெத்தலிக் கருவாட்டுடன் முருங்கைக் காயையும் சேர்த்துத் தயாரித்த உணவைப் படைக்கின்றனர்.

**சாற்றுக் கொடுதி**

சாற்றுப் பாடலைத் தொடங்கும் முன்னும் பாடலை முடிக்கும் போதும் தெய்வங்களுக்கு உணவு படைக்கின்றனர். கார்த்திகை சாற்றுப்பாடலைத் தொடங்கும் முன் நெருப்பில் வேகவைத்த காய்கள், கிழங்குகள், தானியங்கள் ஆகியவற்றையும் சாற்றுப் பாடலின் முடிவில் பழம், இளநீர், வெற்றிலை, பாக்கு, சந்தனம் போன்றவற்றையும் படைக்கின்றனர், எல்லாத் தெய்வங்களுக்கும் பச்சைக் குந்திரிகத்தைப் புகைத்து வாசனை காட்டுகின்றனர். இறந்தவருக்கு நடைபெறும் சடங்கில் இளநீரும், நோயாளி களுக்குப் பாடப்படும் மாயங்கோயில் சாற்றுப்பாடலின் போது நிறை நாழி நெல்லும் இடம் பெறுகின்றன.

**ஊட்டுக்கொடுதி**

ஊட்டுக்கொடுதி என்பது வரம் பெற்ற தெய்வங்களுக்குப் படைக்கும் உணவாகும். வெட்டுபட்டு இறந்தவர்களின் ஆவிகள் கைலாயத்திற்குச் சென்று, வரம் பெற்று, தங்கள் குடும்பத்தையும், தொழில்களையும், கால்நடைகளையும், விவசாயத்தையும் பாதுகாப்பதாக நம்புகின்றனர். இத்தகைய தெய்வங்களுக்கு ஏழு வருடங்களுக்கு ஒரு முறை உணவு படைக்கின்றனர். சில குடி யிருப்புக்களில் மூன்று வருடங்களுக்கு ஒரு முறையும் இந்நிகழ்வு நடைபெறுகிறது. ஆட்டைப் பலி செலுத்திச் சோறுடன் உணவு படைக்கின்றனர். அத்துடன் சுருட்டு, கஞ்சா, சாராயம், ஆழப்

பனையின் கள், அவல், பழம், பொரி, இளநீர், பணியாரம் போன்ற வற்றைப் படைத்து வைக்கின்றனர். ஊட்டுக்கொடுதியின் போது நேர்த்திக்கடன்களை நிறைவேற்றுவதும் வழக்கமாகும்.

**குருக்கன்மார் கொடுதி**

வேட்டைச் சமுதாயத்தின் எச்சமாக இக்கொடுதிச் சடங்கு நடைபெற்று வருகிறது. வேட்டைத் தொழில் சிறப்பாக நடை பெறுவதற்கு ஒவ்வொரு குடியிருப்பில் உள்ளவர்களும் சேர்ந்து 'குருக்கன்மார் கொடுதி' நடத்துகின்றனர். விலங்குகளிடமிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ளவும், வேட்டையின் போது ஏராளமான விலங்குகள் கிடைக்கவும் தெய்வங்களுக்கு உணவு படைக்கின்றனர். இத்தகைய வழிபாட்டுச் சடங்குகளில் பச்சையரிசி, சாராயம், கஞ்சா, சேவல் கோழியின் இரத்தம், கோழி முட்டை ஆகியன தவறாது இடம் பெறுதல் உண்டு.

**முடிவுரை**

பழங்குடி மக்கள் இறந்த முன்னோர்களைத் தெய்வமாக வழிபடுகின்றனர். அத்தெய்வங்களுக்குப் பல்வேறு விழாக்களை நடத்துகின்றனர். இறந்தவர்கள் உயிரோடிருக்கும் நாட்களில் எவற்றை விரும்பி உண்டார்களோ, அத்தகைய உணவுப் பண்டங் களைச் சடங்கியல் நிகழ்வுகளில் தெய்வங்களுக்குப் படைத்து வைக்கின்றனர். தெய்வங்களுக்கு உணவு படைப்பில் சைவ, அசைவ, வேக வைக்காத, வேக வைத்த உணவுகள் என்று பல்வேறு வழக்கங்கள் காணப்படுகின்றன. இவை மேலும் ஆய்வுக்குரியது.

# சௌடாம்பிகை அம்மன் : வழிபாட்டு மரபுகளும் தனித்துவமும்

**க. முருகேசன்**

*இராமலிங்க சௌடாம்பிகை கல்லூரி*
*கோயமுத்தூர் - 641 109*

''குலதேவதையாய்க் குணநாயகியாய்க் குவலயத்தே
நிலதேவதையாய் நெறியீபவளாய் நிகழ்சமயம்
சிலதேவதைபோல் சிதறாதவளாம் சிகைச்சவுட
நலதேவதையாய் நலமே புரிவாள் எம்நாயகியே''

என்று கோவைக்கிழார் போற்றிப் பாடும் சௌடாம்பிகை அம்மன் தாய்த்தெய்வமாகவும், தேவாங்க சமூகத்தினருக்குக் குலதெய்வ மாகவும் விளங்குகின்றாள். பழந்தமிழர் தங்களுடைய தாய்த்தெய்வ மாகக் கொற்றவையை வழிபட்டதையும், அத்தெய்வத்தின் உறை விடமாகப் பாலைநிலம் திகழ்ந்ததையும் நானிலத்திலும் அந்தத் தாய்த் தெய்வம் வணங்கப்பெற்றதையும் இலக்கியங்கள் காட்டுகின்றன. அவ்வகையில் தேவாங்க சமூக மக்கள் தங்களின் குலதெய்வமாகப் போற்றி வணங்கும் தாய்த்தெய்வமாகிய ஸ்ரீஇராமலிங்க சௌடாம்பிகை அம்மனின் வழிபாட்டு மரபுகளையும், மற்ற பெண் தெய்வ வழிபாடுகளில் இல்லாத சிறப்பு மிக்க தனித்துவத்தையும் வெளிப்படுத்துவது இக்கட்டுரையின் நோக்கமாக அமைகின்றது.

**தேவாங்கர் குலமும் தெய்வ வழிபாடும்**

உலகத்தைப் படைத்த இறைவன் உலக மக்களுக்கு ஆடை நெய்து தருவதற்காகத் தேவலமுனிவரைப் படைத்தார். சிவபெருமானின் ஆணைப்படி தேவலமுனிவர் திருமாலைக் கண்டு வணங்கி அவரது உந்திக்கமல நூலைப் பெற்றுக் கொண்டு மண்ணுலகை வந்தடைந்தார். மண்ணுலகில் ஆடை நெய்தளிக்கும் தன் பணிக்கு இடையூறாக நின்ற அரக்கர்களை அழித்துத் தன்னைக் காக்குமாறு தேவலமுனிவர் பராசக்தியிடம் வேண்ட, அன்னையும் சிம்மவாகனத்தின் மீது எழுந்தருளினாள். சிங்கம் அம்பிகையின் வாகனமாக இருப்பதைச் சிற்பங்களும் ஆகமங்களும் தேவாரமும் காட்டுகின்றன. 'பாய்கலைப் பாவை', 'கலையமர் செல்வி', 'கலைப்பரியூர்தி' ஆகிய சிலப்பதிகாரச் சொற்கள் இதனை உறுதிப்படுத்துகின்றன. அரக்கர்களுக்கும் அன்னை பராசக்திக்கும் இடையே நடைபெற்ற இப்போரில் இறந்த அரக்கர்கள்

சிந்தும் ஒவ்வொரு துளி இரத்தத்திலிருந்தும் புதிதுபுதிதாக அரக்கர்கள் முளைத்தனர். அவ்வரக்கர்களின் இரத்தத்துளிகளைச் சிங்கம் குடித்தது. அரக்கர்கள் தலைவர்களான ஐந்து அரக்கர்களையும் தேவி சங்கரித்தாள். அவர்கள் ஐந்து பேருடைய இரத்தமும் ஐந்து வர்ணங்களாகக் காணப்பட்டன. தேவலன் தான் கொண்டு வந்த நூலை அதில் நனைத்து ஐந்து வண்ண நூல்களை உண்டாக்கிக் கொண்டான். இறுதியில் அரக்கர்களை அழித்த தேவியின் கிரீடம் அதில் பதித்திருந்த சூடாமணியின் பேரொளியால் பிரகாசமாக வீசிய பெருமையால் அம்பிகைக்குச் சூடாமணி, சூடாம்பிகை, சௌடாம்பிகை, சௌடேஸ்வரி, சரகாம்பரி ஆகிய திருநாமங்கள் வழங்கப்பட்டன. பராசக்தியின் ஆணையின்படி ஆடை நெய்யும் தொழிலை மேற்கொண்டு தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் பலவகையான ஆடைகளைத் தேவலமுனிவர் நெய்தளித்தார். இச்செய்தியை,

> ''ஆகையால் இனி எஞ்ஞான்றும் அனைய நால்வரின் அன்றெல்லாம்
> ஓகையால் எனைத் தியானித்து உறைதிநீ உறைந்தாயாகில்
> வாகை சேர் திறலும் சீரும் வளர் தருகுலமும் வாழ்வும்
> சோகமாறிய பேர் இன்பத் துணிவு முண்டாகும் அன்றே''

என்னும் தேவாங்கப் புராண அடிகள் தெளிவாக்குகின்றன. தேவர்களின் அங்கங்களை அலங்கரிப்பதற்கு ஆடைகள் நெய்து வழங்கியதால், 'தேவாங்கன்' என்றும், சிவபெருமானின் நெற்றிக் கண்ணிலிருந்து தோன்றியதால் 'தேவாங்கன்' என்றும் அழைக்கப்பட்டனர்.

தேவலமுனிவரின் வம்சாவழியாகத் தேவதாசமைய்யன் வேண்டுதலுக்கு இறைவன் செவிசாய்த்து அவன் எடுப்பித்துள்ள கோயிலுக்கு அன்னை சௌடாம்பிகை எழுந்தருளச் செய்வதற்கு ஊருக்கு வெளியே ஓர் இடத்தைப் புனிதப்படுத்தினால் அங்கு சௌடாம்பிகை தோன்றுவாள் என்றும், பின்னர் அம்மனைக் கோயிலுக்கு அழைத்துச் செல்லுமாறும் உத்தரவிட்டார். தேவ தாசமைய்யன் 'ஆமோத நகரம்' என்னுமிடத்தில் ஒரு கோயிலைக் கட்டி முடித்து, ஊருக்கு வெளியே ஓரிடத்தைப் புனிதப்படுத்தி அம்மன் எழுந்தருள வேண்டும் என்று வேண்ட, அம்மன் சௌடாம்பிகையும் அருட்காட்சியளித்தாள். தேவாங்க குலமக்கள் அனைவரையும் முன்னே செல்லுமாறும் தான் அவர்களைப் பின் தொடர்ந்து வருவதாகவும், முன்னே செல்பவர்கள் எக்காரணத்தைக் கொண்டும் திரும்பிப் பார்க்கலாகாது என்றும், அப்படித் திரும்பிப் பார்த்துவிட்டால் தான் அவ்விடத்திலேயே நிலைகொண்டு விடுவ தாகவும் தெரிவித்தாள். அதனை ஏற்றுக் கொண்ட மக்கள் முன்செல்ல அன்னை சௌடாம்பிகை பின்தொடர்ந்தாள். அம்மனின் பாதச் சிலம்பின் ஒலிகேட்டுக் கொண்டே சென்ற மக்கள் அம்மன் தங்களைப்

பின்தொடர்ந்து வருவதாக எண்ணி அவர்கள் முன்னே சென்று கொண்டிருந்தனர். செல்லும் வழியில் இருந்த ஆற்றங்கரையில் நடந்து செல்லும்போது ஆற்றுமணலில் அம்மனின் பாதங்கள் பதிந்ததால் சிலம்பொலி கேட்கவில்லை. அம்மன் தங்களைத் தொடர்ந்து வரவில்லையோ என்று ஐயுற்ற மக்கள் திரும்பிப் பார்க்க, அம்மன் அங்கேயே ஆவாரஞ்செடிக்கு அருகில் நிலைகொண்டு விடுகின்றாள். தேவாங்க குலமக்கள் வேண்டி மன்றாடியும் அம்மன் அங்கிருந்து வரவில்லை. அம்மன் நிலைகொண்ட இடம் 'நந்தவரம்' என்னும் ஊராகும். ''நந்தவரமந்து நெலகொன்ன நைகதம்பா'' என்னும் பாடல்வரி இதற்குச் சான்றாக அமைகின்றது.

**வருந்தியழைத்தல் : கத்திபோடுதல் - தனித்துவம்**

தேவாங்க குலமக்கள் வழிபாட்டில் ஆவாரஞ்செடிக்கு அருகில் திருமஞ்சனக்குடத்தில் பாகு என்னும் உடையவாளையும் வைத்துக் காப்புக்கட்டி அம்மனை அழைக்கின்றனர். பாகு உள்ள திருமஞ்சனக் குடத்தை ஒரே நாளில் கோயிலுக்குக் கொண்டு செல்ல வேண்டும் என்பது அம்மனின் ஆணை. ''நான் உங்களது முன்னோனும், குலமுதல்வனுமாகிய தேவலனுக்கு அளித்த கத்தி, பகைவர் மீது பிரயோகித்தால் அவர்களை அழிக்கும் எனவும், தனக்குத்தானே பிரயோகித்துக் கொண்டால் எவ்வித ஊறும் விளைவிக்காது எனவும், திருமஞ்சனக்குடத்தை எடுத்துக் கொண்டு கோயிலுக்குச் செல்கையில் உங்கள் கைகளில் உள்ள கத்திகளை உங்கள் மீதே பிரயோகிப்பீர்களேயானால் அதனால் உங்களுக்கு யாதொரு கெடுதலும் வராது. அப்போது நான் உடனிருந்து உங்கள் எல்லோரையும் காக்கிறேன்'' என்று அருள் வழங்கினாள். இதன்படி தேவாங்ககுல மக்கள் நல்லநாளில் குறிப்பிட்ட இடத்திலிருந்து முறைப்படி திருமஞ்சனக்குடத்தில் பாகு வைத்து, ஆவாரஞ்செடிக்கருகில் காப்புக் கட்டி கலசம் அலங்கரித்து வைத்துத் துதித்து அம்மனைக் கோயிலுக்கு அழைத்து வருவதற்காக அதற்கான அம்மன் புகழ் மாலை மற்றும் தாண்டகப் பாடல்களைப் பாடி அழைக்கின்றனர். அச்சமயத்தில் இவர்கள் தங்களிடமிருந்த கத்திகளால் மார்பிலும் தோளிலும் அலகு போட்டுக் கொள்கின்றனர். அவர்களது உடலி லிருந்து ரத்தம் வழிந்ததே தவிர அவர்களுக்குச் சிறிதும் துன்பம் ஏற்படவில்லை. அத்துன்பத்தையெல்லாம் அம்மனே தாங்கிக் கொண்டாள். தேவாங்க மக்களின் பக்தியால் உள்ளம் குளிர்ந்த அம்மன் அளவற்ற மகிழ்ச்சி அடைந்து கோயிலுக்கு எழுந்தருளினாள். அம்மனை 'ஸ்ரீ சௌடாம்பிகை' என்னும் பெயரில் கோயிலில் பிரதிட்டை செய்தனர். சிவபெருமானும் தான் கொடுத்த வரத்தின்படி அங்கு எழுந்தருளினார். பெருமானை 'ஸ்ரீ இராமலிங்கம்' என்ற

பெயரில் எழுந்தருளச் செய்வித்தனர். அன்று முதல் அம்மனுக்கு 'ஸ்ரீ இராமலிங்க சௌடாம்பிகை' என்னும் திருப்பெயர் வழங்கப் பட்டு வருகின்றது.

**வழிபாட்டில் தனித்தன்மை**

வருந்தி அழைத்தால் வாராதிருப்பதில்லை இறை என்பர். மாணிக்கவாசகர் இறைவன் மீது கொண்ட பக்தியைப் போலக் காதலாகிக் கசிந்துருகிக் கண்ணீர் மல்கி வேண்டும்போது கட்டாயம் இறையருள் கிட்டும் என்பது அனைத்து மக்களாலும் உணரப் பட்டுள்ள நம்பிக்கையாகும். தாங்கள் கட்டியுள்ள கோயிலில் சௌடாம்பிகை அம்மனை எழுந்தருளச் செய்வதற்காகத் தங்களை வருத்திக் கொண்டு, இரத்தம் சிந்தி வழிபாடு செய்கின்றனர். தேவாங்ககுல மக்களிடையே வழங்கிவரும் இவ்வகை வழிபாட்டு முறையானது வேறு சமூக மக்களின் குலதெய்வ வழிபாடுகளிலும் காணமுடியாத சிறப்பு வாய்ந்ததாகக் கருதப்படுகின்றது. கத்தி போடும் போது வழிகின்ற இரத்தம் அம்மனுக்குப் படைக்கப்படு வதாகவும், அதனால் தோன்றும் துன்பங்களுக்கு அன்னையே மருந்தாக விளங்குவதாகவும் நம்புகின்றனர். கத்திபோடும் வேளையில் தாண்டகம் என்னும் பாடல்களைப் பாடி அம்மனின் அவதாரச் சிறப்புக்களையும், அம்மனின் அருட்காட்சித் தோற்றத்தையும் புகழ்ந்துரைத்து அம்மனை மகிழச் செய்து கோயிலுக்கு எழுந்தருளச் செய்கின்றனர்.

*''அன்னி வருஸக அமரக ஆயனிபுடு அம்பவச் சேடி*
*வீதிலோ அலங்கரிஞ்சி*
*உன்ன தம்புக உன்னதி ஓர்பு தோட கன்ன தல்லினி பிலுவ*
*காவலசினட்டி*
*பூஜத்ரவ்யம்பு லெத்துகா பூரி பாங்கா அன்னி*
*வாத்தியமுலும் ரோயகா அன்னடமுகா*
*தீர்த்த கெட்டகு அந்தரு தரலிவச்சி ஸ்நானமுலு சேஸி சிவ*
*பூஜ சந்த்ய தீர்ச்சி*
*காஸியுன்னாமுநீ பாத ஸேவ கொரகு நீது ரூபம்பு*
*சூபிஞ்சவலெனம்ம வனவிஹாரி*
*நந்தவர மந்து லெககொன்ன நைகதாம்பா ரச சற்குண*
*நிகிலாம்பா மம்மேலு*
*ஸ்ரீ வீர சௌடாமாம்பா''*

என்ற தெலுங்கு மொழியில் அமைந்த தாண்டகப் பாடலைப் பாடுகின்றனர். தேவாங்க குலமக்களில் ஆண்கள் மட்டுமே இவ் வழிபாட்டை நிகழ்த்துகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

தேவாங்க குலமக்களுக்குக் குலதெய்வமாகத் திகழும் சௌடாம்பிகை அம்மன் கோயில் கோவையில் ராஜவீதி, பூமார்க்கெட், ஈச்சனாரி, பாப்பநாயக்கன்புதூர் ஆகிய இடங்களிலும், ஈரோடு, கோபி, நாமக்கல் ஆகிய மாவட்டங்களிலும், ஆந்திரம், கர்நாடகம், கேரளம் போன்ற மாநிலங்களிலும் கோயில் கொண்டு அருள்பாலிக் கின்றாள். பொதுவாகத் தேவாங்க குலமக்கள் மிகுதியாக வாழும் அனைத்து ஊர்களிலும் சௌடாம்பிகை அம்மன் திருக்கோயில் கட்டப்பட்டு வழிபாடு நிகழ்த்தப் பெறுகின்றது.

**திருவிழாக்கள்**

சௌடாம்பிகை அம்மனுக்கு மாதாந்திர விழாக்களும், 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை நடைபெறும் 'அம்மன் பண்டிகை' என்னும் பெருவிழாவும் கொண்டாடப்படுகின்றன. சித்திரை மாதத்தில் அப்பர் குருபூசை விழாவும், வைகாசி மாதத்தில் திருஞானசம்பந்தர் குருபூசை விழாவும், ஆனி மாதத்தில் மாணிக்கவாசகர் குருபூசை விழாவும், ஆடி மாதத்தில் சுந்தரர் குருபூசை விழாவும், ஆவணி மாதத்தில் திருவோணம் பூணூல் சடங்கு விழாவும், ஆடிமாதத்தில் ஊஞ்சல் உற்சவமும், புரட்டாசி மாதத்தில் நவராத்திரி விழாவும், ஐப்பசி மாதத்தில் அன்னாபிடேக விழாவும், கார்த்திகை மாதத்தில் தீப வழிபாடும், மார்கழி மாதத்தில் ஆருத்ரா தரிசன விழாவும், தை மாதத்தில் பூச உட்சவ விழாவும், மாசி மாதத்தில் சிவராத்திரி விழாவும், பங்குனி மாதத்தில் பங்குனி உத்திர விழாவும் மிகச் சிறப்பாக நிகழ்த்தப்பட்டு வருகின்றன. இவை மட்டுமன்றிப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை அம்மன் பண்டிகை என்னும் பெயரில் பெருவிழாவானது கொண்டாடப்படுகின்றது. இப்பெரும் பண்டிகையில் காப்புக்கட்டுதல், அம்மன் அழைத்தல், கத்திபோடுதல், மகாஜோதி ஊர்வலம், திருக்கல்யாணம், ரதோர்ச்சவம், பரிவேட்டை, தெப்போற்சவம், கொடியிறக்கம், மகாதீபாராதனை, அம்மன் திருவீதியுலா வருதல், நீராட்டுச்செய்தல், ஆறுநாட்களும் 18 செட்டிமை குல இல்லங்களுக்கு இறைவன் இறைவியுடன் எழுந்தருளுதல் ஆகிய வழிபாடுகள் செவ்வனே நடைபெற்று வருகின்றன.

"பூமலி வனசப் பொகுட்டுறை தேவும் புரந்தரன் முதல்புங் கவரும்
தேமலி மலர்கொண் டருச்சனை புரிநின் சேவடி
யடியனேற் கருள்வாய்
மாமலி மழையோ மணிமலி கடலோ வார்முழ
வொலிகொலோ வென்ன
நாமலி மறையின் றுதிமலி கோவை நகரில்வாழ் சவுட நாயகியே".

# சிறுதெய்வம் - தாய்த் தெய்வ வழிபாடு

***ச. குருஞானாம்பிகா***

*ஸ்ரீ காளீஸ்வரி கல்லூரி*
*சிவகாசி*

நாடோடியாக வாழ்ந்த மனித இனம் நாகரிகம் அடைந்த பின்னர் கூட்டமாக வாழத் தொடங்கியது. ஒவ்வொரு கூட்டமும் தங்கி வாழ்ந்த இடங்கள் தனித்தனி ஊர்களாக அமைந்தன. அம்மக்கள் தங்களுக்கென்று சில வரையறைகளை வகுத்துக் கொண்டனர். கோயில் இல்லா ஊரில் குடியிருக்கலாகாது என்பதற்கு ஏற்பத் தாங்கள் வழிபடும் தெய்வத்திற்காகக் கோவில் கட்டி வழிபடத் தொடங்கினர். தெய்வ வழிபாட்டில் தாய்த் தெய்வ வழிபாடு தொன்மையானது. பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னர் மக்கள் பெண் தெய்வத்தை வணங்கி வந்தனர் என்பதை மொகஞ்சதாரோ, ஹரப்பா போன்ற இடங்களில் கிடைத்த அகழ்வாராய்ச்சி சான்றுகள் உறுதிப்படுத்துகின்றன. இன்றைய நிலையிலும் பெண் தெய்வம் வழிபடத் தொடங்கி சிற்றூர் முதல் பேரூர் வரை சக்தி வழிபாடாகி இருக்கிறது. தமிழ் இலக்கண இலக்கியங்களில் வரலாற்றில் தாய்த் தெய்வ வழிபாடு பெற்றுள்ள இடம் ஆய்வுப் பொருளாக எடுத்தாளப்படுகிறது.

**தெய்வ வழிபாட்டிற்கான அடிப்படை**

தெய்வங்கள் வழிபடுவோரின் வாழ்க்கை முறையில் இருந்து எழுகின்றன. ஒரு சமுதாயம் அதன் உணவு, உடை, உறையுள் ஆகிய புறவாழ்க்கை தேவைகளை எந்த முறையில் பெறுகிறதோ அதற்காக எத்தகைய சமுதாய அமைப்பினை உருவாக்கிக் கொண்டுள்ளதோ அந்த அமைப்பின் அடிப்படையின் மீது தெய்வ நம்பிக்கை எழுகின்றது.

பழங்காலத்தில் மக்கள் தங்களுக்குரிய உணவுத் தேவைக்காக விலங்குகளை வேட்டையாடினர். கல்லெறிந்தும், கவண் மூலம் கல்லைக் குறிபார்த்து எறிந்தும், கல், ஈட்டி, கல் கோடரிகளைப் பயன்படுத்தியும், விலங்குகளைக் கொன்றனர். மக்களும், மந்திரம், மந்திரச் சடங்குகள், வன தேவதைகள், பேய்கள் ஆகியவற்றை அடக்கக் கூடிய வலிமையுடைய பல தெய்வங்களை நம்பினர். தமது வாழ்க்கைக்கு உதவும் மழை, வெயில், காற்று, நீர், தீ ஆகிய

இயற்கையின் வடிவங்கள் அனைத்தையும் வழிபாட்டிற்கு உரியவை ஆக்கினர். மேலும் தீமையை விளைவிக்கும் இயற்கை சக்திகளையும் வழிபட்டனர். இதற்கு அச்சம் அடிப்படையானது. அச்சத்தின் காரணமாகப் பலி கொடுத்து அவற்றைத் திருப்திபடுத்தவும் முயன்றனர்.

**வழிபாட்டுத் தேவை**

புராதன விவசாயக் காலத்தில் மக்களின் புற உலக வாழ்க்கையில் பூமியே முக்கிய பங்கு வகிக்கிறது. தெய்வங்களும், மந்திரச் சடங்கு களும் பூமியின் செழிப்புத் திறனை மிகுதியாகக் கற்பனை செய்து உருவாக்கப்பட்டன. செழிப்புத் திறனை வளர்க்கும் விதமானது பெண்களுக்கே உண்டு என்ற நம்பிக்கை தோன்றியது. பெண்கள் தான் முதலில் வேட்டைத் தொழிலில் இருந்து விவசாயத் தொழிலில் கவனம் செலுத்த தொடங்கினர். பூமியின் விதையைச் செடியாக வளர்க்கும் திறனுக்கும், தாயின் குழந்தையைப் பெறும் சக்திக்கும் தொடர்பு உண்டு என்று புராதன விவசாயத்தில் நம்பிக்கை கொண்ட மக்கள் ஈடுபடத் தொடங்கினர். எனவே பூமியை உயிருள்ள, உயிரில்லாத அனைத்திற்கும் தாய் என்று கருதினர்.

**தாய்த் தெய்வ வழிபாடு - தோற்றம்**

தத்துவச் சிந்தனை வளர்ச்சி பெற்ற காலத்தில் பூமி, பிற உலகங்கள் எல்லாம் ஒரே ஜகன்மாதாவிலிருந்து தோன்றியது என நினைத்தனர். இவ்வாறு தாய்த் தெய்வம் மக்கள் உள்ளத்தில் தோற்றம் எடுத்தது. "செழிப்புத் தெய்வங்களும் தோன்றின" என்று நுடார்பரச் கூறுகிறார். தெய்வங்களில் பெண் தெய்வங்கள் உயர்ந்த ஸ்தானத்தில் வைத்து வழிபடப்பட்டன. பெண்ணுக்குச் சமுதாய வாழ்வில் எவ்வித இடம் இருக்கிறதோ அதன் அடிப்படை யிலேயே பெண் தெய்வங்களுக்கும், மதிப்பு அல்லது அவமதிப்பு ஏற்படக் கூடும். இனக்குழு வாழ்க்கையில் குலத்தின் பெண்ணே தாயாகவும், தலைவியாகவும் இருக்கிறாள். இந்நிலையில் சமுதாயத்தின் தாய்த் தெய்வம் எல்லாத் தெய்வங்களுக்கும் மேலாகத் தலைமையிடம் பெறுகிறது. ஆண் தெய்வங்களைவிடப் பெண் தெய்வங்கள் மக்கள் மனதில் அதிக இடம் வகிக்கின்றன.

வேட்டை காலத்தில் சொத்து பெண் வழியில் கிடைக்கப் பெற்றதால் பெண்களுக்குச் சமுதாயத்தில் உயர்ந்த மதிப்பு இருந்தது. வேட்டையாடுகின்ற காலத்திலேயே இனக்குழுவினில் வேலை பிரிவினை ஏற்பட்டது. ஆண்கள் விவசாயத்தில் ஈடுபடத் தொடங்கினர். வேட்டை மூலமாக உணவைவிடப் பயன் தருகின்ற விளைச்சலைப் பெண்கள் விளைவித்தனர். எனவேதான் உலகம்

முழுவதிலும் செழிப்பைக் குறிக்கும் தெய்வங்கள் பெண் தெய்வமாகக் கருதப்படுகின்றன.

விவசாயம் செய்யும்போது சூலாயுதத்தை வேட்டைக் கருவியாகவும், விவசாயக் கருவியாகவும் பயன்படுத்தினர். இக்கருவியே இன்றும் உழவர் மக்களிடையே தெய்வத்தைக் குறிக்கும் கருவியாய் வைத்து வணங்கப்படுகிறது. கிராமப்புறங்களிலே பல்வேறு சிறுதெய்வ வழிபாட்டு முறைகளிலும் சூலாயுதம் வைத்தே வணங்கப்படுகிறது. இதுவே முற்காலத்தில் பெண் தெய்வங்களின் போர் ஆயுதமாகவும் பயன்பட்டது. ''சூலி'' என்ற சொல் சூலாயுதத்தை உடையவர் என்றும், சூல் கொண்டவர் என்றும் பொருள்படும். உலகையே சூல் கொண்டு பெற்ற தெய்வம் என்று தாய்த் தெய்வமானது கருதப்படுகிறது.

**இலக்கண இலக்கியங்களில் தாய்த் தெய்வ வழிபாடு**

பழம்பெரும் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தில் தாய்த் தெய்வ வழிபாடு இருந்தது என்பதை,

''மறங்கடைக் கூட்டிய குடிநிலை சிறந்த
கொற்றவை நிலையும் அகத்திணைப்புறனே''

என்ற நூற்பா விளக்குகிறது.

தொல்காப்பியர் காலத்தில் ''கொற்றவை'' என்ற தாய் தெய்வம் வணங்கப்பட்டது. மக்கள் கொற்றவையைத் தம் வெற்றி தெய்வமாகக் கருதி வழிபட்டனர்.

சங்க இலக்கியங்கள் தாய்த் தெய்வத்தைக் காட்டில் உறைபவளாகச் சித்திரிக்கின்றன. ''மாயோன்மேய காடுறை உலகமும்'' என்று தொல்காப்பியர் கூறினாலும் மாயோனுக்கு முன்னுரை காடுறை கடவுளாகத் தாய்த் தெய்வம் வழிபடப்பட்டிருக்கிறது.

கொற்றவை பரம்பொருளாகிய சிவபெருமானின் ஒரு கூறாக விளங்கும் செய்தியும் சங்க இலக்கியங்களில் இடம் பெறுகிறது. உமையம்மை சிவபெருமானைப் போன்று நெற்றிக் கண் உடையவளாகவும், சங்க இலக்கிய நூல்களில் காட்டப்படுகிறாள்.

சூரர் மகளிர் என்ற அச்சமூட்டும் பெண் தெய்வங்கள், வானர மகளிர் என்ற வானத்தில் உலவும் பெண் தெய்வங்கள் ஆகியவற்றைத் தமிழர் வழிபட்டனர் என்பதற்குச் சங்க இலக்கியங்கள் சான்றாகின்றன.

தந்தைவழிச் சமுதாயம் வளர்ந்த காலத்தில் திருமூலர், அம்மையே சிவனுக்குத் தாயாக, தாரமாக, மகளாக இருப்பதாகக் கூறுகிறார்.

### வரலாற்றில் தாய்த்தெய்வ வழிபாடு

வரலாறு அனைத்து நாடுகளிலும் தாய்த் தெய்வ வழிபாடு இருப்பதைச் சுட்டிக் காட்டுகிறது. பாபிலோனியாவில் தியாமதி என்ற தாய்த் தெய்வமும், சுமேரியாவில் ''யூரினோம்'' என்ற தாய்த் தெய்வமும், எகிப்தில் ''ஐஸில்'' என்ற தாய்த் தெய்வமும், ரோம் நாட்டில் ''வீனஸ்'' என்ற தாய்த் தெய்வமும், கிரேக்கத்தில் ''செபீல்'' என்ற தாய்த் தெய்வமும் வழிபடப் பட்டதாகக் கூறப்படுகிறது.

தமிழகத்தில் கி.பி.11-ம் நூற்றாண்டில்தான் அம்மனுக்கென்று தனிக்கோயில் நிறுவப்பட்டதென்று அறிய முடிகிறது. சோழர் காலத்தில் தாய்த் தெய்வங்களுக்குப் பலிகொடுத்து வழிபட்ட பழக்கம் இருந்தமையைச் சோழன் பூர்வ பட்டயம் குறிப்பிடுகிறது.

### நடைமுறையில் தாய்த்தெய்வ வழிபாடு

இந்து சமயத்தினர் வாழ்வில் கோயில் என்ற இறைவன் உறைகின்ற இடமாகக் கருதப்படுகிறது. சமய வாழ்க்கையில் கோயிலும், தெய்வமும் இல்லாத வாழ்வை இந்து சமய மக்கள் எண்ணிப் பார்க்க இயலாது. இறைவனை ஆண் வடிவிலும், பெண் வடிவிலும் வழிபட்டாலும் சிறுதெய்வ வழிபாட்டைப் பொருத்தவரை பெண் தெய்வங்களுக்கே அதிக முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. தமிழ்நாட்டில் மிகுதியான சிறுதெய்வ கோயில்களில் பெண் தெய்வங்கள் காளி, மாரி, முத்துமாரி, இசக்கி, துர்க்கை போன்ற உருவங்களில் வழிபடப்படுகின்றன.

### தாய்த் தெய்வம் - வழிபாட்டு முறைகள்

கொண்டாட்டமும், மகிழ்ச்சியும், பொழுதுபோக்கும் நல் உறவுமே விழாக்களின் நோக்கமாக ஜெயங்கொண்டார் கூறுகிறார். நம்பிக்கையின் அடிப்படையில் மக்கள் விரும்பி ஏற்று, கொண்டாடும் நிகழ்ச்சியாதலால் அது விழா என்று போற்றப்படுகிறது. மனிதன் தன் நன்றி உணர்வைத் தான் வழிபடும் தெய்வங்களுக்குக் காட்டு வதில் ஆர்வமுடையவனாய் இருக்கிறான். எனவே தன்னைக் காக்கின்ற தெய்வத்திற்குத் தன் நன்றியை ஆண்டிற்கொரு முறை விழா என்ற பெயரில் செய்து சிறப்பிக்கிறான்.

பெருந்தெய்வ வழிபாட்டு முறைகளில் இருந்து சிறுதெய்வ வழிபாட்டில் ஒன்றான தாய்த்தெய்வ வழிபாடு வேறுபட்டுக் காணப்படுகிறது. பலி கொடுத்தல், பூக்குழி மிதித்தல், உருவம் எடுத்தல், பொங்கலிடுதல், தீச்சட்டி எடுத்தல், பால்குடம் எடுத்தல், மண் உருவம் எடுத்தல், மாவிளக்கு எடுத்தல் போன்ற

சடங்குகள் அதிகமாக நிகழ்த்தப்பட்டிருக்கின்றன. வேப்பமரம் தெய்வ வடிவாகக் கருதப்பட்டு வணங்கப்படுகிறது.

**முடிவுரை**

புனித வாழ்வு என்னும் சக்கரத்தின் கீழ் அதன் மைய அச்சாகத் திகழ்வது சமயம். கடவுளர்களும், கடவுளர்களோடு தொடர்புடைய பொருட்களும் புனிதத் தன்மை உடையவனாகக் கருதப்பட்டன. சமயத்தின் இரண்டாம் கட்டமாகச் சடங்குகள் நிகழ்த்தப்படுகின்றன. இச்சடங்குகள் தெய்வ வழிபாடுகளுக் கேற்ப மாறுபடுகின்றன. ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தில் உள்ள அனைவரின் ஒன்றுபட்ட மனதின் வெளிப்பாடே அச்சமூகத் தினரின் சமயம் என்பர் தர்கைம். இதில் தாய்த் தெய்வங்கள் என்பது பெருந்தெய்வங்களிலும் இருந்தாலும், சிறுதெய்வ வழி பாட்டில் மிக அதிகமாகக் கிராமப்புற மக்களால் வணங்கப்படுவதன் காரணம் காலத்தால் பழமை மாறாததும், நிறைந்த சக்தியைத் தரக்கூடியதும் என மக்களால் நம்பப்பட்டதே ஆகும்.

# நாட்டுப்புற மருத்துவப் பழமொழிகளும் உணவுகளும்

மு. முருகேஸ்வரி

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை - 21

நாட்டுப்புற இலக்கியத்தின் ஓர் அங்கமாகக் காணப்படுவது பழமொழி ஆகும். அனுபவ அறிவைச் சுருங்கிய சொற்களால் வழங்குவதே பழமொழியின் நோக்கமும் செயலும் ஆகும். ''நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்'' என்பது பழமொழி. செல்வம் உள்ளவர்களிடம் நோய்கள் அதிகம் இருப்பது இன்றைய வாழ்முறை உண்மையாகும். நாட்டுப்புற மக்கள், தங்களுக்குக் கிடைக்கும் உணவுகளைக் கொண்டு நோயைத் தீர்த்துக் கொள்ளு கின்றனர். சிலர் உணவுகளை உண்ணாமலும் அதிகமாக உண்ணு வதாலும் நோய்களை உண்டாக்கிக் கொள்ளுகின்றனர். இவ்வாறு வருகின்ற நோய்களுக்கு நாட்டுப்புற மக்களின் மருத்துவ உணவு களைத் தெரிந்து கொள்வது நல்லது. பெரிதும் இயற்கையோடு இணைந்து வாழும் பாமர மக்கள் வாழ்க்கை அனுபவங்கள், பழக்க வழக்கங்கள், மருத்துவப் பயன்கள் போன்றவற்றை நாட்டுப்புறப் பழமொழிகள் எதிரொலிக்கின்றன. அவ்வகையில் உடல், நோய்த் துன்பம் தீர்க்கும் மேன்மையான மருத்துவ உணவுகள் பற்றிப் பழமொழி மூலம் பரப்பியுள்ள நாட்டுப்புற மக்களின் திறன் போற்றத்தக்கது ஆகும். நாட்டுப்புற மக்கள் பயன்படுத்தும் மருத்துவப் பழமொழிகள் பற்றியும், அவற்றில் காணப்படும் உணவுப் பொருள்கள் பற்றியும் விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

''மாதா ஊட்டாத சோறை மாங்காய் ஊட்டும்''

நாட்டுப்புற மக்களிடம் காணப்படும் இப்பழமொழி மருத்துவக் குணம் நிறைந்து காணப்படுகிறது. மாங்காய், மாங்காய் ஊறுகாய் உணவில் இடம் பெறுவதால் எளிதில் செரித்துப் பசி எடுக்கும். பசி என்பதே இல்லாமல் மந்த நிலையில் உள்ளவர்களுக்கு மாங்காயைத் தின்றால் பசி உண்டாகும் பசியைத் தூண்டி விடும் ஆற்றல் மாங்காய்க்கு உண்டு. எவ்வளவுதான் அன்புடன் தாய் உணவினைச் சமைத்து ஊட்டினாலும் பசி இல்லாது போய்விடின்

அன்பு மழை பொழியும் தாயால்கூட ஊட்டமுடியாது. வயிறு ஏற்றுக்கொள்ளத்தக்க வகையில் செரிமானத்தை உண்டு பண்ணிப் பசியைத் தூண்டிவிடும் ஆற்றல் மாங்காய்க்கும், மாங்காய் ஊறுகாய்க்கும் உண்டாதலால் அன்பு மிகுந்த தாயினால் ஊட்டி விட இயலாத உணவை மாங்காயும், மாங்காய் ஊறுகாயும் ஊட்டிவிடும் என்பதை இலக்கிய நயமாக இப்பழமொழி மூலம் புலப்படுத்தும் பாமரர் அறிவு எண்ணி மகிழத்தக்கது. வடுமாங்காய் சாப்பிட்டால் பசி அதிகரித்துக் காணப்படும்.

''பத்து மிளகிருந்தால் பகைவன் வீட்டிலும் உண்ணலாம்''

என்பது நாட்டுப்புறப் பழமொழி. நோய் வராமல் தடுப்பதிலும் உடல் நலப் பிரச்சினைகள் வராமல் தடுப்பதிலும் மிளகு முக்கியப் பங்கு வகிக்கிறது. மிளகு செரிமானத்தை உண்டு பண்ணும் விஷத்தை முறிக்கும் ஆற்றலும் உண்டு. பகைவன் தனக்கு மருந்தைக் கொடுத்தாலும் பயந்து பயந்து உண்பதால் நோய் உண்டாகும் செரிமானம் இல்லாமல் காணப்படும். அதனால் பகைவன் வீட்டிலும் பயப்படாமல் உணவு உண்பதற்கு, பத்து மிளகு உண்டால் செரிமானம் ஏற்படும் என்றும் விஷம் முறிந்துவிடும் என்றும் இப்பழமொழி சுட்டிக் காட்டுகிறது.

''இளைத்தவனுக்கு எள்ளைக்கொடு கொழுத்தவனுக்குக் கொள்ளைக் கொடு''

என்பது பழமொழி எள்ளையும், கருப்பட்டியையும் சேர்த்து இடித்துக் கொடுத்தால் இளைத்துக் காணப்படும் உடல்தேறும். எள்ளைப் பொடியாக்கு, உப்புச் சேர்த்துச் சுடுச்சோற்றுடன் உண்டால் கர்ப்பப்பைப் புண் ஆறும். எள்ளில் இருந்து வரும் நல்லெண்ணையைக் கொடுக்க உடல் இளைத்துக் காணப்படுபவர்களின் உடல் தேறி, உடல் எடை அதிகரிக்கச் செய்யும் சக்தி நல்லெண்ணைக்கு உண்டு. நல்லெண்ணையுடன் கருப்பட்டியை ஊறப்போட்டு, காலையில் வெறும் வயிற்றில் உண்டால் குளிர்ச்சி உண்டாகும் என்பதைத் தகவலாளர் மூலம் அறிய முடிந்தது. கொழுகொழுவென குண்டாக இருப்பவனுக்கு உடல் இறுகி, மெலிய கொள்ளுப்பயறை வேக வைத்து உப்புப் போட்டுக் கொடுக்கப்படுகிறது. இளைத்தவனுக்கு எள்ளைக் கொடு, கொழுத்தவனுக்குக் கொள்ளைக் கொடு என்ற பழமொழியின் மூலம், உடலைத் தேற்றவும், குறைக்கவும் உணவு பயன்படுகிறது என்பதைச் சுட்டிக்காட்ட முடிகிறது.

''நொறுங்கத் தின்றால் நூறுவயது''

உடலிலுள்ள பல்வேறு இயக்கங்கள் நடைபெற வலிமை தருவது உணவாகும். இவ்வுணவை நன்றாக அரைத்து மெதுவாகத் தின்ன

வேண்டும். இவ்வுணவு வாயில் வைத்துப் பற்களாலும் நாக்கினாலும் கூழ்போல் அரைக்கப்படும் பொழுது உமிழ்நீர் உணவுடன் கலக்கிறது. அதனால் உணவு செரிப்பதற்கு ஏதுவாகிறது. நொறுங்க அரைக்கப்பட்டாலும், உமிழ்நீர் காக்கப்படாமலும் உட்செல்லும் உணவு சரியாகச் செரிக்காமல் அஜீரணம் ஏற்பட்டு வேறு பல நோய்களுக்கு வழி ஏற்படும் இதனை தடுக்க வழிவகுப்பதே இப்பழமொழி ஆகும்.

''வாழை வாழவைக்கும்''

வாழைச்சாறு வாழைப்பழம், வாழைப்பூ, வாழைப்பட்டை, வாழை இலை போன்றவை உணவாகப் பயன்படுகின்றன. வாழைப்பழம் உடலைத் தேற்றும், வாழைக்காய் மந்தம் என்றாலும் அளவறிந்து சாப்பிட்டால் உடலுக்கு ஊட்டம் தரும். சிறுநீரகக் கல்லை வாழைப்பூ நீக்கும். சிறுநீரை வாழைத்தண்டு பெருக்கும். வாழைக் கிழங்கிலிருந்து கிடைக்கும் நீர் அற்புத மருந்து, வாழை இலையில் உணவு உண்டால் அதிகமாகச் சாப்பிடலாம், பசி உண்டாகும், மொத்தத்தில் வாழை ஒரு எல்.ஐ.சி. வாழை மக்களை நோய் நொடியின்றி வாழ வைக்கும் திறன் கொண்டது என்பதை விளக்குவதே இப்பழமொழியாகும்.

''மாதுளை தூதுவளை வளர்ந்தவீடு
வயிற்றிலே நெஞ்சிலே களங்கமில்லை''

மாதுளை, தூதுவளை என்னும் இரண்டும் வயிற்றுக் கோளாறு களுக்கும், நுரையீரல் கோளாறுகளுக்கும் மருந்தாகப் பயன்படு கின்றன. மாதுளைச் செடியின் வித்து முதல் இலை, பிஞ்சு, காய், கனி, பட்டை ஆகிய அனைத்தும் மருந்தாகப் பயன்படுகின்றன. மாதுளைப் பிஞ்சு சீதபேதியைக் கட்டுப்படுத்தும். மாதுளம் பழம் கருப்பைப் புண்ணை ஆற்றும். ஈரல் நோய்களுக்கு நல்ல பலனளிக்கும். இரத்தத்தினை அதிக அளவில் உற்பத்திச் செய்யும் மாதுளம் இலையை வெள்ளாட்டுப் பாலில் அரைத்து வெறும் வயிற்றில் குடித்தால் வயிற்றுக் கடுப்பு நீங்கும். மாதுளம் பழச்சாற்றில் கற்கண்டு சேர்த்துக் குடிப்பதால் வயிற்றுப்புண் நீங்கும்.

தூதுவளை இலையுடன் மஞ்சள், மிளகாய், சீரகம், மிளகு, வெள்ளைப்பூண்டு, உப்பு போன்றவை சேர்த்து அரைத்துப் புளியைக் கரைச்சு கொதிக்க வைத்து இரசம் குடித்தால் சளி நீங்கும். தூதுவளை இலையை நெய் அல்லது விளக்கெண்ணெய் விட்டு வதக்கி, துவையல் அரைத்து உண்டால் நுரையீரலில் சேரும் சளியும், காச நோய்க் கிருமிகளும் நீங்கும். இவ்விரண்டு இலைகளையும் நாட்டுப்புற மக்கள் மருந்துக்கு இன்றும் பயன்படுத்துவதைக்

காண முடிந்தது. நாட்டுப்புற மக்களின் அனுபவமே இப்பழமொழியின் ஆக்கம் ஆகும்.

''கேப்பைப்புட்டுத் திண்ணால்
கேக்காமல் போகும் வழி''

என்பது நாட்டுப்புறப் பழமொழியாகும். கேப்பை மாவுடன், கருப்பட்டி, தேங்காய் பூ கலந்து வேகவைத்து உண்டாலும் கேப்பை மாவைக் களிக்கிண்டி உண்டாலும் கூழ்க்காய்ச்சி உண்டாலும், நெஞ்சுவலி, சக்கரை நோய் போன்ற நோய்கள் நீங்கும்.

''அளவுக்கு மீறினால் அமிழ்தமும் நஞ்சாகும்''

என்பது அமிர்தமான பழமொழி ஆகும். நீடிய நல்வாழ்வை நல்கும் அமிர்தத்திற்கே கட்டுப்பாட்டினை விதிக்கும் இப்பழமொழி ஆகும். பல நோய்கள் தோன்றுவதற்குக் காரணமாக விளங்குவது அதிகமான உணவு என்றும், அதிகமாக உணவு உண்பதால் செரிமான உறுப்புகள் அதிகமாக வேலை செய்து வலிமை இழக்கின்றன. அளவுக்கு அதிகமாக உணவு உண்டால், கொடிய நஞ்சு நோய்கள் தோன்றிவிடும். நீரிழிவு, சிறுநீரகக் கோளாறு போன்றவை அதிகமான உணவு உண்பதால் வரும் நோய்களாகும். இவற்றைத் தடுக்க அதிக உணவைத் தவிர்த்திடல் வேண்டும் எனக் குறிக்கிறது இப்பழமொழி.

''சிறு குழந்தை இல்லாத வீடும் வீடல்ல
சீரகம் இட்டு ஆக்காத கறியும் கறியல்ல''

குடும்பத்தில் குழந்தை இருந்தால்தான் மகிழ்ச்சி உண்டாகும். எல்லாச் சமையலிலும் சீரகம் சேர்த்துச் சமைத்தால் சுவை உண்டாகும். சீர்+அகம் எனப் பிரிக்கலாம். வயிற்றைச் (அகத்தை) சீராக வைத்திருக்க உதவுவதால் இப்பெயர் பெற்றது. வீட்டில் குழந்தையும், எல்லாச் சமையலிலும் சீரகம் சேர்ந்திருப்பதுதான் வாழ்விற்கு இனியது என்பதை விளக்குகிறது இப்பழமொழி.

''நொறுங்கத தின்றால நூறுவயது''

''அளவுக்கு மீறினால் அமிழ்தமும் நஞ்சாகும்''

''உண்டபின் ஒருமையில் நட''

போன்ற பழமொழிகள் நோயில்லாமல் வாழ வழி சொல்லு கின்றன. நாட்டுப்புற மக்கள் அனுபவத்தின் வாயிலாகவும், தம் மருத்துவ உணவுகளைப் பாதுகாக்கும் பெட்டகமாகப் பழமொழி களைப் பயன்படுத்துகின்றனர். இன்னும் எண்ணற்ற மருத்துவப்

பழமொழிகள் நாட்டுப்புற மக்களிடம் காணப்படுகின்றன. இப்பழமொழிகள் மூலம் பல மருத்துவ உணவு உண்மைகளை உலக மக்களுக்கு அறிவிக்க முடியும்.

மேற்கண்ட தகவல்கள் அனைத்தும் திண்டுக்கல் மாவட்டத்தில் உற்றுநோக்கல் மூலமாகவும், பேட்டியின் மூலமாகவும் திரட்டப்பட்டவை ஆகும்.

**தகவலாளர்கள்**

1. மூக்கம்மாள், கட்டக்காமன்பட்டி, *09.04.2000*
2. அழகம்மாள், பாளையங்கோட்டை, *03.02.2000*
3. ரெங்கம்மாள், தம்பிநாயக்கன்பட்டி, *04.02.2000*
4. ஜி. சிவராமன், மருத்துவ மலர், தினமணி, *2000.*

# காவு

**தா. வெஸ்லி**

*சென்னைக் கிறித்தவக் கல்லூரி*
*சென்னை*

மிகப் பழமை வாய்ந்த இந்தியச் சமுதாயம் பாரம்பரியம் மிக்க பல பழக்க வழக்கங்களைக் கொண்டுள்ளது. அவற்றில் ஒன்று இயற்கையைக் காப்பதாகும். நம் இந்தியக் கிராமங்களில் ஊருக்கு ஒதுக்குப்புறமாக ஒரு குறிப்பிட்ட பகுதியில் உள்ள மரங்களை வெட்டாமலும் அந்தப் பகுதியினை அசுத்தப்படுத்தா மலும் புண்ணிய பூமியாக அங்கு வாழும் மக்கள் போற்றி வந்துள்ளனர். அந்தப் பகுதியில் சுடு மண்ணாலான சிறு தெய்வங் களையும், யானைகள், குதிரைகள், எருமைகள் போன்ற உருவ பொம்மைகளையும் வைத்து வணங்கி வந்துள்ளனர். இது போன்ற பகுதிகளைப் 'புனித மரங்களின் தொகுப்பு' அல்லது 'கோயில் காடுகள்' என்றும் 'காவு' என்றும் அழைத்து வந்துள்ளனர். இங்குள்ள தெய்வங்களுக்கு விலங்குகளைக் காவு கொடுப்பதினாலும் காவு என்ற பெயர் வந்திருக்கலாம் என்று தெரிகிறது. இன்றும் இந்தியாவின் பல பகுதிகளிலும், தமிழ்நாட்டின் தென் மாவட்டங்களிலும் உள்ள பல கிராமங்களிலும் இது போன்ற காவுகள் காணப்படுகின்றன. ஒவ்வொரு கிராமங்களிலும் குறைந்தது 1 ஏக்கர் நிலமாவது காவுகளுக்காகக் காலங்காலமாக அந்தக் கிராம மக்கள் நிலங்களை அர்ப்பணித்து வந்துள்ளார்கள்.

காவுகளில் பொதுவாக அம்மன், ஐயனார், குதிரைகள், யானைகள் பெரியதும், சிறியவைகளுமாகக் காணப்படுகின்றன. கிராமங்கள் தோறும் இந்த உருவ பொம்மைகள் மாறுபட்டும் காணப்படுகின்றன. கிராம மக்கள் மகிழ்ச்சியாகவும், பாதுகாப்பாகவும் இருப்பதற்கு இந்த தெய்வங்களை வழிபடு கின்றனர். தங்கள் கிராமத்தைத் தலைமுறை தலைமுறையாக இந்தத் தெய்வங்கள் காத்து வருவதாகவும் நம்புகின்றனர்.

கீழ்க்காணும் சாமிகளுக்குக் கீழ்க்காணும் சக்திகள் இருப்பதாகக் கூறுகின்றனர்.

காளி - பேய் பிசாசுகள் மற்றும் சூனியங்களிலிருந்து காப்பாற்றுகிறது.

| | |
|---|---|
| மாரியம்மன் | - தீமைகளை அழிக்கிறது. |
| எல்லையம்மன் | - எல்லைகளைக் காக்கிறது. |
| பிடாரி | - பெரிய நோய்களிலிருந்து காக்கிறது. |
| அங்காளம்மன் (ஆங்காரசாமி) | - பெண்களுக்கு ஆதரவானது |
| கன்னியம்மன் | - தவறு செய்வோரை மன்னிக்கிறது |
| திரௌபதியம்மன் | - கற்புத் தெய்வம் |
| இசக்கியம்மன் | - பேய்களிடமிருந்து காக்கிறது. |
| மீனாட்சியம்மன் | - மீனவர்களின் தெய்வம் (மதுரை மாவட்டத்தில் மட்டும் காணப்படுகிறது.) |
| ஐயனார், மதுரை வீரன், முனீஸ்வரன், கருப்பண்ணன், குட்டாண்டவர், சுடலைமாடன் | கிராமம் முழுவதையும் காவல் செய்யும் தெய்வங்கள் |
| குதிரை | - இரவு நேரங்களில் கிராமத்தைச் சுற்றிச் சுற்றி வந்து காவல் காக்கிறது. |
| நடுகற்கள் | - இறந்துபட்ட வீரர்களுக்கு நடுகல் வைத்து வழிபடுகின்றனர். சில கிராமங்களில் வீரனின் மனைவியும், பக்கத்தில் இருப்பதுபோல உள்ளது. |

மேலும்,

காவுகளில் பொதுவாக நாகலிங்கம், அலரி, புளி, பனை போன்ற மரங்கள் அதிகமாகவும் வேறு பல மரங்களும் காணப் படுகின்றன.

கடவுள் நம்பிக்கைக்காகக் கிராம மக்கள் காவு போன்ற இயற்கை வழிபாடுகளை மேற்கொண்டதின் மூல் மரங்கள் அழியாமல் காக்கப்பட்டன. சுற்றுப்புறச் சூழலும், மழை வளமும் பெருகின. கிராம மக்கள் அதிகம் படிப்பறிவில்லாதவர்களாகவும், பணி வசதி இல்லாதவர்களாகவும் இருக்கலாம். ஆனாலும் கள்ளம் கபடமற்றவர்களாய் மனித நேயமுடையவர்களாய் இயற்கையைப் பாதுகாத்து வந்துள்ளது போற்றுதற்குரியதாகும். இன்று நம் கண்முன்னே இயற்கை வளங்கள் அழிந்து வருகின்றன. நம் முன்னோர்கள் காட்டிய வழியில் நாமும் இயற்கை வளங்களைப் பாதுகாப்போமாக.

# அன்னக்கொடி

***அ. சின்னதுரை***

*மஹேந்ரா கலை அறிவியல் கல்லூரி*

*திருச்செங்கோடு - 637 501*

அன்னம் என்பது உணவைக் குறிக்கும். கொடி என்பது ஒரு செய்தியை உணர்த்தும் குறியீடு. கொடி எங்குப் பறக்கிறதோ அங்கு அன்னம் படைக்கிறார்கள் என்றும் அங்குச் சென்றால் சாப்பிடலாம் என்றும் மக்கள் உணர்ந்து வருவார்கள். இக்கொடி ஆண்டுதோறும் சித்திரை மாதத்தில் வருகின்ற அமாவாசைக்கு மூன்று நாட்களுக்கு முன் ஏற்றப்படுகிறது.

ஊரின் பொது இடத்தில் காடாத்துணியில் ஈஸ்வரனின் லிங்கம் வரைந்து, அதற்கு மேல் மஞ்சள் நிறத்தில் கொடி ஏற்றிப் பறக்க விடுவார்கள். கொடி ஏற்றுவதற்கு முன் சிறுத்தொண்டர் நாடகத்தை - அன்னக்கொடி நாடகம் நடத்துபவர்கள் கையில் கங்கணம் கட்டிக் கொள்வார்கள். இதன் பிறகே கொடி ஏற்றம் நடைபெறும்.

காடவர்க்கு ராஜா கச்சிமாநகர்ப் பட்டணத்தை ஆண்டு வருகிறார். காட்டில் உள்ள மிருகங்கள் பயிர்களையும் எங்களையும் நாசம் செய்கின்றன. அவற்றிலிருந்து நீங்கள் எங்களைக் காப்பாற்ற வேண்டும் என ராஜாவிடம் நாட்டு மக்கள் முறையிட்டனர். அத்தகைய கொடிய மிருகங்களை வேட்டையாடுவதற்கு ராஜா காட்டிற்குச் சென்றார். வேட்டையின் போது காராம் பசுவின் கன்றுகுட்டியைக் கொன்றுவிட்டார். இதனால் அவருக்குப் பாவம் நிகழ்ந்துவிட்டது. ராஜா பரிகாரம் தேடுவதற்காக நாட்டை மந்திரியாகிய சிறுத்தொண்டனிடம் ஒப்படைத்துவிட்டுக் காசிக்குச் சென்றார்.

கங்கையில் மூழ்கி எழுந்து விசுவநாதன் விசாலாட்சி சாமியைத் தரிசனம் செய்யும்போது அசிரீரி தோன்றி, நீ சிவபக்தனாக இருக்க வேண்டும். தினமும் ஆயிரம் பேருக்கு அன்னதானம் செய்ய வேண்டும். நீ இப்படிச் செய்தால் உனக்கும், மந்திரிக்கும் குழந்தை உண்டாகும். நீ இப்படிச் செய்வதால் சொர்க்கலோகப் பதவியை அடைவாய் எனக் கூறி மறைந்தது. பாவத்தை நீக்கி நாட்டுக்குத் திரும்பினார் ராஜா.

தானியக்கூடத்தில் தானியங்களும் திரவியங்களும் எங்கும் குவிந்திருப்பதை ராஜா கண்டார். மக்களை வதைத்து,

துன்பப்படுத்திதான் இவ்வளவு தானியங்களைப் பெற்றாயா என மந்திரியிடம் (சிறுத்தொண்டர்) கேட்டார். இல்லை மன்னா அப்படிச் செய்யவில்லை, மக்களிடம் கேட்டுப்பாருங்கள் என்று கூறினார். ராஜா! நீங்கள் சென்ற பிறகு நாட்டைச் சிறப்பாக ஆட்சி செய்தார். எங்களுக்கு எந்தத் துன்பங்களும் வராமல் பார்த்துக் கொண்டார். அதனால் எங்களிடம் உள்ள பொருள்களை மனமுவந்து நாங்கள் தாம் கொடுத்தோம் என நாட்டு மக்கள் கூறினார்கள்.

மன்னன் காசிக்குச் சென்ற பிறகு நாட்டில் வேலை செய்த மக்களுக்குக் கூலிகளைத் தருவதற்காகச், சிறுத்தொண்டன் தானியங்களை அள்ளிக் கொடுக்கும்போது அவன் கை படப்பட மேலும் மேலும் தானியங்கள் பெருகியதாகவும் கூறப்படுகிறது. மந்திரியின் சிறப்பையும் திறமையையும் உணர்ந்த ராஜா, இவ்வளவு தானியங்களையும் எடுத்துக்கொண்டு ஏதேனும் ஒரு சிவன் கோயிலுக்குச் சென்று அங்கு மடம் கட்டித் தினமும் ஆயிரம் பேருக்கு அன்னதானம் வழங்க வேண்டும் என மந்திரியிடம் கூறினார்.

நல்லசிவன் கோயிலைத் தேர்ந்தெடுப்பதற்காக ஒவ்வொரு சிவன் கோயிலுக்கும் சிறுத்தொண்டன் சென்றார். இறுதியில் திருச்செங்காட்டான் குடியில் உள்ள கணபதியீஸ்வரர் ஆலயத்தைத் தேர்ந்தெடுத்தார். சோழநாட்டைக் கெஜமகா சூரன் ஆண்டு வந்தான். அவனைக் கணபதி அழித்துவிட்டார். அழித்ததன் பரிகாரமாக ஈஸ்வரனை நோக்கித் தவம் இருந்தார். ஈஸ்வரன் தோன்றிக் கணபதிக்குக் காட்சி அளித்தார். கணபதி முன் ஈஸ்வரன் தோன்றிக் காட்சி அளித்ததால் 'கணபதியீஸ்வரர் ஆலயம்' உருவானதாகக் கூறப்படுகிறது.

சிறுத்தொண்டர் இக்கோயிலில் மடங்கட்டி தினமும் ஆயிரம் பேருக்கு அன்னதானம் படைத்து வந்தார். ராஜா குடும்பத்திலும் மந்திரி குடும்பத்திலும் குழந்தை உண்டாகிச் சீராளன் பிறந்தான். இந்தக் கதையுடன் முதல்நாள் நாடகம் முடிகிறது. இரண்டாம் நாளில் பத்துக்கும் மேற்பட்டவர்கள் ஒன்று சேர்ந்து பந்தல் போட்டுத் தோரணம் கட்டுவார்கள். மாலையிலிருந்து ஒலிபெருக்கி இரண்டு நாட்களுக்கு அலறும்.

மூன்றாம் நாள் காலையிலிருந்தே அன்னக்கொடி மடத்திற்கு மக்கள் வரத்தொடங்கி விடுவார்கள். பெண்கள் மடத்தைச் சுத்தம் செய்து, காய்கறிகளை நறுக்கவும் செய்வார்கள். ஆண்கள் தண்ணீர் கொண்டு வருவதும், சமையல் வேலையும் செய்வார்கள். பிற்பகலில் அன்னக்கொடி மடத்திற்கு மேற்கே பிள்ளையார் கோயில் அருகில்

ஆத்தி மரத்தின் கிளை ஒன்றைத் தற்காலிகமாக நட்டு வைப்பார்கள். அந்த மரத்தின் அடியில் சாமியார் சிறுத்தொண்டன் தினமும் ஆயிரம் பேருக்கு வழங்கிவரும் அன்னதானத்தைச் சோதிப்பதற்காக ஈஸ்வரனும் அவருக்குச் சிஷ்யனாக மகாவிஷ்ணுவும் 'பரதேசி' உருவம் எடுத்து வருவர். அவர்களை அழைப்பதற்காக அன்னக் கொடி மடத்திலிருந்து ஐந்து முறை வந்து போவார்கள். ஆறாவது முறையாகச் சிறுத்தொண்டனும் வருவார். இப்போது சாமியாராக இருக்கும் ஈஸ்வரனும் விஷ்ணுவும் சிறுத்தொண்டனுடன் மடத்திற்கு வரச் சம்மதித்து வருவார்கள். கடைசியாக வரும்போது சாமியாரும் சிறுத்தொண்டனும் எல்லாத் தெருக்களுக்கும் சென்று இறுதியில் தான் மடத்திற்கு வருவார்கள்.

அன்று இரவு நாடகம் நடக்கும். நாடகக் காட்சிகள் வருமாறு : சிறுத்தொண்டனைச் சோதிப்பதற்காக ஈஸ்வரனும் அவருக்குச் சிஷ்யனாக விஷ்ணுவும் (நாரதர் என்றும் சொல்லப்படுகிறது) பரதேசி உருவத்தில் வருகின்றனர். இவர்கள் அன்று வரும்போது மற்ற எந்த மக்களும் அன்னக்கொடி மடத்திற்கு வராமல் தடுத்து விட்டனர். பரன்கள் யாரும் வராததால் சிறுத்தொண்டனும் அவன் மனைவி வெங்காட்டு நங்கையும் அவளுடைய தாதி சந்தன நங்கையும் வருத்தப்படுகின்றனர். நான் வெளியே சென்று பரன்களை (மக்கள்) அழைத்துக் கொண்டு வருகிறேன். அதற்குள் யாரேனும் வந்தால் அவர்களுக்கு அன்னம் படையுங்கள் என்று சொல்லிவிட்டுச் சிறுத்தொண்டன் வெளியே சென்றுவிட்டார். இந்நிலையில் ஈஸ்வரனும் அவருடைய சிஷ்யனும் வருகின்றனர். இவர்கள் வருவதைக் கண்டதும் வெங்காட்டு நங்கையும் அவள் தாதியும் மகிழ்ச்சியுடன் வரவேற்கின்றனர்.

உன் கணவர் எங்கே என்று ஈஸ்வரன் கேட்க, அன்னம் புசிக்க இன்று யாரும் வராததால் பரன்களை அழைத்து வருவதற்கு வெளியே சென்றுவிட்டார். அவர் இப்போது வந்துவிடுவார். நீங்கள் சாப்பிடுங்கள் என்று வெங்காட்டு நங்கை சொன்னாள். ஆள் இல்லாத வீட்டில் அன்னம் புசிப்பது இல்லை என்றும், உன் கணவர் வந்தால் ஊருக்கு மேற்கே திருவாத்தி மரத்தில் தங்கி யிருக்கிறோம் அங்கே உச்சிப்பொழுதுக்குள் வரச்சொல் எனக் கூறிவிட்டு ஈஸ்வரன் சென்றுவிட்டார்.

வீட்டிற்கு வந்த கணவனிடம் நடந்ததைக் கூறி அவர்களை அழைத்துக்கொண்டு வருவதற்கு அனுப்புகிறாள் வெங்காட்டு நங்கை. சாமியாரை வணங்கி அன்னம் புசிக்க வருமாறு சிறுத்தொண்டன் அழைத்தான். என்ன காய்கறி சமைத்து வைத்திருக்கிறாய் என்று சாமியார் கேட்டார். பூசணிக்காய்,

கத்தரிக்காய், வாழைக்காய் போட்டுச் சமைத்து வைத்திருக்கிறேன் என்று சிறுத்தொண்டன் கூறினான். அய்யய்யோ! அவை எல்லாம் ஈஸ்வரனின் அவையங்கள். அவை எங்களுக்கு வேண்டாம் எனச் சாமியார் கூறினார். வேற என்ன வேண்டும் எனச் சிறுத்தொண்டன் கேட்டபோது, 'பிள்ளைக்கறி' வேண்டும். அதுவும் ஒரு குடிக்கு ஒரு குழந்தையாக இருக்க வேண்டும், விவேகமாக இருக்க வேண்டும், பிராமணனாக இருக்க வேண்டும், அந்தக் குழந்தையை அறுத்துச் சமைத்துப் பிள்ளைக்கறி போட்டால் சாப்பிடுவேன் எனக் கூறினார். பிள்ளைக்கறி சமைத்துப் போடுவதாகத் தண்ணீர் வார்த்துச் சத்தியம் செய்துகொடுத்தார் சிறுத்தொண்டன்.

வீட்டிற்குச் சிறுத்தொண்டன் வந்து, பிள்ளைக்கறி சமைக்க வேண்டும் என மனைவியிடம் கூறினார். மனைவியும் சம்மதித்து, மகன் சீராளனை அறுத்தபோது தலைக்கறி ஆகாது என்று வெளியே வீசிவிட்டார். அந்தத் தலைக்கறியை எடுத்து பக்குவமாகச் சமையல் செய்து வைத்திருந்தாள் சந்தன நங்கை. பிள்ளைக்கறி சமைத்த பிறகு, சிறுத்தொண்டன் சாமியாரை அழைத்துக்கொண்டு வந்தார். தலைக்கறி எங்கே என்று சாமியார் கேட்டபோது, சிறுத்தொண்டனுக்கு ஒன்றும் புரியவில்லை. உடனே சந்தன நங்கை இதோ! இருக்கிறது என்று சொல்லி கொடுத்ததும் சிறுத்தொண்டனுக்கு ரொம்ப மகிழ்ச்சியாக இருந்தது.

ஒரு குழந்தை வேண்டும். குழந்தை இருந்தால்தான் சாப்பிடுவேன் எனக் கூறியதும், எங்களுக்கு இருந்த ஒரு பிள்ளையையும் அறுத்துச் சமைத்துவிட்டோம். இனி நாங்கள் குழந்தைக்கு எங்கே போவது என்று கூறினார்கள். பள்ளிக்கூடத்திற்குப் போய் உன் குழந்தை சீராளனைக் கூப்பிடுங்கள் அவன் வருவான் என்று சாமியார் கூறினார். சிறுத்தொண்டனும் அவர் மனைவியும் சென்று சீராளனைக் கூப்பிட்டதும் சீராளன் ஓடிவந்தான். சீராளனை அழைத்துக் கொண்டு வீட்டுக்கு வந்தபோது, சாப்பாடு எல்லாம் இரைந்து கிடந்தன. இந்தளவு நம்மைச் சோதித்தது ஈஸ்வரன்தான் அவர் இப்போது இல்லாததால், நாம் இனி உயிரோடு இருப்பதில் அர்த்தமில்லை எனக் கூறி, தன் மனைவியிடம் கத்தி எடுத்துக் கொண்டு வரச்சொல்கிறார்.

சிறுத்தொண்டன் கத்தியால் தன் கழுத்தை அறுக்கும்போது ஈஸ்வரன் கத்தியைப் பிடித்துக்கொண்டு அறுக்காதே சிறுத்தொண்டா உன் பக்தியைச் சோதிச்சேன். நீ மோட்சம் அடைந்தாய். நான் முன்னே செல்கிறேன். புஷ்ப விமானத்தை அனுப்புகிறேன். அதில் வந்துவிடு எனக் கூறி ஈஸ்வரன் மறைந்துவிட்டார். புஷ்ப விமானம் வந்ததும் சிறுத்தொண்டன் கைலாயம் சென்றுவிட்டார்.

இந்தக் கதையுடன் இரண்டாம் நாள் நாடகம் முடிகிறது. நான்காம் நாளில் கொடியைக் கீழே இறக்கி மஞ்சள் நீர் விளையாடுவார்கள். இந்நிகழ்ச்சி, மதியம் இரண்டு மணிக்கு மேல் நடைபெறும். இத்துடன் அன்னக்கொடி நிறைவு பெறுகிறது.

**நாட்டுப்புறத்தில் உள்ள சிறுத்தொண்டர் புராணம் பெரியபுராணத்திலிருந்து வேறுபடும் இடங்கள் சில**

1. வடநாட்டில் உள்ள வாதாபி என்ற நகரத்தை வென்றதன் மூலமாக வியப்பு அடைந்தான் மன்னன். அருகில் இருந்த அமைச்சர்கள், சிறுத்தொண்டர் சிவபெருமானுடைய திருவருள் பெற்றவர் எனக் கூறினார். உண்மை உணர்ந்த மன்னன் நிறைந்த நிதிக்குவியல்களும் நிலபுலன்களும் தந்து, திருத் தொண்டுகளைச் செய்ய அனுப்பினார்.
2. திருஞானசம்பந்தர் திருச்செங்காட்டங்குடிக்குச் சென்று சிறுத்தொண்டர் மாளிகையில் தங்கி அமுது உண்டு, தன் பதிகத்தில் அவரைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்.
3. சிவபெருமான் சிறுத்தொண்டரைச் சோதிக்க வரும்போது அவர் மட்டும் வந்ததாகக் கூறப்படுகிறது.
4. சிவனடியாருக்குத் தன்னை நிவேதிக்கும் பொருட்டு இச்செயல் நிகழ்கின்றது என்பதைச் சீராளன் அறிந்ததாகக் கூறப்படுகிறது.
5. சிவபெருமானுடன் சிறுத்தொண்டரும் தன் மகன் பிள்ளைக் கறியைச் சாப்பிட்டதாகக் கூறுகிறது.

# நாட்டுப்புறச் சிறுவர்களின் பண்டிகைப் பாடல்கள்

**வே. செடிப்பவுன்**

*காந்தி கிராம கிராமியப் பல்கலைக்கழகம்*
*காந்திகிராமம்*

நாட்டுப்புறச் சிறுவர்களின் செயல்கள், சிந்தனைகள் மனநிலை ஆகியவற்றை அறிய உதவும் ஆவணமாகத் திகழ்வது நாட்டுப்புறச் சிறுவர் பாடல்கள். இப்பாடல்கள் அலங்காரமற்றவை. ஆற்றல் உடையவை. கருத்துச்செறிவு மிக்கவை. பாடுபவர்களின் மனதையும், கேட்பவர்களின் மனதையும் பரவசப்படுத்துபவை. பழனி வட்டாரக் கொங்கு இனச் சிறுவர்கள் பண்டிகைகளின்போது கேலியாகவும், நகைச்சுவையாகவும் பாடுவதோடு சொற்பயிற்சிக்காகவும் பல பாடல்களைப் பாடி மகிழ்வர். இங்கு அப்பாடல்களைக் குறித்து ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

### 1. சிறுவர் பாடல்களின் இயல்பு

''சிறுவர்களுக்காகப் பாடும் பாடல்களில் ஆழ்ந்த உணர்ச்சிகள் வேண்டியதில்லை. அறிவும், நுட்பமும் தேவையில்லை. வியப்பான உணர்ச்சிகள் அல்லது எளிய உணர்ச்சிகளையே இனிய முறையில் எதுகை, மோனை நிரம்பிய சொற்களால் உணர்த்தினால் குழந்தைகள் விருப்பத்தோடு பாடுவார்கள். பாட்டில் பொருட்சிறப்பு இல்லையானால் கவலை இல்லை. ஒலிநயம் இருக்க வேண்டும்''. (தமிழ் இலக்கிய வரலாறு, ப. 351) என்று சிறுவர் பாடலுக்கு மு. வரதராசன் இலக்கணம் தருகிறார்.

இக்கருத்தை ஏற்கும் வகையில் நாட்டுப்புறச் சிறுவர் பாடல்களில் ஆழ்ந்த உணர்ச்சிகள், வியக்கத்தக்க சிந்தனைகள், அபரிமித கற்பனைகள், சொல்லலங்காரங்கள் போன்றன இடம் பெறவில்லை. எளிமையாக, இனிமையாக, சூழ்நிலைக்கேற்றபடி நாட்டுப்புற வழக்காறுகளையும், பண்பாட்டையும் பிரதிபலிக்கும் படியாகவே அமைந்துள்ளன.

### 2. பண்டிகைப் பாடல்கள்

''சமுதாய அளவில் கொண்டாடப்படுவன விழாக்கள் எனவும், இல்லங்களின் அளவில் கொண்டாடப்படுவன பண்டிகைகள்

எனவும் கொள்ளப்பெறும்''. (குழந்தைப் பாடல்களில் பாடுபொருளும் பாடு நெறியும், ப. 177) எனத் தனலக்குமி விளக்குகிறார்.

நாட்டுப்புறப் பண்டிகைகளெல்லாம் பெரும்பாலும் நம்பிக்கை சார்ந்தவை. ஒவ்வொரு கிராமமும் குறிப்பிட்ட பண்டிகையைக் கொண்டாடுவதை வழக்கமாகக் கொண்டுள்ளது. பண்டிகைகளில் பெரும்பாலும் முதியவர்களே ஈடுபடுவர். ஆனால் நாட்டுப்புறங் களில் சில பண்டிகைகள் சிறுவர்களுக்காகவே கொண்டாடப் படுகின்றன. அவையாவன,

1. பிள்ளையார் எடுத்தல்
2. திருவாதிரை
3. நிலாப்பிள்ளைக்குச் சோறு மாற்றுதல்

போன்றன. இப்பண்டிகைகளில் அதிகபங்கு வகிப்பதும், ஆடிப் பாடி மகிழ்வதும் சிறுவர்களே.

**1. பிள்ளையார் எடுத்தல்**

கிராமப்புறங்களில் மார்கழி மாதத்தில் மட்டுமே வாசலில் கோலமிடுவர். ஒவ்வொரு நாளும் கோலத்தின் மேல் சாணி யுருண்டையால் பிள்ளையார் பிடித்து பூச்சூடி வைப்பர். பிள்ளையாரின் மேல் சூட்டிய பூ வாடியவுடன், அப்பிள்ளையாரை எடுத்துத் தங்கள் வீட்டின் கூரைகளில் சேர்த்து வைப்பர். மாதத்தின் கடைசி நாளில் சிறுவர்கள் சேகரித்த பிள்ளையார் உருண்டைகளைப் பொரி கடலையுடன் எடுத்துச் சென்று ஊரின் அருகிலுள்ள ஆறு, குளம், பொதுக்கிணறு போன்ற ஏதேனும் ஒன்றில் விட்டுவிடுவர். அவ்வாறு கொண்டு செல்லும் வழியில்,

'வட்ட வட்டப் புல்லாறு
வாழுக்காகப் புல்லாறு
உண்டு உண்டு புல்லாறு
ஊமத்தாங்காப் புல்லாறு
மேலைக்கு இந்நேர (ம்)
வந்துசேரு புல்லாறு' (பவித்ரா, பாரைப்பட்டி)

என்று மகிழ்வோடு பாடுவர். 'பிள்ளையார்' என்ற சொல்லே மாறி வழக்கில் 'புல்லாறு' என்று பாடப்படுகின்றது.

சிறுவர்கள் பிள்ளையாரை ஆற்றிலோ, குளத்திலோ விடும்போது,

'வாடாம வதங்காம
வச்சிருந்த புல்லாறு
வறட்டாத்துத் தண்ணியில

போறயே புல்லாறு

சிந்தாம சிதங்காம
வச்சிருந்த புல்லாறு
சித்தாத்துத் தண்ணியில
போறயே புல்லாறு

கொட்டாம குலுங்காம
வச்சிருந்த புல்லாறு
கூட்டாத்துத் தண்ணியில
போறயே புல்லாறு' (சரண், மொட்டனூத்து)

என்ற பாடலைப் பாடுவர்.

தாங்கள் மகிழ்வோடு சேர்த்து வைத்திருந்த பிள்ளையார் உருண்டைகள் தண்ணீரிலே போகிறதோ என வருந்திப் பாடும் சிறுவர்களின் மனநிலையை இப்பாடல் வழி அறிய முடிகிறது.

**2. திருவாதிரை**

திருவாதிரை நோன்பு (உண்ணாமல் இருந்து செய்யும் வழிபாடு) என்பது மார்கழி மாதம் முழுமதி நாளில் சுமங்கலிப் பெண்களால் கொண்டாடப் பெறுவதாகும். இந்நாள் சிவனுக்கு உகந்ததாகும். திருவாதிரை என்பதற்கு வாழ்வியற் களஞ்சியம் ''சூரிய உதயத்திற்கு முன்பாகக் கிழக்குத்திசை நோக்கி நுனி வாழையிலை இட்டு அதில் பழம், வெற்றிலை பாக்கு, செவ்வந்திப்பூ, நோன்புக்கயிறு, களி ஆகியவற்றை வைத்து வழி படுவர். ஒற்றைப்படை எண்ணிக்கையில் காய்கறி வகைகளை ஒருசேர இட்டுச் சமைத்து உண்பர். பூசை முடிந்ததும் மூத்த மங்கல மகளிர் இளைய மங்கல மகளிர்க்கும், மூத்த மங்கல மகளிர்க்கு அவர் தம் கணவரும் நோன்புக் கயிற்றினைக் கையில் கட்டுவர். மணமான பெண்களே இந்த நோன்பு நோற்பர்''. (வாழ்வியற் களஞ்சியம், தொகுதி - 10, ப. 549).

இன்றைய நாட்களில் பருவமடைவதற்கு முன்பும், திருமணமான புதிதிலும் பெண்கள் இவ்விரதத்தைக் (சாப்பிடும் உணவு வேளைகளைக் குறைத்து இறைவனை நினைத்துச் செய்யும் பிரார்த்தனை) கடைப்பிடிக்கின்றனர். விரதம் இருப்பவர் அதிகாலையில் எழுந்து ஆண்கள் அறியாத வண்ணம் உணவு உண்பர். பின் அன்று முழுவதும் விரதம் இருந்து மாலையில் அதை முடிப்பர். அப்பொழுது மஞ்சள் கலந்த நீரில் நனைக்கப் பட்ட நோன்புக்கயிற்றை அவர்களாகவே கழுத்தில் கட்டிக்கொள்வர். சிறுமிகள் ஒன்றுகூடிப் பின்வரும் பாடலைப் பாடுவர்.

‘திருவாதிரையாரே
தேன் பொழிஞ்ச நாட்டாரே
உலக்குத் தெனைக் குத்தி
ஊரெங்குந் திருவாதிரை
நாழித் தெனைக் குத்தி
நாடெங்குந் திருவாதிரை
உண்டு உண்டுந் திருவாதிரை
ஊரெங்குந் திருவாதிரை
மேலைக்கு இந்நேர(ம்)
வந்துசேரு திருவாதிரை’ (சஞ்சயா, பாரைப்பட்டி)

‘திருவாதிரைக்கேயுரிய சிறப்பான அம்சம் அதிரசம் செய்து சாமிக்குப் படைப்பது. தினைக் குத்தி, தேன்கலந்து அதிரசம் செய்யு மளவிற்குச் சிறப்பாக நாடும், ஊரும், வீடும் செழித்திருக்கின்றன. இதுபோல் அடுத்த வருடமும் செழிப்படைய நீ வரவேண்டும் என சிறுமிகள் திருவாதிரையாரைப் (சிவனை) பாடி வணங்குவர்.

**3. நிலாப் பிள்ளைக்குச் சோறு மாற்றுதல்**

தைப்பூசத்துக்கு முன் ஐந்து நாள் ‘நிலாப்பிள்ளைக்குச் சோறு மாற்றுதல்’ என்ற பண்டிகை சிறுவர்களால் கொண்டாடப்படுகிறது. இது கிராமத்திலுள்ள ஊர்க்கொத்துக்காரர் வீட்டில் நடைபெறும் (கிராமங்களில் நெல் அறுவடைக்கு ஒருவருடைய தலைமையின் கீழ் மற்றவர்கள் செல்வர். அந்தத் தலைமையாளரே ஊர்க் கொத்துக்காரர் எனப்படுகிறார்). சிறுவர்கள் எச்சில் படாத உணவைச் சிறிய பாத்திரங்களில் எடுத்துக்கொண்டு அவ்வீட்டிற்குச் செல்வர். முதல்நாள் பொரிகடலை, நான்காம் நாள் பச்சரிசி மாவு, ஐந்தாம் நாள் ரசம் சோறு என்ற வரையறை இருக்கிறது. இடைப் பட்ட இரண்டாம் மூன்றாம் நாட்களில் அவரவர் விருப்பப்படி சமைத்த உணவைக் கொண்டு செல்லலாம். அவ்வீட்டிலுள்ள பெண் எல்லோருடைய உணவையும் வாங்கி வானத்திலுள்ள நிலாப் பிள்ளைக்குக் காட்டுவர். அச்சமயம் சிறுவர்களெல்லாம் கூடி நின்று,

‘‘நிலா நிலா நாச்சியாரே
என்னென்ன வேணும்
சித்தாடப் பூ வேணும்
சிறுசலங்கைப் பூ வேணும்
மத்தங்காப் பூ வேணும்
மலைமேல பொண்ணு வேணும்’’ (சரஸ்வதி, மானூர்)

என்று பாடுவர். பின் அனைவரும் வட்டமாக அமர்ந்து ஒருவருக் கொருவர் உணவைப் பகிர்ந்து உண்பர்.

வெண்மை, குளிர்ச்சி, ஒளி போன்றன நிலவின் பண்புகள், இதனடிப்படையில் சிறுவர்களும் மனத்தூய்மை, சிறந்த செயல்களில் ஈடுபடுதல், பேச்சிலும் செயலிலும் இனிமையாக இருத்தல் போன்ற பண்புகளை வளர்த்துக் கொள்ளவேண்டும் என்ற நோக்கத்தின் அடிப்படையிலும், இயற்கையை மதித்துப் போற்ற வேண்டும் என்ற நோக்கிலும், 'நிலாப்பிள்ளைக்குச் சோறு மாற்றுதல்' என்ற பண்டிகை கொண்டாடப்படுகின்றது.

**முடிவுகள்**

1. பிள்ளையார் எடுத்தல், திருவாதிரை நோன்பு, நிலாப் பிள்ளைக்குச் சோறு மாற்றுதல் ஆகியன சிறுவர்களுக்கே யுரிய பண்டிகைகள் என்பதை அறிய முடிகிறது.

2. நாள்தோறும் விதவிதமான பூக்களைக் கொண்டு பிள்ளையாரை அலங்கரிப்பதன் மூலம் இப்பண்டிகை சிறுவர்களிடையே கலையுணர்வையும், கற்பனைத்திறனையும் பொறுப் புணர்ச்சியையும் வளர்க்கின்றது.

3. திருமணமான பெண்கள் கடைப்பிடித்து வந்த திருவாதிரை நோன்பை இன்று சிறுமிகளும் பின்பற்றுவதன் மூலம் நல் நிகழ்வுகளை ஏற்க வேண்டும், சமுதாயப் பழக்கவழக்கங் களைப் பின்பற்ற வேண்டும் என்ற கருத்துணர்வு சிறுமி களிடையே மேன்மைபெற்று விளங்குவது புலனாகிறது.

4. ஆண் - பெண் இருபாலரும் இணைந்து விளையாடுவதால் அவர்களிடையே வேற்றுமை நீங்கி ஒற்றுமை வளர வழி வகுக்கின்றன.

5. பண்டிகையின் போது சிறுவர்கள் ஒருவர் வீட்டு உணவை ஒருவர் கலந்துண்பதால் அவர்களிடையே பகிர்ந்துண்ணும் பழக்கமும், உதவி மனப்பான்மையும், ஒற்றுமையுணர்வும் வளர்கின்றன.

# விடுகதையின் நுண்பாகுபாடு

***தி. பெரியசாமி***

*கோபி கலை அறிவியல் கல்லூரி*
*கோபிசெட்டிபாளையம்*

மனித இனம் தோன்றி, மனிதன் பேச ஆரம்பித்த அன்றே நாட்டுப்புற இலக்கியங்களும் தோன்றிவிட்டன எனலாம். மக்களின் பழக்கவழக்கங்கள், பண்பாட்டுக் கூறுகள், அவர்களது எண்ணங்கள், நம்பிக்கைகள், வாழ்க்கை முறை, தொழில், கனவுகள், உறவு முறைகள், ஆசைகள், எதிர்பார்ப்புகள், உணர்வுகள் போன்றவற்றை வெளிப்படுத்தும் பல்வேறு இலக்கியங்களையும், கலைகளையும் கண்டறிந்து விளக்குவதே நாட்டுப்புறவியலாகும். மேலும் ஒரு நாட்டு மக்களின் வாழ்க்கைச் சிறப்பம்சங்களையும், வரலாற்றுப் பொருளாதார நிறை குறைகளையும், பண்பாட்டு மேன்மை களையும் தெளிவுபடுத்த அப்பகுதி நாட்டுப்புற இலக்கியங்கள் உற்ற துணையாய் அமைகின்றன எனலாம். இத்தகைய துறையில் ஒரு பகுதியாக விளங்கும் விடுகதைகளின் நுண்பாகுபாட்டைப் பற்றி இக்கட்டுரை எடுத்துக் கூறுகிறது.

நாட்டுப்புற இலக்கியங்களில் விடுகதை தனியிடம் பெறுவதனாலேயேதான் அது விடுகதை இலக்கியம் என்றழைக்கப் படுகிறது.

விடுகதை என்பது சொல்பவருக்கும் கேட்பவருக்கும் நன்கு தெரிந்திருக்கும் ஒரு பொருளைப் பற்றியதாகும். இதன் பொருள் புதிர் மூலமாகவோ அல்லது சுற்றி வளைத்துச் சொல்லியோ வெளிக்கொணரப்படுகிறது. இதன் மூலம் கேட்பவரின் அறிவுத் திறத்தைச் சோதிக்கவும், சிந்தனையை வளர்க்கவும், பொழுது போக்கிற்காகவும் மொழிப்பயிற்சியை மேம்படுத்தவும் விடுகதைகள் ஏதுவாய் அமைகின்றன.

**நுண்பாகுபாடு**

ஒரு விடுகதையில் இடம் பெற்றுள்ள உருவம், பண்பு, பயன் போன்றவற்றை ஆராயும் வகையில் உருவாக்கிக் கொள்ளப்பட்ட பாகுபாடே நுண்பாகுபாடாகும். இம்மூன்றும் விடுகதையில் எவ்வாறு இடம் பெற்றுள்ளன என்பதைப் பின்வரும் பகுதி விளக்குகிறது.

1. உருவம் என்பது ஒரு பொருளின் அமைப்பை உவமை யாகவோ, உருவகமாகவோ சொல்லும் பாங்கில் அமைவது.
2. பண்பு என்பது ஒரு பொருளின் உள்ளார்ந்த மணம், சுவை, நிறம் ஆகியவற்றை உள்ளடக்கியது.
3. பயன் என்பது ஒரு பொருளின் காரணமாகக் கிடைக்கும் நன்மை, தீமைகளைப் புலப்படுத்துவது.

**வானம் பூமி தொடர்பான நுண்பாகுபாடு**

**உருவம்**

எ.கா. 'மானத்துக்கும் பூமிக்கும் ஒரே சங்கிலி
அது என்ன?' (விடை : மழை)

மழை பெய்யும்போது மழைத்துளியானது வானத்திற்கும் பூமிக்கும் ஒரு சங்கிலி போன்ற உருவம் கொண்டு காட்சி யளிப்பதை இவ்விடுகதை விளக்குகிறது.

**பண்பு**

எ.கா. 'அங்கிருப்பான் சாய்பு
இங்கிருப்பான் சாய்பு
சப்பாத்தி முள்ளில் சாய்ந்திருப்பான் சாய்பு
அது என்ன?' (விடை : சூரியன்)

சூரியனின் செயல்பாடுகளைச் 'சாய்பு' (இஸ்லாமியர்) என்ற இனத்தின் மேல் ஏற்றிக் கூறுவதாக இந்த விடுகதை அமைந் துள்ளது. மேலும் நேரம் செல்லச் செல்ல 'நிழல் சாயும்' அல்லது 'சூரியன் மறையும்' எனும் பண்பு இங்கு சுட்டிக்காட்டப்படுகிறது.

'சிங்காரப்பூப் பூத்து
தொங்காத காய் காய்க்குது
அது என்ன?' (விடை: புளிச்சக்காய்)

புளிச்சை தாவரத்தின் காய் கீழ்நோக்கி தொங்காது மேல் நோக்கியே அமைந்திருக்கும். இந்தப் பண்பை இவ்விடுகதை எடுத்துக் கூறுகிறது.

**பயன்**

எ.கா. 'ஒரு கரண்டி மாவில்
ஊரெல்லாம் தோசை
அது என்ன?' (விடை : நிலா)

ஊர் முழுதும் நிலா வெளிச்சத்தைப் பெறுதலாகிய 'பயன்' இவ்விடுகதையில் சுட்டப்பட்டுள்ளது. மேலும் இவ்விடுகதையில் பயன் முதன்மையாக இருப்பினும் பண்பும் உள்ளது. மாவைப்

போன்ற வெண்மையை நிலா பெற்றிருப்பதால் இங்கு நிறப்பண்பும் சுட்டப்பெற்றுள்ளது. ஆனால் இப்பண்புகள் அனைத்தையும் ஒருங்கிணைத்து ஒரு முதன்மைக் கருத்தின் வெளிப்பாடாக நிலவு வெளிச்சம் தருதல் என்ற பயனே முழுமையாக இடம் பெற்றிருப்பதைக் காணமுடிகிறது. எனவே இவ்விடுகதை பயன் அடிப்படையில் உருவாக்கப் பெற்றுள்ளது எனலாம்.

**உருவம்**

எ.கா. 'ஊருக்கெல்லாம் ஒரேகால் அது
என்ன கால் அது என்ன?' (விடை : மழைக்கால்)

மழை பெய்யும்போது விழக்கூடிய மழைத்துளியானது வானத் திற்கும் பூமிக்கும் இடையே ஒரு தொடர்பை ஏற்படுத்தியிருப்பது போல, கிணற்றில் நீரானது ஒரு ஊற்றில் இருந்து வருவது போல், வானமாகிய கிணற்றில் இருந்து மழைத்துளி விழும்போது, ஓர் உருவ அமைப்பைப் பெற்றுள்ளதை இவ்விடுகதை விளக்குகிறது.

**பண்பு**

எ.கா. 'எட்டாத உயரத்தில் ஏழுவகை நிறங்கள்
அது என்ன?' (விடை: வானவில்)

மனிதனுக்கு எட்டாத உயரமாகிய வானத்தில் வானவில் இருக்கின்றது. இந்த நிறப்பிரிகை ஏழுவகை நிறங்களைக் கொண்டி ருக்கும். இந்த நிறங்களே இவ்விடுகதையின் பண்பாகும்.

**பயன்**

எ.கா. 'தங்கை விளக்குக் காட்ட
அண்ணன் மத்தளம் கொட்ட
அம்மா தண்ணீர் தெளிக்க
அது என்ன?' (விடை: மின்னல், இடி, மழை)

மழை பெய்து அந்த பகுதி மக்களையும் மண்ணையும் குளிரச் செய்தது என்ற 'பயன்' இவ்விடுகதையில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

**உருவம்**

எ.கா. 'யாரு போட்ட சில்லரை காசு
அகிலமெல்லாம் இறைஞ்சு கிடக்குது
அது என்ன?' (விடை: நட்சத்திரங்கள்)

இரவு நேரத்தில் வானத்தில் நிறைந்திருக்கும் நட்சத்திரங் களின் வடிவத்தை அடிப்படையாகக் கொண்டு இவ்விடுகதை அமைந்துள்ளது.

**பண்பு**

எ.கா 'வெள்ளக் குதிரை வேலியைத்
தாண்டுது அது என்ன?' (விடை: சூரியன்)

சூரியன் வெண்மை நிறம் கொண்டு காலையில் தோன்றி வேலி, குளம், குட்டை ஆகியவற்றைத் தாண்டி மாலையில் மறையும். காலைச் சூரியனின் நிறம் வெண்மை என்ற நிறப் பண்பினை அடிப்படையாகக் கொண்டு இவ்விடுகதை தோன்றி யிருக்கக்கூடும்.

**பயன்**

எ.கா ''எட்டாத மகாராணி ராத்திரீல வருவா
பகலுல மறைவாள்'' -அது என்ன? (விடை: நிலா)

ஒரு நாட்டின் மகாராணி மக்களுக்குக் கொடையாகப் பொருட் களைக் கொடுப்பதுபோல இரவில் வரும் நிலவானது உலகிற்கு வெளிச்சத்தையும், குளிர்ச்சியையும் கொடையாகக் கொடுத்தல் என்ற பயன் இங்கு வலியுறுத்தப்படுகிறது.

**துணைநூல்கள்**


1. சக்திவேல், சு., 1983, நாட்டுப்புற இயல் ஆய்வு, மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம்.
2. சுப்பிரமணியம், ச.வே., 1977, தமிழில் விடுகதைகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

# பழமொழிகளைத் திருத்தலாமா?

**மு. சதாசிவம்**

வாசவிக் கல்லூரி

ஈரோடு

பழமொழிகளைப் பொதுமக்களின் உள்ளங்களில் பூத்த ஒருவரிக் கவிதைகள் எனலாம். கவிதைகளுக்குரிய எதுகை, மோனை, யாப்பமைதி, அணியழகுகளுடன் அவை திகழ்கின்றன. பொது மக்களின் வாழ்க்கையனுபவங்களின் பிழிவே பழமொழிகளாக உருப்பெறுகின்றன. ஓர் அனுபவமொழி உருவானவுடனே அது பழமொழி என்ற தகுதியைப் பெற்று விடுவதில்லை. அது காலங் காலமாகப் பல்லாயிரக்கணக்கானவர்களின் நாவில் நடமாடிப் பின் செம்மையான வடிவத்தினைப் பெற்று வாழ்கின்றது. தங்கள் வாழ்க்கையில் ஏதாவதொரு சமயத்தில் பழமொழிகளைப் பயன் படுத்தாதவரோ, கேள்விப்படாதாரோ ஒருவரும் இல்லை எனலாம். அதனால் அவற்றைக் குடிமக்களின் கவிதை வரிகள் எனலாம்.

பலபேர்களுடைய கூட்டு அனுபவப் பிழிவாக இருப்பதால் பழமொழிகள் மக்களின் நெஞ்சிலும் நாவிலும் நிலைபெறுகின்றன. எனினும் ஒரு காலத்தில் அனைவராலும் போற்றப்பெறும் பல பழமொழிகள் பிறிதொரு காலத்தில் தேவையற்றனவாக மாறி விடவுங்கூடும். காலமாறுதல்களினால் மக்களின் சிந்தனைப் போக்குகளும் மாறிவிடுகின்றன. அதனால் காலத்திற்குக் காலம் புதிய பழமொழிகள் தோற்றம் பெறுகின்றன. இதனால் முரண் பாடான பல பழமொழிகள் தோன்றுவதற்கு இடம் ஏற்படுகிறது.

பழமொழிகள் மக்களின் வாழ்க்கையோடு பின்னிப் பிணைந் திருப்பதால் அவை சமுதாய மக்களின் மனப்போக்குகளுக்கு ஏற்ப அமைந்துவிடுகின்றன. அதனால் அவை சமுதாய வரலாற்றிற்குத் துணைபுரிவனவாக உள்ளன.

**முரண்பாடுகள்**

'அஞ்சு பெண்களைப் பெற்றால் அரசனும் ஆண்டி'

'அஞ்சாவது பெண் கெஞ்சினாலும் கிடைக்கமாட்டாள்'

என்ற இரு பழமொழிகளும் முரண்பாடுள்ளனவாகத் தோன்று கின்றன. முதற்பழமொழி வரதட்சணைக் கொடுமை மிகுந்த

சமுதாயத்தில்தான் தோன்றியிருக்க வேண்டும். இரண்டாவது பழமொழி ஐந்தாவது பெண் அதிர்ஷ்டம் மிக்கவள்; அதனால் பிறந்த வீட்டினர் அவளைப் பிரிய மனமில்லாதவராயிருப்பர் என்ற மக்கள் நம்பிக்கையினைப் பிரதிபலிப்பதாக உள்ளது. குடும்பக் கட்டுப்பாடு போற்றப்படும் இக்காலத்தில் ஐந்து பெண்களைப் பெறுபவர் அரியர்.

**தேவையில்லாத பழமொழிகள்**

பல்வேறு சாதியினரைப் பற்றி இழித்தும் பழித்தும் கூறப்படும் பழமொழிகள் ஏராளமாக உள்ளன. சாதி வேறுபாடுகள் பாராட்டக் கூடாது என்று கருதும் இக்காலச் சமுதாயத்தில் அத்தகைய சாதிப் பழமொழிகள் தேவையில்லாதனவாகிவிட்டன. அதுபோலவே பிற மதங்களைப் பழித்துக்கூறும் ஏராளமான பழமொழிகளும் தேவையற்றனவே.

'அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பு எதற்கு?'

'சேலை கட்டிய மாதரை நம்பாதே'

'பெண்புத்தி பின்புத்தி'

முதலிய பெண்களை இழிவுபடுத்தும் பழமொழிகளும் பெண் சமத்துவம் பேசும் இக்காலத்திற்கு ஒவ்வாதவையே. அவ்வாறே உடல் ஊனமுற்றோர், ஏழைகள், பரதேசிகள், விதவைகள், தாழ்த்தப் பட்டோர் ஆகியவர்களைத் தரக்குறைவாகப் பேசும் ஏராளமான பழமொழிகளும் இக்காலத்திற்குத் தேவையில்லாதவையே.

**புதுமொழிகள்**

இக்காலத்திற்கு ஒவ்வாத பழங்காலத்துப் பழமொழிகளைத் திருத்தி நூற்றுக்கணக்கான புதுமொழிகளைச் சென்னை இலயோலாக் கல்லூரியில் உள்ள தமிழ்நாடு சிறு குழந்தைப் பராமரிப்புச் சேவைக்கான கட்டமைப்பு அண்மையில் ஒரு நூலை வெளி யிட்டுள்ளது. 'பழமொழிகளில் பூத்த புதுமொழிகள்' என்பது அந்நூலின் பெயர். அந்நூலின் அணிந்துரையில் இலயோலாக் கல்லூரி முதல்வர் அவர்கள் இவ்வாறு கூறியுள்ளார்: ''காலத்திற்குப் பொருந்தாத, மனிதநேயமற்ற, சமநீதி மறுக்கும் பழமொழிகளைக் கண்டறிந்து, அவற்றிற்கு ஈடாக அவற்றை வெல்லும் பழமொழிகள் படைப்பதற் காகப் பல பழமொழிகளை ஆய்வுசெய்து தமிழறிஞர்களுடன் ஒரு நாள் கருத்துப்பட்டறை நடத்தி இந்நூலை இலயோலாக் கல்லூரிச் சமூகப் பணித்துறையினர் வடித்துள்ளனர்''.

இந்நூலை உருவாக்கிய ஆசிரியரின் கருத்து வருமாறு : ''வாழ்க்கையின் எல்லாச் சூழ்நிலைகளுக்கும் ஓர் அடையாளப்

பழமொழி இருப்பதே அதன் தனித்துவம்தான். மனிதனின் அன்றாட அனுபவச் சிக்கல்களோடு பின்னிப் பிணைந்தவைதாம் அவை. பழமொழியும் மக்கள் பண்பாடும் நகமும் சதையும்போல் ஒட்டி உறவாடுகின்றன. நம்மிடையே காணப்படும் சில கலாச்சாரக் கூறுகள், பழக்கவழக்கங்கள், சமூக மதிப்புகள், சமூகக் கட்டுப் பாடுகள், சிந்தனைகள் பழமொழிகளிலிருந்தே வெளிப்பட்டவை எனலாம். அளவான குழந்தை வளர்ப்பிலும், பராமரிப்பிலும், பெண் குழந்தைகள் மற்றும் ஊனமுற்றோர் நலனிலும் பங்கு வகிக்கின்றன என்பது ஆராயப்படவேண்டிய ஒன்றாகவே இருக்கிறது''.

மேற்கண்ட இருவர் கருத்துக்களும் புதுமொழிகள் உருவாக்கம் பெறுவதன் இன்றியமையாமையை எடுத்துக் காட்டுகின்றன. பழமொழிகள் திருத்தப்படக்கூடாது என்று கூறுவோருக்குத் தக்க விடை கூறுகின்றன.

பழமொழிகள் எவருக்கும் தனிச் சொத்தல்ல; எல்லோர்க்கும் பொதுவானவை. ஒவ்வொரு பழமொழியினையும் உருவாக்கியவர் யார் என்பதுகூட ஒருவர்க்கும் தெரியாது. தனியொரு கவிஞரின் பாடல் வரிகளைத் திருத்துவது தவறு. ஆனால் பொதுவுடைமையான பழமொழிகளை இக்காலத்திற்கும் பயன்படுமாறு திருத்துவதில் தவறில்லை என்பதே இந்நூலாசிரியரின் கருத்து. அதைப் பின்வரும் சொற்களில் ஆசிரியர் விளக்கிக் கூறியிருப்பது ஏற்புடையதாகவே உள்ளது. ''பழமொழிகளில் மாற்றம் கொண்டுவர வேண்டும், பரவலான கல்வி, குடும்ப அமைப்பில் மாற்றம், இடம்பெயர்தல், புதிய தொழில்கள், உலகளாவிய சிந்தனைகள் மாறுபட்ட மதிப்பீடுகள் போன்று பல எண்ணற்ற சமூகப், பொருளாதார, கலாசார மாற்றங்களால் இளைய தலைமுறையினரின் சிந்தனைகள் புதிய திசையை நோக்கியுள்ளன. பழமொழிகள் பழைய தலை முறையின் குரல் என்பதில் ஐயமில்லை. புதிய தலைமுறை அதை ஏற்கவோ, தொடரவோ வாய்ப்பில்லாத சூழலும் உள்ளது.

இன்றைய தலைமுறைக்குத் தலையீடுகளே பிடிப்பதில்லை. சமூகத்தின் பழமையான சிந்தனைகள் பழமொழிகள் வடிவில் தம் வாழ்க்கையில் ஆதிக்கம் செலுத்துபவை இக்காலத்தவர் ஏற்பதில்லை''.

''பழமொழிகளுள் சில தரம் குறைந்தனவாய் அர்த்தமற்று அறிவியலுக்குப் புறம்பான வெட்டிப் பேச்சை ஒத்திருக்கின்றன. ஆனாலும் அவை காலங்காலமாக உருண்டோடி வந்து எண்ணற்ற மனித உணர்வுகளைப் புண்படுத்தியும் உள்ளன. குறிப்பாக ஊன முற்றோரையும் பெண்களையும் துன்புறுத்தும் பழமொழிகள்

ஏராளம். தணிக்கைக் கலாச்சாரம் இல்லாத காலத்தில் பிறந்த அப்பழமொழிகளைப் பாலின நிகர்நிலைச் சித்தாந்தம் பேசும் இக்காலத்தில் உலவவிடுவது சமூக அநீதியாகும். அனைவருக்கும் தத்தம் கண்ணியத்தையும் கௌரவத்தையும் காக்கும் உரிமை உண்டு. சமத்துவச் சமுதாயத்தில் சங்கமிக்கத் தகுதியற்ற அப்பிழை மொழிகளை வழக்கிலிருந்து வெட்டி எறிவதில் தவறில்லை. களைகளைக் களைவதும் இந்நூலின் நோக்கம்தான்'' (ப. 16).

இந்நூலில் 437 புதுமொழிகள் தரப்பெற்றுள்ளன. அவற்றுள் மாதிரிக்காகச் சில மட்டுமே ஈண்டுத் தரப்படுகின்றன. பிறை யடைப்பில் உள்ளவை பழைய பழமொழிகள்.

**புதுமொழிகள்**

1. அண்ணன் தம்பி உதவுவதுபோல அடி உதவாது
   (அடி உதவுவது போல அண்ணன் தம்பி உதவ மாட்டான்)
2. அறிவே பெண்ணின் அணிகலன் ஆகும்
   (பேதைமை என்பது மாதர்க்கு அணிகலம்)
3. ஐந்திலும் வளையும் ஐம்பதிலும் வளையும்
   (ஐந்தில் வளையாதது, ஐம்பதில் வளையாது)
4. பிள்ளை என்றால் தெய்வமும் இரங்கும்
   (பெண் என்றால் பேயும் இரங்கும்)
5. பெண்சாதி பேச்சைக் கேட்காதவன் பேய்போல் அலைவான்
   (பெண்டாட்டி பேச்சைக் கேட்பவன் திண்டாடிப்போவான்)
6. பெண்புத்தி பொன்புத்தி
   (பெண்புத்தி பின்புத்தி)
7. பெண்டிர்க்கு அழகு தீயவை எதிர்த்தல்
   (உண்டி சுருக்குதல் பெண்டிர்க்கு அழகு)
8. பெற்றோர் எவ்வழி குழந்தை அவ்வழி
   (மன்னன் எவ்வழி மக்கள் அவ்வழி)
9. மழலைக்கு இல்லை மதமும் சாதியும்
   (நலிந்தோர்க்கு இல்லை நாளும் கிழமையும்)
10. மனநோய்க்கும் மருந்துண்டு
    (வாதத்திற்கு மருந்துண்டு: பிடிவாதத்திற்கு மருந்தில்லை)

மேற்கூறியவை பழமொழிகளிலிருந்து ஒப்புமையாக்கத்தால் தோற்றுவிக்கப்பட்டவை. பின்வருபவை பழமொழியின் அமைப்பைக் கருத்தில்கொண்டு புதிதாக உருவாக்கப்பட்டவை.

1. அளவோடு பெற்று வளமோடு வாழு
2. ஆணும் வாரிசுதான், பெண்ணும் வாரிசுதான்
3. இளமையில் கல்வி முதுமையில் மகிழ்ச்சி
4. உடலைப் பார்க்காதே உள்ளத்தைப் பார்
5. உள்ள வளர்ச்சியே உண்மை வளர்ச்சி
6. எல்லா வேலையும் நல்ல வேலையே, எல்லாப் பிள்ளையும் நல்ல பிள்ளையே
7. கற்றலும் கேட்டலும் காலமெல்லாம் உதவும்
8. குழந்தைச் செல்வம் குடும்பத்தின் செல்வம்
9. ஞானத்திற்கு ஊனம் தடையில்லை
10. பெண் குழந்தையைப் பேணி வளர்ப்போம்
11. முடியாது என்பதும் முயற்சியால் முடியும்

# தமிழில் வேளாண் பழமொழிகள்

***கு. மங்கையர்க்கரசி***

*எத்திராஜ் மகளிர் கல்லூரி*
*சென்னை - 600 008*

விரைந்துபட்ட தகவல் தொடர்புகளும் வானொலி, தொலைக் காட்சி போன்ற ஊடகங்களும் மனித வாழ்க்கையை வெகு வேகமாக மாற்றி வருகின்றன. சிற்றூர் இயம் (கிராமியம்) என்னும் ஒன்றே இல்லாமல் போய்விடுமோ என்னும் அளவிற்கு இவற்றின் வேர்கள் பரந்தும், ஆழ்ந்தும் செல்கின்றன. சிற்றூர் மக்களின் சிந்தனைத் தடங்களின் தடயங்களாக விளங்கும் நாட்டுப்புறப் பாடல்கள், கதைகள், பழமொழிகள், விடுக்கைதகள் ஆகியவற்றின் ஊற்றுக் கண்கள் வேகமாக அடைபட்டுக் கொண்டிருக்கின்றன. வேகமாக வளர்ந்து வரும் அறிவியல் மட்டுமன்றி, முரண்பட்ட பொருளாதார அமைப்புக் களங்களும் சிற்றூர் மக்களின் மன நிலையை அலைக்கழித்து வருகின்றன. இந்திய அரசால் வார்ப்புச் செய்யப் பட்ட பணம் என்னும் ஒன்று இருப்பதையே இன்று வரை அறியாமல் பண்டமாற்று ஒன்றையே அறிந்து வாழ்க்கையை நடத்தும் பழங்குடி மக்களும் இந்தியாவில் இன்றும் வாழ்கின்றனர். அதே வேளையில், வானொலி, தொலைக்காட்சி போன்ற ஊடகங்களால் ஈர்க்கப்பட்டு மன அளவில் அவர்கள் புதுமுறை மனிதர்களாக உலா வருகின்றனர். இனமரபுக் குழுக்களும், வட்டார மொழி பேசும் மக்களும், சிற்றூர் மக்களும் மேற்கொண்டொழுகும் மரபு சார் நிலைகளைப் பதிவு செய்ய வேண்டிய கட்டாயம் முன் எப்போதையும் விட இப்போது மிகுதியாகவே ஏற்பட்டிருக்கிறது. குறிப்பாக, மொழி ஊடகங்களாக விளங்கும் நாட்டுப்புறப் பாடல்கள், கதைகள், விடுகதைகள், பழமொழிகள் ஆகியவற்றை மொழி நலம் கருதியும், மொழிவளம் சேர்க்கவும் தொகுத்து நெறிப்படுத்துவது இன்றியமையாதது.

பழமொழி - நாட்டுப்புற மக்களின் ஒற்றை வரிக் கவிதை. அழுத்தமான சிந்தனைகளின் உறைபொதி வடிவம். பட்டுத் துணியைக் கிழிப்பதைப் போல் ஒரு கருத்தை நறுக்கென இலக்கிய நயத்துடன் எடுத்தியம்பும் பாங்கும் வடிவமும் இக்காலப் புதுக்கவிதைக்காரர்களுக்குக் கூடப் பிடிபடாத ஒன்று. சிற்றூர்

மக்களின் சிந்தனைப் பெட்டகமாக விளங்கும் பழமொழிகளின் வகைகள் பல. அவற்றுள் வேளாண் பழமொழிகள் குறிப்பிடத் தக்கன. காரணம், 80 விழுக்காடு மக்களின் வாழ்க்கை நிலைகளை, அவர்களின் ஏக்கங்களை, இயற்கையை அவர்கள் கணித்தறியும் நிலைகளை, பயிர்த்தொழில் குறித்து அவர்கள் அறிந்திருக்கும் எளிய அறிவியலை வேளாண் பழமொழிகள் விளக்குகின்றன.

செய்வோன் (உழுவோன்), செய்விப்போன் (உழுவிப்போன்) என்றில்லாமல் செய்வோன் வாய்மொழியாக மட்டுமே வேளாண் பழமொழிகள் கிடைப்பதால் பயிர்த் தொழிலையும் அதன் சார்பு நிலை வெளிப்பாடுகளையும் முழுக்க முழுக்க உழுவோன் (விவசாயி) அறிவுக்கு மட்டுமே உரிமையுடையதாகக் கொள்ள முடியும். இப்பழமொழிகளின் நிறைகுறை அனைத்தும் உழுவோனுக்கே உரிமை உடையன. 'குடித்தனமே துரைத்தனம்' எனக் கூறி உழவன் தனக்குத் தானே மகுடம் சூட்டிக் கொண்டாலும் 'அழுது கொண்டிருந்தாலும் உழுது கொண்டிரு' எனத் தன் நடைமுறை நிலையைக் கூறினாலும், 'வரப்பே தலகாணி வைக்கோலோ பஞ்சு மெத்தை' எனத் தனக்குத் தெரிந்த உவமையைக் கூறி மகிழ்ந்தாலும் 'வேளாண்மையே வல்லாண்மை' எனக் கூறித் தன்னைத் தானே வியந்தாலும் இவை அத்தனையும் கள்ளம் கபடமற்ற வெளிப்பாடு எனக் கொள்ளுதல் வேண்டும்.

வேளாண் பழமொழிகளைச் சில வகைப்பாடுகளில் பகுத்துப் பார்க்கலாம். பொதுவாகப் பயிர்த் தொழிலின் பெருமைகளைக் கூறுவன, உழவரின் நேரடிப் பார்வையில் பயிர்த் தொழில் நடைபெறுவதன் இன்றியமையாமையைச் சுட்டுவன, பயிர்த் தொழில் செய்யத் தக்கவர் பற்றியன, பயிர்த் தொழிலுக்குரிய நிலத்தைப் பற்றியன, பயிர்களைக் காக்கும் முறைகள் பற்றியன, பயிர் தொழிலுக்கேற்ற பருவ காலம் மற்றும் மழை பற்றியன, பயிர்த் தொழிலுக்கேற்ற காற்று எவை என்பதைச் சுட்டுவன, மழையின் அறிகுறிகளைச் சுட்டுவன, மழையின் தேவை மற்றும் தேவையின்மையைச் சுட்டுவன, உழவின் இன்றியமையாமை உழவு செய்யும் முறை ஆகியவற்றைச் சுட்டுவன, எரு இடுதலின் இன்றியமையாமையைச் சுட்டுவன, நீர் பாய்ச்சல் நெறிமுறைகள் பற்றியன, களையெடுத்தல் பற்றியன, விதையிடும் காலம், விதைக்கும் முறைகள் பற்றியன, நெல்லிலிருந்து ஏனைய தானியங்கள் வரை ஒவ்வொன்றையும் விதைத்துக் காப்பது பற்றியன, கரும்பு, தென்னை, பருத்தி போன்ற பணப் பயிர்களைப் பயிரிட்டுப் பாதுகாப்பது பற்றியன, காய்கறிகளைப் பற்றியன, உழவுக்கேற்ற கால்நடைகளைப் பற்றியன, ஆடுமாடுகளை வளர்க்கும் முறைகள்

பற்றியன எனப் பல வகைகளில் இப்பழமொழிகளைப் பகுத்துப் பார்க்கலாம். பயிர்த் தொழிலுக்குரிய பின்புலங்கள் அனைத்தையும் எளிய பழமொழி வாயிலாக அழுத்தம் திருத்தமாகச் சுட்டி இருப்பதைக் கொண்டு உழவர்களின் 'உண்மை அறிவை' எண்ணி மகிழலாம்.

உழவுத் தொழிலை எவர் மேற்கொள்வதில்லை என்பது பற்றிய பழமொழிகள் உண்டு. 'ஏழைப்பட்ட பார்ப்பானும் மேழி தொட்டுப் பார்க்கான்' என்னும் பழமொழியில் பார்ப்பனர்கள் உழவுத் தொழிலைத் தம்மிடமிருந்து விலக்கியிருப்பதை உணர முடிகிறது. இதைப் போலவே செட்டியார்களிடம் வேளாண்மை சிறப்பதில்லை என்பதை, 'செட்டிக்கும் வேளாண்மைக்கும் ஜென்மப் பகை' என்னும் பழமொழி சுட்டுகிறது. 'மேழிக்குரியவன் வெள்ளாளனே' என்னும் பழமொழியில் பயிர்த் தொழில் வேளாளர்க்கு மட்டுமே உரியது எனக் கூறினாலும் உண்மை அதுவன்று. பார்ப்பனர் போன்ற மிகச் சில சமூகங்களை விடுத்து அனைத்துச் சமூகங்களும் உழவுத் தொழிலை மேற்கொள்ளும் சமூகம்தான்.

ஒரு விவசாயிக்கு உழைப்பும் விளைச்சலும் மட்டுமே தெரிந் திருப்பதால் வணிகச் சந்தையில் அவன் தோல்வி அடைந்து விடுகிறான். மீண்டும் மீண்டும் தோற்றுக் கொண்டே இருந்தாலும், மீண்டும் மீண்டும் உழைத்து உற்பத்தியைப் பெருக்கிக் கொண்டு தான் இருக்கிறான். காரணம் பயிர்த் தொழில் என்பது ஒரு விவசாயிக்கு உயிர்த் தொழிலாய் இனிப்பதால்தான். 'உழவின் மிகுந்த ஊதியமில்லை', 'ஏரையிகழ்ந்தார் பேரை யிழந்தார்', 'ஏர் நடந்தால் பேர் நடக்கும்', 'ஓதுவான் எல்லாம் உழுவான் தலைக் கடையில்', 'குடித்தனமே துரைத்தனம்', 'குடியானவனே முடியான வனாம்', 'குடித்தனம் செழித்தால் துரைத்தனம் செழிக்கும்', 'மண்ணை நம்பினவனும் மன்னனை நம்பினவனும் வீணாகான்', 'விவசாயமோ ரசவாதமோ' ஆகிய பழமொழிகள் உழவனின் அளப்பரிய நம்பிக்கையில் பிறந்த பழமொழிகள். 'உழுகிறவன் கணக்குப் பார்த்தால் உழவு கோலும் மிஞ்சாது' என்னும் நடைமுறை உண்மையை விவசாயி தெரிந்திருந் தாலும் அவனுக்கு வேறு தொழில் தெரியாததலின் தெரிந்த தொழிலை எதிர்நிலைச் சிந்தனைக்கு இடம் தராமல் நேர் நிலையில் பார்க்கிறான்.

இக்காலத்தில் வானியல் அறிவியலார் மழை பெய்யும் காலத்தையும் சூறாவளி, புயல் நிலைகளையும் துல்லியமாகக் கணித்துக் கூறுகின்றனர். ஆனால் எளிய உழவர்க்கு வானிலைகளை அளந்தறியும் நுண்ணோக்குக் கருவி, கண்களும் காலகாலமாய்க் கூறப்பெற்று வந்த கருத்துகளுமன்றி அறிவியல் கருவி வேறேது?

தூரத்தில் பெய்கின்ற மழை, அருகிலிருந்து எட்டிப் போகும் மழை, நெருங்கி வரும் மழை, மிதக்கும் வெள்ளம், மழைக்கு லட்சணம், மழை பெய்யும் அறிகுறிகள், விடிகாலையில் பெய்யும் மழை, அடை மழை, கல்லைத் துளைக்கும் மழை, கடலும் வற்றி விடும் இயற்கைச் சூழல், வருவது போலக் காட்டிப் பொய்த்து விடும் மழை என மழை பெய்யும் நுட்பம் குறித்துப் பலபடச் சுட்டியிருக்கின்றனர். காலத்தை அளந்தறியும் இப்பழமொழி களெல்லாம் உழவர் நாவில் திடீரென்று தோன்றுவன அல்ல. கால அடைவில் வளம் பெற்றும் உரம் பெற்றும் வந்தவையே. மழை குறித்த சில பழமொழிகளை அறியலாம். 'தும்பி பறந்தால் தூரத்தில் மழை', 'வெள்ளை வண்ணாத்திப் பூச்சி மிச்சமானால் வெள்ளம் ஜாஸ்தி', 'ஈசல் பறந்தால் மழை மாறும்', 'காலை செல் பூத்தால் அடுத்த மழை அடங்கும்', 'அந்தி ஈசல் பூத்தால் அடுத்த மழைக்கு லட்சணம்', 'எறும்பேறில் பெரும் புயல் வரும்', 'எறும்பு முட்டை கொண்டு திட்டை ஏறின் மழை பெய்யும்', 'தட்டான் பறந்தால் கிட்ட மழை', 'மாலைக் கொசுக்கடி மழையைக் கொண்டு வரும்', 'தவளை கத்தினால் தானே மழை', 'மாடு மயங்கி மானம் பார்த்தால் மழை பெய்யும்', 'கொக்கு மேடேறினால் மழை பெய்யும்', 'நண்டு ஊர நாடு செழிக்கும்', 'கோடிக்கால் மின்னல் விடியற் கால மழை', 'தெற்கே போன வெள்ளி வடக்கே வந்தால் மழை', 'கன்னிச் செவ்வாய் கடலும் வற்றும்', 'கடகச் சந்திர மழை கல்லைத் துளைக்கும்', என வரும் பழமொழிகளெல்லாம் முழுக்க முழுக்க அனுபவ மொழிகள். ஈசல், தட்டான், எறும்பு போன்ற சிற்றுயிரினங்களின் மழைக்காலச் செயல்பாடுகளை இயற்கையுடன் இணைத்து எவ்வளவு நுண்ணிதின் கண்டு தெள்ளிதின் மழைக் குறியை வகுத்திருக்கின்றனர் என்பதை எண்ணி வியக்காமல் இருக்க முடியவில்லை. இயற்கை தோற்றுவிக்கும் மாற்றங்களைச் சிற்றுயிரினங்கள் கட்டியம் கூறி அறிவிக்கின்றனவா? அல்லது அம்மாற்றங்களைக் கண்டு சிற்றுயிரினங்கள் சிலிர்க்கின்றனவா? என்பதை விதந்து கூறமுடியாத அளவிற்கு இரண்டின் செயற்பாடு களும் ஒன்றையொன்று ஈர்த்து நிற்பதை உழவர்கள் கண்டு கண்டு சிந்தையில் உறைய வைத்துத்தான் இத்தகைய பழமொழிகளைப் பொய்யா மொழிகளாக உருவாக்கியிருக்கின்றனர். இத்தகைய இயற்கையின் செயற்பாடுகளைத் துய்த்தலுக்கு என்றில்லாமல் அறிவியல் கணிப்பிற்கு உள்ளாக்கியிருப்பதன் ஒட்பம் உணர்ந்து மகிழத்தக்கது.

மழைப் பொழிவைக் கணிப்பதைப் போலவே மழை எந்தெந்த மாத நட்சத்திரங்களில் பெய்யும்/பெய்யாது என்பதையும் பழமொழி யாகக் கூறியிருக்கிறார்கள். அசுவினி நட்சத்திரத்தில் மழை பெய்தால்

சர்வ நாசமாம்; பரணியில் மழை பெய்தால் தரணியெல்லாம் செழிக்குமாம்; சித்திரையில் மழை பெய்தால் பொன்னேர் கட்டலாமாம்; வைகாசித் தேய்பிறை நான்காம் நாள் பெய்தால் அது கடலை நிறைக்கும் பெருமழையாம்; பெய்யாவிடில் மாசி மாதத்தில் ஏரிக்குள் எள் விதைக்குமளவு ஏரி வற்றிவிடுமாம். ஆருத்திரா கார்த்திகை பகலில் பிறந்தால் ஆறு கார்த்திகைக்கு மழை இல்லையாம்; ஆனியில் அரைச் சாரலாம்; ஆவணியில் முழுச் சாரலாம். ஆடி அமாவாசை அன்று மழை பெய்தால் அரிசி விற்ற விலைக்கு நெல் விற்குமாம்; ஆவணி மாதம் அழுகைத் தூற்றலாம்; புரட்டாசியில் பேய்ந்தாலும் பெய்யும், காய்ந்தாலும் காயுமாம்; ஐப்பசியில் அடை மழையாம்; சித்திரை நட்சத்திரத்தில் பேய்ந்தால், தேசம் பாழாகி விடுமாம்; கார்த்திகை மாதம் கலம் கழுவ விடாது மழை பெய்யுமாம். அப்போது பெய்யும் மழையில் கல்லுக்குள் இருக்கும் புல் கூடக் கதிராகுமாம்; கார்த்திகை மாத முடிவிலேயே கால் கோடை உண்டாகி விடுமாம்; மார்கழி பிறந்தால் மழைக்கு ஓய்வாம்; தை பிறக்கத் தரை வறலுமாம்; மாசிப் பனி மச்சு வீட்டையும் துளைத்து விடுமாம்; பங்குனியில் மழை பெய்தால் பலனெல்லாம் சேதமாம். இப்படி ஒவ்வொரு மாதமும் மழை பெய்யும் தன்மையையும் அதன் எதிர்விளைவு களையும் பழமெர்ழி வாயிலாகச் சுட்டியிருக்கின்றனர். இத்தகைய பழமொழிகளை உருவாக்கியவர்கள் உழவர்களாதலின் பயிர்த் தொழில் பயன்பாட்டை ஒட்டியே ஒவ்வொரு பழமொழியையும் உருவாக்கி இருக்கின்றனர்.

மழை பெய்யும் மாதங்களைக் கணித்துக் கூறுவதைப் போலவே எந்தெந்த மாதங்களில் எந்தெந்தத் தானியங்களை விதைத்தால் விளைச்சல் அதிகம் கிடைக்கும்; அல்லது விதை முதல் கூடக் கிடைக்காமல் பாழாகிவிடும் என்பதையும் பழமொழிகளாக்கி யுள்ளனர். 'ஆடிப்பட்டம் தேடி விதை' என்பது ஊரறிந்த பழமொழி; அதைப் போலவே 'ஆவணிப் பட்டம் அழுகு பட்டம்' என்பது அனைவரும் அறிய வேண்டிய பழமொழி. ஐப்பசி மாதத்தில் நெல் நட்டால் அவலுக்குக் கூட நெல் எடுக்க முடியாது; தைக் குருவை (நெல்) தவிட்டுக்கும் ஆகாது என்பனவெல்லாம் மரபு வழியாகப் பேசிப் பேசி உறுதி செய்யப்பெற்ற பழமொழிகள்.

# வங்காளப் பழமொழிகளில் இராமாயணம்

**ஆ. பஞ்சாமிர்தம் & சொ. முத்தையா**
*விசுவ-பாரதி நடுவண் பல்கலைக்கழகம்*
*சாந்திநிகேதன் - 731 235*

வங்காள மொழியில் பத்தாயிரத்திற்கும் மேற்பட்ட பழமொழிகள் காணப்படுகின்றன. இப்பழமொழிகளில் ராமாயணக் கதைகளின் ஆதிக்கம் மிகுதியாகக் காணப்படுகின்றது. இதனால் பழமொழி களின் உருவாக்கத்திற்கு ராமாயணக் கதைகள் பெரிதும் பயன் பட்டுள்ளன என்பதை அறிய முடிகிறது. சொல்ல வந்த கருத்தை அழுத்தமாகச் சொல்லுவதற்கு அனைவரும் அறிந்துள்ள கதை களைப் பயன்படுத்திச் சொன்னால் புரிந்து கொள்வது மிக எளிதாக அமைந்து விடுகிறது. எனவே ராமாயணக் கதைகளின் அடிப்படையில் வங்காளப் பழமொழிகள் பல தோன்றியுள்ளன எனலாம்.

ராமாயணத்தில் பல்வேறுபட்ட பாத்திரங்களும், கதை நிகழ்ச்சிகளும் காணப்படுகின்றன. ராமாயணத்தில் ராமன் ஒரு லட்சிய மனிதனாகப் படைக்கப்பட்டிருக்கிறான். மக்களைத் தன் இன்னுயிர் போலக் காத்தவன், மாவீரன், உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற வேறுபாடின்றி அனைவரையும் ஒன்றாகப் பாவித்த பண்பாளன், அருள் உள்ளம் கொண்டோன் இவையும் இன்னும் இவை போன்ற நற்பண்புகள் பலவும் கொண்டவனாகப் படைக்கப் பட்டிருக்கிறான். இவற்றுள் வலிமை படைத்த ராவணனையே வென்ற மாவீரன் ராமன் என்பதை ஒரு வங்கப் பழமொழி எடுத்துக் கூறுகிறது. மால்யவான் பெண்வழிப் பேரனே ராவணன் ஆவான். தன்னுடைய பெருவீரத்தாலும், சிறப்பான வரங்களின் வலிமை யாலும் செல்வத்திற்குரிய குபேரனையே வென்று இலங்கையைப் பிடுங்கிக் கொண்டான் ராவணன். எல்லாவற்றிற்கும் மேலாக யாராலும் வெல்ல முடியாத - உயிரைப் பறிக்கக்கூடிய யமனையே வென்றான் ராவணன். அப்படிப்பட்ட பராக்கிரமசாலியான ராவணனையே ராமன் வென்றான் என்ற கருத்தில் ஒரு பழமொழி காணப்படுகிறது.

ஸமந் - தமந் ராபண் ராஜா, ராபண் - தமந் ராம் |

**பதவுரை**

ராபண் ராஜா - அரக்கர் குலத்தில் மன்னாதி மன்னனாக விளங்கிய ராவணன், யமன் - (உயிரை வாங்கும்) யமக் கடவுளையே, தமந் - வென்றான், ராபண் - (அப்படிப்பட்ட வல்லமையுள்ள) ராவணனை, ராம் - ராமன், தமந் - வென்றான். வல்லவனுக்கு வல்லவன் வையகத்தில் உண்டு என்னும் பழமொழிக்கு எடுத்துக் காட்டாக ராமன் விளங்கினான் என்பதை இப்பழமொழி எடுத்துக் காட்டுகிறது.

அஜகரேர் தாதா ராம் |

**பதவுரை**

அஜகரேர் - மலைப் பாம்பு(க்கும்), தாதா - உணவளித்துக் காப்பாற்றியவன், ராம் - ராமன், மலைப்பாம்பு மிகப் பெரிய உருவமுடையது. தன்னிடம் வந்து மாட்டிக் கொள்ளும் மான், ஆடு போன்றவற்றை உடலுக்குள் வைத்துச் சுருட்டி, நொறுக்கிக் கொன்று தின்றுவிடும். அப்படிப்பட்ட அம்மலைப் பாம்புக்கும் ஒருமுறை சோதனை மிக்க காலம் வந்தது. இரையே கிடைக்க வில்லை. மரணத் தருவாயில் கிடந்தது. 'உயிர்களிடத்து அன்பு வேணும் - தெய்வம் உண்மையென்று தானறிதல் வேணும்' என்பதற் கிணங்க உயிர்போகக் கூடிய நிலையில் கிடந்த பாம்பிடத்தும் கருணை உள்ளம் கொண்டு உணவளித்துக் காப்பாற்றினான் ராமன். மனிதர்களிடத்து மட்டுமின்றி மற்ற உயிர்களிடத்தும் மலைப் பாம்பிடத்தும் கருணை உள்ளம் கொண்டு உயிர் வாழ்வதற்குரிய உணவளித்துக் காப்பாற்றினான் ராமன் என்பதை நினைவு படுத்துவதாக அமைந்தது இப்பழமொழி.

சத்தியவான், நளன் என்று நினைத்தவுடன் முறையே சாவித்திரி, தமயந்தி உடனே நினைவுக்கு வருவதுபோல ராமன் என்று நினைத்தவுடன் சீதைதான் உடனே நினைவுக்கு வருகிறாள். ராமாயணத்தில் ராமனுக்கு அடுத்தபடியாக நினைவுக்கு வருபவள் சீதைதான். ராவணனால் கடத்திச் செல்லப்பட்ட நற்குல நங்கை யாகிய சீதை இலங்கையில் இருந்தபோது ராமன் நினைவாகவே இருந்தாள். அதுபோலவே சீதையைப் பிரிந்திருந்த ராமனும் சீதை நினைவாகவே இருந்தான். கார்காலம் வரவும் ராமன் சீதையின் பிரிவால் மிகவும் துன்புற்றான்; மனம் கலங்கினான். சீதையின் அரவணைப்பில் இல்லையே என்று ஏங்கித் தவித்தான். சீதையின் அரவணைப்பில் இல்லாமல் ஏங்கித் தவித்தபோது சீதை ஆற்றிய பெரும்பங்கினைக் கிட்கிந்தாவிலுள்ள குரங்குகள் ஆக்கிரமித்துக் கொண்டன என்னும் கருத்தில் ஒரு பழமொழி காணப்படுகிறது.

ஸீதா ஹாரா ஹொயே ராமேர் பாந்தர் ஆதர் |

**பதவுரை**

ஸீதா ஹாரா ஹொயே - (ராவணனால் அபகரித்துச் செல்லப் பட்ட) சீதையை (ராமன்) பிரிந்திருந்தபோது, பாந்தர் - (கிட்கிந்தா விலுள்ள) குரங்குகள், ஆதர் - அரவணைப்பில், ராமேர் - ராமன் (இருந்தான்).

லட்சுமணன் தொடர்பான பழமொழிகளும் காணப்படுகின்றன. அவற்றுள் ஒன்று வருமாறு :

லக்ஷ்மண் போஜந் |

**பதவுரை**

லக்ஷ்மண் - லட்சுமணன், போஜந் - சாப்பாடு. விசுவாமித்ர முனிவர் லட்சுமணனுக்கு ஒருமுறை ஆசிர்வாதம் செய்தார். அந்த ஆசிர்வாதத்தால் லட்சுமணனுக்கு ஒரு பலன் கிட்டியது. ராமனோடு வனவாசத்தில் இருந்தபோது லட்சுமணன் தொடர்ந்து பதினான்கு ஆண்டுகள் சாப்பிடாமலும், தூங்காமலும் இருந்து வந்தான். இலங்கையிலிருந்து சீதையை மீட்டுக் கொண்டு அயோத்திக்கு மீளவந்த ராமன் முடிசூட்டிக் கொண்ட பின்னரே லட்சுமணன் தன் உபவாசத்தைக் கைவிட்டான் என்ற கருத்தை மேலைப் பழமொழி வெளிப்படுத்திக் காட்டுகிறது.

மாரீசன் தொடர்பான பழமொழிகளும் காணப்படுகின்றன. வனவாசத்தில் இருக்கின்ற சீதையை வஞ்சகமாகக் கவர்ந்து கொண்டு வருவதற்கு எண்ணுவதாகவும், அதற்கு மாரீசன் பொன்மானாக உருக்கொண்டு தனக்குத் துணை செய்ய வேண்டும் என்றும் ராவணன் மாரீசனிடம் வேண்டிக் கொண்டான். மாரீசன் ராவணனுக்கு மாமன் முறையினன். மாமன் என்ற முறையில் ராவணனுக்குச் சில நல்லுரைகள் எடுத்துச் சொன்னான். ராவணன் சினந்து பேச, மாரீசன் அதைப் பொருட்படுத்தாது மீண்டும் அறிவுரை கூறிப் பார்த்தான். கேட்டபாடில்லை. சினம் மிகுந்த ராவணன் தான் ஏவிய தொழிலைச் செய்யச் சொல்லிக் கட்டளை யிட்டான். மறுத்தால் கூரிய வாளால் மாரீசனை வெட்டிக் கொன்றுவிட்டு, தன் மனத்தில் எண்ணிய செயலைச் செய்யாமல் விடமாட்டேன் என்று சூளுரைத்தான். ராவணனுடைய சினத்தையும் உறுதியையும் கண்ட மாரீசன் இனி நல்லுரை கூறிப் பயனில்லை என்பதை உணர்ந்தான். ராவணனின் காமமிகு செய்கை கண்டு இறுதியில் வேறு எந்த வழியும் தெரியாது பொன் மானாகி சீதையைக் கவர்ந்து வருவதற்கு மாரீசன் உடன்பட்டான். கடைசியில் ராமனின் அம்புபட்டு இறந்தான். இதை ஒரு பழமொழி எடுத்துக் கூறுகிறது.

ராபணேர் ஹாத்தே ஜேமந் மாரீச் குரங்க் |

**பதவுரை**

ராபணேர் ஹாத்தே - ராவணன் கையில், மாரீச் - மாரீசன், குரங்க் - பொன்மானாக, ஜேமந் - எப்படி (மாட்டிக் கொண்டானோ அப்படி). குரங்கு கையில் அகப்பட்ட மாலைபோல ராவணன் கையில் மாரீசன் அகப்பட்டுக் கொண்டான் என்பது பொருள்.

குளத்துக்கும் குளத்தின் கரைக்கும் இடையில் ஒருவன் நின்றுகொண்டிருந்தான். அப்போது எதிர்பாராதவிதமாகப் புலி யொன்று திடீரென்று வந்து கரையில் நின்றது. புலி அடித்துக் குதறிக் கொன்றுவிடும் என்று உயிருக்குப் பயந்து குளத்தில் குதித்துத் தப்பித்துக் கொள்ளலாம் என்றெண்ணியவனுக்குப் புலியைவிட மற்றொரு பெரிய ஆபத்து ஒன்று காத்திருந்தது. அவன் நின்று கொண்டிருக்கும் பக்கம் நோக்கி நீரில் முதலையொன்று வந்து கொண்டிருந்தது. இந்நிலையில் அவன் என்ன செய்ய முடியும்? எந்த வழியிலும் தப்பித்து உயிர் பிழைத்துச் செல்ல முடியாது என்ற நிலைதான் உருவாகும். இக்கருத்தினை ஒரு வங்கப் பழமொழி எடுத்துக் கூறுகிறது.

ஜொலே குமீர், டாங்காய் பாக் |

**பதவுரை**

ஜொலே - நீரில், குமீர் - முதலை, டாங்காய் - கரையில், பாக் - புலி. ராமாயணத்தில் மாரீசனைப் பற்றிக் குறிப்பிடும்போது இவ்வங்கப் பழமொழியின் கருத்து எதிரொலிக்கிறது. ஒரு பக்கம் ராவணனின் இச்சைப்படி பொன்மானாகி சீதையைக் கவர்ந்து கொண்டு வருவதற்கு உடன்பட்டே ஆக வேண்டும். இல்லை யென்றால் மாரீசன் ராவணனால் கொல்லப்படுவான். மற்றொரு பக்கம் ராமனுக்கு எதிராகப் பொன்மானாகிச் செயல்பட்டால் ராமனால் கொல்லப்படுவான். ஒரு பக்கம் உரலுக்கு இடி; இருபக்கம் மத்தளத்துக்கு இடி என்பதுபோலத் தர்ம சங்கடத்தில் - இக்கட்டில் மாட்டிக்கொள்ளும் நிலைக்குச் சொல்லப்படும் பழமொழி இது. எந்த வழியிலும் இருபக்கமும் உயிர் இழப்பைத் தவிர்க்க முடியாத நிலையை மாரீசன் எண்ணிப் பார்த்தான், ராவணன் கையால் இறப்பதைவிட ராமன் கையால் இறப்பதே மேல் என்றெண்ணி ராவணனின் கருத்துக்கு உடன்பட்டான். எப்படி இருப்பினும் மாரீசனின் துக்கமிகுந்த நிலையை ஒரு பழமொழி எடுத்துக் காட்டுகிறது.

ராமே மார்லேஓ மொர்போ, ராபணே மார்லேஓ மொர்போ |

**பதவுரை**

ராமே - ராமனாலும், மார்லேஒ மொர்போ - (மாரீசனாகிய நான்) அடித்துக் கொல்லப்படுவேன், ராபணே - ராவணனாலும், மார்லேஒ மொர்போ - அடித்துக் கொல்லப்படுவேன். எந்த வழியிலும் தப்பிக்க முடியாது என்ற இதே கருத்து மற்றொரு பழமொழியிலும் காணப்படுகிறது.

ஏகுலே ராம், பேச்சுலே ராபண் |

**பதவுரை**

ஏகுலே - முன்னால் (போனால்), ராம் - ராமன், பேச்சுலே - பின்னால் (போனால்), ராபண் - ராவணன், இருதலைக் கொள்ளி எறும்புபோல எந்தப் பக்கத்திலும் உயிர் பிழைத்துத் தப்பிச் செல்ல முடியாது என்னும் பொருளில் இப்பழமொழி வழங்கப்படுகிறது.

ராவணன் தம்பி கும்பகர்ணன் பற்றிய செய்தியும் வங்கப் பழமொழியில் காணப்படுகிறது. உப்பிட்டவரை உள்ளளவும் நினை என்னும் பழமொழிக்கு எடுத்துக்காட்டாக விளங்கியவன் கும்பகர்ணன். தூங்கத் தொடங்கினால் அவனை எழுப்புவது எவ்வளவு கடினம் என்பதை ராமாயணம் விளக்கிக் கூறுகிறது. தூங்கினவன் தூங்கிக் கொண்டே இருந்தான். அரக்கர்கள் பலர் கூடித் தூக்கத்தில் கிடந்தவனைப் பெரிதும் உபத்திரப்படுத்தினார்கள். இப்படி உபத்திரவம் செய்தபின் கும்பகர்ணன் கண்ணைத் திறந்து தூக்கத்திலிருந்தவன் கொசுக் கடிக்காகக் கையால் தட்டுவதுபோல அனைவரையும் தட்டித் துரத்திவிட்டு மீண்டும் கொட்டாவி விட்டான் என்றால் அவனது தூக்கத்தின் தன்மையை என்னவென்று சொல்வது? மிகுதியாகத் தூங்குபவனைக் குறிப்பிட்டுச் சொல்லும்போது ''கும்பகர்ணன் தம்பி இவன்'' என்று சொல்லக் கேட்கலாம். அதை நினைவுபடுத்துகிறது ஒரு பழமொழி.

குணேர் கத்தா போல்போ கொத்தோ கும்பகர்ண நித்ரகொத்தா |

**பதவுரை**

கும்பகர்ண - கும்பகர்ணன், நித்ரகொத்தா - தூக்கத்தின், குணேர் கத்தா - குணம், கொத்தோ - எவ்வளவு (என்று), போல்போ - சொல்ல வேண்டுமா? கும்பகர்ணன் தொடர்ந்து ஆறுமாதம் தூங்கக் கூடியவன். தூங்கக்கூடிய அவனது குணத்தைப் பற்றிச் சொல்லவா வேண்டும் என்ற பொருளில் அமைந்தது இப் பழமொழி.

# முதுவான் பழங்குடிகளின் கிளை மரபுகள்

*எஸ். இராஜேந்திரன்*
*பல்கலைக்கழகக் கல்லூரி*
*திருவனந்தபுரம்*

முதுவான் பழங்குடியினர், கேரளாவிலுள்ள இடிக்கி மாவட்டத்தில் மலையோரக் காடுகளில் குடிசைகளை அமைத்து வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் நாகரிகம் அடைந்த மக்களுடன் அதிகத் தொடர்பு கொள்ள விரும்புவதில்லை. இவர்கள், தங்களைப் பாண்டிய வம்சத்தினர் என்று கூறிக் கொள்கின்றனர். இவர்களின் முன்னோர்கள் மதுரையிலிருந்து வந்தவர்கள் என்றும் தெரிவிக் கின்றனர். இவர்கள் இன்றும் தனிக் கலாச்சாரத்தோடும், பண்பாட்டோடும் வாழ்ந்து வருகின்றனர். இம்மக்களின் கிளை மரபுகள் பற்றி ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

**கிளை மரபு**

காட்டில் வாழும் பழங்குடி மக்களாக இருந்தபோதும் இவர்களிடையே காணப்படும் கிளை மரபுகள் நம்மைப் பலவாறு சிந்திக்க வைக்கின்றன. 'பழங்குடி மக்களிடையே சமுதாயக் கட்டுக் கோப்பிற்காகவும், சமுதாயச் செயற்பாடுகளுக்காகவும் சில அரசியல் அமைப்புக்கள் பின்பற்றப்பட்டு வருவதாகச் சமூகவியலறிஞர்கள் குறிப்பிடுவது சிந்தக்கத் தக்கது'[1].

**கிளை மரபுகளும் உட்கிளை மரபுகளும்**

கிளை மரபுகளும், உட்கிளை மரபுகளும் ஒவ்வொரு சாதி யிலும் உள்ளன. அதிலும் குறிப்பாகப் பழங்குடியினரிடையே கூடு தலாகக் காணப்படுகின்றன. 'க்ளான்' என்ற ஆங்கிலச் சொல்லுக்குத் தமிழில் 'கால்வழி' என்ற கலைச் சொல்லைப் பயன்படுத்து கின்றனர். இந்த சொல்லுக்குப் பலவகையான தமிழ்க் கலைச் சொற்களும் உள்ளன. அவை, பொதுக்குடி, மரபுக்குழு, பங்காளிக் கிளை, தந்தைவழி உரிமைச் சுற்றம், குலமரபு இனம், கிளை மரபு, குறுகிய தனிப்பற்றுடைய குழு, தனிக்குழு, சிறுகுழு என்பனவாகும். இவை *'Clan'* என்ற சொல்லின் பல்வேறு பண்புகளைக் காட்டுவனவாக அமைந்துள்ளன[2].

'கிளை மரபு என்பது ஒரு கூட்ட மக்கள் தங்களுக்குள்ளேயே கொடுக்கல் வாங்கல் உள்ளவர்களாகவும், சிறப்புரிமை உடையவர் களாகவும், கடப்பாடுடன் கட்டுண்டவர்களாகவும், உண்மையாகவோ, கற்பனையாகவோ ஒரே மூதாதையரின் மரபில் வந்தவர் என்று நம்பிக்கை உடையவராகவும் இருப்பர். மரபுகள் தோன்றக் காரணமாக இருந்த குடும்பத் தலைவருக்குரிய பெயரால் கிளை மரபுகள் அறியப்படும் என்பது ரோஜர்பியர்சனின் கருத்து'[3].

'சாதிகள் கிளை மரபுகளால் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு கிளை மரபுகளும், அதனதன் வேலைகளைக் கவனித்து வந்தன வென்றும், பஞ்சாயத்துக்கள் அல்லது குழுக்களை அமைத்து மாறுபட்ட பண்புகளுடன் சுதந்திரமாகச் செயல்பட்டதுடன் ஒன்றுக்கொன்று கட்டுப்பட்டதாக இருக்கவில்லை என்றும் செறிங் குறிப்பிடுகின்றார்'[4].

ஆனால் இக்கிளைமரபுகள் நம் நாட்டில் மட்டுமே காணப்படுவனவல்ல. உலக நாடுகளிலும் இவை பொதுவாகக் காணப்படுகின்றன. கனடா நாட்டிலுள்ள 'சிம்சியம்' இனத்தார் நான்கு வகையான தாய்வழிக் குடிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தனர். அவர்கள் தம்மினத்திற்குப் புறமே அமைந்த இனங்களில்தான் மணம் செய்து கொள்வர். இவ்வினத்தாரின் நான்கு பிரிவுகள் இன்னும் சிறிய பிரிவுகளாகவும் பிரிக்கப்பட்டுள்ளன. இப்பிரிவுகள் 'கழுகுகள்', பெருங்காக்கைகள், 'ஓநாய்கள்', 'கரடிகள்' என்ற பெயர்கள் கொண்டவை என்கின்றார். லெவிஸ்ட்ராஸ்[5]. எனவே கிளைமரபு என்பது உலகப் பொதுவான ஒன்று எனலாம்.

'மானிடவியலில் சமூக அமைப்பானது ஒரு தனிப்பொருள் பெற்றிருக்கிறது. ஏனென்றால் எல்லா மனித சமுதாயங்களும் திருமணம் செய்து கொள்ளக்கூடாத உறவுமுறைகளை வலியுறுத்து வதில் ஒன்றித்திருக்கின்றன. நாம் அறிந்தவர்களில் ஒரு இனத்து மக்களும் எல்லா பெண்களையும் புணர்ச்சிக்குரியவர்களாகக் கருத வில்லை. இது உட்குழு மணமுறையைத் (Inbreeding) தடுப்பதற்காக ஏற்பட்டதன்று. காரணம் உலகத்தின் பெரும் பகுதிகளில் தாயின் உடன் பிறந்தானின் மகளே முறைப்பெண்ணாக இருக்கின்றனர். இம்மாதிரி உறவுத்தடைகள் பல மக்களிடையே பல்வேறுபட்ட உறவினர்களுக்கு விதிக்கப்படுகின்றன. ஆனால் எல்லா மக்களும் ஒரு கட்டுப்பாட்டைக் கொண்டிருக்கின்றனர். இந்தத் தகாப்புணர்ச்சி (Incest) என்பது எல்லா மக்களிடையேயும் பண்பாடு களில் விரிவாகக் கவனிக்கப்படுகிறது'[6] என்ற கருத்திற்கேற்ப முதுவப் பழங்குடியினரும் திருமணத்திற்காகப் பல கிளை மரபு களையும், உட்கிளை மரபுகளையும் பின்பற்றி வருகின்றனர்.

முதுவப் பழங்குடிகள் பல்வேறு கூட்டங்களாகக் (கிளைகள்) பகுக்கப்பட்டுள்ளனர். மேலக்கூட்டம், கானக்கூட்டம், சூசனக் கூட்டம், கணையாட்டுக் கூட்டம், எல்லிக்கூட்டம், புத்தானிக் கூட்டம் போன்ற கூட்டங்களையும் அவற்றின் உட்கிளை மரபு களையும், கிருஷ்ண ஐயரும்[7] சத்திவேலும்[8] விளக்கியுள்ளனர். இவை தவிர அரசக்கூட்டம், மந்திரிக் கூட்டம், மண்ணடியார் கூட்டம், பிராமணக் கூட்டம், வேணாட்டுக் கூட்டம், வெண்டிக்காரர் கூட்டம் போன்ற கூட்டங்களும் அவற்றின் உட்கிளை மரபுகளும் கள ஆய்வின்போது அறிய முடிந்தது. அவை பின்வருமாறு.

**அரசக் கூட்டம்**

இக்கூட்டத்தைச் சார்ந்தவர்கள் அரசர்களாகத் தேர்ந்தெடுக்கப் படுவர். இவர்களிடையே 'பாண்டிவாக்கா', 'காளிவாக்கா' என்பன போன்ற கிளை மரபுகள் உள்ளன.

**மந்திரிக் கூட்டம்**

மந்திரிக் கூட்டத்தினர் அரசனுக்குத் துணையாக மந்திரிகளாக இருந்தனர். இவர்கள் அரச கூட்டத்திற்கு அடுத்தப்படியாகக் கருதப்பட்டனர். குற்றவாளிகளை விசாரிக்கும்போது அரசனுக்கு அருகில் இருப்பர். வரிகளையும், அபராதங்களையும் இவர் வாங்குவர். 'முட்டத்தாமர', 'கெண்டிக்குதிரா' என்னும் இரு உட்கிளை மரபினரைக் கொண்டது இக்கூட்டம்.

**மண்ணடியார் கூட்டம்**

இக்கூட்டத்தினர் மந்திரிக் கூட்டத்தாருக்கு அடுத்தப்படியாகக் கருதப்பட்டனர். இவர்கள் மந்திரிகளுக்கு உதவியாக இருந்தனர். நிலபுலன் சம்மந்தமான காரியங்களை இவர்கள் கவனித்தனர்.

**பிராமணர் கூட்டம்**

முதுவான் பழங்குடியினர் மிகுந்த இறை நம்பிக்கை உடையவர்கள். இவர்கள் குடிகளிலும், வீடுகளிலும் தெய்வங் களுக்கு வழிபாடு செய்கின்றனர். கோயில் இல்லாத குடிகளையே பார்க்க இயலாது. இக்கூட்டத்தினர் கோயில் வேலைகளைக் கவனித்தனர். இவர்களிடையே 'பட்டக்காரன்', அம்பிராமன்' என்னும் இரு பிரிவுகள் உள்ளன. பொங்கலின்போது பூணூல் இடும் வழக்கம் இன்றும் இவர்களிடையே உள்ளதாக அங்கப்பன் முதுவான் (இடமலைக்குடி) குறிப்பிடுகின்றனர்.

**வேணாட்டுக் கூட்டம்**

வேணாட்டுக் கூட்டம் 'வெலியமுடுக்கரர்', 'எளையமுடுக்கரா' என்னும் இரு உட்கிளை மரபினையடையது. 'வேணாடு' என்பது

பண்டைய திருவிதாங்கூர் பகுதியில் அடங்கும். இது இன்று கல்குளம், விளவங்கோடு ஆகிய இருவட்டங்களைக் (தாலுகா) கொண்டது. இதனைத் தொன்மைச் சேர மரபினர் ஆண்டனர் என்பர்[9]. எனவே, இக்கூட்டத்தினர் திருவிதாங்கூர் அரச மரபினைச் சார்ந்தவர்களாக இருக்கலாம்.

**வெண்டிக்காரர் கூட்டம்**

வெண்டிக்காரர் கூட்டம், 'எளையாக்கு', 'ஏழைமுடுகு' என்னும் இரு பிரிவுகளைக் கொண்டது. மேலும் இவர்களிடையே 'கானான் கூட்டம்', 'தேவான் கூட்டம்' என்னும் இரு உட்கிளை மரபினர் இருப்பதாகவும் தெரிகின்றது[10].

முதுவான்களிடையே காணப்படும் கிளை மரபுகளைப் போலவே, தென் இந்தியப் பழங்குடிகளான குறும்பர்க்குள்ளே, 'கசவர்', 'பிட்டான்' போன்ற உட்கிளை மரபுகள் உள்ளன[11]. இருளரிடையே 'குப்பெ, சப்பெ, தேவனெ, கல்கட்டி, கொடுவா, பங்கெ, குறுநகெ, பேராத்' என்னும் எட்டு வகையான உட்கிளை மரபுகள் உள்ளன[12].

முதுவான்களிடையே பதினான்கு வகையான கிளை மரபுகளும். நாற்பத்தி ஒன்பது வகையான உட்கிளை மரபுகளும் உள்ளன. இவர்கள் கிளை மரபினைக் 'கொத்து' என்ற சொல்லால் குறிப்பிடுகின்றனர். 'இருளர் கிளை மரபினைச் 'செடி' என்கின்றனர்[13]. முன்பு இவர்களிடையே பலவகையான கிளை மரபுகள் இருந்த போதிலும் இன்று மூன்று வகையான கிளை மரபுகள் மட்டுமே உள்ளன. அவை 'எல்லிக்கூட்டம்', 'சூசனக் கூட்டம்', 'கணையாட்டுக் கூட்டம்' என்பன. 'புத்தானிக் கூட்டத்தினர்' கேரள மாநிலத்தில் இல்லை என்கின்றனர்.

**முடிவுரை**

கிளை மரபுகளின் தோற்றம் குறித்து ஆழமாகச் சிந்திக்கத் தக்கனவாகும். ஒவ்வொரு கிளை மரபிற்கும் இடைப்பட்டிருக்கும் பெயர்கள் பற்றியும் இன்னும் ஆய்வுகள் தேவை. கிளை மரபுகள் கலியாணம் செய்து கொள்வதற்கு மட்டுமன்றித் தலைமை பொறுப்புக்களின் அடிப்படையிலும் அமைந்திருக்க வாய்ப்பு உள்ளது. அரசக் கூட்டம், மந்திரிக் கூட்டம், மண்ணடியார் கூட்டம், பிராமணக் கூட்டம், வேணாட்டுக்கூட்டம் போன்ற கூட்டங்கள் குறித்த ஆழமான ஆய்வு இன்னும் தேவை.

**குறிப்புகள்**

1. *Shambhular Doshi, BHILS, Sterling Publishers, New Delhi, P. 36*

2. ஆர். பெரியாழ்வார், இருளர் வாழ்வியர், தமிழ் நூலகம், சென்னை, 1976, ப. 24.
3. Roger Pearson, Introduction to Anthropology, Holt Rinehart and Winston, INC, New York, Chicago San Francisco Atlanta Dalls, Montreal Toronts London, Sydny, 1974, P. 181.
4. Murdoch, Caste in India, Review of Rawat Publications, 1977, P. 26.
5. கிளாட்லெவிஸ்ட்ராஸ், ஆஸ்டிவாலின் கதை (தமிழில்) சரஸ்வதி வேணுகோபால், நாட்டார் வழக்காற்றியல், நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுக் கழக இதழ், தொகுதி - 2, 1988, ப. 38.
6. ருத்பெனிடிக்ட், பண்பாட்டுக் கோலங்கள், (தமிழில்) கி.பூ. சுப்பிரமணியன், தமிழ் வெளியீட்டுக் கழகம், 1964, ப. 62.
7. L.A. Krishna Iyer, The Travancore Tribes and Castes, Volume - II, Govt. Press, Trivandrum, 1964, P. 61-68.
8. சு. சக்திவேல், தமிழ்நாட்டுப் பழங்குடி மக்கள் வாழ்வும், வரலாறும் மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1980. ப. 181-184.
9. நே. ஸ்டீபன்காம், கன்னியாகுமரி மாவட்ட மீனவர்களின் வாழ்வியல் ஓர் ஆய்வு, தங்கம் பதிப்பகம், கல்லுக்கூட்டம், 1994, ப. 20.
10. பீ. டாக்டர் நசீம்தீன், இடுக்கி மாவட்டப் பழங்குடி மக்களின் வாழ்வியல், பிஎச்.டி. ஆய்வேடு, கேரளப் பல்கலைக்கழகம், 1983, ப. 88.
11. அ.மு. பரமசிவானந்தம், மலைவாழ் மக்கள் மாண்பு, தமிழ்ப் பதிப்பகம், சென்னை, 1967, ப. 169.
12. மேற்படி நூல், ப. 206
13. மேற்படி நூல், ப. 208.

# பக்கிர் இனவரைவியல்

***தி. அங்காளம்மாள்***

*புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம்*
*புதுச்சேரி*

ஒரு குறிப்பிட்ட வாழிடத்தில் நிலையாக வாழாமல் வயிற்றுப் பிழைப்புக்காகப் பருவக் காலத்திற்கேற்றாற் போல் தொடர்ச்சியாக இடம்விட்டு இடம் பெயர்ந்து வாழும் மக்களை நாடோடிகள் (Nomads) என்பார்கள். இவர்களின் இடப் பெயர்வு குறிப்பிட்ட சுழற்சியாக இருக்கும். அதாவது இவர்கள் எங்கிருந்து கிளம்பினார் களோ குறிப்பிட்ட காலத்திற்குள் தொழிலை முடித்துக்கொண்டு மீண்டும் அதே இடத்திற்கே வந்து விடுவார்கள். வேட்டையாடி உணவு சேகரிக்கும் நாடோடிகள், தட்டுமுட்டுச் சாமான்கள் செப்பனிக்கும் நாடோடிகள் மற்றும் வாணிகம் செய்யும் நாடோடிகள் எனப் பலவகைப்படும். சில நாடோடிகள் தொழிலின் அடிப்படையில் அமைவார்கள். இக்கட்டுரையில் குறிப்பிடும் 'பாவா என்கின்ற பக்கிர்' இனத்தவர்கள் பிச்சை எடுக்கும் நாடோடிகள் ஆவார்.

**இன வரலாறு**

பாவா என்றழைக்கும் 'பக்கிர்' இனமக்கள் இஸ்லாத்தின் ஒரு பிரிவினர். இவர்களை இஸ்லாமியரும் மற்ற இனத்தவரும் 'பாவா' அல்லது 'பக்கிர்' என்றே அழைக்கின்றனர். கால ஓட்டத்தில் இவர்களுக்குப் புதிய பெயர்கள் ஏதும் இல்லை. வட்டார ரீதியாகவும் இவர்களின் பெயர்கள் புதிய மாற்றமடையவில்லை.

**இனப்பரப்பு**

இச்சமூகத்தார் நாடோடிகள் என்பதால் தர்காகள் எங்கு இருக்கின்றதோ அங்கெல்லாம் இவர்கள் அதிகமாகக் காணப்படு கிறார்கள். தமிழகத்தில் மிகப் பழமையானது இராமேஸ்வரத் திலுள்ள 'ஆபில்காபில்' தர்காவாகும். மற்றும் மதுரை, குமரி, இராமநாதபுரம், நாகூர், ஏர்வாடி, திருச்சி, கடலூர், சிதம்பரம், புதுவைப் போன்ற பல இடங்களில் உள்ள தர்காகளில் இவர்கள் அதிகமாகக் காணப்படுகின்றார்கள்.

**தோற்றத் தொன்மம்**

இந்த வகைச் சமூகத்தார் சுமார் 2-நூற்றாண்டுகளுக்கு முன் தோன்றியவர்கள். இவர்கள் இஸ்லாம் சமுதாயத்தின் ஒரு பிரிவினர்.

இவர்களின் முன்னோர்கள் தங்களுக்கென நிரந்தரமான இடத்தைத் தேர்ந்தெடுத்து வாழாமல், தங்களின் வாழ்க்கையை மரத்தடி, சத்திரம், சாவடி போன்ற இடங்களை இருப்பிடமாகக் கொண்டார்கள். மற்ற இஸ்லாமியரிலிருந்து இவர்கள் மொழியிலும், உடையிலும், வழிபாட்டிலும் மாறுபட்டுக் காணப்படுகிறார்கள். அவர்கள் தலையில் தொப்பி அணிவார்கள். பாவாக்கள் தலையில் தலைப்பாகை அணிவார்கள். இவர்களின் முன்னோர்கள் செய்த தொழிலையே இன்றும் சில குடும்பங்கள் செய்து வருகின்றன.

**தொழில்**

இவர்களின் முதன்மைத் தொழில் தர்காகளுக்குத் தொண்டு செய்தல் ஆகும். தர்காவில் நடைபெறும் 'சந்தனக் கூடு' விழாவில் இவர்களின் பங்கு அதிகமாயிருக்கும். இவ்விழா ஆரம்பமாகும் முன்னே அவ்வூர் இஸ்லாத்தின் தலைவர்கள் அனைத்து பாவாக் களுக்கும் அழைப்பு அனுப்புவார்கள். அழைப்பைப் பெற்றுக் கொண்ட அனைவருமே இரண்டு வாரங்களுக்கு முன்பே குடும்பத் துடன் கால்நடையாகச் செல்வார்கள். செல்லும் வழியில் ஊர் ஊராக 'டயிரா' (மேளம்) அடித்துப் பிச்சை எடுத்துச் சாப்பிட்டுக் கொண்டுச் செல்வார்கள். இவர்கள் தர்காவை அடைந்ததும் இவர்களுக்கு மிக மதிப்பும் மரியாதையும் கொடுத்து கூடவே உணவு மற்றும் தங்குவதற்குத் தங்கள் வீட்டின் திண்ணையும் கொடுப்பார்கள். விழா முடியும் வரை பாவாக்கள் தினந்தோறும் காலையிலும், மாலையிலும், தர்காவைச் சுத்தம் செய்து சாம்பிராணித் தூபம் காட்டுவார்கள். இவ்விழாவில் 30-க்கும் மேற்பட்ட பாவாக்கள் கலந்துக்கொண்டு பல வீர விளையாட்டுக்களை நிகழ்த்துவார்கள். இவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் உடலை வாள், அலகு, கத்தி இன்னும் பிற ஆயுதங்களால் வருத்திக் கொள்வார்கள். இவ் விளையாட்டைச் செய்யும்போது மக்கள் காணிக்கைகள் போடு வார்கள். அது மட்டுமல்லாமல் மற்ற இஸ்லாமியர்கள் பணம், உணவு, பொருள்கள் மற்றும் தானியங்கள் கொடுத்தனுப்புவார்கள். இது இவர்களின் முதல் தொழிலாகும். இவ்வாறு இவர்கள் கொடுக்கும் பணம் மற்றும் பொருள்கள் இவர்களுக்குப் போதாமையால் இவர்கள் ஒரு துணைத் தொழிலைத் தேடிக் கொண்டார்கள்.

இத்தொழில் வீடு வீடாகக் கடை கடையாகச் சென்று 'டயிரா' (மேளம்) வாசித்துத் தூபம் காட்டிப் பிச்சை எடுப்பது. இவற்றில் கிடைக்கும் உணவு, உடை மற்றும் பணத்தில் பிழைப்பு நடத்தி வருகிறார்கள். இத்தொழிலைப் பெரியவர்கள் மட்டும் அல்ல 15 வயது நிரம்பிய சிறுவர்களும் செய்கின்றார்கள்.

**திருமணம்**

''மனித இனம் தன்பால் உந்துதலை ஒரு நிறுவன அமைப்பிற்குள் நிறைவு செய்துகொள்ள ஏற்படுத்திய முறையே திருமணமாகும்'' (பண்பாட்டு மானிடவியல், சி. பக்தவத்சலபாரதி, ப. 368). இவர்களைப் பொருத்தவரை திருமண முறை என்பது ஒழுங்குப்படுத்தப் பட்டவையாக உள்ளது. இச்சமூகத்தில் அகமணம், புறமணம் உண்டு. ஒருவர் தாம் சார்ந்த குழுவிற்குள் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்னும் சமூக முறையே அகமணம் (Endogamy) எனப்படும் (காண்க மேலது, ப. 380).

**பஞ்சாயத்து முறை**

இச்சமூகத்தில் பஞ்சாயத்து முறை உண்டு. தலைவர் இவர் சமூகத்தைச் சேர்ந்தவராவார். இச்சமூகத்தில் குற்றங்கள் என்று பார்க்கும் பொழுது ஒன்றை மட்டும் குறிப்பிட்டுச் சொல்லலாம். மேலும் அதற்கான தண்டனையும் வரையறுக்கப்படுகின்றது. தர்காவில் நடைபெறும் 'சந்தனக்கூடு' விழாவிற்கு அனைவருக்கும் அழைப்பு அனுப்பப்படும். அழைப்பைப் பெற்றவர்கள் அனைவரும் கண்டிப்பாக விழாவில் கலந்துகொள்ள வேண்டும். அப்படி கலந்துகொள்ளாமல் - போனால் பஞ்சாயத்தைக் கூட்டி யார் வரவில்லையோ அவர்களை இரண்டு மாதங்கள் சமூகத்திலிருந்து ஒதுக்கி வைப்பார்கள். அவர்கள் இரண்டு மாதங்கள் தர்காவில் நுழையக்கூடாது. மற்றும் வெளியில் தொழில் செய்ய 'டயிரா' (மேளம்) வாசிக்கவும் போகக்கூடாது என்று பஞ்சாயத்தார் தீர்ப்பு வழங்குவார். இரண்டு மாதம் சென்ற பிறகு அவர் மீண்டும் சமூகத்தில் சேர்த்துக் கொள்ளப்படுவார். கால ஓட்டத்தில் இந்த தண்டனை முறையும் மாறி வருகின்றது.

**சமய நம்பிக்கை**

''சமயம் என்பது புனிதமானது ஒன்றைப் (sacred thing) பற்றிய நம்பிக்கைகளும் செயல் முறைகளும் அடங்கிய ஓர் ஒழுங்கமைந்த முறையாகும் என்பார். எமிலிதர்கைம்'' சமய நம்பிக்கைகள் இன வரலாற்றுக் காலந்தொடங்கி அங்கெல்லாம் மனித வாழ்வியலோடு மிகவும் வேரூன்றியுள்ளன (பண்பாட்டு மானிடவியல்4 - 1990, சி. பக்தவத்சலபாரதி, ப. 499).

இச்சமூகத்தினர் அடிப்படையில் இஸ்லாத்தைச் சேர்ந்தவர் களாக இருந்தாலும் மற்ற இஸ்லாமியரைப் போன்று இவர்களின் தொழுகை பள்ளிவாசலில் இருக்காது. இவர்களின் தொழுகை பெரும்பாலும் தர்காகளில் காணப்படும். இறைவனிடம் நெருக்க மாகவும் பக்தியும் கொண்டுள்ளவர்களுக்கு இறைவன் ஒருவித

ஆற்றலைக் கொடுக்கின்றான். இவர்களை இஸ்லாமியர்கள் 'வலிமார்கள்' என்றுச் சொல்வார்கள். இந்த வலிமார்கள் அற்புதச் செயல்களை நிகழ்த்தும்போது சக்தியை வரவழைத்து அந்தச் சக்தியைப் பயன்படுத்திக் கொண்டு மீண்டும் அனுப்பி விடுவார்கள். இக்கூற்றை நோக்கும்பொழுது இந்து சமயத்தில் நாட்டார் தெய்வக் கோவிலில் இருக்கும் பூசாரி தனக்குத் தேவைப்படும்பொழுது சாமியை வரவழைத்துப் பிறகு மலை ஏற்றுவதுபோல் இவர் களிடமும் காணப்படுகின்றது.

**சமூக மாற்றம்**

இரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்னும் பின்னும் நாடோடி களாக வாழ்க்கை நடத்தி வந்தார்கள். இவர்கள் கால ஓட்டத்தில் இன்று பெரும் மாற்றங்களை அடைந்து வருகின்றார்கள். இவர்கள் முன்னோர்கள் தங்கள் வாழ்க்கையை நாடோடியாக மாற்றிக் கொண்டு நாகரிகம் தெரியாதவர்களாகப் பண்பாட்டை அறியாதவர் களாக, தன் வாழ்க்கையை நடத்தி வந்தார்கள். ஆனால் இன்று நாகரிகத்தையும், பண்பாட்டு வளர்ச்சியையும் கற்றுக்கொண்டு நாடோடி வாழ்க்கையைப் பெரிதும் விட்டுவிட்டார்கள். அது மட்டுமல்லாமல் நாட்டில் தொழில் முன்னேற்றங்கள் பல குவிந்துவிட்டன. வேளாண்துறையிலும் அரசியல் துறையிலும், பல மாற்றங்கள் ஏற்பட்டுள்ளதால், இம்மக்கள் தங்கள் நாடோடி வாழ்க்கையை விட்டுவிட்டு நிரந்தரமான இடத்தைத் தேர்வு செய்து வாழ வகைத் தேடியுள்ளார்கள்.

**முடிவுரை**

நாடோடித் தன்மை 20-ம் நூற்றாண்டிலிருந்து பெரிதும் குறைந்து வருகிறது. இதற்குப் பல காரணங்கள் உண்டு. அவை அரசியல், பொருளாதாரம், தொழில்துறை, வேளாண்துறை வளர்ச்சிகளே ஆகும். கழக்கூத்தாடிகளைப் போன்று நாடோடிகளாக வாழ்ந்தவர்கள் இன்று நிலையான இடத்தில் வாழ்ந்து வருகின்றார்கள்.

இக்கட்டுரைக்குரிய களப்பணிப் பகுதிகள் கடலூர்-தக்கால் மற்றும் புதுவையை ஒட்டியுள்ள கோட்டக்குப்பம் ஆகும். சேகரிக்கப் பட்ட தரவை வைத்து நோக்கும்பொழுது உலகத்திலுள்ள அனைத்துச் சமூகத்திலும் பொருளாதார அடிப்படையில் ஏற்றத் தாழ்வுகள் இருக்கத்தான் செய்கின்றன. இஸ்லாமியர்களைப் பொருத்தவரையில் பெரும்பாலும் வசதி படைத்தவர்களாகத் தான் இருக்கின்றார்கள். ஆனால் இவர்களுக்கும் - பாவாக்களுக்கும் நீண்ட இடைவெளி காணப்படுகின்றது. இம்மக்கள் நாடோடியாகப்

பிச்சை எடுத்து பிழைப்பவர்களாக இருந்தாலும் தம் இஸ்லாம் மதத்தை விட்டுக் கொடுக்காமல் வைராக்கியத்துடன் இருக்கின்றார்கள் என்பதை உணர முடிந்தது. ஒரு காலத்தில், பண்பாடு, நாகரிகம், கலாச்சாரம் போன்றவற்றை அறியாதவர்களாக இருந்தார்கள். இப்பொழுது சிறிது சிறிதாகப் பண்பாட்டுக்குள் அடியெடுத்து வைத்துள்ளார்கள். இச்சமூக மக்களை இன்னும் மாற்றம் அடையச் செய்வது அல்லது அவர்கள் விரும்பும் மாற்றங்களை நிறைவேற்றுவது அரசால் மட்டுமே முடியும். அரசு அப்படிச் செய்தால் இச்சமுதாயம் இன்னும் நல்ல நிலையை அடைய நிறைய வாய்ப்புகள் உள்ளன.

# காணிச் சமூகத்தில் பிலாத்தி

**ம. வின்சென்ட்**

*புனித யூதா கல்லூரி*
*தூத்தூர் - 629 176*

தமிழகத்தில் 36 வகையான மலைவாழ் மக்கள் வாழ்கின்றனர். மலைப்பகுதியைத் தற்பொழுதும் இருப்பிடமாகக் கொண்டோரும், முன்பு மலைப்பகுதியில் குடியிருந்து இப்பொழுது நாட்டுப் பகுதிகளில் வாழ்வோருமாகிய பழங்குடியினர் மரபுரீதியாக மலைவாழ் மக்கள் என்றழைக்கப்படுகின்றனர். குமரி மாவட்டத்தில் மலைப்பகுதியிலேயே தங்களுக்கென 47 இடங்களில் குடியிருப்புக்களை அமைத்துக் கொண்டு அங்கேயே வாழ்ந்து வரும் மக்களினத்தைச் சார்ந்தவர்கள் காணிக்காரர்கள். இவர்களின் மரபுவழி மருத்துவரான பிலாத்தி என்ற பெயரில் செயல்படும் நபரைக் குறித்து இக்கட்டுரை ஆய்கிறது.

ஒவ்வொரு காணிக் குடியிருப்புக்கும் பிலாத்தி என்ற பெயரில் ஒருவர் உள்ளார். அவர் அக்குடியிருப்பிலுள்ள காணிக்காரர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட பூசாரியாகவும், மந்திரவாதியாகவும், மருத்துவராகவும் செயல்படுகிறார். இவர் தெய்வ பயமிக்கவராகவும் மந்திரங்கள் தெரிந்தவராகவும் இருக்கின்றார். நோய், ஏவல், பேய் பிடித்தல், தெய்வக் கோளாறு, பில்லிசூனியம், வனவிலங்குகளின் தொல்லை போன்ற பிரச்சனைகளுக்கு மருந்துகள் கொடுத்தும், மந்திரமோதியும் சாற்றுப் பாடல்கள் பாடியும் கட்டுப்படுத்துவதோடு தீர்வும் ஏற்படுத்துகிறார். காணி இனத்தின் மூட்டுக்காணியின் கட்டளைக்குட்பட்டு; அச்சமூகத்தின் சடங்குமுறைகள் அனைத்தும் பிலாத்தி வழியாகவே மரபுப்படி நிகழ்த்தப்படுகின்றன.

### பழங்குடி மக்களின் மருத்துவர்கள்

ஒவ்வொரு பழங்குடியினரிடையிலும் மருத்துவர்கள் காணப்படுகின்றனர். அம்மருத்துவர்களைப் பழங்குடி மக்கள் தங்கள் இனத்திற்குரிய தனித்தன்மையில் தேர்ந்தெடுக்கின்றனர்.

''சிக்கிம் மாநிலத்தில் வசிக்கும் லெப்சாஸ் (Lepchas) இனமக்களில் நோயுற்று மிகுந்த துன்பம் அனுபவித்த ஒருவரே

பிற்காலத்தில் மருத்துவராகப் பொறுப்பேற்க தகுதி பெறுகிறார்'' (Hermanns, 1954, P. 153) என்று ஹெர்மான்ஸ் கூறுகிறார்.

''பில் (Bhil), மாலர் (Malar) போன்ற பழங்குடி மக்களில் மருத்துவம் கற்க விருப்பமுள்ள ஒருவர் தங்களினத்தில் தகுந்த மருத்துவரிடம் சென்று மருத்துவத்தைக் கற்றுப் பின்பு மருத்துவ ராகிறார். இவ்வின மக்களிடம் பாரம்பரியமாக மருத்துவத் தொழிலைக் கைமாறும் வழக்கம் இல்லை'' (L.P. Vidyarthi, 1952, P. 175) என்பது வித்யார்த்தி அவர்களின் கூற்று.

''கார் நிக்கோபார் (Car Nichobar) தீவுகளில் வசிக்கும் மக்கள் எல்லோருமாகக் கூடி ஒரு மருத்துவரைத் தேர்ந்தெடுக்கின்றனர். தேர்ந்தெடுக்கப்பட்ட நபர் மறுக்காமல் அத்தொழிலைக் கற்று மருத்துவராகிறார்'' (White Head, 1924, P. 149) என்கிறார் ஒயிட்ஹெட். ஆனால் காணிக்காரர்களின் மருத்துவராக அங்கீகாரம் பெறும் பிலாத்தியின் தேர்வு வித்தியாசமானது.

**கனவில் தெய்வம் அறிவித்தல்**

காணிக் குடியிருப்புகளில் இருக்கும் பிலாத்தியின் முதுமை காரணமாகப் புதியதொரு பிலாத்தியைத் தேர்ந்தெடுக்க அவராக விரும்பும்போது உண்ணா நோன்பிருந்து தெய்வங்களை வேண்டு கிறார். அவ்வேளையில் தெய்வம் பிலாத்தியின் கனவில் வெளிப் பட்டுப் புதிய பிலாத்தி யாரென்பதை அறிவிக்கும். தெய்வத்தால் தேர்ந்தெடுக்கப்படுகின்ற நபரின் கனவிலும் தெய்வம் தோன்றி முன்னருள் கொடுக்கும். அவ்வாறு தெய்வத்தால் முன்னருள் பெற்றவரைப் புதிய பிலாத்தியாகத் தேர்வு செய்வர்.

**தொண்ணூறு நாட்கள் தவ வாழ்க்கை**

புதிய பிலாத்தியாகத் தேர்வு செய்யப்பட்டவர் தன் குடும்பத்தையும், உடைமைகளையும் பிரிந்து தலைமைப் பிலாத்தி யோடு அடர்ந்த வனப்பகுதிக்குள் செல்வார். அங்கு கிடைக்கின்ற பொருட்களை மட்டும் உண்டு பிலாத்தி கற்றுக்கொடுக்கும் அனைத்து மந்திரங்களையும் வாய்மொழியாகக் கற்று தொண்ணூறு நாட்களும் கடும் தவம் செய்கின்றார்.

**இறையருள் பெறும் நிலை**

வனவாசம் கொண்டு கடும் தவம் மேற்கொள்ளும் வேளையில் தெய்வத்தின் அருள் அவர் மீது இறங்குவதாகக் காணி மக்கள் கூறுகின்றனர். அப்பொழுது காட்டு மூலிகைகளின் தன்மைகளையும் அவை நீக்குகின்ற பல்வேறு நோய்களையும் அறிந்து கொள்வதோடு மந்திரங்கள் செபித்துச் சாற்றுப்பாடல்கள்

பாடும் வேள்ளயில் தெய்வ அருளைப் பெறுகின்ற முழுமையான நிலையை அடைவதாக நம்புகின்றனர்.

### ஆவிகளே குடியிருப்புக்கு அழைத்துச் செல்லல்

முழுமையான இறையருள் பெற்றுப் புதிய பிலாத்தியாகத் தேர்வு செய்யப்பட்டவரையும், தலைமைப் பிலாத்தியையும் அவர்கள் அறியாது தங்களது குலத்தைச் சார்ந்த ஆவிகளே வந்து குடியிருப்பிற்கு அழைத்துச் செல்லப்படுவதாகக் காணிக்காரர்கள் நம்பிக்கையுடன் கூறுகின்றனர்.

### பிலாத்தி பொறுப்பேற்றல்

குடியிருப்பிற்கு ஆவிகளால் அழைத்து வரப்பட்ட தலைமைப் பிலாத்தி, புதிய பிலாத்தியைக் காணி சமூகத்தினர் கூடுகின்ற பாட்டப்புரையில் உட்கார வைத்து மூட்டுக்காணியின் தலைமையில் காணியிலுள்ள மக்கள் அனைவரும் அறியும்படியாக காணிக் குரிய புதிய பிலாத்தியை ஆசீர்வதித்து மந்திரமோதி பிரகடனப் படுத்துவார். அதன் பின்னரே தலைமைப் பிலாத்தியின் ஆலோசனை களைக் கேட்டுப் புதிய பிலாத்தி தனக்குரிய பணிகளைச் செவ்வனே செயலாற்றுகின்றார்.

### முடிவுரை

காணிக் குடியிருப்புகளில் இறை வழிபாட்டிற்குப் பூசைகள் செய்தல், தங்கள் இனத்தவர்களுக்கு ஏற்படுகின்ற நோய்களை நீக்குவதற்குப் பலவிதமான மருத்துவமும் அதோடு கூடிய மந்திரங்களும் செய்து வாழ்ந்தவர்கள் பிலாத்தியர்கள். இப்பொழுது இம்மக்களிடையிலும் காணப்படுகின்ற பக்தியின்மை, ஆர்வக் குறைவு, வாழ்வியல் சூழல்களால் காணிக் குடியிருப்புகளில் பிலாத்திகளின் தேர்வும் குறைந்து வருவதோடு அச்சமூகத்தாரிடம் காணப்படுகின்ற தனித்தன்மைகளும் மறைய ஆரம்பித்துள்ளது.

### துணைநூல்கள்


1. ஸ்டீபன். ஞா., கொக்கறை, திணை வெளியீடு, 55/2A, எஸ்.டி.சி. சாலை, பெருமாள்புரம், திருநெல்வேலி - 7, 1997.
2. *Hermanns, The Indo-Tibetans, K.L. Ferndas, Bandra, Bombay, 1954.*
3. *Vidyarthi, L.P., 'The Scared Complex in Malar Hill Village of Santhal Pargana, in Aspects of Religion in Indian Society', 1952.*
4. *White Head. G., 'In the Nichobar Islands', Seeley Service & Co. Ltd., London, 1924.*

# வயிற்றுப் பொங்காலைச் சாற்றுப் பாடல் ஓர் ஆய்வு

*ரா.ச. ராஜஸ்ரீ*
*பல்கலைக்கழகக் கல்லூரி*
*திருவனந்தபுரம்*

இந்தியாவில் வாழும் பழங்குடி இனத்தவர்களுள் காணிக்காரர் இனமும் ஒன்றாகும். இக்காணி மக்கள் கன்னியாகுமரி மாவட்டத்தின் மலைப்பகுதிகளில் அதிகமாக வாழ்ந்து வருகின்றனர். இயற்கையோடு ஒன்றித்து வாழ்கின்ற இக்காணி மக்கள் தெய்வீக நம்பிக்கை அதிகம் உடையவர்கள். தங்களுக்கு ஏற்படுகின்ற நோய்கள், இன்னல்கள் போன்றவை கடவுளின் சீற்றத்தால் உருவாகின்றன என நம்பி கடவுளுக்குப் படையல் செய்து வழிபடுவதனை முதல் கடமையாகக் கொண்டுள்ளனர். இவர் தம் வழிபாடுகளில் சாற்றுப் பாடல்கள் முதன்மையான இடத்தைப் பெற்றுள்ளன. இச்சாற்றுப்பாடல்கள் இசைத் தன்மையோடு தெய்வீகத்தன்மையும் பொருந்தியவை. சாற்றுப் பாடல்களுள் ஒரு வகையான வயிற்றுப் பொங்காலைச் சாற்றைக் குறித்தான ஆய்வாக இக்கட்டுரை அமைகின்றது.

**சாற்றுப் பாடல் - விளக்கம்**

காணிக்காரர்கள் நடத்தும் விழாக்கள், பிறப்பு முதல் இறப்பு வரையிலான சடங்குகள் ஆகியவற்றில் பாடல்களைப் பாடும் வழக்கம் உள்ளது. 'சாற்றுதல்' என்பதற்குச் 'சொல்லுதல், புகழ்தல், அடித்தல், நிறைத்தல், அமைத்தல், விளம்பரப் படுத்தல்' என்று பொருள் கொள்கின்றார் கந்தையாபிள்ளை. இதனையொத்த விளக்கம் தமிழ் பேரகராதியிலும் உள்ளது. சாற்றுதல், ஓதுதல் என்னும் சொற்கள் இவர்கள் வழக்காறுகளில் அதிகமாக வழங்கப் பட்டு வருதலால் இதனை அடியொற்றியே சாற்றுப் பாடல் என்னும் சொல் வழங்கப்பட்டு வருவதாக அறிய முடிகின்றது. 'நோய் அல்லது மரணப்படுக்கையில் இருப்பவர்களுக்கு நோய் குணமடையச் செய்யப்படும் மந்திரமே 'சாற்று' என்றழைக்கப் படுகின்றது. காணி மக்களிடையே ஏற்படுகின்ற நோய்கள் தீர வேண்டுமென்றால் சாற்றுப் பாடல்களை விரதமிருந்து பாட வேண்டும் என அவர்கள் கூறுகின்றனர்.

**சாற்றுப் பாடல்களின் வகை**

பண்டைய நாட்களில் காணிக்காரர்கள் சாற்றுப் பாடல்களைப் பாடியே நோயினைக் குணமடையச் செய்தனர். தற்போது நாகரிகம் வளர வளர காணிக்காரர்கள் மருத்துவமனையை நாடிச் செல்ல தொடங்கி விட்டனர். இதனால் சாற்றுப் பாடல்க்ளைப் பாடுகின்ற வர்களின் எண்ணிக்கையும் குறைந்து கொண்டே வருகிறது. இருபத்தைந்துக்கும் மேற்பட்ட சாற்றுப்பாடல்கள் பாடப்பட்டு வந்ததாக அவர்கள் கூற்றால் அறியமுடிகின்றது. தற்போது பத்தொன்பது வகையான சாற்றுப் பாடல்கள் அவர்களால் முழுமையாகவும், முழுமையின்றியும் பாடப்பட்டு வருகின்றன. அவை பின்வருமாறு :

1. கார்த்திகைச் சாற்று, 2. நாயாட்டுச் சாற்று, 3.கதிரு விளக்கிச் சாற்று, 4.பிணிச்சாற்று, 5. வயிற்றுப் பொங்காலைச் சாற்று, 6. துயில் உணர்த்திச் சாற்று, 7. வயது இருத்திச் சாற்று, 8. மாயங்கோயில் சாற்று, 9. தீப்பிணிச் சாற்று, 10. கோட்டப் பிணிச் சாற்று, 11. பிறப்பிச்செடுக்கும் சாற்று, 12. காலன்ற சாற்று, 13. ராயி கட்டிச் சாற்று, 14. வலைகட்டிச் சாற்று, 15. விள விளக்கிச் சாற்று, 16. கப்பலகைச் சாற்று, 17. மேலோகக் கோயில் கட்டிச் சாற்று, 18. சாவு தோற்றிச் சாற்று, 19. ஓங்கான் சாற்று - முதலியன

**வயிற்றுப் பொங்காலைச் சாற்று**

கர்ப்பிணிப் பெண்களுக்குப் பிரசவ காலத்தில் நோய் ஏற்படாமல் இருக்கவும், சுகத்தோடு குழந்தைப் பெற்றுக் கொள்ளவும் இச்சாற்றினைப் பாடுகின்றனர். பெண்கள் கர்ப்பமடைந்த நாளில் இருந்து குழந்தை பிறக்கின்ற நாள் வரையில் இரண்டு மூன்று முறை இந்தச் சாற்றைப் பாடுகின்றனர். இந்த வயிற்றுப் பொங்காலைச் சாற்று வளைகாப்புச் சடங்கினை முதன்மைப்படுத்துவதாக அமைகின்றது. 'ஒரு தாயின் கருவில் வளரும் குழந்தையின் கரு முழுமைப்பெற்று வெளி உலகை அடைவதற்கு முன்னால் நடத்தப்படும் சடங்கே வளைகாப்பு அல்லது சீமந்தம் என்னும் சடங்காகும்'. காணிக் காரர்கள் இச்சடங்கினை வியாக்குடைச் சடங்கு எனக் கூறுகின்றனர்.

**வயிற்றுப் பொங்காலைச் சாற்றின் அமைப்பு**

காணிக்காரர்கள் இச்சடங்கினை ஏழாவது மாதத்தில் ஒரு நல்ல நாளில் நடத்துகின்றனர். பொதுவாகத் தமிழர்கள் வளைகாப்பு நிகழ்வினை ஆடம்பரமாக நடத்துவதைக் காண முடிகின்றது. காணி சமுதாயத்தில் உள்ளோர் வியாக்குடை சடங்கின்போது ஏழு விதமான பலகாரங்களுடன் கர்ப்பிணிப் பெண்ணைக் காணச் செல்கின்றனர்.

வியாக்குடைச் சடங்கு அன்று பிலாத்தி வாழை இலையில் பூ, பழம், பொரி, பச்சை அரிசி போன்றவற்றைத் தெய்வத்துக்குப்

படையலிட்டுப் பூசைச் செய்கிறார். பூசை முடிந்தபின் ஏழு பானை களில் பொங்கல் இடுகின்றனர். ஏழு பானைகளிலுள்ள பொங்கல் கொதிக்கும்போது அப்பெண் ஏழு பெண் தெய்வங்களை வணங்கும் வழக்கம் காணப்படுகிறது. ஏனெனில் இந்த ஏழு தெய்வங்களும் அப்பெண்ணையும் குழந்தையையும் நல்ல முறையில் காப்பாற்றும் என்று நம்புகின்றனர். அந்த ஏழு தெய்வங்களாவன :

1. சரஸ்தி, 2. தேவியம்மா, 3. ஆற்றுக்காலம்மா, 4. பார்வதி, 5. கன்னியாகுமரி பகவதி, 6. பூமாதேவி, 7. முத்தாரம்மன் இந்தத் தெய்வங்களைக் கர்ப்பிணிப் பெண் வணங்குவதனை,

''ஆறாப் பிணி ஆற்றணமே என் ஆற்றுக்காலம்மே
தீராப்பிணி தீர்க்கணமே என் தீங்கடங்கும் தேவியம்மே
மந்தமும் மயக்கமும் நீக்கணமே என்மனம் நிறஞ்ஞு முத்தாரம்மே
பிள்ளை நல்லா பிறக்கணமே என் புண்ணியமாம் பூமா
தேவியம்மே''

எனும் பாடலடிகள் விளக்குகின்றன.

கர்ப்பிணியை வாழ்த்தி விட்டு உறவினர்கள் புறப்படும் போது கூறும் முகமன் வார்த்தைகளை,

''வலிய பறஞ்சவரு யாத்திர கொடுக்குந்து
விருந்த கொடுத்தவரு யாத்திர பறயுந்து
கையிலிட்ட வெத்தில பாக்கு இட்டல்லே கொடக்குந்நு''

எனும் வயிற்றுப் பொங்காலைச் சாற்றுப் பாடலடிகள் விளக்குகின்றன.

வியாக்குடைச் சடங்கன்று என்னென்ன கடமைகள் கர்ப்பிணிப் பெண்ணுக்குச் செய்கின்றனர் என்பதனை இச்சாற்று விளக்கி நிற்கின்றது. இக்கடமைகளை வியாக்குடை சடங்கின்போது, அதாவது வயிற்றுப் பொங்காலைச் சாற்றுப் பாடுகின்ற நாளில் காணிப் பெண்கள் கர்ப்பிணிப் பெண்ணுக்குச் செய்கின்றனர். அக்கடமைகளாவன,

1. மருந்து எடுத்தல், 2. மருந்து கொடுத்தல்,
3. குளிப்பாட்டுதல், 4. மாற்று உடுத்தல்

என்பனவாகும்.

**1. மருந்து எடுத்தல்**

இந்நிகழ்வைத் தெய்வங்கள் செய்வதாக அம்மக்கள் நம்பு கின்றனர். காணிகளைப் பாதுகாக்கும் பூமாதேவி மருந்தினைக் காட்டிலிருந்து எடுத்து வருகின்றது. வானதேவன் மருந்து காய்ச்சு வதற்கான விறகைக் காட்டிலிருந்து எடுத்து வருகின்றான். இரண்டு தெய்வங்களுமாகக் கல் உரலில் மருந்தினை இடித்து, துணி வைத்து பிழிந்து மருந்தினை அடுப்பில் வைத்து காய்ச்சுகின்றனர். இந்நாட்களில் தெய்வ நம்பிக்கை உள்ள ஆண்களும் பெண்களும்

மருந்து எடுக்கும் கடமையைச் செய்கின்றனர். இச்செயலையும் தெய்வங்கள் செய்வதாகவே நினைக்கின்றனர்.

தெய்வங்கள் மருந்து எடுத்து அதனைக் காய்ச்சிப் பக்குவப் படுத்துவதை

'ஒந்நுபோல எடுத்த மருந்து தட்டியும் பொழிக்கான நாளு
வந்தடுக்குந்நு
இத்திறப்பு நேரத்தோடு மருந்த கையில் தருந்நு
வேற மருந்துகளும் இடிச்சு வச்ச காணணும்
இடிச்ச வச்ச மருந்துகள கொச்சு பிலாத்தி கண்டது
வண்டு வச்சு கெட்டியபிவின் மருந்துகள முறயா அடுக்கணும்
முறயா பெற்ற மருந்து வயிற வலிக்கு கொள்ளாமே
வானதேவன் இம்மருந்த வாண்டி வச்சு கொள்ளுந்நே'

என்னும் பாடலடிகள் விளக்குகின்றன.

**2. மருந்து கொடுத்தல்**

தெய்வங்கள் மருந்தினைக் காய்ச்சிய பிறகு அதனைக் காணிப் பெண்கள் காலை ஆறு, ஏழு மணிக்குள் கர்ப்பிணிப் பெண்ணுக்குக் கொடுக்க வேண்டும். மருந்து கொடுத்த பின் பத்தியம் பார்க்க வேண்டும். பத்தியத்திற்கு முருங்கைக் கீரையைச் சாப்பிட வேண்டும். ''முருங்கையும் எருமையும் வறுமையில் ஆஸ்தி'' என்பது பழமொழி. வறுமைக் கோட்டிற்குக் கீழ் வாழ்க்கை நடத்தும் இம்மக்கள் முருங்கை இலையைப் பக்குவப்படுத்தி உண்டு தங்கள் நோய்களைப் போக்கிக் கொள்கின்றார்கள்.

கர்ப்பிணிப் பெண் மருந்து குடித்து பத்தியம் பார்க்கும் நிகழ்வினை,

'குடியா குடிமருந்து ஒந்நுபோல காணண்டே
ஈ மருந்து குடிக்கும்போ பத்தியம் கடக்குந்நே
பத்தியத்தினு முருங்க இல வறுத்து கொடுக்கணே
வறுத்து கொடுக்கும்போ பொறுக்கணும் பத்தியம் கடக்காணு'

என்ற பாடலடிகள் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.

**3. குளிப்பாட்டுதல்**

மருந்து குடித்த பின் பெண்கள் கர்ப்பிணியை வெந்நீரில் குளிப்பாட்டுகின்றனர். அதன் பிறகு பதினான்கு நாளும் வெந்நீரில் குளிக்க வேண்டும். இதனை,

'நீரு தண்ணி கோரி வெக்க தண்ணி காட்டணும்
வெந்நீரில் குளிப்பாட்டி வெக்கதண்ணி தீக்கணும்
வெக்க தண்ணி காட்டி ஈரேழு நாளும் முங்கி குளிக்கணும்'

எனும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

#### 4. மாற்று உடுத்தல்

கர்ப்பிணிப் பெண் நீராடியபின் அவளுக்குப் புதிய உடையினை உடுத்தி அலங்கரிக்கின்றனர். அப்போது கர்ப்பிணியானவள் கேடு சிரகங்கள் தீர்ந்து புதுப் பொலிவுடன் காணப்படுகின்றாள். அவளுக்கு மாற்று உடை உடுத்தும் நிகழ்ச்சியை,

> 'குளிச்சு முடிஞ்ச பின் அலங்கரிச்சு காணணும்
> ஸ்திரியோடு பாலப்பிணி தீர்த்தோடி நிக்குந்நு'

எனும் வரிகள் உணர்த்துகின்றன.

காணி மக்களின் கூற்று மூலம் கீழ்காணும் நம்பிக்கைகளை அறிந்து கொள்ள முடிகின்றது.

1. சாற்றுப் பாடல் பாடினால் ஆயுள் கூட வாய்ப்புள்ளதாகக் கருதுகின்றனர்.
2. பெற்றோர் வீட்டிலிருந்து கொண்டு வருகின்ற ஏழு வகையான பலகாரங்களையும் உண்பதால் குழந்தை அழகாகப் பிறக்கும். அது நல்ல ஆரோக்கியமாக வளரும் என்றும் நம்புகின்றனர்.
3. கர்ப்பிணிப் பெண்ணுக்குச் சாற்றப்படுகின்ற இச்சாற்றினைப் பாடாமல் விட்டுவிட்டால் குழந்தைகள் குறையுடையதாக இருக்கும் என்றும் கர்ப்பிணிக்கோ கர்ப்பிணியின் கணவனுக்கோ மரணம் ஏற்படலாம் என்றும் நம்புகின்றனர்.
4. இந்தச் சாற்று பாடுகின்ற நேரத்தில் மலை பாதைக்கும் பொங்கலிட்டுக் கோழி பலியிடாவிட்டால் குழந்தைக்கு நோய் உருவாகி மரணம் ஏற்படக்கூடும் என்ற அச்ச உணர்வு கொண்டுள்ளனர்.
5. ஏழு பெண் தெய்வங்களையும் வணங்காவிடில் பிரசவம் கடினமாக இருக்கும்.
6. கர்ப்பிணிப் பெண் நன்கு காய்ச்சிய நீரை எடுக்கும்போது அந்நீர் அடுப்பில் சிந்தக்கூடாது என்றும் சிந்தினால் குழந்தையின் உடலில் கொப்புளம் ஏற்படும் என்றும் நம்புகின்றனர்.
7. இச்சாற்றுப் பாடுகின்றபோது கர்ப்பிணிக்கு முத்தாரம்மன் அருள் புரிவதாக நம்புகின்றனர்.

முற்காலங்களில் தெய்வங்கள் காட்டிலிருந்து மருந்தினை எடுத்துக் கர்ப்பிணிக்கு கொடுத்து வந்தன. இந்நாட்களில் வயது முதிர்ந்த, மருத்துவம் அறிந்த காணிப் பெண்களும், ஆண்களும் மருந்தினை எடுத்துப் பக்குவப்படுத்தி கர்ப்பிணிக்குக் கொடுக்கின்றனர். இச்செயலையும் தெய்வங்கள் ஒழுங்கு முறையுடன் செய்து வருவதாகவே இவர்கள் நம்புகின்றனர்.

# வெளிநாட்டவர் ஸ்டான்லி, பி.ரைஸ் அவர்கள் கண்ணோட்டத்தில் இந்திய நம்பிக்கைகள்

**ஜே.ஆர். இலட்சுமி**
*அரசு கல்வியியல் கல்லூரி*
*சென்னை - 15*

''வெளிநாட்டவர் ஸ்டான்லி, பி.ரைஸ் அவர்கள் கண்ணோட்டத்தில் இந்திய நம்பிக்கைகள்'' என்ற தலைப்பில் இந்தக் கட்டுரை அமைகிறது. இக்கட்டுரையில் "Asian Educational Services" வெளியீட்டில் அமைந்த Stanley, P. Rice அவர்கள் எழுதிய Occasional Essays on Native South Indian Life என்ற நூலில் இருந்து விலங்கு, பறவைகள் குறித்த கதைகள் மட்டும் மொழியாக்கம் செய்து பயன்படுத்தப் பெற்றுள்ளன.

நம்பிக்கைகள் பொருளற்றவை - மூடநம்பிக்கை எனக் கூறி ஒதுக்கித்தள்ள முடியாது. அந்த நம்பிக்கைகளையும், அதற்கான காரணங்களையம் ஆய்வது பெரும் பயனைத் தரும். தன்னம் பிக்கைக்குப் பதிலாக மக்களிடம் மண்டிக்கிடப்பது அறியாமை யினால் ஏற்படும் மூடநம்பிக்கையாகும். அறிவியல், மானுட வாழ்வின் பல கூறுகளையும், செம்மைப்படுத்தும் ஒரு நெறியாகும். ஆனால் இந்த அறிவியல் நோக்கத்தை ஏற்காமல், சமயஞ்சார்ந்த கட்டுக்கதைகளை அடிப்படையாகக் கொண்டு எண்ணிலாத மூடப் பழக்கங்களை மேற்கொள்கின்றனர். அவ்வகையில் இக்கட்டுரை,

புலி - பெண்
அணில்
காகம்
பருந்து

எனும் விலங்கு, பறவைகள் பற்றிய கிராமியக் கதைகளின் மீட்டுருவாக்கமாக அமைந்துள்ளது.

**புலி - பெண் பற்றிய நம்பிக்கை**

புலி - பெண் என்னும் கருத்தில் உள்ள பயங்கர எண்ணங் களுக்கிடையில் உள்ள ஒற்றுமை, வேற்றுமையின் வெளிப்பாடு

தான் இந்த நம்பிக்கை. மேலும், காட்டுமிராண்டி மனிதர்களின் கற்பனையை எடுத்துக் காட்டுவதாகவும் உள்ளது. அப்படிப்பட்டக் கற்பனைகளும், கருத்துக்களும் மறைந்திருப்பதைக் கீழே கொடுக்கப்பட்டுள்ள கதை மூலம் காணமுடியும்.

முன்னொரு காலத்தில் ஒரு புலி ஒரு கன்னிப்பெண் மீது காதல் வயப்பட்டது. அப்பெண், புலிக்குகை இருந்தப் பகுதிக்கு அருகிலுள்ள கிராமத்தில் வாழ்ந்து வந்தாள். அப்புலியானது ஓர் அழகான ஆடவன் போல் தன் தோற்றத்தை உருவாக்கி, அவளைப் பெண்கேட்க அவள் பெற்றோரிடம் சென்றது. அம்முதியப் பெற்றோர் சந்தேகம் கொள்ளாமல் பொருத்தமானவரைத் தேர்ந்தெடுத்துவிட்ட மகிழ்ச்சியில் மணம் முடித்து வைத்தனர். திருமணக்கோலாகலங்கள் முடிந்து இரண்டு மூன்று நாட்களில் கணவனும், மனைவியும் கணவனின் வீட்டிற்கு நடந்து செல்லத் தொடங்கினர். அவர்கள் சென்றடைய வேண்டிய இடம் தொலைவில் இருந்ததால் களைப்புற்ற மனைவி நான் களைப்பாக இருக்கிறேன், சற்று இளைப்பாறி விட்டுச் செல்வோம் எனக் கேட்டாள். ஆனால், அக்கணவனோ, நடந்துவா, இல்லையென்றால் என் சுயஉருவத்தைக் காட்டிவிடுவேன் என மிரட்டினான். எனவே, மிகச் சிரமப்பட்டு நடந்தாள் அந்தப் பெண். ஆனால் மறுபடியும் அவள் தன் குறையைச் சொல்ல ஆரம்பித்தாள். அந்த மனித வேடமிடப்பட்டப் புலியோ மிரட்டிய தோடு தான் மனித உருவத்தைக் களைந்துவிட்டுப் புலித்தோற்றத்தில் அவள் முன்பாக நின்றது.

அவள் பயத்தில் நிலைகுலைந்து போனாலும் வேறு வழி யின்றி அந்த கொடிய தலைவனைத் தொடர்ந்து சென்றாள். வீட்டை அடைந்தாள். இந்த நேரத்தில் அப்புலியோ அவள் மேல் பரிதாபப் பட்டுத் தான் முன்பு இருந்த மனித நிலைக்கு வந்தது. அவர்கள் இரண்டு வருடம் சேர்ந்து வாழ்ந்த பின்னர் அவர்களுக்கு இரண்டு குழந்தைகள் பிறந்தன. அவர்கள் புலிக்குட்டி என்ற நிலையை விட அதிகமாகவோ குறைவாகவோ இருக்கவில்லை.

இந்நிலையில் அப்பெண் அமைதி அற்ற நிலையில் கணவனை நோக்கி, தன் பெற்றோர் மற்றும் சகோதரரைப் பார்த்துப் பலகாலம் ஆகிவிட்டதால், அவர்களைக் கண்டுவர அனுமதி கேட்டாள். ஆனால் அக்கணவனோ இது அவர்களுடைய இணைந்த வாழ்க்கையில் கடைசி நாட்களாக இருக்குமோ என்னும் எண்ணத்தில் அவள் கோரிக்கையை ஏற்க மறுத்தான். பலமுறை கேட்டும் அவன் அதை மறுத்து வந்தான். கடைசியாக ஒருநாள் அவள் ஓடிப்போக முடிவு செய்து, கணவன் இல்லாத நேரத்தில் அந்த புலிக்குட்டிகள் இரண்டையும் குத்திக் கொன்றுவிட்டு

அதன் உடம்புகளைக் கம்பியில் தொங்கவிட்டுத் தன் சொந்த கிராமத்தை நோக்கித் திரும்பிப் பார்க்காமல் ஓடத் தொடங்கினாள்.

மாலை நேரத்தில் வந்த புலி கதவைத் தட்டியபோது கதவு திறக்காததால் கதவுச் சாவித் துளை வழியாகப் பார்த்தது. அங்கு இரத்தம் சொட்டுவதைப் பார்த்து, மனைவி சமையல் செய்கிறாள் என நினைத்தாலும் கதவை வலுக்கட்டாயமாகத் திறந்தது. ஆனால், அது கண்ட காட்சியோ புலிக்குட்டிகள் தொங்கிக் கொண்டிருந்ததும் மனைவி காணாமல் போயிருந்ததுமாகும்.

அடுத்தநாள் காலையில் அந்தப் புலியானது மனித உருவில், தன் மாமனார் வீட்டிற்கு மனைவியை அழைத்துவரச் சென்றது. அங்கு அது தன் மனைவியின் சகோதரர்களைச் சந்தித்து அன்பான உபசரிப்பைப் பெற்றது. அச்சகோதரர்கள் அப்புலிக்கு விருந்தளித்த பின்னர் அதை ஒரு பாயில் உட்கார கேட்டுக்கொண்டதோடு, முறைப்படி வெற்றிலைச் சாப்பிடக் கேட்டுக் கொண்டனர். எதையும் பற்றிச் சந்தேகப்படாத மனித உருவிலிருந்த புலி, அங்கு விரித்திருந்த பாயின்மேல் உட்கார எத்தனித்தபோது அங்கு தந்திரமாகத் தோண்டப்பட்டிருந்தப் பள்ளத்திற்குள் விழுந்தது. அதன் பின்னர் அந்தத் தந்திரக்காரச் சகோதரர்கள் அங்கு குவித்து வைக்கப்பட்டிருந்தக் கற்களால் எறிந்து கொன்றனர். அதுவே அந்தப் புலியின் முடிவாய் அமைந்தது.

இந்தக் கதையின் போக்கு மனித உருவில் உள்ள புலியைப் பற்றியதாக இருந்தாலும் இங்கு நிலைகள் தலைகீழாக உள்ளன. ஒரு மனிதனைப் பற்றியே கேட்பதாய் நாம் பழகிப்போனாலும் இங்கு தன் சொந்த மகிழ்ச்சிக்காக உருமாறிய ஒரு மிருகத்தைத் தான் காண்கிறோம். ஒரு பெண்ணை ஏமாற்றியப் புலியாக நாம் அந்தப் புலியைப் பார்த்தாலும், நம் மேலோங்கிய இரக்கப்பார்வை அந்தப் புலியின் மேல் ஏற்படுகிறது. காரணம் தான் செய்த பாவத்தைவிட அதிகமாய் தண்டிக்கப்பட்டதாய் அந்தப் புலியினுடைய முடிவு அமைந்துவிட்டது. விருந்துக்கு வந்தது புலியாய் இருந்தாலும் தந்திரமாக அந்தச் சகோதரர்கள் கொலை செய்ததால் குற்றவாளி இல்லை என்று விடுபடக்கூடிய நிலைகளில் அவர்கள் இல்லை. ஆனால், பூர்வீகக் கதைகளில் 'மனித உருவெடுத்தப் புலிகள்' மற்றும் அவ்வினம் கண்டிப்பாக அழிக்கப்பட வேண்டும் என்பதாகும். அந்த முடிவைக் கொடுக்கும் எந்த வழிமுறைகளையும் நியாயமாகவே கருதுவர். அவ்வகையில் விலங்கு, மனித உருவம் பெறக்கூடும் என்ற நம்பிக்கை மேலோங்கி உள்ளது.

**அணில் பற்றிய நம்பிக்கை**

ஒவ்வொரு நாட்டிற்கும் என மூடநம்பிக்கைகள் மற்றும் மரபு மரபாகச் சொல்லப்படும் விலங்கு கதைகள் உண்டு. அவ்வகையில், தென் இந்தியக் 'கள்' எடுப்பவர்கள் அணிலை ஏன் வெறுக்கின்றனர் என்பதற்கும் கதை உண்டு.

'கள்' எடுக்கும் தொழில் செய்பவர்களது வாழ்வு கடினமானதும், ஆபத்து நிறைந்ததுமானதும் ஆகும். இவர்கள் பனைமரத்தில் ஏறும்போது 'கள்' உண்டு ஏறுவதால் அதிலிருந்து வரும் ஆபத்துக் களில் இருந்து காப்பாற்றுவதற்காக ஒரு கடவுள் இருந்தார். அவர் 'கள்' எடுக்கும் தொழில் செய்பவர் மீது அன்பு கொண்டு அமுதம் வைத்திருந்தார். 'கள் எடுப்பவர்' ஒருநாள் 'கள்' உண்டு விட்டுக் கடவுள் வைத்திருந்த அமுதத்தைக் குடிக்க மறந்துவிட்டார். அவர் திரும்பி வரும்போது அணில் அந்த அமுதத்தைக் குடித்திருப்பது கண்டு கோபமடைந்து அதன்மேல் பழி தீர்க்க உறுதிகொண்டார். அதன் விளைவே பனை ஏறுபவர் பொதுவாக அணில்களைக் கொல்வதாகும். மட்டுமின்றி அணில் மிக உயரத்தி லிருந்து விழுந்தாலும் எந்த காயமும் ஏற்படாது. அதற்குக் காரணம் அது அருந்திய அமுதம் எனக் கூறப்படுகிறது.

இவ்வாறு அணில் பலநேரங்களில் கடவுளின் அனுகூலத்தைப் பெற்றிருக்கிறது. இதுபோல் காகங்கள் இயல்பிலே வெள்ளை நிறத்தவை என்றும், அவை அப்பல்லோ (Appollo) தெய்வத்தின் சாபத்தால் கருமையாயினது என்றும், ஹெரால் (Heral) என்ற கடவுளிட மிருந்து மயில் தனது அழகிய வால்பகுதியைப் பெற்றது என்றும், கருப்பு நாய்கள் தீமையின் உருவம் என்றும் நினைப்பது உண்டு. இப்படிப்பட்ட நம்பிக்கைகளுள் ஒன்றாக அணில் பற்றிய நம்பிக்கையும் அமைந்துள்ளது.

**காகம் பற்றிய நம்பிக்கை**

பொதுவாகக் காகம் தன் தலையை ஒருபுறம் சாய்த்துக் கொண்டு தன்னுடைய சிறிய கண்ணினால் பார்ப்பது போன்றிருக்கும். இதை நம் மக்கள் தவறாக எண்ணிக் கொண்டு அதற்கு ஒரு கண் குருடு என நம்புகின்றனர். ஒரு நாள் இராமர் சீதைக்கு அருகில் தூங்கிக் கொண்டிருக்கும்பொழுது அசுரன் ஒருவன் அவள் அழகில் மயங்கி வசியம் செய்வதற்காகக் காகம் உருவில் அவளருகில் அமர்ந்தான். இதை உணர்ந்து கொண்ட சீதா அக்காகத்தைக் கண்டு கொள்ளவில்லை. ஆனால் அது அவளுடைய மார்பகத்தைக் குத்தி இரத்தத்தைக் கசியச் செய்தது. இத்தருணத்தில் விழித்தெழுந்த இராமன் கோபத்தில் தனக்கு மிக அருகிலிருந்த ஆயுதமான ஒரு புல்லினை எடுத்துத் தவறு இழைத்தக் காகம் மீது எய்தினான். தவறினை உணர்ந்த

காகம் கருணைக்காக மன்றாடியது. ஆனால் இராமனுடைய ஆயுத மானது ஒருமுறை தன் கையிலிருந்து பாய்ந்து சென்றால் தன் கடமையைச் செய்யாது விழாது. அதனால் அசுரனுடைய இரு கண்களில் ஒன்றை இழக்க வேண்டியதாயிற்று. அதே நேரம் அவன் ஆயுதத்தால் காயப்பட்டக் கண்ணானது தன்னுடைய சக்தியை இழக்கவில்லை. மாறாக ஒரே சமயத்தில் காகமானது தனது இரு கண்களையும் பயன்படுத்த முடியாத நிலைக்குத் தள்ளப்பட்டது. இது இராமனுடைய சர்வ வல்லமையைக் குறிக்கும். மற்றொன்று சீதையினது கற்புத் தன்மையைக் குறிக்கும். மேலும் அசுரர்களுடைய பல கொடிய செயல்களைப் பற்றியும் சொல்லக் கூடிய கதைகளில் இதுவும் ஒன்று. இதைப் படிக்கும்போது அசுரனின் தவறுக்காகக் காகங்கள் பாதிக்கப்பட்டது போன்று தோன்றும். ஆனால் இது தவறுக்காக மட்டுமே அளிக்கப்பட்டத் தண்டனை ஆகும்.

**பருந்து பற்றிய நம்பிக்கை**

ஒருநாள் விஷ்ணு (கிருஷ்ணா)வும், பருந்தும் போட்டியில் ஈடுபட்டனர். அதன்படி ஒரு மறைவிடத்தில் ஒருவர் மறைந்து கொள்ள மற்றவர் அவரைக் கண்டு பிடிக்க வேண்டும். முதலில் பருந்து மறைந்து கொண்டது, சிறிது நேரம் சென்ற பிறகு கிருஷ்ணன் பருந்தைக் கண்டுபிடித்துவிட்டார். அதன் பிறகு கிருஷ்ணன் பருந்தின் கண்ணுக்குள் மறைந்து கொண்டார். அது கிருஷ்ணா! கிருஷ்ணா என்று அழைத்தது என்பது கதை. அதிலிருந்து பருந்தின் கண்ணிற்குள் கடவுள் மறைந்து கொண்டிருப்பதாக நம்புகின்றனர். இக்கதை அக்காலத்தின் மக்களிடையே நிலவிய பழக்க வழக்கங்களையும் நடைமுறைகளையும் அறிய உதவுகின்றது.

**நிறைவுரை**

சமுதாயத்தில் எத்தகையவர்களாக இருந்தாலும் இந்நடை முறையை நம்பினர். அவர்கள் புராணங்களிலும் இராமாயணம், மகாபாரதத்திலும் இருக்கின்ற கதைகளைக் கேட்பதில் ஆர்வம் கொண்டிருந்தனர். இது அவர்கள் அந்நிகழ்ச்சிகளின் மீது கொண்ட ஆர்வத்தை அதிக அளவு உணர்த்துவதேயன்றி அவர்களின் மதத்தின் மீது ஏற்பட்ட ஈடுபாட்டால் அல்ல.

மேலும், விலங்குகள், பறவைகள், மரங்கள் பற்றிக் கூறப் படுகின்ற நம்பிக்கைகள் இதிகாசத்திலும் புனித நூல்களிலும் இருக்கும் கதைகளைவிட அதிக மதிப்பை மக்களிடம் பெற்றுள்ளன.

# மழை பற்றிய நாட்டுப்புற நம்பிக்கைகள்

***வெ. கிருட்டிணசாமி***

*கோவில்பட்டி - 628 502*

மழை நீர் உயிர் நீர், மழை நீரைச் சேமிப்பீர், மழை நீரைச் சேமித்தால் வாழ்வே ஒளிமயம், இன்றைய மழைநீர் சேகரிப்பு நாளைய குடிநீருக்குப் பாதுகாப்பு, மழைநீரைச் சேகரிப்போம் மகிழ்வுடன் வாழ்ந்திடுவோம் போன்ற விளம்பரங்கள் தமிழகத்தில் காணப்படுகின்றன. இன்னொரு உலகப்போர் நிகழுமால் அது குடிநீருக்காகத்தான் இருக்கும். இத்தகைய சூழ்நிலையில் மழை பற்றிய நம்பிக்கைகளை ஆராய்வது அறிஞர் தம் கடமையாகும்.

**இலக்கிய நம்பிக்கைகள்**

தெய்வம் தொழாஅள், கொழுநன் தொழு தொழுவள் பெய்யெனப் பெய்யும் மழை என்பது வள்ளுவர் நம்பிக்கை யாகும். நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை என்று ஔவையார் கூறியுள்ளார். குன்றக் குறவர்கள் மழைபெய்யக் கடவுளை வேண்டினர். மிகு மழை பெய்தால் அதைத் தடுத்து நிறுத்தக் கடவுளை வணங்கினர். சங்ககாலத்தில் மழை வழிபாடு இருந்தது. குறவர்கள் கூட்டாக மழை வழிபாட்டை நிகழ்த்தினர். குறவர்கள் கடவுளைப் பேணி உயிர்ப் பலி தூவினர். குன்றக் குறவர்கள் மேகத்தின் இயக்கத்தைக் கொண்டு மழையின் அளவை அறிந்தனர். அதற்கு ஏற்ற பயிர்த் தொழிலில் ஈடுபட்டனர். மழையை மலையில் இறங்கும்படி வேண்டினர். மிகுதியான மழ்ழ பெய்தவுடன் மழையை மலைக்கு மேலே உயர்வதாக என வேண்டினர். மழை தேவையான அளவு பெய்யவேண்டும் என்பது குறவர்களின் வேண்டுதல் ஆகும். குன்றக் குறவர்கள் மழையைப் பெண்ணாக உருவகித்தனர். மழையின் ஆட்சிக்கு உரியவனாக இந்திரன் சொல்லப்பட்டான். இது ஆரிய நாகரிகத்தின் தாக்கம் ஆகும். மேகம் மழை நீரைக் குடித்து மழையைப் பொழிகிறது என்று முல்லைப்பாட்டுக் கூறுகிறது. மாமழை போற்றுதும் என்று இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார். காளிதாசர் தனது மேக தூதில் மேகத்தைத் தூது செல்லும்

வேலையைச் செய்விக்கிறார். விவிலியத்தில் 40 நாள்கள் தொடர்ந்து பெய்த மழையைப் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. அம்மழையிலிருந்து நோவா என்பவரை மட்டும் கடவுள் காப்பாற்றினார். அவரது வாரிசுதான் மனித இனம் என்று விவிலியம் கூறுகிறது.

### நாட்டுப்புற நம்பிக்கைகள்

#### 1. வருண செபம்

வருண செபத்தில் திரளான மக்கள் கலந்து கொள்வர். சுவாமிக்கும் அம்பாளுக்கும் சிறப்புப் பூஜைகள், சிறப்புத் தீபாராதனை, சிறப்பு அபிசேகம், தாராவிசேகம், திரவிய அபிசேகம் போன்றவை நடைபெறுதலும் உண்டு. சில இடங்களில் 108 பசுக்களைக் கொண்டு கோபூசை நிகழ்த்துவர். பக்தர்கள் சிறு கலசங்களில் நீர், அரிசி, பசும்பால் போன்ற பொருள்களைக் கொண்டு வருவர். பக்தர்கள் கொண்டு வந்த நீரை ஆறு அல்லது கடலில் ஊற்றி வழிபாடு நிகழ்த்துவர். வருண செபத்தின்போது சிவ காயத்திரி, வருண காயத்திரி, ரிஷிய சிருங்காரி, வேதங்கள், மந்திரங்கள், திருவெம்பாவை போன்றவை ஓதப்படும். இந்நிகழ்ச்சிகள் காலை முதல் இரவு வரை நடைபெறும். இரவில் பக்திச் சொற்பொழிவு நடைபெறுவதும் உண்டு. மக்கள் ஊர்வலமாகச் சென்று பிற கோயில்களிலும் வழிபாடு நிகழ்த்துவர். பட்டர்கள் வருண செபத்தை நிறைவேற்றுவர்.

#### 2. திருமணம்

சென்னை கே.கே. நகர் மல்ட்டி விநாயகர் கோயில் வளாகத்தில் அஃறிணைப் பொருள்களுக்கு மழை வேண்டித் திருமணம் செய்து வைக்கப்பட்டது. பருவ காலத்தில் மழை பெய்ய வேண்டி 48 வேத விற்பன்னர்களின் சண்டி, வாஸ்து, கணபதி ஹோமம், கஜ கோமாதா, சுஸ்வ பூசைகளும் நடத்தப்பட்டன. ஊர்வன, பறப்பன, நடப்பன போன்ற 18 வகை உயிரினங்களுக்குத் திருமணம் செய்து வைக்கப்பட்டது. இதில் குதிரை, கழுதை, மாடு, நாய், குரங்கு, பன்றி, வெள்ளை எலி, வீட்டு எலி, ஓணான், பாம்பு, பூனை, முயல், காக்கை, மீன், நண்டு, உடும்பு, வாத்து, கௌதாரி, வான், கோழி, கிளி இன ஜோடிகளுக்குப் புரோகிதர் தாலி கட்டித் திருமணம் நடத்தி வைத்தார் (தினமணி, 30.09.2003).

#### 3. சோதி வழிபாடு

வடலூர் சத்திய தருமசாலையில் மழை வேண்டிச் சோதி வழிபாடு நடைபெற்றது. மாலையில் சன்மார்க்க ஊர்வலமும், சத்விகாரமும் திருவருட்பா இன்னிசையும் நடைபெற்றன. சுவாமி பத்மேத்திரா ஆசி உரை நிகழ்த்தினார் (தினமணி, 14.08.2003).

**4. கஞ்சிக்கலய ஊர்வலம்**

மழைவளம் வேண்டித் தூத்துக்குடி ஆதிபராசக்தி சித்தர் சக்தி பீடம் சார்பில் 1008 மகளிர் பங்கேற்ற கஞ்சிக்கலயம் ஊர்வலம் நடைபெற்றது. ஆடிப்பூரவிழா, குருபூசை, விநாயகர் பூசை, வேள்வி பூசை, சக்தி பூசையுடன் விழாத் தொடங்கியது. 1008 தமிழ் மந்திரங்கள் முழங்க 1008 பெண்கள் தாய்க்கலசத்திற்கு அர்ச்சனை செய்து வழிபட்டனர். கருவறையில் உள்ள அன்னை ஆதிபராசக்திக்குப் பால் அபிசேகம் செய்தனர். தொடர்ந்து அன்ன தானம் நடைபெற்றது.

**5. பால்குடம்**

கடையநல்லூர் கிருஷ்ணாபுரத்தில் மழை வேண்டி ஆஞ்சநேயருக்கு 108 பால்குடம் அபிசேகம் நடைபெற்றது. முன்னதாக 108 பால் குடங்கள் ஊர்வலமாக அருள்மிகு கரிய மாணிக்கப்பெருமாள் கோயிலிலிருந்து ஆஞ்சநேயர் கோயிலுக்கு வந்தன. ஆஞ்சநேயருக்கு அர்ச்சனையும் தீபாராதனையும் நடைபெற்றன. மழை வேண்டி நடைபெற்ற இந்தப் பால்குட நிகழ்ச்சியில் அழைப்பிதழ்களைக் கடையநல்லூரில் உள்ள இசுலாமிய அன்பர்கள் இருவர் அச்சடித்து வழங்கியது குறிப்பிடத்தக்கது.

**6. பாதாள நவ பூசை**

உடன்குடி தேரியூரில் சுமார் 10 அடி ஆழமுள்ள குழிக்குள் முத்துக்குமாரசாமி மழை வேண்டிப் பாதாள தவ பூசை செய்தார். மகளிர் மழை வேண்டி 108 திருவிளக்குப் பூசை நடத்தினர். விநாயகர், ஐம்பொன் மடசாமி மற்றும் அம்மனுக்குச் சிறப்புப் பூசைகள் நடைபெற்றன.

**7. உருவப் பொம்மை எரித்தல்**

தென்மேற்குப் பருவ மழை சரிவரப் பெய்யாததால் பாபநாசம், மணிமுத்தாறு அணைகளின் நீர்மட்டம் உயரவில்லை. அணையின் நீர்மட்டம் குறைந்து வந்ததால் விவசாயத்திற்குத் தண்ணீர் இல்லாத நிலை உருவாகியது. அதே நிலை நீடித்தால் குடிநீர்த் தட்டுப்பாடு ஏற்படும் நிலை உருவாகியது. மணிமுத்தாறு அருகே உள்ள கெட்டி மேட்டில் இருந்து உருவப் பொம்மை ஊர்வலமாகப் பாபநாசம் தலையணை பகுதிக்குக் கொண்டு வரப்பட்டது. பின்னர் உருவப் பொம்மை எரிக்கப்பட்டது. பக்தர்கள் ஒப்பாரி வைத்து மொட்டை போட்டனர். மழை வேண்டி பிரார்த்தனை செய்தனர்.

**8. நாமம்**

கோவில்பட்டியில் திங்கள் மும்மாரி மழை பெய்ய வைணவர்கள் 24 மணி நேர அரிநாமச் சங்கீர்த்தனை செய்தனர்.

தூத்துக்குடி சிவன் கோயிலில், பள்ளிச் சிறார்கள் இராமஜெயத்தை ஒரு கோடி முறை உச்சரித்தனர். வாலாஜாபேட்டையில் உள்ள ஸ்ரீ தன்வந்திரி ஆரோக்கிய பீடம் சார்பில் 50 கோடி தன்வந்திரி மகாமந்திரம் எழுதும் வேள்வி நடைபெற்றது. ஹோம பூசை களும் ஆன்மிக ஊர்வலமும், சுவாமிக்குத் தேன், பால் பன்னீர், சந்தனம் அபிசேகமும் சங்கல்பமும் நடைபெற்றன. சிவாசாரியார் எண்மர் 1008 தன்வந்திரி மகாமந்திரம் கூறிப் பூசை செய்தனர். 426 வகையான திரவியங்கள், பழ வகைகள், பூ வகைகள் ஹோம பூசைக்குப் பயன்படுத்தப்பட்டன.

### 9. இசைக் கருவிகள்

முத்துசாமி தீட்சிதர் அமிர்தவர்ஷிணி இராகத்தில் ஆனந்த அமிர்தவர்ஷிணிப் பாடலை இயற்றிப் பாடியபோது மழை பெய்ததாக ஒரு வரலாறு உண்டு. அமிர்தவர்ஷிணி இராகத்திற்கு மழை தரும் இராகம் என்ற பெயர் உண்டு. சென்னை கார்வ வயலின் பள்ளி மாணவ மாணவியர்கள் வயலினில் அமிர்தவர்ஷிணி இராகத்தைப் பாடி மழையைக் கொண்டு வரும் முயற்சியில் ஈடுபட்டனர். மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயிலின் திருமண மண்டபத்தில் மழை வேண்டி 108 வீணை வழிகாட்டு நிகழ்ச்சி நடைபெற்றது. மகான் ஸ்ரீரூப தீர்த்தார்ய சுவாமிகள் சேவப்ப நாயக்கர் காலத்தில் தஞ்சையில் பெரும் பஞ்சம் ஏற்பட்ட பொழுது அருட் கவியைச் சௌராஷ்ட்ர மொழியில் பாடி மழை பொழியச் செய்தார்.

### 10. குடமுழுக்கு

தமிழகம் முழுவதும் உள்ள கோயில்களில் தமிழில் குடமுழுக்குச் செய்தால் மழை அதிகம் பெய்யும் என்று குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் கூறியுள்ளார்.

### 11. சிறப்புத் தொழுகை

பொட்டல் புதூரில் உள்ள மஸ்ஜீத்தூர் ரஷ்மான் தொழுகைப் பள்ளிவாசலில் மழை வேண்டிச் சிறப்புத் தொழுகை நடைபெற்றது. மழை பைத்து ஸலாத்துன் நாரியா, சிறப்புத் தூவா ஓதப்பட்டன. உலவா மக்களின் சிறப்புச் சொற்பொழிவு நடைபெற்றது. மௌலவிக்குகள், சுலைமான்கள் போன்றோர் இத்தொழுகையில் கலந்து கொண்டனர். கல்லிடைக் குறிச்சி ரஹ் மத் ஜீம் ஆ பள்ளி வாசலிலும், மேலப்பாளையம் தவ்ஹீத் ஜமாத் ஈத்தா திடலிலும் மழை வேண்டி சிறப்புத் தொழுகைகள் நடைபெற்றன.

### 12. பிற

அரிச்சந்திர புராணத்தில் உள்ள மயான காண்டத்தை நாடகமாக நடித்தால் மழை பெய்யும் என்னும் நம்பிக்கை உள்ளது. திருவாய்

பாடியில் உள்ள ஆயர்கள் மழை வேண்டி இந்திரனை வழிபட்டனர். கோவில்பட்டி மந்தித்தோப்பு ஆதிபராசக்தி மன்றத்தில் மழை வேண்டிக் கூட்டு வழிபாடு நடைபெற்றது. திருவிடைமருதூரில் ஸ்ரீதரவேங்கடேச ஐயாவால் குளிர அஷ்டகம் பாடி மழையைக் கொணர்வித்தார். மழை வேண்டி நூற்றுக்கணக்கான சிறுவர் சிறுமிகள் பவானி ஆற்றில் நீராடினர். பின்னர் கலசங்களில் நீர் கொணர்ந்து தண்டு மாரியம்மனுக்கு அபிசேகம் செய்தனர். மனத்தை மேகக் கூட்டங்களுக்கு இடையே செலுத்தினால் மழை பெய்யும் வேதாத்திரி மகரிசி கூறியுள்ளார். தர்மருக்கு முடிசூட்டி விழா நடத்தினால் மழைபொழியும் என்று பாண்டிச்சேரி வட்டார மக்கள் நம்புகின்றனர். வெட்காளியம்மனுக்கு வேள்வி பூசை செய்தால் மழை பெய்யும் என்று எட்டையபுர மக்கள் கூறுகின்றனர். பறக்கை மதுசூதனப்பெருமாள் கோயிலில் கலச பூசை செய்தால் மழை விழும் என்பது கன்னியாகுமரி மாவட்ட மக்களின் நம்பிக்கை யாகும். பண்டைக் காலத்தில் மந்திரத்தாலும், நடனத்தாலும் மழையைக் கொண்டு வரமுடியும் என்று மக்கள் நம்பினர். வெடி வெடித்தால் மழை பெய்யும் என்ற நம்பிக்கையும் உள்ளது. டிரை ஐஸ் என்று அழைக்கப்படும் கார்பன் டை ஆக்சைடு, சில்வர் அயோடைடு போன்றவற்றை மேகங்களில் தூவினால் மழை வரும் என்று 20-ஆம் நூற்றாண்டில் கண்டு பிடிக்கப்பட்டது. 1946-இல் இச்சோதனை வெற்றி பெற்றது. 1975, 1983 ஆகிய ஆண்டுகளில் தமிழ்நாட்டில் செயற்கை மழையைப் பெய்வித்தனர்.

# பழமொழிகளில் நம்பிக்கைகள்

**க. ரவி**

*அண்ணாமலைப் பல்கலைக்கழகம்*
*அண்ணாமலைநகர்*

"நாட்டுப்புறவியல் என்பது நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள் ஆகியவற்றால் பாதுகாக்கப்படும் ஒரு குறிப்பிட்ட மக்களின் பண்பாடாகும்"[1] நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டன. அம்மக்கள் சமுதாயத்தால் பாதுகாக்கப்படுகின்றனர். இந்நம்பிக்கை மனிதனின் பிறப்பு, பெண்கள், விதி, மருந்துவம், மாதம், கிழமைகள், திருமணம் ஆகியவற்றின் தொடர்பாக மக்கள் மத்தியில் நிலை பெற்று உள்ளன. இத்தகைய நம்பிக்கைகள் குறித்து ஆய்வதாக இக்கட்டுரை அமைகின்றது.

**பிறப்பு**

குழந்தை இல்லையெனில் சமுதாயத்தின் தூற்றுதலுக்கு ஆளாக வேண்டும். அரசமரத்தைச் சுற்றி வந்தால் குழந்தை பிறக்கும் என்ற நம்பிக்கை மக்களிடையே உள்ளது.

"அரச மரத்தைச் சுற்றிவந்து அடிவயிற்றைப் பார்த்தாளாம்"

என்பது பழமொழி அரச மர வழிபாடு மலட்டுத் தன்மையைப் போக்க வல்லது.[2] குழந்தைப் பேறு மக்கள் விரும்பும் செல்வங் களுள் தலையாயதாக இருப்பினும் அடுத்தடுத்த குழந்தைப்பேறு அன்னையின் நிலத்திற்கும், குழந்தையின் நலத்திற்கும் கேடு என்பதை,

"நடந்த புள்ள தவண்டா அது தாயீ செஞ்ச தவக்கோலம்"

என்னும் பழமொழி விளக்குகின்றது.

புரட்டாசி மாதத்திலும், வெள்ளிக்கிழமையும் குழந்தை பிறப்பதை மக்கள் விரும்புவதில்லை. ஏனெனில், இக்குழந்தைகள் அதிகமாகக் குறும்புகள் செய்யும் என மக்கள் நம்புகின்றனர்.

"புரட்டாசியில் பிறந்த குழந்தை சுழிச் சேட்டைச் செய்யும்"

"வெள்ளிக்கிழமை பிறந்த கொள்ளிக்கை"

என்னும் பழமொழிகள் அதனை விளக்குகின்றன.

**பெண்கள்**

பெண்களைப் பற்றிப் பாடாத கவிஞர்கள் இல்லையென்று கூறலாம். இத்தகைய பெண்களைப் பற்றிய பழமொழிகள் அதிக அளவில் உள்ளன.

''பெண்ணென்றால் பேயும் இறங்கும்''

என்பது பெண் இரக்கத்திற்குரியவள் என்பதை வெளிப்படுத்துகிறது.

''ஆவதும் பெண்ணாலே அழிவதும் பெண்ணாலே''

என்னும் பழமொழி ஒரு பெண்ணால் ஒரு மனிதனை நல்ல முறையில் வாழ வைக்கவும், அந்த மனிதனைத் தாழ வைக்கவும் முடியும் என்கிறது.

''இந்திரன் கெட்டதும் பெண்ணாலே
சந்திரன் கெட்டதும் பெண்ணாலே''

இந்திரன், சந்திரன் என்னும் தேவர்களும் பெண்மீது ஆசை கொண்டதால் அழிந்து போனார்கள் என்பது பெண்ணாசை மனிதனின் அழிவிற்குக் காரணமாகிவிடும் எனக் கூறுகின்றது.

''பெண் புத்தி பின் புத்தி''

என்பது பெண் பழிப்பு போன்று அமைந்துள்ளது. மொத்தத்தில் பெண் பற்றிய பழமொழிகள் பெண்கள் சமுதாயத்தில் மதிக்கப் படவில்லை என்பதையும், ஆண்களுக்கு ஒத்த உரிமை அவர்களுக்கு இல்லை என்பதையும் வெளிகாட்டுவனவாக உள்ளன.

**விதி**

விதி என்பது மக்கள் நம்பிக்கையில் ஒன்றாகும். மனிதன் எவ்வளவுதான் உழைத்தாலும் அவனுக்கு நல்ல விதிப்பயன் வேண்டும் என மக்கள் கருதுகின்றனர். இத்தகைய விதி தொடர்பான பழமொழிகள் மக்கள் மத்தியில் நிலவுகின்றன.

''அதிஷ்டம் இரயிலில் வரும் முன்
தரித்திரம் தந்தியில் வந்து விடுகின்றது''

யோகம் என்பது மிகவும் தாமதமாக வரும். ஆனால் துன்பம் மிகவும் வேகமாக வரும் என்று மக்கள் விதி பற்றிய நம்பிக்கை கொண்டுள்ளனர்.

''ஆத்து நிறைய மண்கிடந்தாலும்
அதிஷ்டம் இல்லாமல் மண்கூட என்னதான் புரண்டாலும்
ஒட்டாது''

ஆற்றில் கிடக்கும் மண்கூட நம் உடம்பில் ஒட்டுவதற்கு யோகம் வேண்டும். அதாவது நாம் எவ்வளவுதான் ஒரு காரியத்தை முயற்சி யுடன் செய்தாலும், விதியிருந்தால் மட்டுமே வெற்றி கிட்டும்.

''வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது''[3]

என்னும் வள்ளுவர் வாக்கு இதற்கு அரண் செய்வதாக உள்ளது.

**மருத்துவம்**

இந்த உலகில் நோய் இல்லாத மனிதனே இல்லையென்று கூறலாம். அது உடல் நோயாகவோ அல்லது மனநோயாகவோ இருக்கலாம். உடல் நோய் தீர்க்கும் மருந்து பற்றிக் கூறவந்த வள்ளுவர்,

''மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
அற்றது போற்றி உணின்''[4]

என்பார். உண்ட உணவு செரித்த பின்பு உண்டால் பல நோய்கள் வராது. இத்தகைய மருந்து, மருத்துவம் பற்றியும் பழமொழிகள் உள்ளன.

''விருந்தும் மருந்தும் மூன்று நாள்''

ஒரு மருந்தின் கால அளவு மூன்று நாள். இக்கால அளவில் நோய் சரியாகவில்லை என்றால் வேறு மருந்து பயன்படுத்த வேண்டும் என்கிறது இப்பழமொழி.

''ஆயிரம் வேரைக் கொன்றவன் அரை வைத்தியன்''

என்பது நாட்டுப்புற மருத்துவத்தின் மீது மக்கள் கொண்டுள்ள நம்பிக்கையைப் பிரதிபலிப்பதாக அமைகின்றது.

**மாதம் - கிழமை**

நம் முன்னோர்கள் கொண்டிருந்த நம்பிக்கைகளில் சில இன்று மூடநம்பிக்கைகள் என்று சொல்லுமாறு மாறிப்போய்விட்டன அல்லது மாற்றப்பட்டு விட்டன. மாதங்கள், கிழமைகள், குறித்த பழமொழிகள் மூடநம்பிக்கைகளாகவே நமக்கு இன்று தோன்றுகின்றன.

''தை பிறந்தால் வழிபிறக்கும்''

என்பது விவசாயிகளின் அறுவடைக் காலத்தை நினைவூட்டுகிறது.

''தைமழையோ நெய் மழையோ''

''ஆடியில் இடியிடித்தால் ஐப்பசியில் மழை வரும்''

''மார்கழி மாசக் குளிறு மச்சி வீட்டையும் துளைக்கும்''

என்ற மாதம் குறித்த பழமொழிகள் காலநிலையை வெளிப்படுத்தும் அனுபவ மொழிகளாக உள்ளன. இவை அந்தந்த மாதங்களில் நிகழும் வானிலை மாற்றங்களை வெளிப்படுத்துவனவாகவும் அமைந்துள்ளன.

கிழமை குறித்த பழமொழிகள் அனுபவ மொழிகளாகவும், அறிவுரைகளாகவும் காட்சியளிக்கின்றன.

''திங்கள் பயணம் திரும்பாப்பயணம்
செவ்வாயோ வெறும் வாயோ,

பொன் கிடைத்தாலும் புதன் கிடைக்காது.

செல்வச் சிறுக்கி செவ்வாய்கிழமை செத்த புருசனை வீடு வெறிச்சிப் போகுமுன்னு வெள்ளிக்கிழமை வெளியே சொன்னாளாம்.

சனிப் பிணம் துணையோடுதான் போகும்''

என்ற கிழமைகள் குறித்த பழமொழிகளும் தனிமனிதனின் அனுபவங்களாகவே காட்சியளிக்கின்றன. இவை ''தனிமனித நம்பிக்கை காலப்போக்கில் சமுதாய நம்பிக்கையாக மாற்றம் பெறுவதுண்டு''[5] என்னும் கருத்துக்கு ஏற்பச் சமுதாயத்தில் நிலைத்துவிட்டது எனலாம்.

**திருமணம்**

''ஒரு ஆணும் பெண்ணும் உடலாலும் உள்ளத்தாலும் இரண்டறக் கலந்து உலகில் இனிய நெறியோடு ஒழுகி வாழ்தலையே இல்லறம் என்றனர்''.[6] இல்லறம் சிறக்க அடிப்படைத் தேவை திருமணம். இது மக்கள் மத்தியில் புனிதமான சடங்காகக் கருதப்படுகின்றது. மனித வாழ்வில் இச்சடங்கு முறைகளை எழுதப்படாத சட்டங்கள் எனலாம். இச்சடங்கு முறைகள் காதல் வாழ்க்கையில் தவறுகள் ஏற்பட்ட பின்னர் தோன்றின என்பது தொல்காப்பியர் கருத்து ஆகும்.

''பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப''[7]

என்பது தொல்காப்பியர் வாக்கு. இது மக்கள் பண்பாட்டைக் காக்கும் முயற்சி எனலாம்.

''ஆயிரம் முறை பொய்ச் சொல்லியாவது ஒரு திருமணத்தை முடிக்கணும்.

இரு ஜோடி செருப்புத் தேய நடந்தாலாவது ஒரு ஜோடி சேரத் திருமணம் செய்யணும்.

திருமணம் என்பது ஆயிரம் காலத்துப் பயிர்.

வீட்டைக் கட்டிப்பார் கல்யாணத்தைப் பண்ணிப்பார்.''

என்னும் பழமொழிகள் திருமணம் மனித வாழ்க்கையில் இன்றியமையாதது என்பதைக் காட்டும் நம்பிக்கைகளாக உள்ளன. இப்பழமொழிகள் திருமணம் புனிதமானது என்று போற்றப்பட்ட காலங்களில் தோன்றியவை எனலாம்.

**குறிப்புகள்**

1. சு. சக்திவேல்-நாட்டுப்புறஇயல் ஆய்வு, ப. 171
2. மேலது, ப. 177
3. திருக்குறள், 377
4. திருக்குறள், 942
5. சு. சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப. 172
6. இரத்தின. வெங்கடேசன் - நாலடியார் காட்டும் சமுதாயம், ப.30
7. தொல்காப்பியம், கற்பியல், 1091

# நஞ்சை மனிதர்கள் காட்டும் பழக்கவழக்கம்

**த. கணேஷ்காமராஜ்**

*அய்ய நாடார் ஜானகி அம்மாள் கல்லூரி*
*சிவகாசி - 626 124*

தஞ்சாவூர் வட்டார எழுத்தாளர்களில் ஒருவரான சோலை. சுந்தரபெருமாளின் நஞ்சை மனிதர்கள் என்னும் புதினம் 1998-இல் படைக்கப்பட்டது. அவருடைய படைப்புக்களில் வட்டாரத் தன்மை மிகுதியாகக் காணப்படும். நஞ்சை மனிதர்களில் ஆலங்குடி கிராமத்தில் வாழ்ந்த செல்வக் குடும்பம் ஒன்றின் மூன்று தலைமுறை நிகழ்ச்சிகளைக் கதைக் கருவாக அவர் அமைத்துள்ளார். அப்புதினம் காட்டும் கிராமப்புற மக்களின் பழக்க வழக்கங்களை ஆய்வதாக இக்கட்டுரை அமைகின்றது.

**பழக்க வழக்கம்**

ஒரு வட்டாரத்தில் வாழும் மக்களுடைய வாழ்க்கை முறையைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்றால் அவர்களுடைய பழக்க வழக்கங்களைத் தெரிந்து கொள்ளுதல் வேண்டும். மக்கள் கூட்டத்தின் வளர்ச்சி நிலைகளை ஒட்டித் தோன்றியவையே பழக்கவழக்கங்கள் எனலாம். ''பழக்கவழக்கம் என்பது புதிதாகப் பழகி வரும் முறையினையும், வழக்கம் என்பது தொன்றுதொட்டு வழங்கி வரும் முறையினையும் குறிப்பதாகக் கொள்ளலாம்''[1] என்பர்.

கணவன் உணவுண்ட பின்னர் எஞ்சிய சோற்றைப் பெண்கள் உண்ணும் பழக்க வழக்கத்தை,

> ''புருஷன் சாப்பிட்டு மீதம் வச்சிட்டுப் போற சோத்தோட மேல போட்டுக்கிட்டு சாப்பிட்டுப் பழக்கப்பட்டவள். இன்னிக்கு சேந்து உக்காந்ததும் சாப்பாட்டுல இருப்புக் கொளல'' (நஞ்சை மனிதர்கள், ப. 57)

என்று குறிப்பிடுவதன் வழி அறிய முடிகின்றது.

மேலும் நகர்ப்புறங்களிலும் பெண்கள் தங்களுடைய கணவன் உண்ட பின்னர் எஞ்சிய சோற்றை உண்ணுவதாகக் குறிப்பிடுகிறார்.

**நம்பிக்கை**

வட்டார இலக்கியங்களின் அடிப்படைக் கூறுகளுள் ஒன்றாக அமைவது மக்களின் நம்பிக்கை எனலாம். இதனை ''நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டுச் சமுதாயத்தால் பாதுகாக்கப்படுகின்றன''[2] என்பர்.

கிராமப்புறங்களில் வாழ்பவர்கள் தத்தம் குல தெய்வங்களுக்கு ஆடு வெட்டி, பொங்கல் வைத்து வழிபட்டால் தம் குடும்பம் செழித்து விளங்கும் என்ற நம்பிக்கையை உடையவராக இருப்பதுடன், எந்தச் செயலையும் செய்வதற்கு முன் தெய்வத்தின் முன்னால் பூக்கட்டிப் போட்டுத் தாம் செய்யப்போகும் செயலுக்கு அனுமதி கேட்கும் நம்பிக்கையையும் உடையவர்களாக இருந்தனர் என்பதை,

> ''அங்காளம்மாள் தான் காத்தையாப் புள்ள குடும்பத்துக்கே கொலதெய்வம். வீட்டுல ஒரு சின்ன விசேஷன்னாக்கூட அங்காளிப் பங்காளிக்கிட்ட ஒரு வெள்ளிக் காசாச்சும் வாங்கிப் போட்டு அத்தன பேரும் ஒண்ணா சேந்து வீரபத்திரனுக்குக் கெடா வெட்டுவாங்க. பெரியாச்சிக்கு முட்டையும் பொட்டையும் ஆக்கி படையல் போடுவாங்க அங்காளம்மனுக்குப் பொங்கவச்சி மொதோ பத்திரிக்கை வச்சி கும்பிடுறது. அதுக்குப் பொறவு தான் அந்தாண்ட இந்தாண்ட போறது. அந்த பூசையிலே அடுத்து என்னா செய்யலான்னு அம்மன் கிட்டக்க பூவும் துண்ணூருமா கட்டிப் போட்டு உத்தரவு கேட்பாங்க அதில பூ விழுந்தா தான் எந்த நல்ல காரியமும் செய்யனுங்கிற பழக்கம். இந்தக் குடும்பத்துக்கு வழி வழியா வர்றது.''
> (நஞ்சை மனிதர்கள், ப. 40)

என்று ஆசிரியர் குறிப்பிடுவதன் வழி அறிய முடிகின்றது.

**மூடநம்பிக்கை**

உண்மைக்கும் அறிவுக்கும் மாறுபட்டவற்றை வாழ்க்கையில் கடைப்பிடிப்பதே மூட நம்பிக்கை ஆகும். கிராமப்புறத்தில் வாழும் மக்கள் மிகுதியான மூடநம்பிக்கைகளை உடையவர்களாகக் காணப்படுகின்றனர். இதனைக் களையவேண்டும் என்பதை,

> ''மூடப்பழக்க வழக்கங்களில் மக்கள் மூழ்கிக் கிடப்பதே
> ஒருவதென்றோ? உயர்வதென்றோ? நானறியேன்''[3]

எனப் பாரதிதாசன் குறிப்பிட்டு வருந்துவதை அறிய முடிகின்றது.

கிராமத்து மக்களிடம் நிழற்படம் எடுத்துக் கொண்டால் தம் ஆயுள் குறைந்து விடும் என்ற மூடநம்பிக்கை நிலவுவதைச் சோலை. சுந்தர பெருமாள்,

''அப்பாவுக்குப் போட்டான்னாவே புடிக்காது. நம்ம கல்யாணத்தைப் படம் புடுக்கன்னு இந்த வூட்டு மாமா கும்பகோணத்திலிருந்து ஆளு வரவழைச்சிட்டு வந்தாங்க. கல்யாணத்த படம் எடுத்தா ஆயுசு கொறைஞ்சு போயிடும்ன்னு குறுக்கே கெடந்து படம் எடுக்கவுடாம திருப்பி அனுப்பிட்டாங்க'' (நஞ்சை மனிதர்கள், ப. 56)

என்று குறிப்பிடுகின்றார்.

இன்றைய சமூகத்தில் திருமணம், சடங்கு, திருவிழாக்களில் பெரும்பாலும் நிழற்படம் எடுக்கப்படும் வழக்கம் நிலவுவதையும், மேற்குறிப்பிட்ட மூடநம்பிக்கை குறைந்து வருவதையும் அறிய முடிகின்றது.

**பெண்கள் நிலை**

உலகின் தலைசிறந்த பிறவி மனிதப் பிறவியாகும். அம்மனிதப் பிறவியில் பெண் பிறவி இலக்கியங்களில் சிறந்த பிறவியாகக் கருதப்படுவதை,

''மங்கையராகப் பிறப்பதற்கே நல்ல
மாதவம் செய்திட வேண்டுமம்மா''[4]

என்ற கவிமணியின் வாக்கின்வழி அறிய முடிகின்றது.

இன்றைய படைப்பாளர்கள் பெண்மைக்குச் சிறப்பிடம் கொடுத்துத் தம் படைப்புக்களைப் படைக்கின்றனர். திருமணத்திற்கு முன் தந்தையையும், திருமணத்திற்குப் பின் கணவனையும், கணவனுக்குப் பின் மகனையும் சார்ந்து வாழ வேண்டிய நிலையில் உள்ளனர். இயல்பான வாழ்க்கையில் பெண்கள் அடிமைப் படுத்தப் படுவதை, சோலை. சுந்தரபெருமாள் தம் புதினத்தில் சுட்டிக் காட்டுகின்றார்.

வீட்டை விட்டுப் பெண்கள் வெளியே செல்லக்கூடாது என்று சமுதாயம் விதித்த கட்டுப்பாட்டை,

''என்னாடி நம்ம சாதியில பெரிசானப் பொண்ணு நெலப்படி தாண்டிப் போறது உண்டா? ஒன் தாத்தாவுக்கு இப்படி நீ கேட்டேன்னு தெரிஞ்சாவே போதும், உன்ன குறுக்கப் புடுச்சி கிழிச்சிப் போட்டுப்புடுவாரு. ஒப்பாரு வராம நான் அடுத்தத் தெருவுக்குப் போயிருப்பேனாடி'' (நஞ்சை மனிதர்கள், ப. 27)

என்ற நீலாயதாட்சி கூற்றின் வழி அறிய முடிகின்றது.

பெண்கள் திருமணத்திற்கு முன் தந்தை வீட்டில் இருக்கும் பொழுது வீட்டை விட்டு வெளியே செல்லக்கூடாது என்று

தந்தை விதித்த கட்டுப்பாட்டினை மேற்குறித்த பகுதியின் வழி அறிய முடிகின்றது.

திருமணத்திற்குப் பின் பெண்கள் கணவனால் அடித்துக் கொடுமைப் படுத்தப்படுவதை இந்நூலாசிரியர்,

> ''ஏ நீலா! ன்னு சோமுப்புள்ள கூப்புட்டாப் போதும். அது கையில எது இருந்துச்சோ இல்லையோ போட்டுட்டு ஓடிப் போயி ஏன்ன்னு கேட்டுப்புடும் இல்ல. அத எடுத்துச் சரியா பதம் பார்த்துடுவாரு. ரெத்த விளாரு தான்'' (நஞ்சை மனிதர்கள், ப. 32)

என்று குறிப்பிடுவதன் வழி அறிய முடிகின்றது.

**தொகுப்புரை**

சோலை. சுந்தரபெருமாள் தம் நஞ்சை மனிதர்களில் கிராமப் புற மக்களின் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், மூட நம்பிக்கைகள் போன்றவற்றை எடுத்துரைப்பதுடன், அவர் படைத்த புதினத்தில் பெண்களின் நிலையையும் தெளிவாக விளக்குவதை அறிய முடிகின்றது.

**குறிப்புகள்**

1. மு. அண்ணாமலை, நமது பண்பாட்டில் நாட்டுப்புற இலக்கியம், ப. 295
2. சு. சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப. 171.
3. பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், ப. 18
4. தேசிகவிநாயகம் பிள்ளை, மலரும் மாலையும், ப. 148

# ஆவணத் தமிழ்

மு. முத்துவேலு
அரசு கலைக் கல்லூரி, நந்தனம்
சென்னை - 35

மனித வாழ்வின் எண்ணங்கள் இலக்கியங்களில் பதிவாகின்றன. அவர்தம் வாழ்க்கை நிகழ்வுகள் எழுத்தில் பதிவாகின்றன. பின்னர் இவற்றைப் பாதுகாக்க வேண்டும் என்னும் கருத்து எழுகின்றது. எனவே பாதுகாக்கும் நோக்கத்துடன் ஒன்று அல்லது பல செய்தி களைப் பதிவு செய்து வைக்கும் பொருள்களை ஆவணங்கள் என்று குறிப்பிடுகின்றனர். இத்தகைய ஆவணங்கள், மக்கள் இருவரிடையே நிகழும் பரிமாற்றங்கள், விற்பனைகள், உடன்பாடுகள் ஊரவை எடுத்த முடிவுகள், தீர்மானங்கள், வழங்கிய கொடைகள், நடைபெற்றதும் நடைபெற வேண்டியதுமான அறச் செயல்கள், நெறி முறைகள் எனப் பல பொருண்மைகளை உள்ளடக்கியதாக இருக்கின்றன.

தொல்பொருள் ஆய்வாளர்கள் ஆவணங்கள் என்று பட்டிய லிடுவனவற்றுள் 1. தொன்மை பொருள்கள், 2. கல்வெட்டுகள், 3. செப்பேடுகள், 4. ஓலைச்சுவடிகள் முதலியவை குறிப்பிடத் தக்கவை ஆகும்.

ஆவணங்களுள் கல்வெட்டுகள் தனியிடம் வகிக்கின்றன. இவை பெரும்பாலும் அறக்கொடைச் செய்திகளைப் பற்றியன. அரசுக்கும் பொதுமக்களுக்கும் தொடர்புடைய இடங்களில் பொறிக்கப் பட்டுள்ளன. கோயிற் சுவர்கள், ஏரிகள் முதலிய இடங்களில் கல்வெட்டுகள் கிடைக்கின்றன. தமிழ்க் கல்வெட்டுக்களில் வட்டெழுத்து, தமிழ், கிரந்தம் என்ற மூன்று வகை எழுத்துக்கள் பயன்படுகின்றன. கல்வெட்டுத் தமிழுக்கு ஓர் எடுத்துக்காட்டுக் காண்போம்.

செஞ்சி வட்டத்தில் திருவம்பட்டு என்னும் ஊரில் உள்ள ஏரியின் மதகுத்தூண் கல்வெட்டு வாசகம்,

> ‘ஸ்ரீ இராஜராஜ தேவற்கு
> யாண்டு இருபத்திரண்டாவது
> வலிவளங்கிழான் வேளாண் சூற்றி
> இடுவித்த தூம்பு’[1]

**செப்பேடுகள்**

தமிழகத்தை ஆண்ட மன்னர்களின் ஆட்சி முறை, அறக் கொடைகள், திருக்கோயில் நடைமுறைகள் தலபுராணங்கள் முதலியவற்றை எழுதிப் பாதுகாத்து வைக்கும் ஆவணங்களாகச் செப்பேடுகள் பயன்பட்டுள்ளன. இச் செப்பேடுகளைப் பட்டயங்கள் என்று வழங்கும் மரபு உண்டு. இச்செப்பேடுகள் தமிழகத்தை ஆண்ட மன்னர்கள் எந்தெந்த மொழிகளை ஆதரித்து வந்தனரோ அந்தந்த மொழிகளில் எல்லாம் காணப்படுகின்றன. அரித்துவார மங்கலம் செப்பேட்டுத் தொகுதியில் காணப்படும் தமிழுக்கு ஓர் எடுத்துக்காட்டுக் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

> ''மனத்துக் கெட்டாத சிதம்பரத்திற்குச் சமமான
> தேவார மூவர் திருப்பாட்டு பெற்ற அறத்தைப் பெரும்பாழி
> அரிவீராகாக மங்கலமாகிய சமிவனம் எனும்புரி''[2]

**ஓலைச் சுவடிகள்**

ஆவணங்களில் இன்றியமையாத இடத்தைப் பெறுபவை ஓலைச் சுவடிகள் ஆகும். ஓலைச் சுவடிகள் மூன்று வகைப்படுவன. அவை:

1. ஆவணங்கள்
2. பதிவேடுகள்
3. இலக்கியம், இலக்கணம், கணிதம், மருத்துவம் முதலிய நூல்கள்.

எனப்படுவன. இவற்றுள் மூன்றாம் வகையானது 'இலக்கியங்கள்' என்னும் பெயரில் அடங்குவன. இரண்டாவதான பதிவேடுகள் மன்னராலும், மக்களாலும் குறிப்பிட்ட நோக்கத்திற்காகப் பயன் படுத்தப்பட்டவை; அப்பயன்பாடு நிறைவேறியதும் அழிக்கப்பட்டு விடுவன. ஆனால் முதலாவதாக நிற்கும் 'ஆவணங்கள்' மட்டுமே கால வெள்ளத்தில் அழிந்து படாமல் பாதுகாத்து வைக்கப்படுபவை.

**சங்க காலத்தில் ஆவணங்கள்**

சங்க இலக்கியங்களில் ஒன்றான எட்டுத் தொகையில் கலித் தொகையும் ஒன்று. அதில் அன்றைய ஊர் அவையின் தீர்ப்புகளை ஓலைகளில் எழுதி வைத்துத் தொகுத்துப் பேணி இருந்தமை குறிப்பிடப்பட்டுள்ளது. 'அவையத்தார் ஓலை'[3] என்று குறிப்பிடும் கலித்தொகை, அதன் தலைப்பில் பெய்திருக்கும் அரக்கு இலச்சினை நன்கு பொருந்தியிருப்பதற்குத் தலைவனும் தலைவியும் புள்ளிக் கிடப்பதற்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. எனவே ஊர்மன்றத் தீர்ப்புகள் ஓலையில் எழுதி ஆவணங்களாகப் பேணப்பட்டமை தெரிய வருகின்றது.

பண்டைத் தமிழகத்தில் ஊர் மன்ற உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் 'குடவோலை முறை' இருந்து வந்தமையை அகநானூறு சுட்டுகின்றது. இதனை,

> 'கயிறு பிணிக் குழிசியோலை கொண்மர்
> பொறி கண்டழிக்கும் ஆவண மாக்களின்'[4]

என்னும் அடிகள் வெளிப்படுத்துகின்றன. இவ்வரிகளில் 'குடவோலை முறையில்' உறுப்பினர்களைத் தெரிவு செய்யும் அரசு அலுவலர்கள் 'ஆவணமாக்கள்' என்று அழைக்கப்பட்டமை புலனாகிறது. எனவே 'ஆவணங்கள்' என்னும் சொல் ஓலைச் சுவடிகளில் எழுதிப் பேணப்பட்டு வந்த அரசு அலுவலர் தொடர்பான நிகழ்வுகளின் பதிவுகள் என்பதும் தெளிவாகிறது.

இன்றைக்கு ஆவணங்கள் (Documents) என்னும் சொல் என்ன பொருளில் வழங்கி வருகின்றதோ அதன் முழுத் தன்மையையும் விரிவாக விளக்குவது பெரியபுராணம் ஆகும். அனபாயச் சோழனின் ஆட்சியில் தலைமை அமைச்சராய் விளங்கிய சேக்கிழார், 'தடுத்தாட்கொண்ட புராணத்தில்' இச்செய்திகளை விளக்கிக் காட்டியுள்ளார். ஆளோலை காட்டி அந்தணர் வடிவில் அடிமை கொள்ள வந்த இறைவனை, விளங்கு பேரவையின் உறுப்பினர்கள் சான்று காட்டச் செப்புகின்றனர். அப்போது அக்காலத்தில் இருந்த சான்றுகளின் மூன்று வகைகளைச் சேக்கிழார் உரைக்கும்போது,

> ''ஆட்சியில் ஆவணத்தில் அன்றிமற்றயலார் தங்கள்
> காட்சியில் மூன்றில் ஒன்று காட்டுவாய்''[5]

என்று சுட்டுகிறார்.

இந்த மூன்றிலும் 'ஆவணம்' சிறந்த சான்று என்பதால் மூப்பின் முழுவடிவாய்த் தோன்றிய இறைவன் ஆவணம் காட்டுகின்றார். இறைவன் காட்டிய 'ஆவணம்' எவ்வாறு இயற்றப்பட்டது என்பதைச் சேக்கிழார்,

> 'அருமறை நாவல் ஆதிசைவன் ஆரூரன் செய்கை
> பெருமுனி வெண்ணெய் நல்லூர்ப் பித்தனுக்கு யானும் என்பால்
> வருமுறை மரபுளோரும் வழித் தொண்டு செய்வதற்கு ஓலை,
> இருமையால் எழுதி நேர்ந்தேன் இதற்கு இவை என்னெழுத்து'

என்று அமைத்துக் காட்டுகிறார்.[6] இந்தப் பாடலில் காணும் மொழி நடையைச் சேக்கிழார் காலத்தில் எழுதிப் பழக்கத்தில் இருந்த ஓலைச் சுவடிகளின் மொழி நடையாக அப்படியே ஏற்றுக் கொள்ளு வதற்கு இல்லை. எனினும், இப்பாடலில் ஓர் ஆவணத்தில் இருக்க வேண்டிய விவரங்கள் வியப்பளிக்கும் வகையில் உள்ளன. அவ்விவரங்கள் வருமாறு:

1. ஆவணம் எழுதி கொடுத்தவர் விவரம்
   1. பெயர் : ஆரூரன், 2. ஊர் நாவலர்
2. ஆவணம் எழுதிப் பெற்றவர் விவரம்
   1. பெயர் : பித்தன், 2. ஊர் வெண்ணெய்நல்லூர்
3. ஆவணம் எழுதப் பெற்றதன் நோக்கம் வழித் தொண்டு செய்தல்
4. எழுதிக் கொடுக்கப்பட்ட தன்மை
   உள்ளமும் மனமும் ஒருங்கே ஒப்பி நிற்றல்
5. எழுதிக் கொடுத்தவர் ஒப்பம்: என் எழுத்து.

இந்த ஆவணத்தை எழுதிக் கொடுத்தவரின் கையெழுத்து உண்மையானதா என்று சோதித்துப் பார்ப்பதற்கு ஊரில் ஆவணக் களம் இருந்ததையும், அது இன்றைய நாளில் 'ஆவணக் காப்பகம்' போல் இயங்கியதையும் பெரியபுராணம் குறிப்பிடுகின்றது. எனவே ஆவணங்களை எழுதுவதுடன் அவற்றைப் பேணுவதற்கான 'அமைப்புகள்' இருந்து வந்துள்ளன என்று பிற்காலச் சோழர்கால ஆட்சிச் சிறப்பினை உணர்த்துகின்றது.

**ஆவணத் தமிழில் ஓலைச் சுவடியின் பங்கு**

கல்வெட்டுகள், செப்பேடுகள் அல்லது பட்டயங்கள், ஓலைச் சுவடிகள் ஆகியவற்றில் பயன்பட்ட தமிழை 'ஆவணத்தமிழ்' என்று அழைக்கலாம். ஆனால் இம்மூன்றிலும் பயன்படும் மொழி நடை ஒத்த தன்மையாக இருப்பதில்லை.

கல்வெட்டின் தமிழ்நடை அக்காலத் தமிழையோ இலக்கியத்தையோ பொறுத்து அமைவதில்லை. செய்திகளில் பொறிக்கும் கல் தச்சரின் தமிழறிவைப் பொறுத்து அமையும். கல்தச்சர் சிற்பக் கலையில் தேர்ந்தவராக இருக்கலாம். தமிழில் மொழியை எழுத்து வடிவில் எழுதுவதில் தேர்ச்சி பெற்றவராக இருப்பார் என்று எதிர்பார்க்க வாய்ப்பில்லை. அதனால் எழுதிக் கொடுக்கப்பட்ட செய்திகளைக் கற்களில் பொறிக்கும்போது பிழைகள் நேர்ந்து விடுகின்றன. பேச்சு வழக்குச் சொற்களும் இடம்பெற்றுள்ளன. எனவே கல்வெட்டுகள் வரலாற்றுச் சான்று களாகப் பயன்படும் அளவிற்கு அக்கால மொழியின் சிறப்பை உணர்த்துவதற்குப் பயன்படுவதில்லை.

செப்பேடுகளில் செய்திகளைப் பதிப்பவர்கள் கல்வியறிவில் சிறந்து விளங்கியவர்களாக இருப்பதற்கு வாய்ப்பில்லை. செப்பில் சிலை வடிக்கும் கலைத்திறன் வாய்ந்தவர்கள் அவர்கள். எனவே அவர்கள் எழுதிக் கொடுக்கப்பட்டதைப் பட்டயமாகப் பதிக்கின்ற பணியை மேற்கொண்டுள்ளனர். செப்பேடுகளில் சோழர் கால

மெய்க்கீர்த்திகள் தனித் தன்மை வாய்ந்தவை. இவை பெரும்பாலும் அகவற்பா வடிவில் அமைந்தவை என்பது குறிப்பிடத்தக்கது.

ஓலைச் சுவடிகளில் எழுதப் பெறும் ஆவணங்களில் காணப்படும் தமிழ் நடை தரமுள்ளதாக அமைந்துள்ளது. ஓலைச் சுவடியை எழுதுவதற்கு அரசன் கல்வியிலும் ஆட்சித் துறையிலும் பயிற்சி பெற்றவர்களைப் பணியில் அமர்த்தினார். எனவே ஓலைச் சுவடிகள் பண்டைத் தமிழ் ஆவணங்களின் பைந்தமிழ் நடையைப் பாதுகாத்து வருவன என்று குறிப்பிடுதல் பொருந்தும்.

**ஆவணத் தமிழ்க் காப்பகங்கள்**

ஆவணத் தமிழை அழியாது காத்துவரும் ஓலைச் சுவடிகளை அரசு நிறுவனங்கள் பாதுகாத்து வருகின்றன. அவற்றுள்

1. தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம்
2. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
3. சரசுவதி மகால்

என்பவை குறிப்பிடத் தக்கவை. இந்நிறுவனங்களில் பேணிப் பாதுகாத்துவரும் நூற்றுக்கணக்கான ஆவணங்களை அட்டவணைப் படுத்தி வெளியிட்டுள்ளன. ஓலைச் சுவடிக்குள் இருக்கும் இந்த ஆவணத் தமிழை இன்றைத் தமிழ்த் தலைமுறையும் அறிந்துகொள்ள வேண்டும். ஏனெனில் இன்று ஆவணப் பதிவு அலுவலகங்களில் பயன்படும் தமிழ் இருநிலைகளில் காணப்படுகின்றது. ஒன்று வடமொழிச் சொற்களும் வாய்மொழிச் சொற்களும் கலந்ததாக உள்ளது; மற்றொன்று ஆங்கிலப் படிவத்தை மொழி பெயர்த்த தமிழாக மிக உள்ளது. எனவே இவை இரண்டிலும் இயல்பான தமிழ்நடை இல்லை. இக்குறையைப் போக்குவதற்கும் பிறமொழிச் சொற்களின் துணையின்றித் தமிழில் நல்ல ஆவணங்களை எழுத முடியும் என்பதற்கும் இந்த ஓலைச் சுவடிகள் பதிப்பிக்கப் பெற்று வெளியிடப்படுதல் வேண்டும்.

ஆவணத்தமிழ் என்பது இன்றைய தமிழரின் வாழ்க்கைத் தேவைகளில் ஒன்று. அதற்குப் பண்டைத் தமிழ் ஓலைச் சுவடிகள் வழிகாட்டுவன என்பதில் ஐயமில்லை.

**குறிப்புகள்**

1. தமிழில் ஆவணங்கள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், ப. 345.
2. மேலது, 76.
3. கலித்தொகை, 94
4. அகநானூறு, 15
5. பெரியபுராணம், தடுத்தாட்கொண்டபுராணம், 22
6. மேலது

# அவனிபாஜனக் கல்வெட்டுகளில் கோயில்

**மு. நளினி**

*சீதாலட்சுமி ராமசாமி (தன்னாட்சி) கல்லூரி*
*திருச்சிராப்பள்ளி*

**விளக்கறம்**

திருவண்ணாமலை மாவட்டம் வந்தவாசி வட்டம் சீயமங்கலம் அவனிபாஜனத்திலுள்ள முப்பத்தைந்து கல்வெட்டுகளுள் நான்கு மட்டுமே இக்கோயிலுக்கு அளிக்கப்பட்ட விளக்கறங்கள் பற்றி நேரடியாக உரையாடுகின்றன. சங்க காலத்திலிருந்து பெரிதும் போற்றப்பட்ட இவ்விளக்கேற்றல் பேசும் கல்வெட்டுகளுள் இரண்டு, கொடையாளிகளாக வேளாளப் பெருமக்களைச் சுட்டுகின்றன. வேளாளர் காளி பூண்டி இக்கோயிலில் நந்தாவிளக்கொன்று ஏற்றுவதற்காகச் சீயமங்கலத்து ஊராரிடம் பத்து மாநிலம் விலைக்குப் பெற்றளித்தார். புதுக்குடி வேளாளர் கடம்பன் வெண்காட தேவர் இரண்டு நந்தாவிளக்குகள் ஏற்றுவதற்காக 1602 குழிக் கரம்பை நிலத்தைச் சீயமங்கலம் ஊராரிடம் பெற்று, அதை விளைநிலமாக்கி ஊரார் பொறுப்பிலேயே ஒப்புவித்தார்.

ஆதித்தகரிகாலரின் நான்காம் ஆட்சியாண்டின்போது ஸ்ரீகங்கரையர் கங்க சூளாமணி என்பார் இக்கோயிலில் ஒரு நந்தாவிளக்கேற்றுவதற்காகத் தொண்ணூறு ஆடுகள் கொடையளித்தார். கி.பி. 1365-ல் இக்கோயிலில் ஐந்து திருநந்தாவிளக்குகள் ஏற்ற வாய்ப்பாக நிலங்களை இறையிலி செய்து கோயில் தானத்தாருக்குக் கம்பண உடையார் திருமுகம் அனுப்பியதைப் புதிய கல்வெட் டொன்றால் அறிய முடிகிறது.

நேரடியாக விளக்கறம் சுட்டும் இக்கல்வெட்டுகள் தவிர, மூன்றாம் குலோத்துங்கரின் இருபதாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டின் வழியும் இக்கோயிலுக்களிக்கப்பட்ட விளக்கறங்கள் சிலவற்றை அறிய முடிகிறது. வடபுறத் திருமாளிகை இக்காலகட்டத்தில் குலோத்துங்க சோழச் சம்புவரையரால் கற்றளியாக்கப்பட்டது. இத்திருப்பணி காரணமாக இங்கிருந்த பழங்கல்வெட்டுகள் சிலவற்றைப் படியெடுத்துத் திருப்பணிக்குப் பிறகு தகவல்

களஞ்சியமெனக் குலோத்துங்கரின் கல்வெட்டில் இடம்பெறச் செய்தனர். இதன் வழி, விஜயாலய சோழ பிரம்மமாராயர் என்பார் சில நிலத்துண்டுகளை விலைக்குப் பெற்று இக்கோயிலில் இரண்டு நந்தாவிளக்குகள் ஒளிர்வதற்காகக் கொடையளித்தமையையும் பள்ளத்து விளக்குப்பட்டி, விளக்குப்பட்டி என்ற பெயர்களில் சில நிலத்துண்டுகள் இருந்தமையையும் அறிய முடிகிறது.

கைப்பிழையாய் நேர்ந்த இரண்டு மரணங்களுக்குக் காரண மானவர்களை, அப்பிழைக்குப் பரிகாரமாக இக்கோயிலில் விளக்கெரிக்க நாட்டர் உத்தரவிட்டதாக இரண்டு கல்வெட்டுகள் கூறுகின்றன. இரண்டாம் குலோத்துங்கரின் மூன்றாம் ஆட்சி யாண்டின்போது சம்புரத்திலிருந்த பள்ளி செல்வன் என்பார் கைப்பிழையாக அம்பெய்ய, அவ்வம்பு பட்டு இதே ஊரிலிருந்த பள்ளி வேணாட்டரையன் இறந்தார். இதுவறிந்த நாட்டவரும் சம்புவரையரும் தன்மீசுவரமுடையார் கோயிலில் கூடி, மரண மடைந்த வேணாட்டரையனுக்காகக் கோயிலில் செல்வன் அரை விளக்கு வைக்கவேண்டுமென உத்தரவிட்டனர். அவ்விளக்கிற்காகும் நெய்க்காகக் கோயிலுக்குச் செல்வன் பதினாறு பசுக்களை அளித்தார்.

பேராவூர் நட்டுவன் வாசலைச் சேர்ந்த விண்ணவரையன் எழுவன், வயலூரில் வாழ்ந்த காடன் மகன் வீரனுடன் வேட்டைக்குப் போனவிடத்தில், எழுவன் கைப்பிழையால் வீரன் மடிய, செய்தி யறிந்த பன்னாட்டார் கூடி, கோயிலில் எழுவன் அரை விளக்கு எரிக்க வேண்டுமென உத்தரவிட்டனர். விளக்குச் செலவுக்காகக் கோயில் சிவபிராமணரிடத்து எழுவன் பதினைந்து பசுக்களை வழங்கினார்.

**வழிபாடு, படையல்**

இராட்டிரகூட வேந்தர் கன்னரதேவர் மகளான அக்கையதேவி, சீயமங்கலம் பகுதியைத் தம் ஆளுகைக்கு உட்படுத்தியிருந்த காலத்தில், அவரது அன்னையார் ஸயமாசி இக்கோயில் இறைவனுக்கு நாளும் மதிய வேளையில் ஒரு திருஅமுது படையலிடவும் திருப்பலிக்குமாக நிலக்கொடையளித்திருந்தார். இக்கொடையில் சேர்க்கப்பட்டிருந்த நிலத்துண்டுகளுள் இரண்டு வண்ணக்கன் புலம், மோடிச்செறு எனப் பெயரிடப்பட்டிருந்தன. அக்கையதேவியின் கணவராகக் கல்வெட்டுக் காட்டும் இராஜாதித்தன், சாளுக்கிய மரபைச் சேர்ந்தவர் என்பதை ஹிரேகோகிலூர்ச் செப்பேட்டின் வழி அறிய முடிகிறது.

சோழப் பேராட்சியின் போது பல்குன்றக் கோட்டம், வெண் குன்றக் கோட்டம், சிங்கபுரம் பகுதிகளைத் தம் ஆளுகையின் கீழ்

வைத்திருந்த ஸ்ரீ கங்கரையர் இக்கோயில் இறைவனுக்கு நாளும் ஒரு திருஅமுது படைக்க வாய்ப்பாகப் பள்ளச்செறுவு எனும் பெயரிலமைந்த நிலத்துண்டுகள் இரண்டையும் அவற்றிற்கு நீர் பாய்ச்சும் கிணற்றையும் தேவதானமாக வழங்கினார். இந்நிலத்திற்கான இறை, எச்சோறு, வெட்டி, அமஞ்சி ஆகிய வரியினங்களைப் பெறுவதில்லை என ஊரார் உறுதியளித்தனர். இந்த உறுதியில் தவறினால் தர்மஸ்தானத்தில் நாளும் 108 காணம் தண்டம் செலுத்துவதாகவும், குடிக்காட்டில் நித்தம் இருபத்து நாலே கால் தண்டப்படுவதாகவும் மொழிந்தனர். அத்துடன் இந்நிலத்திற்கு நீரும் காலும் வேண்டாமென்று சொல்வதில்லை எனவும், அப்படிச் சொன்னால் அன்றாள் அரசனுக்கும் நாளும் கால் பொன் வழங்குவதாகவும் உரைத்தனர். ஊராரின் இத்தகு மொழிவுகள், 'உறுதிப்பாடு தவறல்கள்' அக்காலத்தும் இருந்தமையைச் சுட்டுவதுடன், அவற்றிற்கான தண்டனைகளையும் வரிசைப்படுத்துகின்றன.

இதே கங்கரையர் ஆதித்த கரிகாலரின் நான்காம் ஆட்சியாண்டின் போது இக்கோயில் இறைவனுக்கு எடுத்த வழி, அருந்தோடு எனும் வரியினங்கள் உள்ளடங்க நிலப்பகுதியொன்றைத் தேவதானமாக அளித்தார். செங்கேணி நாலாயிரவன் அம்மையப்பனான ராஜேந்திர சோழச் சம்புவரையர் அர்த்தயாமச் சந்திக்குரிய அமுதுபடி உள்ளிட்ட செலவினங்களுக்காக, இறைவனின் தேவதானமாய் உள்ளூரிலிருந்த நிலங்களின் சில்லாயமாய் வந்த நெல்லைக் கோயில் பண்டாரத்திற்குத் தந்தார். செலவினங்கள் கல்வெட்டில், 'அழிவு' என்ற சொல்லால் கட்டப்பட்டுள்ளன.

குலோத்துங்க சோழச் சம்புவரையர் இக்கோயில் இறைவனுக்குச் சீயமங்கலத்தில் பன்னிருவேலி நிலத்தைத் தேவதானமாக அளித்தார். ஏற்கனவே இருந்த பழந்தேவதானமான எட்டு வேலி நிலத்துடன் இதையும், மஞ்சள்பட்டில் இறைவன் தேவதானமாக இருந்த நிலம் இரண்டரை வேலியையும் இணைத்து இருபத்திரண்டரை வேலி நிலம் இறைக்கோயிலுக்குரிய தேவதானமாக அறிவிக்கப் பட்டது. புதிதாக அளிக்கப்பட்ட பன்னிருவேலி நிலம், எங்கெங்கே என்னென்ன பெயரில் நிலத்துண்டுகளாக விளங்கின என்பதைக் கல்வெட்டின் மிக நீளமான பட்டியல் தெளிவுபடுத்துகிறது. ஏறத்தாழ ஐம்பதிற்கும் மேற்பட்ட இந்நிலத்துண்டுகளின் அளவும் கல்வெட்டில் துல்லியமாகத் தரப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

திருச்சுற்றின் வடபுறத் தரையமைப்பில் சிக்கியுள்ள மூன்றாம் குலோத்துங்கர் காலக் கல்வெட்டு அத்திமல்லன் பல்லவனான குலோத்துங்க சோழச் சம்புவரையர் இக்கோயில் இறைவனுக்களித்த

தேவதான நிலத்தைச் சுட்டுகிறது. இக்கோயிலில் இருந்த சுப்ரமண்ய பிள்ளையாரான முருகனுக்குப் பூசைக்கும் அமுதுபடிக்கும் வாய்ப்பாகச் சீயமங்கலத்து ஊரார் மாறவர்மர் விக்கிரம பாண்டியரின் ஐந்தாம் ஆட்சியாண்டின்போது அனைத்தாய இறையிலித் தேவதானமாக அறுநூற்று எண்பது குழி நிலத்தைக் கொடுத்தனர். இதேபோல் தேசூர் ஊரார் தங்கள் காணியான நிலங்களில் ஐநூறு குழி நிலத்தை அனைத்தாய இறையிலித் தேவதானமாகச் சுப்ரமணிய பிள்ளையாருக்கு வழங்கினர்.

கி.பி.1365-ல் வீரபுக்கண உடையார் மகன் கம்பண உடையார் இக்கோயில் இறைவனின் பூசைக்காகச் சீயமங்கலத்திலுள்ள கல்வெட்டுகளில் இடம்பெற்றிருந்த திருநாமத்துக் காணி நிலங்கள் நீக்கி எஞ்சியிருந்த நன்செய், புன்செய், நத்தம் உட்பட அனைத்துப் பகுதிகளையும் பழவரி, புதுவரி உட்படக் குடிநீங்காத் தேவதான மாகவும் சர்வமான்ய இறையிலியாகவும் வழங்கினார். கி.பி. 1384-ல் வெட்டப்பட்டுள்ள வீர விருப்பண்ண உடையார் கல்வெட்டின் வழி காஷ்மீரத்து ஆரியபட்டர்களில் திருவானைக்கா உடையார் பொற்பெருமாள் ஆரிய சக்கரவர்த்தி, மகாபிரதானியான முத்தரசர் நலத்திற்காக, தாம் இக்கோயிலில் அமைத்த அந்தம்பரகண்டன் சந்திக்கான அமுதுபடிக்கும் வெஞ்சனத்துக்கும் இறைவன் பூசைத் திருப்பணிக்கும் அந்தம்பரகண்டநல்லூரைத் திருநாமத்துக்காணியாக இறையுட்பட வழங்கினமையை அறிய முடிவதுடன், வண்ணபட்ட அகரம் என்ற குடியிருப்பின் பெயரையும் பெறமுடிகிறது.

கி.பி. 1384-ல் ஆதிஸ்வீர்ரன் பட்டன், ஈசுவர பட்டன், அம்பலத்து சேதியர், விநாயகபட்டன், திருச்சிற்றம்பல பட்டன் ஆகியோரும் கி.பி. 1411-ல் பாசுர பண்டிதர், கந்தப்பிரான் பட்டன், பரமேகர பட்டன், விநாயக பட்டன் காக்க நாயக பட்டன் ஆகியோரும் இக்கோயிலில் ஸ்ரீருத்ர ஸ்ரீமாகேவரர்களாக இருந்தமையை இரு கல்வெட்டுகள் வழி அறிய முடிகிறது.

**சிறப்புச் செய்திகள்**

இக்கோயிலில் உள்ள மூன்றாம் குலோத்துங்க சோழரின் இருபதாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுக் குறிப்பிடத்தக்க பல தரவுகளை முன்வைக்கிறது. 'இன்னாயனாற்கு ராஜாக்கள் விட்டும், ராஜமுதலிகள் பொன்னிட்டுக் கொண்டும் தேவதானமாக விட்ட நிலமாவது' என்ற பொதுப்படையான அறிவிப்புடன், இறைவனுக்கு முந்து கொடையாளர்களால் அளிக்கப்பட்டிருந்த பல நிலத்துண்டு களை அடையாளப்படுத்தும் இக்கல்வெட்டு, விசையாலயசோழ பிரும்மமாரயன் பொன்னுக்குப் பெற்று இக்கோயிலில் இரு நந்தா விளக்குகள் ஏற்றத் தந்த நிலத்துண்டுகளையும் குறிக்கிறது.

'பள்ளத்து விளக்குப்பட்டி' என்ற அடையாளத்துடன் விளக்குக் கொடைகளாக அளிக்கப்பட்டிருந்த வேறு சில நிலத்துண்டுகளும் இக்கல்வெட்டில் அறிமுகமாகின்றன.

நிகரிலீசுவரமுடையார் என்ற பெயரில் அமைந்திருந்த சிவன் கோயிலின் தேவதானமான 'கார் முகவு' எனும் நிலத்துண்டும் இக்கல்வெட்டில் இடம்பிடித்துள்ளது. சீயமங்கலம் கோயிலின் நந்தவனங்களாக, அம்மையப்பன் நந்தவனம், நந்தவனக் குண்டில், பிரகார நந்தவன மேடு ஆகியவற்றைக் குறிக்கும் இக்கல்வெட்டு, 'மோடி குண்டில்' என்ற பெயரில் அமைந்திருந்த துர்க்கை வழிபாட்டிற்கான நிலத்துண்டையும் சுட்டுகிறது. கோயில் பணி யாளர்களுக்கு வாழ்வூதியமாக நிலக்கொடை அளிப்பது அக்கால மரபு. சீயமங்கலத்துக் கல்வெட்டு வண்ணக்கக் கழுவல், உடன்பாடுவான் குண்டில் எனும் நிலத்துண்டுகளை வெளிப்படுத்து வதால் இக்கோயிலில் வண்ணக்கன், உடன்பாடுவான் ஆகியோர் இருந்தனர் எனக் கருதலாம்.

இதே கல்வெட்டு, 'தேரோடு துறை', 'பேக்கழுவல்' எனும் பெயர்களில் இரு நிலத்துண்டுகளை அடையாளப்படுத்துகிறது. தேரோடு துறை, கோயில் தேரோட்டத்திற்கான செலவினங்களுக்காக அளிக்கப்பட்ட நிலத்துண்டாகவோ, அல்லது தேரோடிய பாதைக்குப் பக்கத்திலிருந்த நிலத்துண்டாகவோ இருக்கலாம். 'பேய்க்கழுவல்' என்பதே பேக்கழுவல் என வழங்கியது போலும். கல்வெட்டு களில் பேய், பிசாசு பற்றிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளமைக்குச் சான்றுகள் கிடைத்திருப்பதால், சீயமங்கலத்து மக்களின் பேய் நம்பிக்கையை இப்பெயர் குறிப்பதாகக் கொள்ளலாம். குழி, இடம், தெற்கு, வடக்கு, கீழ், மேல் எனும் சொற்களைக் குறிக்க இக்கல்வெட்டில் குறியீடுகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. நிலத் துண்டுகளின் அளவுகளும் குறியீடுகளிலேயே அமைந்துள்ளன.

மூன்றாம் இராஜராஜரின் பன்னிரண்டாம் ஆட்சியாண்டின் போது தன்மீசுவரத்து இறைவனுக்குத் திருவீதி, திருநந்தவனம், கோபுரத்துடன் திருமதில், திருவெடுத்துக்காட்டி ஆகியன செய்தளித்த கொடைப் பாரியாகக் கிளியை அதிகைமானான அம்மையப்பனைப் பாராட்டி மகிழ்கிறது ஒரு தனிப்பாடல்.

**துணைநூல்கள்**


1. அவனிபாஜன பல்லவேசுவரம், மு. நளினி, இரா. கலைக்கோவன், வரலாறு 12, டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மைய வெளியீடு.
2. *SII 7: 64-70, 73-75, 440; EI 6: 32, The Hindu, 24.11.2003.*

# அவனிபாஜனக் கல்வெட்டுகளில் வருவாய்ப் பிரிவுகள், வரிகள், உழவு

**இரா. கலைக்கோவன்**

டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம்
திருச்சிராப்பள்ளி - 620 018

சீயமங்கலம் கோயில் வளாகத்திலிருந்து மைய அரசின் கல்வெட்டுத்துறை 1900-ல் பதின்மூன்று கல்வெட்டுகளையும், 1957-ல் ஐந்து கல்வெட்டுகளையும் படியெடுத்துள்ளது. இப்பதினெட்டுக் கல்வெட்டுகளுள் பதினொரு கல்வெட்டுகளின் பாடம் தென்னிந்தியக் கல்வெட்டுகள் தொகுதி ஏழிலும், இரண்டு கல்வெட்டுகளின் பாடம் எபிகிராபியா இண்டிகா தொகுதி ஆறிலும் வெளியாகி யுள்ளன. எஞ்சிய ஐந்து கல்வெட்டுகளின் பாடங்களைப் படித்தறியும் முயற்சியின் போது புதியனவாகப் பதினேழு கல்வெட்டுகள் கண்டறியப்பட்டன. இவ்வளாகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்து கிடைத்திருக்கும் இம்முப்பத்தைந்து கல்வெட்டுகளும் சீயமங்கலத்தின் திரண்ட வரலாற்றை நிரல்படத் தொகுத்துத் தருகின்றன.

**வருவாய்ப் பிரிவுகள்**

சோழர் காலத்தில் சீயமங்கலம், ஜெயங்கொண்ட சோழ மண்டலத்தின் கீழிருந்த பல்குன்றக் கோட்டத்தின் நாட்டுப் பிரிவு களுள் ஒன்றான தென்னாற்றூரின் கீழ் இணைக்கப்பட்டிருந்ததை இங்குள்ள பரகேசரிக் கல்வெட்டொன்று தெளிவுபடுத்துகின்றது. சீயமங்கலம் குலோத்துங்க சோழநல்லூராகவும் அறியப்பட்டதை விக்கிரமபாண்டியரின் கல்வெட்டால் அறிகிறோம். இதே கல்வெட்டுத் தொண்டை மண்டலத்தையும் குறிப்பிடுகிறது.

ஸ்ரீ பாண்டி நாடென்று சுட்டப்படுவது பாண்டிய நாடாகலாம். பதினான்காம் நூற்றாண்டினதாகக் கொள்ளத்தக்க கல்வெட்டொன்றில் சுட்டப்படும் இருங்கோளப் பாண்டி நாடு பல கல்வெட்டுகளில் இருங்கோளப்பாடி நாடென்று குறிக்கப்பட்டுள்ளது. இது நடுநாட்டு வருவாய்ப் பிரிவுகளுள் ஒன்றாக அமைந்திருந்தது. வளநாட்டிற்கு இணையான வருவாய்ப் பிரிவாகக் கருதப்படும் கோட்டம், தொண்டை நாட்டில் பெருவழக்கில் இருந்தது. பல்குன்றக் கோட்டம், ஊற்றுக்காட்டுக் கோட்டம், புலியூர்க் கோட்டம்,

வெண்குன்றக் கோட்டம் எனும் நான்கு கோட்டங்களைச் சீயமங்கலம் கல்வெட்டுகள் குறிக்கின்றன. விடார்ப் பற்றான விக்கிரமபாண்டிய வளநாடு, பல்குன்றக் கோட்டத்தின் கீழ் இருந்தமை நோக்க வளநாடு, கோட்டம் எனும் சொல்லாட்சிகளில் பிற்காலத்தே பொருள் திரிபு ஏற்பட்டதோ என ஐயுற வேண்டி யுள்ளது. இங்குக் குறிக்கப்படும் விடார், கோட்டத்திற்கும் ஊருக்கும் இடைப்பட்ட வருவாய்ப் பிரிவாக அமைந்திருப்பது நோக்கத்தக்கது.

தென்னாற்றூர் நாடு, வடகரை கீழ்கூர் நாடு, மேற்கால் நாடு, குன்ற நாடு, சிங்கபுர நாடு, தென்கரைத் திருவழுந்தூர் நாடு எனும் ஆறு நாட்டுப் பிரிவுகளும், பருவூர்க் கூற்றமும் அடுத்தநிலை வருவாய்ப் பிரிவுகளாக வெளிச்சத்திற்கு வருகின்றன. இவற்றுள் மேற்கால் நாடு, பருவூர்க் கூற்றமும் நடுநாட்டைச் சேர்ந்த நாட்டுப் பிரிவுகள். வடகைரை கீழ்கூர் நாடு பாண்டிய நாட்டைச் சேர்ந்த வெசாலிப்பாடியின் கீழிருந்த வருவாய்ப் பிரிவாகும். கல்வெட்டு வரியில் இடம்பெற்றிருக்கும் அமைப்பு நோக்கி இவ்வெசாலிப் பாடியை வளநாட்டிற்கு இணையான வருவாய்ப் பிரிவாகக் கொள்ள வேண்டியுள்ளது. தென்னாற்றூர் நாடு, சிங்கபுர நாடு, குன்றநாடு என்பன தொண்டை மண்டலத்தின் உட்பிரிவுகளாய் இருந்தன. தென்கரைத் திருவழுந்தூர் நாடு சோழநாட்டின் வருவாய்ப் பிரிவாய் அமைந்தது. நாடும், கூற்றமும் இணையான நிலையிலிருந்த வருவாய்ப் பிரிவுகளாகக் கருதப்பட்டாலும், கல்வெட்டு, மேற்கால் நாட்டுப் பருவூர்க் கூற்றமென்று குறிப்பது காண வளநாடு, கோட்டம் எனும் சொற்களும் நேர்ந்த அதே நிலை, நாடு, கூற்றம் ஆகிய சொற்களுக்கும் நேர்ததோ எனக் கருதவேண்டியுள்ளது.

சீயமங்கலம் கல்வெட்டுகள் இருபத்தாறு ஊர்களின் பெயர் களைத் தருகின்றன. இவற்றுள் சீயமங்கலம் குலோத்துங்க சோழநல்லூ ரென்றும் அறியப்பட்டாற் போல், தேசூர், கரிகால சோழநல்லூ ரென்றும் தளம்பரம்பட்டு, அந்தம்பரகண்ட நல்லூரென்றும் நெற் குப்பை, திருமுதுகுன்றமென்றும் அறியப்பட்டன. பின்னொட்டுக்கள் கொண்டு இவ்வூர்ப் பெயர்களை வகைப்படுத்தியபோது மங்கல மென்ற பெயரில் முடியும் ஒரே ஊராகச் சீயமங்கலத்தை மட்டுமே காணமுடிகிறது. ஊர் எனும் பின்னொட்டுடன் பத்து ஊர்களும் குடி எனும் பின்னொட்டுடன் மூன்று ஊர்களும் குன்றம், புரம் எனும் பின்னொட்டுக்களுடன் ஒட்டுக்கு இரண்டு ஊர்களும் உள்ளன. நல்லூர் என்ற பின்னொட்டுடன் மூன்று ஊர்கள் விளங்கினாலும் அவற்றிற்குப் பழைய பெயர்களும் இருந்தன. திருவானைக்காவல், திருவண்ணாமலை, நட்டுவன் வாசல், மஞ்சள்பட்டு, வேலக்காடு, புல்லாவி ஆகிய ஊர்கள் பல்வேறு பின்னொட்டுக்கள் கொண்ட ஊர்களாக அமைந்துள்ளன.

**ஊரவை**

மங்கலம் என்ற பின்னொட்டுடைய பெயரைப் பெற்றிருந்த போதும் சீயமங்கலம், பிரமதேயமாக அமையாமல் ஊராரால் நிர்வகிக்கப்பட்ட கிராமமாகவே அமைந்திருந்ததைக் கல்வெட்டுகள் தெளிவுபடுத்துகின்றன. மாறவர்மன் விக்கிரம பாண்டியரின் கல்வெட்டொன்று இவ்வூரவை உறுப்பினர்களாக நந்திமுழான் திருஅண்ணாமலை உடையான் ஆபத்துக் காத்தான், நந்திமுழான் குலோத்துங்க சோழ முவேந்தவேளான், முதலி தொண்டை மண்டல நந்தியராயன், வெம்பனூர் உடையான் மலையன், சூரைக்குடையான் திருவெண்காடன் தென்னவன் விழுப்பரையன் ஆகியோரை வரிசைப்படுத்துகிறது. புதிதாகக் கண்டறியப்பட்ட இதே மன்னரின் மற்றொரு கல்வெட்டுத் தேசூரான கரிகால சோழநல்லூரின் ஊரவை உறுப்பினர்களாகப் பலர்க்காய்ப் போதந்துணைவன் விழுப்பரையன், வெம்பனூர் உடையான், பூசந்தை, சோழியங் கிழவன், நந்திமுழான், அரிந்தவன் விழுப்பரையன் ஆகியோரைச் சுட்டுகிறது. ஊர்க்கணக்காக வாதபட்டன் இடம்பெற்றுள்ளார்.

**வரிகள்**

சீயமங்கலத்திலுள்ள சோழர் காலக் கல்வெட்டுகள் மூன்று, அக்காலத்துத் தண்டப்பெற்ற நிலத் தொடர்பான வரியினங்கள் சிலவற்றைக் குறிக்கின்றன. இறை, எச்சோறு, சில்லிறை, சோறுமாடு, முட்டையாள், செந்நீரமஞ்சி, அருந்தோடு, சிறுபாடி காவல், கண்காணி, மாப்பதக்கு, வெட்டி ஆகிய இவ்வரியினங் களுள், பின்னைந்தும் சில்லாயங்களாக விக்கிரமசோழர் கல்வெட்டில் இடம்பெற்றுள்ளன. சோழர் கால வருவாய்ப் பெயர்களை ஆராய்ந் துள்ள திரு. சண்முகம், சில்லிறை, முட்டையாள், வெட்டி ஆகிய மூன்று வரியினங்களும் தொண்டை மண்டலத்தில் பிற்சோழர் காலத்தே மிகுவழக்கிலிருந்ததாகச் சுட்டுகிறார். இவற்றுள் வெட்டி, நீர்நிலைகளையும் ஆற்றங்கரைகளையும் பராமரிக்கும் பணியைக் குறித்து நின்றது. இலவச சேவையைக் குறிக்கும் சொல்லாகக் கருதப்படும் அமஞ்சி, தொண்டை மண்டலக் கல்வெட்டுகளில் மட்டுமே காணப்பெறுவதாகச் சண்முகம் குறிப்பிடுகிறார். பாடிகாவல், ஊர்க்காப்பார்க்கு வழங்குவதற்காகப் பெறப்பட்ட வரியினமாகும் தொண்டை மண்டலக் கல்வெட்டுகளில் அதிக அளவில் காணப் படும் இவ்வரியினம் சீயமங்கலம் கல்வெட்டுகளில் சிறு எனும் முன்னொட்டுப் பெற்றுச் சிறுபாடிகாவலாகியிருப்பது நோக்க, பெரும்பாடிகாவலும் வசூலிக்கப்பட்டதை உணரலாம்.

எச்சோறு எனும் வரியினத்துடன் தொடர்புடையதாகக் கருதப்படும் சோறுமாடு, அலுவல் காரணமாக ஊர்களுக்கு வரும்

அரசுப் பணியாளர்களுக்குச் சோறளிக்கும் கடமையைக் குறித்த தாகலாம். இது எச்சோறு மாடென்றும் வழங்கப்பட்டது. அருந்தோடு, கண்காணி எனும் வரியினங்கள் மிக அருமையாகவே கல்வெட்டு களில் காணக்கிடைக்கின்றன. இவை எதன் பொருட்டுப் பெறப் பட்டன என்பதை அறியக்கூடவில்லை என்றாலும், பிற்சோழர் காலத்தே சில்லாயம் என்ற நிலஞ்சார்ந்த வரித்தொகுப்பில் இவை அடங்கியிருந்தமையை அறிய முடிகிறது. புதிதாகக் கண்டறியப் பட்ட விஜயநகரப் பேரரசுக் காலக் கல்வெட்டுகள் இரண்டு அக்காலத்து விளங்கிய பல்வேறு வரியினங்களை வெளிச்சத்திற்குக் கொணர்கின்றன. கம்பண உடையாரின் கி.பி. 1365-ம் ஆண்டுக் கல்வெட்டில் கடமை, பொன்வரி, சூலவரி, அரிசி காணம், எடுத்தளவு, விருத்துப்படிதை, நல்லெருது, நற்கிடா, ஊர்வரி, ஆசுபோகம், மக்கள் பேர்க்கடமை, இனவரி, தண்டப் பணம், சந்தை முதல், மாவடை, மரவடை ஆயம், மீன் விலை, இடைத்துறை, வெட்டிவரி, நாட்டு வினியோகம், புரவுக்கலனை ஆயம், நெல்லாயம், செக்குக் கடமை, செக்குவரி, வாணியர் பேர்க் கடமை, ஊர்வழிக் காணிக்கை, வில்வரி, மாக்கடமை ஆகிய வரிகள் இடம்பெற்றுள்ளன. இக்கல்வெட்டு, 'எப்பேர்ப்பட்ட பழவரியும் புதுவரியும்' என்று குறிப்பதால், கம்பண உடையாரின் காலத்தில் பல புது வரியினங்கள் அறிமுகப்படுத்தப் பட்டதாகக் கொள்ளலாம்.

விலைக்காணம், விடையாசு, கோமுற்றப்பேறு, அத்தாரிக் காணிக்கை, சோடி, வடசம்படி, பட்டயக் காணிக்கை, வாசல் கட்டு, முகம்பாவை, நாட்டுவரி, போகம், அமஞ்சித் தெண்டம், வாசல் பணம், தறிக்கடமை, பேர்க்கடமை, நூலாயம், நத்தவரி, உவச்சவரி, வண்ணார் இனவரி, தனயணம், ஏரிநீர் விட்ட பணம், தலையார் கோவை ஆகியன கம்பண உடையாரின் கல்வெட்டில் இடம்பெறாது, வீர விருப்பண்ண உடையாரின் ஆட்சிக் காலத்தே, கி.பி. 1384-ல் வெட்டப்பட்டுள்ள கல்வெட்டில் இடம் பெற்றிருப்பதால் இவை முன்பிருந்த வரிகளுடன் சேர்த்து இப்பகுதியில் தண்டப்பட்ட புதிய வரியினங்களாகலாம்.

**உழவு**

உழவுத்தொழில் இப்பகுதியில் முதன்மைத் தொழிலாக இன்றும் இருப்பது கண்கூடு. நெல் விளைந்த நிலங்களைக் கல்வெட்டுகள் சுட்டுகின்றன. நிலத்துண்டுகள் பல்வகையான பெயர்களை ஏற்றிருந்தபோதும் பொதுவாகச் செறு, குண்டில், கழுவல் என்னும் சொற்களாலேயே குறிக்கப்பட்டன. மரங்கள் அடர்ந்த தோப்புகள் அம்மரங்களின் பெயர்களாலேயே அழைக்கப் பெற்றன. வஞ்சிப் பெருஞ்செறு, ஆவாரக் குண்டில், மாங்கழுவல்,

தெங்கஞ்செறு, மாங்குண்டில், மேலை, கீழை விளாஞ்செறு, இலவஞ்செறு, இலுப்பைக் கழுவல், இலுப்பைச்செறு, முருக்கஞ் செறு, வாகைச்செறு, வேப்பங்குண்டில், ஆலஞ்செறு, வேலஞ்செறு, பூவஞ்செறு, கமுகு கொள்ளிக்குழி, நாவல்செறு, பனங்கழுவல் கொன்றைக் குண்டில் என்பன அவற்றுள் சிலவாம். பிராட்டிச் செறு, ஆதித்தவாரப்பட்டி, கணவதி குண்டில், சேரலங் குண்டில், சாத்திச்செறு, வல்லிடும்பன் தடி, ஆதிச்சன்செறு, ஆத்திக் குண்டில், நந்திமுழான், பப்பநப்பன், பிரான் குண்டில், பாப்பான் பட்டி, தேவர்கண்டப் பெருஞ்செறு, கண்டராதித்தம், ஆத்திச்செறு, மலையாளர் குண்டில், வண்ணாத்தியான் தாக்கு, கோயிலான்பட்டி, மக்கன் செறு, பள்ளிச்செறு, பவழத்தாள் எனத் தனியர் பெயர் ஏற்றிருந்த நிலத்துண்டுகளையும் காணமுடிகிறது. வண்ணக்கன் கழுவல், வண்ணக்கன் புலம், பாடுவான் குண்டி, உடன்பாடுவான் குண்டில், சாணன் திருத்து, மன்றாடி குண்டில், மடையன் களம் என்று தொழில் சார்ந்து அமைந்திருந்த பெயர்களையும், ஏத்தச்செறு, மதகஞ்செறு, ஏரிகீழ்வாது, ஏரிக்கீழ் பெருந்தூம்படிச் சிரமன் குழி, தூம்படிப் பள்ளவாதுக்குமடு, வதிக்கரைக் கொடுமாடி, நீரோடு கழுவல், பள்ளச்செறு, கீழைவதிக் குழி, நீரறுகால் குண்டில் என நீர்நிலைகள், நீர்வழிகள் சார்ந்து அமைந்திருந்த பெயர்களையும் சில நிலத்துண்டுகள் பெற்றிருந்தன. நமசிவாயம் குழி, மோடிக்குண்டில், மோடிச் செறு என மூன்று நிலத்துண்டுகள் இறைப்பெயர்களேற்றிருந்தன. கால் எனும் பின்னொட்டுக் கொண்டு நந்தநூறுகால், நால்கால் குண்டில், காய்கால், மஞ்சி நாறுகால், மணலிக்கால் என்றழைக்கப்பட்ட நிலத் துண்டுகளையும் பார்க்க முடிகிறது. இவை தவிர, திருக்கோயிலுக்கு அளிக்கப்பட்டிருந்த நிலங்கள் விளக்குப் பட்டி, பிரகாரன் நந்தவனம், அமையப்பன் திருநந்தவனம், நந்தவனக் குண்டில், பள்ளத்து விளக்குப்பட்டி என எதற்காக அளிக்கப்பட்டனவோ அந்தச் செயலொட்டிய பெயருடன் குறிக்கப்பட்டன. இவை தவிர, ஐம்பதிற்றங்காயி, கரிக்குண்டில், தான்றிக்குண்டில், அச்சஞ்செறு, அடைச்செற்றம் குண்டில், பருப்பைக் கழுவல், முடப்பளிக் குண்டில், எருவம் போகி, சேரிசாத்தி, சேனைக்குறைக் குண்டில், விட்டில் குண்டி, ஆனைப்பட்டி, தோய்வணக் குண்டில், கல்குண்டி, பட்டினக் குண்டில், முடங்கு, வடபுஞ்சி, மண்ணிலிக் கழுவல், பெருமணலிப் பெருஞ்செறு, சூராம்பள்ளம், கோல்செறுவு என வகைப்படுத்த வியலாத பெயர்களேற்றிருந்த நிலத்துண்டுகளையும் சீயமங்கலம் கல்வெட்டுகளில் காணமுடிகிறது. இதனால், சீயமங்கலத்திலும் அதன் சுற்றுப்புறத்திலும் இருந்த பெரும் பான்மையான நிலப்பகுதிகள் ஏதேனும் ஒரு பெயரால் வழங்கப்பட்டமையை நன்கறியலாம்.

# அரளிப்பட்டிக் குடைவரை

**இரா. லலிதாம்பாள்**

முத்துப்பேட்டை

திருப்புத்தூர்ச் சிங்கம்புணரிச் சாலையில், திருப்புத்தூரிலிருந்து பதின்மூன்று கிலோமீட்டர் தொலைவில் வலப்புறம் பிரியும் சாலை, அரளிப்பட்டிக்கு அழைத்துச்செல்கிறது. இரண்டு கிலோ மீட்டர் தொலைவு இந்தச் சுமாரான பாதையில் செல்லத் துணிந்தவர்கள் அரளிப்பட்டியை அடையலாம். அழகான தாமரைக் குளமும் ஆளரவமின்றியிருக்கும் கரையோர மடங்களும் அறை களாகத் தடுக்கப்பட்டிருக்கும் மஞ்சுவிரட்டு மாட்டுக்கொட்டிலும் கண்ணுக்கெட்டிய தொலைவுவரை பரந்துகிடக்கும் வெற்று மைதானமும் அரவங்கிரிப் பாறையை முப்புறத்தும் சூழ்ந்துள்ளன. இப்பாறையின் பின்னால் பசுமையோ பசுமை. குன்றின் உச்சியில், செட்டியார் பெருமக்களின் திருப்பணியாய் முளைத்துச் சதுர்வேதி மங்கலத்து உருத்திர கோடீசுவரரின் ஆட்சிக்குள் அரவணைக்கப் பட்ட முருகன் திருக்கோயில். ஒருகாலப் பூசையில் பசுமை களைப் பார்த்தே பசி தீர்த்துக் கொள்கிறார் எம்பெருமான்.

**மண்டபம்**

அரவங்கிரியின் தென்சரிவில் கிழக்குப்பார்த்த நிலையில், அமைந்துள்ளது இந்தச் சிறிய மண்டபக் குடைவரை[1]. தென்வடலாக 2.23 மீ. நீளமும் கிழக்கு மேற்காக 90 செ.மீ. அகலமும் கொண்டுள்ள மண்டபத்தின் தரையில், முழுக்காட்டுநீர் வெளியேற ஆழமான, ஒழுங்கற்ற காலொன்று காணப்படுகிறது. மண்டபத்தின் தென், வடசுவர்களில் ஆழமான கோட்டங்கள் வெட்டப்பட்டுள்ளன. தென்சுவரில் 92 செ.மீ. உயரத்தில், 72 செ.மீ. அகலத்தில் அமைந்துள்ள 12 செ.மீ. ஆழக் கோட்டத்தில் ஆடவர் சிற்பமொன்று நிறைவடையாப் பணியாய் விளைந்துள்ளது. வடசுவரில் 58 செ.மீ. உயரத்தில், 71 செ.மீ. அகலத்தில் வெட்டப் பட்டுள்ள 12.5 செ.மீ. ஆழக் கோட்டத்தில் 33 செ.மீ. உயரமுள்ள சிறிய அளவிலான லிங்கபாணம் வெட்டி அதன் முகப்பில் பிள்ளையாரைச் செதுக்கியுள்ளனர்[2]. உற்றுப் பார்ப்பவர்களுக்கே இப்பிளையாரின் தரிசனம் கிடைக்கும். மண்டபக் கூரையின்

வெளிநீட்டலாய் 10 செ.மீ. அளவிற்கு நீளும் பாறைப்பகுதி கபோதம் போல வடிவமைக்கப்பட்டுள்ளது.

**கருவறை**

மேற்குச் சுவரின் நடுவில் 70 செ.மீ. அகலத்தில், 1.80 மீ. உயரத்திற்கு நிலையமைப்போ, அணைவுத்தூண்களோ அற்ற திறப்புச் செய்து கருவறை அகழ்ந்துள்ளனர். தென்வடலாக 2.60 மீ. அளவும் கிழக்கு மேற்காக 2.65 மீ. அளவும் கொண்டு அமைந்துள்ள கருவறையின் உயரம் 2.04 மீ. கருவறையின் சுவர்களும் கூரைகளும் வெறுமையாக உள்ளன. கருவறைத் தரையின் நடுவே பாறையில், உயரக் குறைவானதொரு சதுரதளத்தின் மீது 47 செ.மீ. உயர வேசர ஆவுடையாரும் அதன்மீது 29 செ.மீ. உயர உருளை பாணமும் செதுக்கப்பட்டுள்ளன. சிறிய அளவிலான கோமுகம் வடபுறம் காட்டப்பட்டுள்ளது. அதன் கீழ்த் தரையில் முழுக்காட்டு நீர் வாங்கும் பள்ளம். இந்நீர் வெளியேறக் கருவறைத் தரையிலும் மண்டபத் தரையிலும் ஆழமான ஒழுங்கற்ற காலொன்று வெட்டப்பட்டுள்ளது.

**சிற்பங்கள்**

**1. தென்கோட்ட ஆடவர்**

இரண்டு கால்களையும் குத்துக் கால்களாக வைத்து அமர்ந்த நிலையில், வலக்கையை வலமுழங்கால்மீது, இருத்தி[3], இடக்கையின் முழங்கைப்பகுதி இடமுழங்கால் மீது தாங்கலாக இருக்குமாறு கையை மடித்து இடப்புறமாக உயர்த்தியுள்ள இத்தென்கோட்ட ஆடவரின் வெறுமையான செவிகள் நீள் செவிகளாகக் காட்டப் பட்டுள்ளன. உயர்த்தியுள்ள இடக்கையில் சிதைந்த நிலையில் மலர்[4]. பாதங்களும் முகமும் சிதைந்துள்ளன[5]. தலையில் மகுட அமைப்புகள் ஏதுமில்லை. மார்புப்பகுதியும் இடுப்புப்பகுதியும் சிதைந்திருப்பதால் ஆடையணிகலன்களை அடையாளம் காணக் கூடவில்லை.

**2. வடகோட்டப் பிள்ளையார்**

லலிதாசனத்திலுள்ள இப்பிள்ளையார் இடம்புரியாகக் கரண்ட மகுடராய்க் காட்டப்பட்டுள்ளார். வயிற்றின் நடுவே உதரபந்தம். இடமுன்கை வயிற்றருகே உள்ளது. துதிக்கையின் கீழ்க் காணப்படும் வலமுன்கை சிதைந்துள்ளது. பின்கைப் பொருள்களை அடையாளம் காணக்கூடவில்லை. தமிழ்நாட்டுக் குடைவரைகள் எவற்றிலும் இடம்பெறாத இந்த லிங்கப் பிள்ளையார் சிதைந்திருந்தபோதும் சரித்திரத்தில் இடம்பிடித்துள்ளார்.

## முடிவுரை

இக்குடைவரையின் எளிய அமைப்புச் சிவகங்கை மாவட்டக் குன்னத்தூர்க் குடைவரைத் தொகுதியின் முதற் குடைவரையை நினைவூட்டுகிறது. கட்டமைப்பு, சிற்பங்கள் கொண்டு இதன் காலத்தை ஏறத்தாழ ஏழாம் நூற்றாண்டாகக் கொள்ளலாம்.

## குறிப்புகள்

1. தி. இராசமாணிக்கம், சு. இராசவேல், அ.கி. சேஷாத்திரி ஆகியோர் இக்குடைவரைக் கோயில், கருவறையை மட்டுமே கொண்டுள்ளது என்று குறிப்பிட்டுள்ளனர். தென்னகக் குடைவரைக் கோயில்கள், கழக வெளியீடு, 1989, ப. 71 : தமிழ்நாட்டுக் குடைவரைக் கோயில்கள், பண்பாட்டு வெளியீட்டகம், சென்னை, 2000, ப.151.
2. இவ்வடிவத்தை முகலிங்கமாகக் கண்டு, முகலிங்கம் பற்றிய விரிவான தரவுகளில் ஆழ்ந்துபோகின்றனர் தி. இராசமாணிக்கம், சு. இராசவேல், அ.கி. சேஷாத்திரி ஆகியோர். மு.கு. நூல்கள், ப.71; ப.151.
3. வலக்கை தொடைமீதிருப்பதாகத் தி. இராசமாணிக்கம் பிழையாகக் குறித்துள்ளார். மு.கு. நூல், ப.72.
4. தி. இராசமாணிக்கம், சு. இராசவேல், அ.கி. சேஷாத்திரி ஆகியோர் இக்கையிலுள்ள பொருள் சரியாகத் தெரியவில்லை என்று குறிப்பிட்டுள்ளனர். மு.கு. நூல்கள், ப.72; ப.151.
5. தி. இராசமாணிக்கம், சு. இராசவேல், அ.கி. சேஷாத்திரி ஆகியோர் சிதைவினால் செதிலாகப் பிளந்திருக்கும் பகுதியைத் தாடியாகக் காண்கின்றனர். மு.கு. நூல்கள், ப.72; ப.151.
6. விரிவான தரவுகளுக்குக் காண்க: கோ. வேணிதேவி, இரா. கலைக்கோவன், ''குன்னத்தூர்க் குடைவரைகள்'', வரலாறு 6, ப.55-72.

# வசவ சமுத்திரம் - துறைமுகம் ?

**கு. பகவதி**

*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்*
*சென்னை - 113*

தமிழர் தம் வாணிகச் சிறப்பு உலகம் அறிந்தது. இன்று நேற்றல்ல, பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரேயே வாணிபத்தில் சிறந்து விளங்கியவர்கள் தமிழர்கள். இதற்குரிய பல சான்றுகள் உண்டு. சான்றுகளில் ஒன்று துறைமுகங்களின் வரலாறு.

தமிழரின் பண்டைய வரலாற்றையறிய மிகத் துணையாக அமையும் சங்க இலக்கியங்கள் அன்று தமிழகத்தில் காணப்பட்ட துறைமுகங்களையும் அங்குக் காணப்பட்ட வணிகப் பொருட் களையும் வணிக முறைகளையும் நம்முன் காட்சிப்படுத்துகின்றன. இச்செய்திகளின் உண்மைத் தன்மை இன்றைய தொல்பொருளாய் வாளரின் அகழாய்வு போன்ற பல வரலாற்று மூலங்களின் வழி உறுதிப்படுத்தப்படுகின்றது. எனவே இலக்கியங்கள் விளக்கிச் செல்லும் துறைமுகங்களின் வரலாறுகள் அன்றைய புலவர்கள் கண்டும் கேட்டும் உணர்ந்தும் அறிந்த செய்திகளின் வெளிப்பாடு களே என்பதும் உறுதிப்படுகின்றது.

தமிழகத்தில் காணப்பட்ட துறைமுகங்கள் பற்றி அறிஞர்கள் ஆராய்ச்சி செய்துள்ளனர்; நூல்களையும் வெளியிட்டுள்ளனர். இவற்றுள் வசவ சமுத்திரம் என்பதும் சங்ககாலத் துறைமுகங் களுள் ஒன்றென சுட்டப்படுகிறது.[1] எனினும் வசவ சமுத்திரம் ஒரு துறைமுகமாக அன்று திகழ்ந்ததா என்ற கேள்வி வசவ சமுத்திரம் தொடர்பாகத் தெரிய வரும் செய்திகளுடன் தெரிய வராத செய்திகளும் எழுப்பும் ஒரு சிந்தனையாக அமைகிறது.

மாமல்லபுரத்திலிருந்து தெற்கே 14 கி.மீ. தொலைவில் பாலாறு கடலில் கலக்குமிடத்தில் வசவ சமுத்திரம் அமைந்துள்ளது.[2] கடற்கரைத் தலமாக இது இருப்பினும் ஐயம் எழ முதற்காரணம் சங்ககால இலக்கியங்களில் இது பற்றிய எந்தவிதச் செய்திகளும் இல்லாமை.

சங்க காலத்தில் கச்சிக்கு முன்னர், நீர் பெயற்று எல்லையில் ஒரு துறைமுகம் இருந்தது. இந்த நீர்ப்பெயற்றுத் துறைமுகத்தைப்

பெரும்பாணாற்றுப்படை மிகத் தெளிவாகக் காட்சிப்படுத்துகிறது (319 - 351). கலங்கள், வணிகர், பரதவர், திமிலர் உறைவிடங்கள், சரக்குகள், கலங்கரை விளக்குப் போன்ற பலவும் மிக விளக்கமாக இங்குச் சித்திரிக்கப்படுகின்றன.

இந்த நிலையில் சங்க காலத் துறைமுகமாக நீர்ப்பெயற்று எல்லையில் காணப்பட்ட துறைமுகம் மிகத் தெளிவாகக் காட்டப்பட, வசவ சமுத்திரம் என்ற துறைமுகமோ அல்லது வசவ சமுத்திரம் ஓர் ஊர் என்ற நிலையில் கூட அன்று தெரிய வராத நிலையில் சங்ககாலத் துறைமுகங்களுள் ஒன்றாக வசவ சமுத்திரம் கருதப் படுவது எதனால் என்ற கேள்வி எழுகிறது.

தவிர தமிழகத் துறைமுகங்கள் என்ற நூலில் வசவ சமுத்திரத்தைத் துறைமுகமாக விளக்கும் பகுதியிலேயே ''சங்க இலக்கியத்தில் வசவ சமுத்திரம் குறித்து எவ்விதத் தகவலும் காணப்படவில்லை. எனினும் இக்கடற்கரைப் பகுதியில் சங்க காலத்தில் கீழை மற்றும் மேலை நாடுகளுடன் வாணிபத் தொடர்புகள் காணப்பட்ட நீர்ப் பெயற்று எனும் துறைமுகமிருந்ததைப் பெரும்பாணாற்றுப் படை (319 - 351) குறிப்பிடுகிறது. ஆனால் இப்பெயர் மாமல்லபுரத்தைக் குறிப்பதாகவும் வசவ சமுத்திரத்தைக் குறிப்பதாகவும் வரலாற்று ஆசிரியர்களிடையே வெவ்வேறு கருத்துகள் நிலவுகின்றன (Ramaswami : 1975 : 81). சில ஆய்வாளர்கள் நீர்ப்பெயற்று என்பதைச் சதுரங்கப்பட்டினத்துடன் ஒப்பிடத் தவறவில்லை'' என்கிறார் ஆசிரியர்.[3] இருப்பினும் வசவ சமுத்திரத்தை ஏன் துறைமுகமாகக் கருதினார் என்பது இங்குச் சுட்டப்படவில்லை.

இவ்வாறு சங்க காலத்தில் சிறப்புற காணப்பட்டதாகத் தெரிய வருகின்ற நீர்ப்பெயற்று தொடர்ந்த காலப் பகுதியில் தெரிய வரவில்லை. இக்காலத்தில் மல்லைத்துறைமுகம் சிறப்புடன் திகழ்ந்ததாக அறிஞர்கள் சான்றுகளுடன் விளக்குகின்றனர்.[4] மேலும் இடைக் காலத்தில் சதுரங்கப்பட்டினம் ஓர் துறைமுகமாகத் திகழ்ந்தது என்பதுடன் வசவ சமுத்திரம் ஓர் ஊராக அன்று காணப்பட்டது என்பதை ''இடைக் காலத்தில் இவ்வூர் இப்பெயரிலேயே வயலூர்ச் சீர்மையில் அமைந்திருந்ததையும் (ARE : 1932 - 33:97) அப்பொழுது இப்பகுதியில் சதுரங்கப்பட்டினம் சிறந்த துறைமுகமாக அங்குச் செயல்பட்டதையும் (ARE : 1932 - 33:103) அக்காலக் கல்வெட்டுகள் காட்டுகின்றன'' என அறிஞர் உரைப்பர்.[5]

எனவே சங்க காலத்திய வரலாறு இது பற்றித் தெரிவிக்க வில்லை. தவிர பிற்காலத்திய செய்திகளும் வசவ சமுத்திரம் ஓர் ஊராகத் திகழ்ந்திருத்தலை மட்டுமே காட்டுகின்றன. இடைக்காலத்திய

துறைமுகங்களாக மல்லை, சதுரங்கப்பட்டினம் இரண்டும் தெரிய வருகின்றன. இவை ஒரே காலத்தினவா அல்லது மல்லையை அடுத்துச் சதுரங்கப்பட்டினம் துறைமுகமாயிற்றா என்பதும் தெளிவுற வில்லை. எனவே சங்க காலத்தில் மட்டுமின்றி இடைக் காலத்திலும், வசவ சமுத்திரம் துறைமுகமாக இருந்தது என்பதற் குரிய எந்தச் சான்றுகளும் கிடைக்காமை இங்கு நோக்கத்தக்கது.

அண்மையில் தொல்லியலறிஞர்களின் அகழாய்வு வெளிப் படுத்திய கண்டுபிடிப்புகளே இதனைத் துறைமுகமாகக் கருதும் முடிவுக்கு அடிப்படையாயிற்றா என்று ஆராயும் போதும் இக்கருத்து வலுப்பெறக் கூடியதாக இல்லை. இந்த அகழாய்வில் கிடைத்த பொருட்களாக, சுண்ணாம்புக் கிளிஞ்சல்கள், பானை ஓடுகள், தொன்மைமிக்க அம்போரா என்ற ரோமானிய மதுக் குடத்தின் கழுத்துப் பகுதி, உள் நாட்டில் செய்யப்பட்ட கூர்முனை சாடிகள், வடிகுழாய்கள், செங்கற்கள் போன்றன தெரிய வருகின்றன.[6]

இந்நிலையில் அறிஞர்கள் சுட்டுவது போன்று நீர்ப்பெயற்றுத் துறைமுகமே வசவ சமுத்திரம் எனில் இந்த அகழாய்வில் கிடைத்த பொருட்கள் பற்றிய சிந்தனை மேலும் தேவை. நீர்ப்பெயற்று மிகப் பெரிய துறைமுகம். துறைமுகமென்பதற்குரிய பல சான்று களும் அங்குக் காணப்பட்டதைப் பெரும்பாணாற்றுப்படைத் தருகிறது. எனவே இந்தத் தடயங்களுக்குரிய ஏதேனும் ஒரு சில பொருட்களேனும் இந்த அகழாய்வில் கிடைத்திருக்க வேண்டும். ஆயின் இங்குக் கிடைத்த பொருட்கள் யாவும் பொதுவாக, வணிபம், பிறநாட்டார் தொடர்பு, தமிழர் வாழ்வியல் தொடர்புடையனவே தவிர குறிப்பாகத் துறைமுகத்தை அடையாளம் காட்டுவனவாக இல்லை.

அடுத்தது பெயர். நீர்ப்பெயற்று என்ற பெயர் வசவ சமுத்திரம் எனப் பெயர் மாற்றம் பெற்றது என்பதற்குரிய எந்தச் சான்றும் தெரியவில்லை.

மேலும் பெரும்பாணாற்றுப்படை நீர்ப்பெயற்றுத் துறைமுகத்தைக் காட்சிப்படுத்தும் போது அது கடற்கரைத்தலம்; துறைமுகம் என்ற அளவிலேயே வருணித்துச் செல்கிறதே தவிர இன்று வசவ சமுத்திரம், ''செங்கை மாவட்டத்தில் பாலாறு கடலோடு கலக்கு மிடத்தில் உள்ள ஒய்யாலிக்குப்பம் அருகில் இவ்வூர் அமைந்துள்ளது'' என்பதற்கிணங்க,[7] ஆறு கடலோடு கலக்குமிடம் என்பது சார்ந்த எந்தவிதக் குறிப்பும் புலவரால் அங்குச் சுட்டப்படவில்லை.

டாக்டர் மா. இராசமாணிக்கனார் நீர்ப்பெயற்று என்பது மல்லைத் துறைமுகமே எனக் கணிக்கிறார்.[8] எனினும் நரசிம்ம

வர்மனால் மகாபல்லபுரம் எனப் பெயரிடப்பட்டது இது தானா என்பது தெளிவு பெறவேண்டும். தவிர, ''நீர்ப்பெயற்று உயர்ந்த கலங்கரை விளக்கத்தைப் பெற்று விளங்கியதாகப் பெரும்பாணாற்றுப் படை குறிப்பதும், கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் மாமல்லபுரத் திற்கு வருகை புரிந்த தண்டி இங்கு விஷ்ணுவுக்கு அமைக்கப் பட்டிருந்த கடற்கரைக் கோயில் கடலில் செல்லும் கலங்களுக்குப் கரையின் திசையைக் காட்டப் பயன்பட்டதாகக் குறித்ததும்''[9] என, பா. ஜெயக்குமார் எடுத்துக்காட்டும் செய்தியும் ஏன் இந்த மாற்றம் என்ற விளக்கத்தை எதிர்நோக்கியதாகும். எனவே நீர்ப் பெயற்றுத் துறைமுகம் தூர்ந்து போக, மல்லையும், மல்லைக்குப் பின் சதுரங்கப்பட்டினமும் துறைமுகங்களாகச் சங்க காலத்திலும் இடைக் காலத்திலும் செயல்பட்டிருக்கலாமோ என்ற நோக்கிலான ஆராய்ச்சியும் இங்குத் தேவைப்படுகின்ற ஒன்று என்ற நிலையில் வசவ சமுத்திரம் மீண்டும் கேள்விக்குரியதாகிறது.

எனவே,

1. சங்க காலத்தில் துறைமுகமாக இது இருந்தது என்பதற்கு எந்தவிதச் சான்றுகளும் கிடைக்காத நிலையிலும்
2. இவ்வூர்ப்பெயரில் அமையும் சமுத்திரம் என்ற பொதுக்கூறு சங்க இலக்கியப் பொது கூறுகளில் காணப்படாமையும்
3. சங்க காலத்தில் இப்பகுதியில் நீர்ப்பெயற்று என்ற துறைமுகம் இருந்தது என்பதற்கே சான்றுகள் கிடைக்கும் நிலையிலும்
4. இடைக்காலத்தில் இது ஓர் ஊராகத் தெரிய வரும் நிலையிலும்
5. இங்கு அகழாய்வு செய்யப்பட்டபோது கிடைக்கப்பெற்ற பொருட்கள் மூலம் வசவ சமுத்திரம் குறித்துச் சில சிந்தனைகளை எண்ணிப் பார்த்தல் இயலுகிறது.

நீர்ப்பெயற்றுத் துறைமுகம் சிறப்புடன் திகழ்ந்த காலத்தில் அருகாமையில் காணப்பட்ட கச்சியும் மிகச் சிறந்த வாணிகத் தலமாகத் திகழ்ந்தது. நீர்ப்பெயற்றுத் துறைமுகத்தில் வந்து இறங்கிய பொருட்கள் படகுகளில் ஏற்றப்பட்டு, பாலாற்றின் வழியே வேகவதி ஆற்றின் கரையில் இருந்த கச்சிக்குக் கொண்டு செல்லப் பட்டிருக்க வேண்டும். இந்தப் படகு போக்குவரத்து நடைபெற்ற இடங்களின் வழியில் இருந்தது வசவ சமுத்திரம். தொல்லிய லறிஞர் சந்திரக்குமார் இந்த ஊர் பற்றிய தனது ஆய்வில் ''இங்கு நடந்த அகழாய்வின் முடிவுகள் இப்பகுதி அரிக்கமேட்டைப் போன்று ரோமானியர்களின் இருக்கையாகத் திகழ்ந்திருக்க வேண்டும் என்று அறிவிக்கின்றன. ஆனால் இப்பகுதி அரிக்க மேட்டைவிட

சற்றுக் காலத்தால் பிற்பட்டது எனக் கூறலாம். இங்கு ரோமானியர்கள் குறுகிய கால அளவில் தங்கி இத்தொழிலில் ஈடுபட்டிருந்தனர் எனக் கருத வேண்டியுள்ளது'' என்கிறார்.[10] துறைமுகம் என்று எண்ணும் போதே பிறநாட்டார்த் தொடர்பும் அவர்கள் சார்ந்த பொருட்கள் அப்பகுதிகளில் கிடைப்பதும் இயல் பானவை. தவிர அன்று ரோமானியர் தமிழகத்தின் பல பகுதி களிலும் வாணிபத்தின் காரணமாகக் காணப்பட்டனர் என்பதையும் அன்றைய வரலாறு தருகிறது. எனவே வசவ சமுத்திரத்திலும் அன்று ரோமானியர்கள் இருந்தனர் என்பதும் ரோமானியரின் பொருட்கள் கிடைத்தன என்பதும் வியப்புக்குரியதல்ல.

எனவே வசவ சமுத்திரம் துறைமுகம் என்பது மீளாய்வுக் குரியது.

**குறிப்புகள்**

1. தமிழகத் துறைமுகங்கள், ப. 43
2. மேலது, ப. 43
3. மேலது, ப. 43
4. மேலது, ப. 43, 44; பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 64, 65
5. மேலது, ப. 43
6. செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, ப.120
7. மேலது, ப. 120
8. பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.67
9. தமிழகத் துறைமுகங்கள், ப.44
10. செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, ப. 121

**துணைநூல்கள்**


1. செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, இரா. நாகசாமி, (பதிப்பாசிரியர்), வரலாற்றுப் பேரவை, சென்னை, 1977.
2. தமிழகத் துறைமுகங்கள் (இடைக்காலம்), பா. ஜெயக்குமார், அன்பு வெளியீட்டகம், தஞ்சாவூர், 2001.
3. பத்துப்பாட்டு ஆராய்ச்சி, டாக்டர் மா. இராசமாணிக்கனார், சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை வெளியீடு, சென்னைப் பல்கலைக்கழகம், 1970
4. பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியருரையும், உ.வே.சா.பதிப்பு, சென்னை, 1961.

# மெய்யத்துக் கோயிலில் களவும் கொலையும்

**அர. அகிலா**

*மெஸ்டன் கல்வியியல் கல்லூரி*
*சென்னை*

புதுக்கோட்டைத் திருப்புத்தூர்ச் சாலையில் புதுக்கோட்டையிலிருந்து சரியாக இருபது கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது திருமெய்யம். இங்குள்ள சத்தியமூர்த்திப் பெருமாள் கோயிலில் விரிவான அளவில் ஆய்வுமேற்கொண்ட டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மைய ஆய்வர்கள், இவ்வளாகத்திலிருந்து பன்னிரண்டு புதிய கல்வெட்டுகளைப் படியெடுத்துள்ளனர். அவற்றுள் இரண்டு கல்வெட்டுகள் மெய்யத்தில் நடைபெற்ற இரண்டு குற்றங்களையும், அவை விசாரிக்கப்பட்ட முறையையும், அவற்றுக்குத் தரப்பட்ட தீர்வையும் விவரிக்கின்றன.

**களவு**

மெய்யம் சத்தியமூர்த்திப் பெருமாள் கோயில் கோபுர வாயிலின் மேற்கு நிலையில் வெட்டப்பட்டுள்ள கல்வெட்டு முப்பத்தைந்து வரிகளில் அமைந்துள்ளது. 'வந்து வாழ்வித்த மெய்யன்' என்ற தொடக்க வாழ்த்துடன் தொடங்கும் இக்கல்வெட்டில், மன்னர் பெயரோ, மெய்க்கீர்த்தியோ இடம் பெறவில்லை. சுபகிருது ஆண்டு தை மாதம் பதினாறாம் நாள் வெட்டப்பட்டிருக்கும் இக்கல்வெட்டின் எழுத்தமைதி கொண்டு இதைப் பதினேழாம் நூற்றாண்டினதாகக் கொள்ளலாம். ஒன்றிரண்டு இடங்களில் எழுத்துக்கள் சிதைந்தும் படிக்கவியலாமலும் இருப்பினும், முழுமையான தரவினைப் பெறுமளவு கல்வெட்டு அமைந்துள்ளதெனக் கூறலாம்.

விருதராஜபயங்கர வளநாட்டின் கொல்லர்க் காணியைப் பெற்றவராகக் கோட்டையூர்க் கொல்லர் அகத்தியன் பொன்சின்னானைக் கல்வெட்டு அறிமுகப்படுத்துகிறது. இவரது கொல்லர்க் காணியைத் தச்சரும் தட்டாரும் அபூதமாய் எடுத்து ஆண்டபடியினால், கொல்லர் நாட்டாரிடமும் கோயிலாரிடமும் முறையிட, நாட்டாரும் தானத்தாரும் பிறரும் திருமெய்யம் சன்னதியில் கூடியிருந்து

வழக்கை விசாரித்துக் கொல்லர்க் காணி பொன்சின்னானுக்கே உரியதென்று தீர்ப்புக் கூறி அதைக் கல்லிலும் வெட்டுமாறு செய்தனர். இத்தீர்ப்பு ஆவணத்தில் சாத்தப்பன் சேர்வைக்காரர், நாட்டுக்கணக்குப் பத்தயகிரிநாத பிரான், கொல்லர் சின்னான் ஆகியோர் கையெழுத்திட்டுள்ளனர். மற்றொரு கையெழுத்தாளரின் பெயர் சிதைந்திருப்பினும் அவர் பெயரிலும் சேர்வைகாரர் என்ற பின்னொட்டே காணப்படுகிறது. கல்வெட்டின் இறுதிச் சொற்றொடர், திருமெய்யம் துணை என்று இறைக்காப்புக் காட்டி முடிகிறது.

**கொலை**

பெருமாள் கோயில் வளாகத்துள், மலைப்பாறையை ஒட்டி அமைந்துள்ள சேனைமுதலியார் திருமுன்னின் முகமண்டப மேற்குச் சுவரின் வெளிப்புறம் உள்ள முப்பத்து மூன்றுவரிக் கல்வெட்டு, இப்பகுதியில் நிகழ்ந்த கொலைக்குற்றமொன்றை வெளிச்சத்திற்குக் கொணர்வதுடன், அது தொடர்பான தீர்வையும் தெரிவிக்கிறது. பதினெட்டாம் நூற்றாண்டு எழுத்தமைதியில் உள்ள இக் கல்வெட்டிலும் மன்னர் பெயரோ மெய்க்கீர்த்தியோ இல்லை. விகாரி ஆண்டு ஆடித்திங்கள் இருபத்தொன்பதாம் நாள் வெட்டப் பட்டுள்ள இக்கல்வெட்டுச் சுவர்ப்பகுதியில் தொடங்கி, தாங்குதள உறுப்புகளில் வளர்ந்து குமுதத்தில் முடிகிறது. ஒன்றிரண்டு இடங்களில் எழுத்துக்கள் சிதைந்திருந்தாலும் இக்கல்வெட்டும் முழுமையான தரவைப் பெறும் நிலைமையிலுள்ளமை குறிப்பிடத் தக்கது.

கானநாட்டுக் கடியார் வயலில் அந்தரிபட்டர்கள் தங்களுக்குள் ஏற்பட்ட விரோதம் காரணமாக ஈசாண்டான் என்பவரைக் கொன்றனர். இக்கொலை பற்றி அறிந்த மெய்யத்து இருகோயில் காணியும், கானநாட்டு நாட்டவரும் உடன்கூடி வழக்கை விசாரித்துக் குற்றவாளிகளான எருமைபட்டன் உள்ளிட்டார் நிலப்பகுதிகளான பாண்டிய வேளான் வடகூறு நிலம் ஒரு மாவும், எங்குமாய் நின்றான் நிலமான மனம்பெரியவர் வயக்கல் நிலம் முக்காலும் கொண்டு, அந்நிலத்துண்டுகளைக் கொலையுண்ட ஈசாண்டானின் மகன் மாக்கயனுக்கு உதிரப்பட்டியாகக் கல்வெட்டித் தந்து உரிமையாக்கியதுடன், மாக்கயன் அந்நிலப்பகுதிகளின் விளைச்சலில் இருந்து மாவுக்குக் கலம் நெல்லு கோயிலுக்குத் தரவேண்டும் என்றும் தீர்ப்பளித்தனர். இவ்ஆவணத்தை எழுதிக் கையெழுத் திட்டவராக நாட்டுக்கணக்குத் தென்னவதரையரின் பெயர் காணப்படுகிறது.

கொலைக்குத் தண்டனையாகச் சொத்துகளைப் பறிமுதல் செய்வதென்பது முதலாம் இராஜராஜர் காலத்திலிருந்தே வழக்கி

லிருப்பதை உடையார்குடிக் கல்வெட்டால் அறியலாம். அங்ஙனம் பறிமுதல் செய்த நிலப்பகுதிகளை இறந்தவர் வாரிசுக்கு உதிரப் பட்டியாக வழங்கியமையை இக்கல்வெட்டு வழி அறியமுடிகிறது. இதுபோன்ற உதிரப்பட்டிக் கல்வெட்டொன்றைப் புதுக்கோட்டை மாவட்டக் குடுமியான் மலைக்கோயில் வளாகத்திலிருந்து டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மைய ஆய்வாளர்கள் கண்டறிந்தமையை இங்குக் குறிப்பிடவேண்டும்.

இது தற்கொலைக்காகத் தரப்பட்ட உதிரப்பட்டிக் கொடை யாகும். கைக்கோளர் வகுப்பைச் சேர்ந்த உடையநாச்சியின் மகன் கூத்தன் என்பார் திருநலக்குன்றமுடைய நாயனாருக்குத் தேவதானமாகக் கலிகடிந்த பாண்டிய தேவன் தந்த முக்குளத்து வயலின் திருவாசல் முகவணை ஏறத் தம் தலையை அரிந்து கொண்டு மாண்டார். அச்செயலைப் போற்றி அவருடைய உறவு முறையாருக்கு உதிரப்பட்டியாக இரண்டு மாச்செய் தானமாகத் தரப்பட்டது. கோயில் தானத்தாருக்கு அரசரால் அனுப்பப்பட்ட ஓலையாகத் திகழும் இவ்ஆவணத்தில் குருகுலராயன் எனும் அரசு அலுவலர் கையெழுத்திட்டுள்ளார். கல்வெட்டில் மன்னர் பெயர் இல்லையெனினும் சோணாடு வழங்கியருளிய சுந்தர பாண்டியரின் கல்வெட்டோடு ஒத்துப்போகும் எழுத்தமைதி கொண்டு இதையும் இவர் காலத்ததாகக் கொள்ள முடியும்.

மெய்யத்துக் கோயில் வளாகத்தில் நெடுங்காலமாகவே அமைதியின்மை இருந்தமையைச் சிவன் கோயிலில் உள்ள வைஷ்ணவ மாகேசுவரக் கல்வெட்டுத் தெளிவுபடுத்துகிறது. பிற்பாண்டியர் காலத்திற்குப் பிறகு இப்பகுதியில் நிலையான ஆட்சியோ, முறையான அரசு நிர்வாகமோ இல்லாமற் போனமையால், குற்றங்கள் பெருகின எனக் கொள்ளுமாறு புதிதாகக் கிடைத்திருக்கும் கல்வெட்டுகள் அமைந்துள்ளன.

**துணைநூல்கள்**


1. மெய்யத்தே பள்ளிகொண்டவரும் நின்றருளியவரும், மு. நளினி, இரா. கலைக்கோவன், வரலாறு 12, டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மைய வெளியீடு.
2. மெய்யத்து மகாதேவரும் மலைத்தேவரும், மு. நளினி, இரா. கலைக்கோவன், வரலாறு 12, டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மைய வெளியீடு.

# உத்தமர் கோயில் வழிபாட்டு முறைகள்

**ச. விஜயலெஷ்மி**

*தமிழ்ப் பல்கலைக்கழகம்*
*தஞ்சாவூர் - 613 005*

இயற்கையைக் கண்டு அஞ்சிய மனிதன் அவ்வச்சத்தின் காரணமாக இவ்வியற்கையை வழிபடத் தொடங்கினான். தமிழ் நாட்டில் பேரூர்களிலும், சிற்றூர்களிலும், தெய்வத்தை வழிபடுவதற் கென்று பல்வேறு வழிபாட்டிடங்கள் மிகப் பழங்காலத்திலேயே மக்கள் அமைந்திருந்தனர். அவைகள்தான் இன்றும் பல திருக் கோயில்களாகத் திகழ்கின்றன. சங்க காலத்திற்கு முன்பே மக்களால் தெய்வ வழிபாடுகள் சிறப்புற நிகழ்த்தப் பெற்றன என்பதை,

''தெய்வம் உணாவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப''

(தொல்.பொருள். அகத்.18)

என்னும் தொல்காப்பிய நூற்பாவழி உணரலாம். மக்கள் வாழ்வதற்கு இன்றியமையாத உணவு, அவ்வுணவுக்கு முன்னர் தெய்வத்தை முதன்மையாகத் தொல்காப்பியர் சுட்டிக்காட்டி இருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

தமிழ்நாட்டில் பக்தி மனம் பரப்பும் கோயில்கள் பல அக்கோயில்களில் உத்தமர் கோயிலும் ஒன்றாகும். கடவுளை நம்பினோர் கைவிடப்படார் என்ற மூதுரைக்கேற்பத் தமிழகத்தில் பல திருத்தலங்கள் காணப்படுகின்றன. ''நம்பிக்கை வை. நலம் பெறுவாய்'' என்பதற்கேற்பச் சைவ, வைணவ திருத்தலங்களில் இறைவன் வீற்றிருந்து அன்பர்கட்கு அருள் பாலித்து வருகின்றார்.

திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் திருச்சியிலிருந்து ஏறத்தாழ 7 கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது ''உத்தமர் கோயில்'' என்ற திருத்தலம். இவ்வாலயத்தில் பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற மூவரும் ஒருங்கிருந்து நற்காட்சி தந்து வருகின்றனர். உத்தமர் கோயிலின் வழிபாட்டு முறைகள் குறித்து ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

**பெயர்க்காரணம்**

பிரம்மா, திருமால், சிவன் மூவரும் காட்சி தரும் திவ்ய தலம் மும்மூர்த்திகளும் தம் தேவியர்களுடன் எழுந்தருளியிருக்கும்

ஆலயமாக இத்திருத்தலம் விளங்குகின்றது. இத்தலத்தினைப் பல்வேறு பெயர்களால் அழைக்கின்றனர். உத்தமர் கோவில், திருக்கரம்பனூர், பிட்சாண்டார் கோயில், திருமூர்த்திகளின் சேத்திரம், நீபச்சேத்திரம், ஆதிமா புரம் என்பன அப்பெயர்களாகும்.

**வழிபாட்டு முறைகள்**

இத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் திருமாலைப் புருஷோத்தமர் உத்தமர் என்றும் தாயாரைப் பூரணவல்லி என்றும் பெயரிட்டு அழைக்கின்றனர். சிவபெருமானைப் பிட்சாடனமூர்த்தி என்றும் அம்பாள் வடிவுடைய நாயகியைச் சௌந்தர பார்வதி என்றும் திருநாமங்கள் இட்டு வழங்குகின்றனர். பிரம்மாவும் அவரது தேவியான சரஸ்வதியும் தனித்தனி சன்னதிகளில் அருள்பாலிக்கின்றனர்.

புருஷோத்தமரான திருமாலும், திருமகளும் அழிவில்லாமல் எல்லா உயிர்களையும் காப்பாற்றி வருவதாலும், சகல குணங் களிலும் மேம்பட்டு விளங்குவதாலும் எம்பெருமானுக்கு உத்தமர் என்ற திருநாமம் பொருந்தி அமைகின்றது. பிரம்மனின் ஐந்தாவது தலையைக் கிள்ளிவிட்ட ''சிவபெருமான்'' அந்தத் தலை தமது கையில் ஒட்டிக்கொண்டு நீங்காமல் இருக்கவே அவர் பல புண்ணிய தீர்த்தங்களில் நீராடி உத்தமர் கோயிலுக்கு வருகிறார். திருமாலாகிய புருஷோத்தமர் லட்சுமியை நோக்க தாயாரும் பிட்சாடனரின் கபாலத்தில் பிச்சையிடுகிறார். அதுவரை நிரம்பாத ஓடு அன்று நிரம்ப சிவபெருமானின் தோஷம் நிவர்த்தி ஆகிறது. எனவே தாயார் பூரணவல்லி என்றும் அழைக்கப்படுகிறார்.

சிவ அபராதம் செய்துவிட்டுப் பூவுலகில் கோயில் இல்லை என்ற சாபம் பெற்ற பிரம்ம தேவனுக்கு இங்குத் தனி சன்னதி உள்ளது. பிரம்மா குருஸ்தானத்தில் இருந்து பக்தர்களின் வேண்டுதல்களை நிறைவேற்றி வைக்கின்றார். வியாழன் தோறும் ஆயிரக்கணக்கான பக்தர்கள் பிரம்மனுக்கு அர்ச்சனை செய்து வழிபடுவது கண் கொள்ளாக் காட்சியாகும். தொடர்ந்து பதினோரு வியாழன் அர்ச்சனை செய்து தங்கள் கோரிக்கைகள் நிறைவேறியவுடன் 12-வது வாரம் தளிகை செய்து வேண்டுதலை நிறைவு செய்து கொள்கிறார்கள்.

ஜாதகத்தில் விஷ்ணு இருந்தால் - புதன்கிழமையிலும்
சிவன் மற்றும் குருதோஷம்
இருந்தால் - வியாழக்கிழமையிலும்
நாகதோஷம், சுமங்கலி
தோஷம் இருந்தால் - வெள்ளிக்கிழமையிலும்

பிரம்மாவிற்கு உகந்த அத்தி இலையில் அர்ச்சனை செய்வதால் நற்பயன்கள் ஏற்படுகின்றன. மனமும் மகிழ்ச்சியடைகின்றது.

**பூஜைகள்**

மக்களின் பண்பாட்டு நிலையினையும், நாகரிகச் சிறப்பினையும் பறை சாற்றுவனவாக விழாக்கள் அமைந்துள்ளன. விழைவைத் தரக்கூடியது விழா எனப்படும். "விழா" என்பது நாட்டை வாழ்விக்க வரும் ஒரு நல்ல நாளேயாகும். நாட்டில் எத்துணை வேறுபாடுகள் இருந்தாலும் அவை விழா நாட்களில் இல்லையாக நீக்கப் பெற வேண்டும் என்பர். இவ்விழாக்கள் ஒரு நாள் விழா. பல நாள் விழா எனப் பகுத்துக் கொண்டாடுவர். மும்மூர்த்திகளின் தலமான உத்தமர் கோயில் பூஜைகளும் மற்றும் பெரு விழாக்களும் சிறப்பான முறையில் கொண்டாடப்பட்டு வருகின்றன.

மிகப் பழங்காலந்தொட்டே கோயில்களில் திருவிழாக்களும், வழிப்பாடுகளும் நடைபெற்று வருகின்றன. நாள்தோறும் இறைவனுக்கு நடக்கும் ஐந்துகால பூஜைகள் பின்வரும் முறையில் அமைந்துள்ளன. அவை,

1. விஸ்வரூப தரிசனம்
2. காலைச் சந்தி
3. உச்சிக்காலப் பூஜை
4. சாயரட்சை
5. அர்த்தசாமப் பூஜை

என்பனவாகும்.

**விஸ்வரூப பூஜை**

திருமாலுக்கு விஸ்வரூப பூஜை நடைபெறும் போது பசுமாடு ஒன்று பூஜிக்கப்பட்டுத் திருமால் துயில் கொண்டு இருப்பதால் அவரை எழுப்புகின்றனர். பசுமாட்டில் லெட்சுமிதேவி குடி கொண்டி ருப்பதால் விஸ்வரூப பூஜை மிகச் சிறப்பாக நடைபெறுகிறது.

**உச்சிக்காலப் பூஜை**

உச்சி வேளையில் வழிபாடு நடத்தப் பெறுவதால் இது உச்சிக்கால வழிபாடு எனப்படுகின்றது. இப்பூஜை காலை 11.30 மணி முதல் 12.00 மணி வரை நடைபெறுகின்றது. அப்பொழுது இறைவனுக்குத் தீப ஆராதனையடன் வெண்பொங்கலும், தயிர் சாதமும் படைக்கப்படுகின்றன.

**சாயராட்சை பூஜை**

இந்தப் பூஜை மாலை 5.00 மணி அளவில் நடைபெறுவதால் இது சாயரட்சை எனப்பெயர் பெறுகின்றது. வடை படையலுடன் இறைவனுக்குத் தீபாராதனை நடைபெறும். இது கால சந்தியைப் போல பயன்தரும் பூஜையாம். துர்தேவதைகள் தரும் தொல்லைகள் இப்பூஜையால் நீங்கும் என்பது ஐதீகம்.

**தாயார் சன்னதியில் பூஜை**

தாயார் சன்னதியில் ஒவ்வொரு வெள்ளிக் கிழமைகளிலும் திருமஞ்சனம் பூஜை நடைபெறுகின்றது.

பிரம்மாவிற்கு உகந்த **ஆத்தி** இலையிலும்
பெருமாளுக்கு உகந்த **துளசி** இலையிலும்
ஈஸ்வரனுக்கு உகந்த **வில்வம்** இலையிலும்

அர்ச்சனை செய்து சிறப்பளிப்பதாகக் கருதப்படுகின்றது. ஏப்ரல் 1-ஆம் தேதியன்று குத்து விளக்குப் பூஜை நடைபெறுகின்றது.

**அர்ச்சனை**

சிவன், பிரம்மா, திருமால் போன்ற மும்மூர்த்திகளுக்கும் தமிழிலும், வடமொழியிலும் அர்ச்சனை செய்யப்படுகின்றன.

**சோம வார விழா**

சோம வார விழா கார்த்திகை மாதத்தில் ஒவ்வொரு திங்கள் கிழமையிலும் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது. புகழ் பெற்ற சிவன் ஆலயங்களில் ஒவ்வோராண்டும் கார்த்திகை மாதத்தில் உள்ள சோம வாரங்களில் நூற்றெட்டு முதல் ஆயிரத்தெட்டுச் சங்குகளில் நன்னீர் நிரப்பி அவற்றை முறைப்படி பூசித்து அந்நீரைச் சிவலிங்கத்திற்கு அபிஷேகம் செய்வது சங்காபிஷேகம் ஆகும்.

**மாத வழிபாடு**

சித்திரை மாதத்தில் சித்ரா பவுர்ணமி தினத்தை இறுதியாகக் கொண்டு பிரம்மோற்சவமும், பெருமாளுக்குத் தேர்விழாவும் நடைபெறுகின்றது. சித்திரை மாதத்தில் வருடப்பிறப்பும், பொது வழிபாடும் நடைபெறுகின்றன.

வைகாசி மாதத்தில் சிவன் கோயிலில் பிரம்மோற்சவமும், ஈஸ்வரனுக்குத் தேர்த்திருவிழாவும், வைகாசி விசாகமும் நடைபெறுகின்றன.

ஆனி மாதத்தில் ஜேஷ்டாபிஷேகமும், நடராஜருக்குத் திருமஞ்சனம் நடைபெறுகின்றன.

ஆடி மாதத்தில் பூரமும், கிருத்திகையும் இறைவனுக்கு நடைபெறும் விழாவாகும்.

புரட்டாசி மாதத்தில் நவராத்திரி 9 நாட்கள் நடைபெறுகின்றது. புரட்டாசியின் 4 சனிக்கிழமைகளிலும் திருமாலுக்குத் திருவிழா என்றே கூறலாம்.

ஐப்பசி மாதத்தில் ஈஸ்வரனுக்கு அன்னாபிஷேகம் நடைபெறும்.

கார்த்திகை மாதத்தில் திருக்கார்த்திகை தீபத்துக்குச் சிவனும், பெருமாளும் சேர்ந்தார் போல் வீதி உலா வருவார்கள்.

மார்கழி மாதத்தில் திருவாதிரை அன்று நடராஜருக்கு வழிபாடும் வைகுண்ட ஏகாதசியும் நடைபெறுகின்றது.

தை மாதத்தில் தைப் பூசத்தன்று பிட்சாடனர் கொள்ளிட ஆற்றுக்குத் தீர்த்தவாரிக்குச் செல்லுதல் நடைபெறும்.

மாசி மாதத்தில் பெருமாள் கொள்ளிடத்திற்குத் தீர்த்தவாரிக்கு எழுந்தருளல் போன்றவை இம்மாதத்தின் வழிபாடு ஆகும்.

பங்குனி மாதத்தில் உத்திர நட்சத்திரத்தன்று வழிபாடுகள் நடைபெறுகின்றன. இவை யாவும் இத்திருக்கோயிலின் முக்கிய விழாக்கள் ஆகும். வியாழக்கிழமை தோறும் காலை 5.30 மணி முதல் 10.30 வரை வழிபாட்டிற்காகத் திருக்கோயில் திறக்கப்பட்டிருக்கும்.

கலைமகள், அலைமகள், மலைமகள் ஆகிய மூவகைச் சக்தி தெய்வங்களை அவரவரது கணவர்களுடன் சேர்த்து வழிபாடு செய்யும் வாய்ப்பைத் தரும் தலமாக இத்திருத்தலம் வழங்குகிறது.

**சங்காபிசேகம்**

கார்த்திகை மாதத்தில் நான்கு வாரம் ஈஸ்வரனுக்குச் சங்காபிசேகம் நடைபெறுகிறது. நூற்றெட்டு அல்லது ஆயிரத்தெட்டுச் சங்குகளை இறைவன் திருச்சன்னதியில் வைப்பார்கள். பன்னிரெண்டு இராசிக் குண்டங்களிலும் ஒன்பது சங்குகளை வைப்பர்.

எட்டு திசைகளிலும், எட்டுப் பிரதானச் சங்குகளையும் அதன் நடுவில் இடம்புரி, வலம்புரி என்ற இரு சங்குகளையும் வைப்பர். இது சிவசக்தி என்று அழைக்கப்பெறும்.

வலம்புரி, இடம்புரி சங்குகளை முறையே சுவாமியும், அம்பாளுமாகப் பாவித்து பிரதிஷ்டை செய்தல் வேண்டும். பூஜையின் போது தயாராகும் நைவேத்தியத்தைத் தேசாந்திரிகளுக்கு வழங்குவர்.

இச்சங்காபிசேகத்தை மக்கள் கண்டு பெரிதும் களிப்பர். மருத்துவ குணங்கள் நிலையின் படியும், காலச்சக்கர சுழற்சியின் படியும், கார்த்திகை மாதம் சூரிய கிரகம், சஞ்சரிக்கும் காலமாகும். தட்பவெப்ப நிலை இல்லாது நச்சுக்கிருமிகள் வளர்ந்துமக்களின் உடற்கூறில் வேறுபாடுகளைத் தோற்றுவித்துப் பற்பல நோய்கள் உண்டாக்கு கின்றன. இதனைக் கருத்தில் கொண்டு அதனைத் தவிர்க்கும் பொருட்டு ஒவ்வொரு சோம வாரமும் சங்காபிசேகம் செய்து வருகின்றனர்.

உலக நலத்திற்காகவும், மக்களின் நலத்திற்காகவும் மேற் கொள்ளப்பட்டு வரும் இச்சங்காபிசேகத் திருவிழாவைப் பெரு விழாவாக நடத்தி வருகின்றனர்.

# திருச்செந்தூர் வட்டத்தில் மரவழிபாடு

**எம்.ஏ. சுகந்தி**
*ஏ.பி.சி மகளிர் கல்லூரி*
*தூத்துக்குடி*

மனிதகுலம் தன்னைக் காத்துக் கொள்ளும் நோக்கத்திலும், தன்னைக் காக்கும் சக்தி தெய்வத்திற்கு மட்டுமே உண்டு என்ற நம்பிக்கையிலும் பல்வேறு தெய்வங்களை உருவாக்கி வழிபாடு செய்து வருகிறது. அவ்வாறு வழிபாடு செய்யப்படும் தெய்வத்திற்கு உருவம் கொடுத்தும், கோவில் அமைத்தும், குறியீடுகளை வைத்தும், நடுகல் செய்தும், வழிபாடு செய்வதை நாமறிவோம். ஆனால் திருச்செந்தூர் வட்டாரத்திலுள்ள குலசேகரப்பட்டினத்திலும், வாகைவிளையிலும் மக்கள், தெய்வம் மரமாக வந்துள்ளது என்று எண்ணி வழிபடும் மரவழிபாட்டைப் பற்றி இக்கட்டுரை ஆராய்கிறது.

**மரவழிபாடு**

தொடக்கக்காலத்தில் இயற்கையோடு இயைந்த வாழ்க்கை வாழ்ந்த மக்கள் அவ்வியற்கையையே வழிபாட்டுக்குரியதாகவும் எண்ணி வழிபட்டனர். இதனை,

''தொன்னுறை கடவுள் சேர்ந்த பராரை மன்றப் பெண்ணை''[1]

''தாதெரு மறுகி னாபுறந் தீண்டு
நெடுவீ ழிட்ட கடவுளாலத்
துருபலி யிருந்திய தொகுவிரற் காக்கை''[2]

என்ற நற்றிணைப் பாடல் வரிகளாலும்

''கடவுள் மரத்த முள்மிடை குடம்பைச்
சேவலொடு புணராச் சிறுகரும் பேடை''[3]

என்ற அகநானூற்றுப் பாடல் வரிகளாலும் அறிய முடிகிறது. காரணம் தெய்வத்தின் ஆற்றல் இயற்கையளித்த மரங்களிலும், மலைகளிலும், செடி, கொடிகளிலும், புதர்களிலும் மறைந்திருப்பதாக மனிதன் உணர்ந்ததின் நிமித்தமாகவே அதனை வழிபடத் துவங்கியுள்ளான் எனலாம். இதனை, ''மரங்கள், புதர்கள், செடிகள் ஆகியவற்றினுள்ளே தெய்வ ஆற்றல் திரட்டின் மிகமேற்பட்ட இயற்கைத் தன்மைகள் இருப்பதாகக் கருதப்படுவதை முன்னிட்டு

அவற்றை வழிபடுதல் எங்குமே பரவலாயிற்று''[4] என்ற மோனியர் வில்லியம்ஸ் அவர்களின் கூற்று நோக்கத்தக்க ஒன்றாகும்.

**ஆலயங்களில் மரவழிபாடு**

ஆகம விதிகளுக்குட்பட்ட தெய்வங்களான சிவன், முருகன், பிள்ளையார் போன்ற தெய்வங்களுக்குக் கோவில் அமைத்து வழிபாடு செய்யப்படும் இடங்களில் சிவனுக்கு வில்வமரமும், அரசும் வேம்பும் இணைந்த அல்லது அருகருகே அமைந்த மரம் பிள்ளையாருக்கும், கடம்பமரம் முருகனுக்கும் தலவிருட்சமாக அமைந்துள்ளன. மேலும் தொடக்கக் காலத்தில் காட்டை அழித்துக் கோவில் மற்றும் வீடு கட்டும் போது அக்காட்டில் ஏதாவது ஒரு மரத்தை மட்டும் மையத்தில் விட்டுவிட்டுக் கட்டியிருக்க வேண்டும் எனலாம். இதனை,

''ஆலமும் கடம்பும் நல்யாற்று நடுவுக்
கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்
அவ்வை மேய வேறுவேறு பெயரோய்''[5]

என்ற பரிபாடல் வரிகளின் வாயிலாக அறியமுடிகிறது. மேலும் ஏதாவது ஒரு மரத்தின் நிழலின் கீழ் தங்களுடைய தெய்வத்தை வைத்து வணங்கும் மக்கள் அம்மரத்தையும் தலவிருட்சமாகவோ, தெய்வம் உறையும் இடமாகவோ எண்ணி வழிபாடு செய்திருக் கின்றனர். அவ்வாறு வழிபாடு செய்யப்பட்ட மரங்களே காலப் போக்கில் வழிபாட்டிற்கு உரியதாகவும், தலவிருட்சமாகவும் எண்ணி வழிபடப்பட்டிருக்கின்றன. ''சங்க காலத்தில் இருந்தே கல்நட்டு வீரர்களையும் தெய்வங்களையும் வழிபடும் வழக்கம் நம்மக்களிடையே விளங்கியது. அவ்வழக்கத்தின் வளர்ச்சியே மரநிழல்களில் கூடி இறைவனை வழிபடும் முறையாகும். அதற்குச் சான்றாக இன்றும் ஒவ்வொரு கோயிலிலும் ஒரு தலவிருட்சம் என அழைக்கப்படும் மரம் விளங்குவதை நாம் காண்கிறோம்''[6] என்ற கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்களின் கூற்றின் மூலம் அறியமுடிகிறது.

**திருச்செந்தூர் வட்டத்தில் மரவழிபாடு**

திருச்செந்தூர் வட்டத்தில் கோவில்களும் வழிபாட்டுத் தலங்களும் மிகுதியாகத் தன்னகத்தே கொண்ட ஊர் குலசேகரபட்டினம் என்றால் அது மிகையாகாது எனலாம். இருப்பினும் இவ்வூரிலுள்ள பப்பரப்புளி என்ற மரத்தைத் தெய்வமாக எண்ணி வழிபட்டு வருகின்றனர். இதைப்போலவே வாகைவிளை என்னும் ஊரிலுள்ள மக்கள் 'பெருமரம்' எனப் பெயரிட்டுக் குலசேகரப்பட்டினத்து மக்கள் வழிபடும் அதேவகை மரத்தையே இவர்களும் வழிபட்டு வருகின்றனர்.

இவ்விரு ஊர்களிலும் உள்ள மக்கள் தங்களது வயல்களில் விளைச்சல் பெருகவேண்டும் என்பதற்காகவும், ஆடு, மாடு போன்ற கால்நடைகள் பெருகுவதற்காகவும், வயல்களில் விளைந்த விளைச்சலை அறுவடை செய்வதற்கு முன்னதாகவும் இம்மரத் திற்குப் பொங்கல் வைத்துப் படைத்தும் ஆடு, கோழி போன்ற வற்றை வெட்டிப் பலியிட்டும் வழிபாடு செய்து வருகின்றனர். இது குறித்து வாகைவிளையைச் சேர்ந்தவரிடம் பேட்டி கண்ட போது, ‘‘எங்க ஊர் மக்களுக்குக் கண்கண்ட தெய்வமாக இந்தப் பெருமரம் உள்ளது. யார் எதை வேண்டி இம்மரத்தைச் சுற்றி வந்து வணங்குகிறார்களோ, அது அவர்களுக்குக் கிடைத்து விடும். ஆடு, மாடு, கோழி போன்றவற்றில் முதல் குட்டியையோ, குஞ்சியையோ நன்கு வளர்ந்த நிலையில் இம்மரத்திற்கு வெட்டிப் பலிகொடுத்துப் பொங்கல் வைத்துப் பூசை செய்தால் எல்லாம் நோய் இல்லாமல் நன்கு பெருகும்’’[7] எனக் குறிப்பிட்டார். எனவே இம்மரத்தை இறைவனுடைய அடையாளமாகவோ அல்லது குறியீடாகவோ எண்ணாமல் தெய்வமாகவே எண்ணி வழிபடுவது மேலும் ஆய்விற்குரியதாகும்.

**மரம் உருவான வரலாறு**

குலசேகரபட்டினத்திலும், வாகை விளையிலும் அமைந்துள்ள மரங்கள் ஒரே இனத்தைச் சேர்ந்தவையாக விளங்குகின்றன. மரத்தின் அமைப்பிலும், இலை காய் போன்றவற்றிலும் ஒன்று போலவே காணப்படுகின்றன. இம்மரம் உருவானது பற்றிப் பலதரப்பட்ட கருத்துக்கள் மக்களிடையே நிலவி வந்தாலும் பின்வரும் கருத்தே பெரும்பாலான மக்களால் கூறப்பட்டது.

குலசேகரப்பட்டினம் துறைமுகமாக விளங்கிய நிலையில் வெளிநாட்டவர்கள் தொழில் மற்றும் வியாபாரம் நிமித்தமாக இங்கு வந்திருக்கின்றனர். அவ்வாறு வந்தவர்களில் ஒருவர் இறந்து போகவே அவரைக் கடற்கரை ஓரத்தில் புதைத்ததோடு, புதைத்த இடத்தை அடையாளம் காண்பதற்காக ஒரு மரத்தையும் நட்டு வைத்துள்ளனர். அவ்வாறு மேலை நாட்டவரால் நடப்பட்ட மரமே இம்மரம் என்றும் இறந்தவர் இம்மரத்தில் குடியிருப்பார் என்ற அச்சத்தில் இதனைப் ‘பேய்மரம்’ என்றும் சிலர் அழைப்பதைக் காணமுடிந்தது. இந்தியா சுதந்திரம் அடைவதற்குப் பலநூறு ஆண்டுகளுக்கு முன்னால் இம்மரங்கள் நடப்பட்டதால் அவை அளவில் பெரிய மரமாக விளங்குவதால் இதனைப் ‘பெருமரம்’ என்றும் குறிப்பிடுகின்றனர். இம்மரத்தின் கிளைகள் மற்றும் இலைகள் பெருகிக் குடைபோல் விரிந்து பூமியின் மேல் காணப் படுவதால் இதனைப் பப்பரப்புளி மரம் என்றும் குறிப்பிடுகின்றனர்.

சிலர் இம்மரம் வெள்ளத்தில் அடித்து வரப்பட்ட மரம் என்றும் குறிப்பிடுகின்றனர். எப்படி இருப்பினும் இம்மரம் வெளியிலிருந்தே இவ்வூர்களுக்கு வந்துள்ளது என்பதை அறிய முடிகிறது.

**இம்மரத்தின் சிறப்புகள்**

★ இம்மரத்தின் இலையை ஆடு, மாடுகள் தின்பதில்லை.

★ இம்மரம் நார்ச்சத்து மிக்கதாக விளங்குவதால் இதனை வெட்டுவதும் மிகவும் கடினமாக உள்ளது.

★ இம்மரத்தின் காய்கள் அளவில் சிறிய தேங்காய் போலக் காணப்பட்டாலும், உள்ளே விதைகளோ அல்லது வேறு எதுவுமே இல்லாமல் வெறுமையாகவே காணப்படுகின்றன. மேலும் இக்காயின் மேல் ஓடுகள் இரும்புத் தகரத்தைப் போலக் கடினமானதாகவும் விளங்குகின்றன.

மேலே கண்ட காரணங்களினால் இம்மரத்தின் மீது மக்கள் ஒரு வித அச்சத்தைக் கொண்டிருப்பதைக் களத்தில் காணமுடிந்தது. இவ் அச்சமே இவர்களே வழிபடத் தூண்டியிருக்கிறது என்றால் அது மிகையாகாது.

**முடிவுரை**

வழிபாடு என்பது அச்சத்தின் அடிப்படையிலேயே தோன்றுகிறது என்ற கூற்றிற்கு ஏற்பவே இவ்வூர் மக்களின் மனதில் பப்பரப்புளி மரத்தைப் பற்றியும், பெருமரத்தைப் பற்றியுமான அச்சவுணர்வே இவர்களை வழிபடத் தூண்டியிருக்கிறது என்பதைக் காணமுடிகிறது.

**குறிப்புகள்**

1. நற்றிணை, பா. 303.
2. நற்றிணை, பா. 343.
3. அகநானூறு, பா. 270.
4. மோனியர் வில்லியம்ஸ், இந்தியாவில் சமய எண்ணங்களும் வாழ்க்கையும், ப. 326-329.
5. பரிபாடல், வரிகள், 67-70.
6. செந்தமிழ்ச் செல்வர் சாம்பசிவனார், தமிழ் மாருதம், ஆகஸ்ட் 1994, ப. 12.
7. பேட்டிச் செய்தி, கு. மாரியப்பன், வாகைவிளை, நாள் 20.12.03.

# கிருஷ்ணாபுரம் ஆஞ்சநேயர் கோவில்

**வேலம்மாள் முத்தையா**

*ஸ்ரீபராசக்தி மகளிர் கல்லூரி*

*குற்றாலம்*

பாரத நாடு திருத்தலங்கள் நிறைந்த நாடு. நமது முன்னோர்கள் "கோவிலில்லா ஊரில் குடியிருக்காதே" என்றனர். இப்பழமொழிக் கேற்பத் தமிழகத்தில் இன்றளவும் புதிது புதிதாய்த் திருக்கோவில்கள் எழும்பிய வண்ணம் உள்ளன. அனுமன் வழிபாடு பாரத நாட்டில் தற்போது அதிகமாகப் பரவி வருகிறது. அந்த வகையில் திருநெல்வேலி மாவட்டம் கடையநல்லூர் நகராட்சியைச் சேர்ந்த கிருஷ்ணாபுரம் என்ற ஊரில் அமைந்துள்ள ஆஞ்சநேயர் கோவிலைப் பற்றி இந்த ஆய்வு அமைகிறது.

### அனுமன் வழிபாடு

இராமாயணத்தில் இராமருக்குத் துணையாகப் பல உதவி களைச் செய்தவர் அனுமன். அனுமன் வழிபாடு மிகப் பழமையான காலத்திலிருந்தே காணப்படுகிறது. வியாசராயர் என்பவர் அனுமனுக்காக 732 கோவில்களை எழுப்பியதாக வரலாறுகள் உள்ளன. சோழர்கள் ஆட்சி காலத்தில் அனுமனைப் பற்றிய கலைப் படைப்புகள் அதிகமாக இருந்தன. மைசூரை ஆண்ட கடம்ப மன்னர்கள் அனுமன் உருவத்தைத் தங்க நாணயங்களில் அச்சிட்டு வெளியிட்டுள்ளனர். வடநாட்டில் மற்போர் கற்பிக்கும் இடங்களில் எல்லாம் அனுமன் உருவம் நிச்சயமாக இருக்கும். பாரத நாடு முழுக்க அனுமன் வழிபாடு சிறந்து விளங்குகிறது.

### கிருஷ்ணாபுரம் ஆஞ்சநேயர் கோவில்

திருநெல்வேலி மாவட்டம் தென்காசி தாலுகாவில் கிருஷ்ணாபுரம் உள்ளது. கிருஷ்ணாபுரம் ஊரிலிருந்து ஆஞ்சநேயர் கோவில் சுமார் இரண்டு கிலோமீட்டர் தொலைவில் புகைவண்டி நிலையம் போகும் வழியில் வயல்களின் நடுவே அமைந்துள்ளது.

### கோவில் வரலாறு

இராமரின் கட்டளைப்படி அனுமார் மற்றும் வானர வீரர்கள் சீதையைத் தேடிக்கொண்டு தட்சண நாட்டிற்கு வந்தனர். பசி தாகம் மிகுதியால் களைப்பு அடைந்தனர். அனுமாரும், வானர

வீரர்களும் ஒரு குகைக்குள் இருந்து அன்னங்களும், வெள்ளை நாரைகளும், பலவித பறவைகளும் உடல் நனைந்து வருவதைக் கண்டனர். குகைக்குள்ளே தாகத்திற்கான தண்ணீர் இருக்குமென அனுமார் முதலிய வானர வீரர்கள் குகைக்குள் நுழைந்தனர். அங்கு பார்க்கும் பொழுது, நதி, குளங்கள், மாட மாளிகைகள், கோபுரங்கள் கொண்ட பட்டணத்தைக் கண்டனர்.

ஊருக்குள்ளே சுயம் பிரபை என்ற தவப் பெண்ணைக் கண்டு, குகைக்குள் அவள் இருக்கும் காரணத்தை அனுமார் கேட்டார். மயன் என்ற பேராற்றல் படைத்த விசுவ கருமன் தன்னுடைய ஆற்றலால் அந்த ஊரில் அழகிய பொன் மாளிகையையும், சோலையும் அமைத்தான். அந்த இடத்தில் ஆயிரம் ஆண்டுகள் தவம் இருந்து பிரம்மதேவரிடம் வரத்தைப் பெற்றான். இந்திர உலகத்தில் உள்ள வேற்றுமை என்ற பெண்ணின் மேல் காதல் கொண்டு அவளைக் கடத்திக் கொண்டு வந்து இந்த ஊரில் வசித்தான். இந்திரன் நாரதர் மூலம் இதனைக் கேள்விப்பட்டு மயனை அழித்தான். பிரம்மஹத்தி தோசத்தால் இந்திரன் வருந்தினான். அவனது வருத்தத்தைத் தீர்க்க தேவர்கள் அனைவரும் மகாதேவனிடம் முறையிட்டனர். சிவபெருமான் அருளால் கங்கையும் அகத்தியர் அருளால் காவிரியும் குகைக்குள் கொண்டு வரப்பட்டு, இந்திரன் அதில் நீராடி பிரம்மதோஷம் நீங்கி இந்திரலோகம் சென்றான். தன் பாவத்தைப் போக்கிய தீர்த்தத்தைப் பாதுகாக்க சுய பிரம்பையை நியமித்தான்.

சுயபிரம்பை சிவபெருமானிடம் எத்தனைக் காலம் தான் அந்த தீர்த்தத்தைப் பாதுகாக்க வேண்டும் என்று கேட்க அனுமார் இராமருக்காகச் சீதையைத் தேடி இங்கு வருவார், அவரிடம் இந்த தீர்த்தத்தை ஒப்படைத்துவிட்டு நீ தேவலோகம் வரலாம் என்றாள். அன்று சொன்ன வார்த்தை இன்று பலித்துவிட்டது. எனவே அனுமனே நீ இந்த தீர்த்தத்தைப் பாதுகாத்து வா என்றார். அதற்கு அனுமன் தாயே இராவணன் சீதையைத் தூக்கிக் கொண்டு போய் விட்டான். சீதையைத் தேடிவர இராமர் ஆணையிட்டுள்ளார். இராவணனை வெற்றிகண்டு சீதையை மீட்டான். இந்த தீர்த்தத்தைப் பாதுகாப்போம் என்றார். யுத்தம் முடிந்து எல்லோரும் திரும்பும் போது தீர்த்தம் அவர்கள் பின்னால் தொடர்ந்தது. இது என்ன என்று இராமர் அனுமாரைக் கேட்க, அனுமர் காரணத்தைச் சொன்னார். இராமரும் மகிழ்ந்து அயோத்தியில் பட்டாபிசேகம் ஆனபின் இந்த இடத்திற்கு வரலாம் என்றார். அதன்படி பட்டாபிசேகம் முடிந்தவுடன் கிருஷ்ணாபுரம் வந்து அனுமாரை இருக்கச் செய்தார். இராம தரிசனம் இல்லாமல் அரைநொடிகூட

இருக்க மாட்டேன் என்று அனுமார் கூறியதால் இராமர் சீதை, லெட்சுமணர்க்கு அங்கு கோவில் அமைக்கப்பட்டது (குறிப்பு ஸ்ரீஹனுமத் ஸ்தோத்ரஞ்சரி).

**கோவிலின் அமைப்பு**

கிருஷ்ணாபுரம் அனுமார் கோவில் ஊரிலிருந்து அரை கிலோ மீட்டர் தொலைவில் இரயில்வே நிலையம் செல்லும் வழியில் வயல்களுக்கு நடுவே கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. இக்கோவிலில் ஆஞ்சநேயர் தெற்கு நோக்கி அபயஹஸ்த ஜயவீர ஆஞ்சநேயராகக் காட்சியளிக்கிறார். அனுமார் சன்னதிக்கு மேற்குப் புறத்தில் இராமர், லெட்சுமணன், சீதை ஆகியோருக்குச் சன்னதி உள்ளது.

அனுமார் கோவிலில் தியான மண்டபம் கல் மண்டபம், மணி மண்டபம் என மூன்று வகையான மண்டபங்கள் உள்ளன. தியான மண்டபம் அனுமார் கருவறைக்கு மேல்புறம் உள்ளது. இந்த மண்டபத்தில் பக்தர்கள் அனைவரும் அமர்ந்து தியானம் செய்கின்றனர். கல் மண்டபம் ஆஞ்சநேயருக்கு முன்பாக நீள் வாக்கில் உள்ளது. மணி மண்டபம் கோவிலின் நுழைவுப் பகுதியில் அமைந்துள்ளது. இம்மண்டபத்திற்குமேலே விமானம் உள்ளது.

கருவறையில் ஆஞ்சநேயர் அபயஹஸ்த வடிவத்தில் தெற்கு நோக்கி வீற்றிருக்கின்றார். அபயஹஸ்த ஆஞ்சநேயரின் வால் தலைக்கு மேல் இருக்கிறது. ஆஞ்சநேயரின் வாயில் நவகிரகம் உள்ளது. இவரது வலதுகை ஆட்காட்டி விரலில் கனையாளி உள்ளது. வலது உள்ளங்கையில் மகாலெட்சுமி வீற்றிருக்கிறாள். தலையில் உத்திராட்ச மாலை அணிந்திருக்கின்றார்.

கோவிலின் வெளி சுற்றில் வடபுறம், தலவிருட்சமும், கீழ்புறம் தெப்பக்குளமும், மேல்புறம் நந்தவனமும், தென்புறம் பிள்ளையாரும், நாகமும் உள்ளன. இக்கோவிலின் தலவிருட்சம் வில்வமரமாகும். கோவிலைச் சுற்றி பல வகை மரங்களும் பூச்செடிகளும் காணப்படுகின்றன. தெப்பக்குளத்தின் உள்ளே மேற்கிலும், கிழக்கிலும் மொத்தம் இரண்டு சுரங்கப் பாதைகள் காணப்படுகின்றன. இந்தக் கோவிலில் காணப்படும் தெப்பக் குளத்திற்கு அனுமன் நதி என்று பெயர்.

**பூஜைகளும் திருவிழாக்களும்**

கோவிலில் தினமும் காலை, மாலை இரண்டு வேளையிலும் பூசை நடைபெறுகிறது. இது தவிர சனிக்கிழமைகளில் விசேட

பூசைகள் நடைபெறுகின்றன. நல்லெண்ணெய், சந்தனாதித்தைலம், பஞ்சகவ்யம், பஞ்சாமிர்தம், பசும் நெய், பால், சந்தனம், தயிர், தேன், கரும்பு சாறு, எலுமிச்சை பழச்சாறு, இளநீர் ஆகியன அபிடேகப் பொருள்களாகப் பயன்படுத்தப்படுகின்றன.

மார்கழி மாதம் அனுமன் ஜெயந்தி விழா சித்திரை மாத வருடப் பிறப்பு விழா, கார்த்திகை தீப திருவிழா, புரட்டாசி மூன்றாம் சனித் திருவிழா என்று திருவிழாக்கள் நடைபெறு கின்றன. மார்கழி மாதம் அனுமன்ஜெயந்தி விழா அகண்ட நாம ஜெபம், வேள்வி பெண்களின் கோலாட்டு நடனம், ஆன்மீகச் சொற்பொழிவுகள் என்று ஐந்து தினங்கள் சிறப்பித்துக் கொண்டாடப்படுகின்றன.

அந்தணர்களின் சொந்தக் கோவிலாக இருந்தது. அவர்கள் மட்டும் தான் சென்று வழிபடுவார்கள். தற்போது சுமார் 40 வருடங் களாக அரசு இக்கோவிலைத் தனதாக்கிக் கொண்டுள்ளது. தற்போது எல்லா இனத்தைச் சார்ந்த மக்களும் இங்கு வழிபாட்டிற்காக வருகின்றார்கள்.

கிருஷ்ணாபுரம் அனுமர் கோவில் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே தோன்றி இருந்தாலும் பிரசித்தி பெறவில்லை. 1993-ம் ஆண்டு கும்பாபிசேகம் நடந்த பிறகே இக்கோவில் பிரபல மடையத் தொடங்கியது.

**கோவிலைப் பற்றிய நம்பிக்கைகள்**

கிருஷ்ணாபுரம் அனுமன் தெற்கு நோக்கி அபயஹஸ்த ஜயவீர ஆஞ்சநேயராகக் காட்சி அளிப்பதால் இந்த ஆஞ்சநேயர் எமபயத்தை நீக்க வல்லவர் என்று நம்பப்படுகிறது. மேலும் இராமரே அனுமரை இங்கு பிரதிஷ்டை செய்ததாக நம்பப் படுவதால் கேட்ட வரத்தையெல்லாம் அனுமர் கொடுப்பார் என்று மக்கள் நம்புகின்றனர்.

திருமணமாகாத கன்னிப் பெண்கள் அதிகமாக இக்கோவிலுக்கு வருகின்றனர். தேங்காயில் நெய்தீபம் ஏற்றிச் சனிக்கிழமை தோறும் இந்த ஆலயத்திற்கு வந்து வழிபாடு செய்கின்றனர். இவ்வாறு செய்த பல கன்னிப் பெண்களுக்கு விரைவில் திருமணம் நடைபெற்றதாகக் கூறுகிறார்கள். மேலும் குழந்தை பேறு இல்லாதவர்கள், வேலையில்லாதவர்கள் என்று பலரும் தங்கள் குறைகளுடன் இக்கோவிலுக்கு வந்து குவிகின்றனர்.

கூட்டு வழிபாடு இக்கோவிலில் சிறப்பம்சமாகக் காணப் படுகிறது. அபிடேகம், அலங்காரம் நடைபெற்று கொண்டிருக்கும்

போது பக்தர்கள் அனைவரும் இராமநாமத்தைச் சொல்லி கூட்டு வழிபாட்டில் ஈடுபடுகின்றனர்.

பெருந்தெய்வ வழிபாட்டில் சாமி ஆடுதல் என்பதைக் காண்பது அரிது. ஆனால் இக்கோவிலில் பூசை நேரத்தில் பலர் சாமி வந்து ஆடுகின்றனர். குறிப்பாகக் குரங்கு போலச் செயல்களைச் செய்கின்றனர். இக்கோவிலிலுள்ள அந்தண பூசாரிகளும் இதனைத் தடுப்பதில்லை.

கோவில் குளத்தில் குளித்தால் பல நோய்கள் மறைந்து விடுவதாகவும் நம்புகிறார்கள். வெல்ல பாயாசம், வடை, பஞ்சாமிர்தம், புளியோதரை போன்ற பிரசாதங்கள் அனுமருக்குப் படைக்கப்பட்டு, பின் பக்தர்களுக்கு வழங்கப்படுகின்றன. திருவிழாக் காலங்களில் அன்னதானம் வழங்கப்படுகிறது.

கிருஷ்ணாபுரம் ஆஞ்சநேயர் கோவில் மக்களுடைய அடிப்படைச் சமூக உறவுகளையும், தனி நபர் நெஞ்சுணர்ச்சி களையும் உருவாக்குகின்ற கலாச்சாரச் சக்தியாகக் கோவில்கள் விளங்குகின்றன என்பதற்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றது எனலாம்.

# விருதுநகர் அருள்மிகு மாரியம்மன் கோயில் பங்குனித் திருவிழா

**இ. செல்வி**

*அய்யநாடார் ஜானகியம்மாள் கல்லூரி (தன்னாட்சி)*
*சிவகாசி*

விருதுநகரில் புகழ்பெற்று விளங்கும் பங்குனித் திருவிழாவைக் குறித்து ஆய்வதாக இக்கட்டுரை அமைகின்றது.

**திருவிழா**

விருதுநகரில் மக்கள் அனைவராலும் சாதி வேறுபாடின்றி மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுவது பங்குனித் திருவிழாவாகும். தமிழகத்திலேயே விருதுநகரில் மட்டுமே இருபத்தியெட்டு நாட்கள் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. பங்குனித் திருவிழாவில் பொங்கல் வைத்தல், அக்னிசட்டி எடுத்தல், கயிறு குத்துதல், மாவிளக்கு எடுத்தல், உருண்டு கொடுத்தல், இரதம் இழுத்தல் போன்ற நேர்த்திக் கடன்கள் செலுத்துவதைப் பங்குனித் திருவிழாவில் காணமுடிகிறது.

**திருவிழாக்கள்**

திருவிழாக்கள் இறைவனுக்கு நன்றி செலுத்தும் சிறப்பான வழிபாடுகளுள் ஒன்றாகும். இத்திருவிழாவின் போது மக்கள் இன வேறுபாடுகளை மறந்து ஓரிடத்தில் கூடித் தெய்வத்தை வணங்குகின்றனர். 'திரு' என்பதற்கு இறைவனோடு தொடர்புடைய அல்லது மங்கலமான சொற்களுக்கு முன் இடப்படும் அடை என்று அகராதி பொருள் விளக்கம் தருகிறது. மேலும் விழா என்பது ஒருவரை அல்லது ஒன்றைச் சிறப்பித்துப் பலரும் கலந்து பங்கேற்று மகிழும் பெரிய ஏற்பாடுகளுடன் நடத்தப்படும் நிகழ்ச்சி ஆகும். (ப.ரா. 1992; 545) மக்களிடம் சமுதாய ஒற்றுமையும், கட்டுக்கோப்பும் அமைவதற்கு இத்திருவிழாக்கள் வழிவகுக்கின்றன.

**மாரியம்மன் திருவிழா**

தங்களைக் காக்கும் தெய்வமான மாரியம்மனுக்கு நன்றி செலுத்தும் பொருட்டு விருதுநகர் பக்தர்கள் ஆண்டுதோறும் விழா எடுக்கின்றனர். ஒவ்வொரு ஆண்டும் பங்குனி மாதம்

இவ்விழா நடத்தப்படுகிறது. மாரியம்மன் கோவில், கூரைக் கோவிலாக இருந்தபொழுதே இத்திருவிழா கொண்டாடப்படுவதோடு, அன்று அக்னிச்சட்டியும் எடுக்கப்படுகிறது. இத்திருவிழா விருதுநகர் மக்கள் அனைவராலும் சாதி வேறுபாடின்றி மிகச்சிறப்பாகக் கொண்டாடப்படும் விழாவாகும்.

பங்குனிப் பொங்கல் திருவிழாவின் போது தமிழகத்தின் பிறபகுதிகளிலும், வெளிமாநிலங்களிலும் வசிக்கும் விருதுநகரைச் சேர்ந்தவர்கள் விருதுநகர்க்கு வருகை புரிந்து விழாவில் கலந்து அம்மன் அருள் பெறுவதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். இத்திருவிழா தமிழகமெங்கும் புகழ் பெற்ற ஒன்றாக விளங்குகிறது.

**விழா ஏற்பாடு**

பங்குனித் திருவிழா விருதுநகர் இந்து நாடார்கள் தேவஸ்தானத்தினரால் ஏற்பாடு செய்யப்படுகிறது. இத்திருவிழா விற்கு இரண்டு மாதங்களுக்கு முன் இதற்கான சிறப்புக் கூட்டம் கூட்டப்பட்டு விழா பற்றி முடிவு செய்யப்படுகிறது.[1]

**சாற்றுதல்**

விழா நடத்துவது பற்றி அனைவருக்கும் தெரியப்படுத்து வதற்காக அனைத்துச் சமூக இந்துப் பெரியவர்களுக்கும் அழைப்பு அனுப்பப்படுகிறது. பங்குனி மாதம் முதல் ஞாயிற்றுக்கிழமை யன்று இரவு எட்டு மணியளவில் அனைத்துச் சாதி இந்துப் பெருமக்களும் மந்தன் வகையாராப் பிள்ளையார் கோவிலில் ஒன்று கூடுவர். அக்கூட்டத்தில் விழாக் குறித்துக் தெரிவிக்கப்படுகிறது.

பின்னர் விழாச் செய்தியை ஊர் மக்கள் அறியும் பொருட்டுச் சாற்றுவதற்காகக் காணிக்கைகாரர்கள் மூன்று பேர்கள் அழைக்கப் படுகின்றனர். இன்று மாரியம்மன் கோவில் பொங்கல் சாற்றுவதால் 21 நாட்கள் விரதம் இருப்பவர்கள் இருந்து கொள்ளலாம் எனச் சாற்றப்படுகிறது. முன்பு ஒருவரே சாற்றி வந்தார். தற்போது ஊர் விரிவடைந்து விட்டதால் மூன்று காணிக்கைகாரர்கள் சாற்றி வருகின்றனர்.[2]

**சாற்றுதலுக்குப் பின் இருபத்தியொரு நாட்கள் விரதம்**

திருவிழா சாற்றிய பின் மாரியம்மன் கோவிலிலும் கயிறு குத்துவோர், அக்னிசட்டி எடுப்போர் மற்றும் இரதம் இழுப்போர் வீடுகளிலும் வேப்பிலைத் தோரணம் கட்டப்படுகிறது. இவர்கள் தங்கள் வலது கையில் காப்புக் கட்டிக் கொள்கின்றனர். இருபத்தியொரு நாட்கள் விரதம் சாற்றியதிலிருந்து மேற்கொள்ளப் படுகிறது.

**விரதத்தின்போது உட்கொள்ளும் முறை**

விரதமிருப்பவர்கள் ஒரு வேளை மட்டுமே உணவு அருந்து கின்றனர். மற்ற நேரங்களில் நனைத்த அவல், வாழைப்பழம், பால் இளநீர் மற்றும் பானைக்கரம் இவைகளை உட்கொள்கின்றனர்.

**விரதமிருப்பவர் கடைபிடிக்கும் முறை**

சாற்றுதலுக்குப் பின் இறந்தவர் வீடுகளுக்கு மிக நெருங்கிய உறவினர்கள் தவிரப் பிறர் செல்வதில்லை. விழா முடிந்து கொடி இறக்கிய பின்பே அவ்வீட்டிற்குச் சென்று துக்கம் விசாரித்து வருகின்றனர். பொதுவாகப் பிறர் வீடுகளிலும், கடைகளிலும் உணவு மற்றும் தண்ணீர் அருந்துதல் தவிர்க்கப்படுகின்றன. மாமிசம் ஒதுக்கப்படுகிறது. அம்மனுக்குத் தண்ணீர் ஊற்றுதல் ஆரம்பிக்கப்படுகிறது. மக்கள் அனைவரும் கோவிலுக்குச் செல்வதை முக்கியமானதாகக் கருதுகின்றனர்.

**பசனை**

மாதர் மணிவாசகச் சங்கம் மற்றும் இந்து சமய வளர்ச்சிக் கழகம் ஆகிய சங்கங்களைச் சேர்ந்தவர்கள் சாற்றியதிலிருந்து இருபத்தியொரு நாட்கள் மாரியம்மன் கோவிலில் பக்திப் பாடல்கள் பாடிப் பசனை செய்வதை வழக்கமாகக் கொண்டுள்ளனர்.[3]

**கொடியேற்றம்**

சாற்றிய தினத்திலிருந்து பதினைந்தாம் நாள் ஞாயிற்றுக் கிழமை மாரியம்மன் கோவிலில் கொடியேற்று வைபவம் நடைபெறுகிறது.

இருபத்தைந்து மீட்டர் நீளமுள்ள புதிய கச்சைத் துணியைக் கொடிக்காக மஞ்சள் நீரில் நனைக்கின்றனர். கொடியேற்றத்திற்கு முதல்நாள் அத்துணி கல்தச்சரிடம் ஒப்படைக்கப்படுகிறது. அவர் அத்துணியின் ஒரு முனையில் அம்மனின் சிங்க வாகனத்தை வரைகின்றார்.

கொடியேற்ற நாளன்று இரவு எட்டு மணியளவில் மாரியம்மன் உற்சவ விக்கிரத்தைச் சர்வ அலங்காரத்துடன் கொடி மரத்தினடியில் வீற்றிருக்கச் செய்கின்றனர். அன்று கொடி மரம் புதுப்பிக்கப்பட்டு, தர்ப்பைப்புல் கட்டப்பட்டுச் சந்தனம், விபூதி மற்றும் குங்குமம் பூசப்பட்டுப் புதுப்பொலிவுடன் விளங்கும்.

பின்னர்க் கோவில் பூசாரிகள் மேளத்தாளத்துடன் கல்தச்சர் வீட்டிற்குச் சென்று அவருக்குப் புத்தாடை மரியாதை செய்கின்றனர். தேங்காய் உடைத்துக் கொடிக்குப் பூசை செய்கின்றனர். பின்

மேளதாளத்துடன் கொடியை யானை மீது வைத்துக் கோவிலுக்கு எடுத்து வருகின்றனர்.

கோவில் கொடி மரத்தினருகில் அக்கொடியை வைத்துக் காப்புக்கட்டி புண்ணியதானம் அனுக்ஞை விநாயகர் பூசை, கும்பபூசை ஆகிய பூசைகள் நடத்தப்படுகின்றன. பூசைப் பொருட் களாகத் தேங்காய்; வாழைப்பழம், வெற்றிலை, பாக்கு, பச்சரிசி, கோவில் பிடிமண் மற்றும் நாணயம் ஆகியவைகள் கொடியின் மறுமுனையில் வைத்துக் கட்டப்படுகின்றன. பின் கொடிமரத்தின் உச்சியில் சிங்க உருவம் நன்கு தெரியும் வண்ணம் வைத்துக் கொடி மரத்தின் மேலிருந்து தொடங்கி அடிவரை சுற்றிக் கட்டுகின்றனர். கொடி ஏற்றும் பொழுது கூடியிருக்கும் பக்தர்கள் பக்திப் பரவசத்தால் 'ஆகோ' 'அய்யகோ' என முழக்கமிடுகின்றனர்.

இதன்பின் யாகம் நடத்தப்படுகிறது. யாக சாலைக்கருகில் வாசனைத் திரவியங்கள் நிரப்பப்பட்ட கும்பங்களையும் விநாயகர் கோவில் பிடிமண் கொண்ட கும்பத்தையும் வைத்துப் பூசை செய்கின்றனர்.

அன்று இரவு பத்து மணிக்குமேல் விநாயகர் வெயிலுந்தம்மன், மாரியம்மன் உற்சவ விக்கிரகங்களை நன்கு அலங்கரித்து வெள்ளிச் சிம்மாசனத்தில் வைத்துச் சப்பரத்தில் நகர் வலமாக அழைத்து வருகின்றனர்.

இன்று முதல் அதிகாலை நான்கு மணிக்கே மாரியம்மன் கோவில் திறக்கப்படுகிறது.

**கொடியேற்றத்திற்குப் பின் நடைபெறுவன**

கொடியேற்ற நாளிலிருந்தே ஊர் திருவிழாவில் களைகட்டத் தொடங்கி விடுகிறது. கடைத் தெருவிலுள்ள வணிக நிறுவனங்கள் ஒளி விளக்குகளால் அலங்கரிக்கப்படுகின்றன. மொட்டை எடுத்தல், மாவிளக்கு எடுத்தல், உருண்டு கொடுத்தல் போன்ற நேர்த்திக் கடன்கள் செலுத்த ஆரம்பிக்கப்படும். ஏழு நாட்கள் தண்ணீர் ஊற்ற நேர்ந்து கொண்டவர் தண்ணீர் ஊற்ற ஆரம்பிப்பார்கள். விரதம் இருப்போர் எண்ணிக்கை அதிகரிக்கும்.

**பொங்கல் திருவிழா**

கொடியேற்றத்திலிருந்து எட்டாம் நாள் ஞாயிற்றுக்கிழமை பொங்கல் திருநாளாகும். மக்கள் அதிகாலையிலேயே வெகு உற்சாகமாக எழுந்து வீட்டைச் சுத்தப்படுத்துவார்கள். நேர்த்திக் கடனை நிறைவேற்றுவதற்காகவும் அம்மன் அருளைப் பெறுவதற் காகவும் கோவிலுக்குச் சென்று வருவார்கள். பொங்கலன்று காலை

பத்து மணிக்கு மேல்தான் ஆடவர்கள் கோயிலுக்குள் அனுமதிக்கப் படுவார்கள்.[4]

### அக்னிசட்டி எடுத்தல்

இது பங்குனிப் பொங்கலின் உச்சகட்ட விழாவாகும். மிக நெருங்கிய உறவினர்களும், நண்பர்களும் இவ்வைபவத்திற்கு அழைக்கப்படுகின்றனர்.

விருதுநகரில் மட்டுமல்லாது, சுற்றியுள்ள கிராமங்களைச் சேர்ந்தவர்களும் மாரியம்மனுக்குச் சட்டி செலுத்துவதாக நேர்ந்து கொள்கின்றனர். ஞாயிற்றுக்கிழமை பின்னிரவிலிருந்தே செவ்வாய்க் கிழமை அதிகாலை வரை தொடர்ச்சியாக ஆயிரக்கணக்கில் ஆடவரும் பெண்டிரும் அக்னிசட்டி எடுத்து வருவது விருதுநகரில் மட்டுமே நடைபெறுவதாகும். அக்னிசட்டிகளை மக்கள் பார்ப்பதற்காகத் தங்கள் குடும்பத்தார், சுற்றதார் மற்றும் நண்பர் களுடன் கடைத்தெரு மற்றும் பிற வீதிகளில் திரளாக அமர்ந்திருப்பார்கள்.

### தேர்த் திருவிழா

பக்தர்களை நோக்கித் தெய்வங்கள் வருவதே தேரோட்டத்தின் சிறப்பாகும். பொங்கல் தினத்திலிருந்து மூன்றாம் நாள் தேர்த் திருவிழாவாகும். அன்று மாலை ஐந்து மணியளவில் தேரோட்டம் நடைபெறுகிறது. அனைத்துச் சாதியினரும் தேரை இழுக்கின்றனர். சிறிய தேர், பெரிய தேர் என இருதேர்கள் வலம் வரும். சிறிய தேரில் விநாயகப் பெருமாள் வீற்றிருப்பார். பெரிய தேரில் வெயிலுகந்தம்மன், மாரியம்மன் நன்கு அலங்கரிக்கப்பட்டு வீற்றிருப்பார்கள்.

மாரியம்மன் கோவிலில் நாள், வார, மாதச் சிறப்பு வழிபாடுகள் தொடர்ந்து நடைபெற்று வருவதோடு அம்மன் வழி பாட்டில் மிகவும் கவனம் செலுத்தி வருவதையும் காணமுடிகின்றது. இங்கு வருடந்தோறும் நடைபெறுகிற பங்குனித் திருவிழா மிகவும் புகழ்பெற்றதோடு தமிழகம் எங்கும் பேசப்படும். சிறந்த திருவிழாவாகவும் திகழ்கிறது.

### குறிப்புகள்

1. *இ. கருப்பசாமி, விருதுநகர், 30.10.2003.*
2. *வெ. செந்தில்குமார், விருதுநகர், 30.10.2003.*
3. *மு. சின்னக்கனி, விருதுநகர், 10.8.2003.*
4. *வே. தவமணி, விருதுநகர், 10.8.2003.*

# விடுதலைப் போராட்டத்தில் நெல்லையப்பர்

**ப. கல்பனா**

*பாரதி மகளிர் அரசு கலைக்கல்லூரி*
*வடசென்னை*

பரலி. சு. நெல்லையப்பர், இன்று ஒரு மறக்கப்பட்ட பெயர். ஆனால் எந்நாளும் தமிழர்கள் மறக்கத் கூடாத திருப்பெயர். இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற இரு ஆளுமைகளாக மதிக்கப்படும் பாரதி, வ.உ.சி. ஆகியோரின் சீடராகவும் - தோழராகவும் திகழ்ந்த நெல்லையப்பர், 18.09.1889-ஆம் ஆண்டில் பிறந்து 28.03.1971-இல் மறைந்தவராவார். இந்தப் பூமியில் 82 ஆண்டுகள் வாழ்ந்து மறைந்த அந்தப் பெருமகனாரின் விடுதலைப் போராட்டப் பணிகள் குறித்துத் தொகுத்தளிக்க முனைவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### பிறப்பிடம்

திருநெல்வேலி, தமிழ்நாட்டின் வரலாற்றுக்குக் களமாக அமையும் பெருமையுடையது. இலக்கியம், சமயம், அரசியல் மூன்றிலும் வரலாற்றுப் புகழ்பெற்றவர்களைத் தந்தவொரு மாவட்டம் இது. விடுதலைப் போராட்ட வரலாற்றில் கட்டபொம்மன், பாரதி, வ.உ.சி., சுப்பிரமணிய சிவா, வ.வே.சு. ஐயர் முதலிய குறிப்பிடத்தக்கவர்களைத் தந்தது திருநெல்வேலியாகும். இத்தகைய திருநெல்வேலியின் வடக்கே, எட்டுமைல் தொலைவிலுள்ள பரலிக்கோட்டையில் நெல்லையப்பர் பிறந்தார். எனவே, இவருடைய பிற்காலத் தீவிரமான செயல்பாடுகளுக்குப் பிறந்த இடமும் ஒரு காரணமாயிற்று.

### குடும்பச் சூழல்

நெல்லையப்பரின் பெற்றோர், சுப்பிரமணியப்பிள்ளை - முத்துலெட்சுமி அம்மாள் ஆவர். பரலி சு.சண்முக சுந்தரம் பிள்ளையும், குழந்தைவேலன் பிள்ளையும், நெல்லையப்பரின் சகோதரர்களாவர். பரலி. சு. சண்முக சுந்தரம் பிள்ளை, 'வந்தே மாதரம் பிள்ளை' என்று அக்காலத்தில் அழைக்கப்பட்டவர். ''வ.உ.சி.யின் சுதேசிக் கப்பல் கம்பெனியில், நெல்லையப்பர்

ஒரு குமாஸ்தாவாக வேலை பார்த்தார்''[1] எனவே தாய்நாட்டுப் பற்று மிக்கதொரு குடும்பச் சூழ்நிலையில் நெல்லையப்பர் வளர்ந்தார் என அறியலாம்.

**தீவிர தேசியவாத இயக்கம்**

1905-ஆம் ஆண்டில் நிகழ்ந்த வங்கப்பிரிவினையால், இந்திய தேசிய இயக்கத்தில் தீவிரவாதப் போக்கு மேலோங்கத் தொடங்கியது. இதன் விளைவாக, ஆயுதம் தாங்கிய போராட்டத்துக்கு இளைஞர் களைத் தயார் செய்யும் ரகசியச் சங்கங்களும், இயக்கங்களும் தோன்றின. இவை, தமிழ்நாட்டில் முழுக்க முழுக்க இளைஞர் களாலேயே முன்னின்று நடத்தப்பட்டன.[2] இந்த இளைஞர் அமைப்புகளால், நெல்லையப்பர் ஈர்க்கப்பட்டார். அந்த நாளிலேயே மெட்ரிகுலேஷன் கல்வி பயின்றவராயினும், ஆங்கிலேயர் தயவுக் குட்பட்ட வேலை வாய்ப்புகளில், இயல்பாகவே நெல்லையப்பருக்கு மனம் செல்லவில்லை. கப்பலோட்டிய தமிழர் வ.உ.சி. மற்றும் புரட்சி வீரர் நீலகண்ட பிரம்மச்சாரி ஆகியோர் தொடர்புகளால், இளம் வயதிலேயே இவருக்கு அரசியல் விழிப்புணர்வு ஏற்பட்டுவிட்டது.

**அபிநவ பாரத சங்கம்**

இது ஓர் இரகசியச் சங்கமாகச் செயல்பட்டு வந்தது. இந்தச் சங்கத்தில் நீலகண்ட பிரம்மச்சாரி, சங்கர கிருஷ்ணையர், எம்.பி. திருமலாச்சாரி, கரூர் கிருஷ்ணசாமி, கவியோகி சுத்தானந்த பாரதி, ஆக்கூர் அனந்தாச்சாரி போன்ற அரசியல் ஆவேசம் கொண்ட இளைஞர் பலருடன் சேர்ந்து, நெல்லையப்பரும் தீவிரமாகச் செயல்பட்டு வந்தார். அபிநவ பாரத சங்கத்தின் உறுப்பினர்கள் அனைவரும் இந்திய விடுதலைக்காகத் தம் உடல், பொருள், உயிரைத் தத்தம் செய்வதாகச் சத்தியம் செய்திருந்தனர்.[3]

**பிரம்மச்சாரி வாழ்க்கை**

அபிநவ பாரத சங்கத்திற்குக் கொடுத்த சத்தியத்திற்குக் கட்டுப் பட்டுக் கடைசிநாள் வரையில் நெல்லையப்பர் பிரம்மச்சாரியாகவே இருந்து, நாட்டுப்பணியாற்றி வந்தார். நெல்லையப்பர் மட்டுமன்றி, அவருடன் இயக்கத் தொடர்பு கொண்டிருந்த அவரது நண்பர்கள் பலரும், இறுதிவரையிலும் பிரம்மச்சாரிகளாகவே வாழ்ந்து மறைந்தவர்களாவர். இந்தப் பிரம்மச்சரிய வாழ்க்கையின் மூலம், தேச விடுதலையில் நெல்லையப்பர் கொண்டிருந்த தீவிர ஈடுபாட்டைத் தெளியலாம்.

**இயக்க நடவடிக்கைகள்**

தமிழ்நாட்டில் வ.உ.சி.யும் பாரதியும் முன்னின்று நடத்திய தீவிரவாத தேசிய இயக்கத்தில், முனைப்பாக நெல்லையப்பர்

செயல்பட்டார். ''திலகரைச் சார்ந்த காங்கிரஸ் தீவிரவாதிகள், 1908-இல் ஒரு நாளைச் சுயராஜ்ய தினமாகக் கொண்டாடினர். அந்த முதல் சுயராஜ்ய தினத்துக்கு ஏற்பாடு செய்த தமிழ் இளைஞர் களில் ஒருவர் நெல்லையப்பர்.''[4] இத்திருநெல்வேலி சுதந்திர தின கொண்டாட்டத்தைக் கலவரம் என்று விவரித்து, வ.உ.சி. சுப்பிரமணிய சிவா, நெல்லையப்பர், சுதேசி பத்மநாபய்யங்கார் ஆகிய நால்வர்மீதும் அரசாங்கம் வழக்குத் தொடுத்தது. அதன் தொடர்ச்சியாகக் கைது செய்யப்பட்டாலும், திருநெல்வேலி சதி வழக்கில் சேர்க்கப்படாமல், பிறகு நெல்லையப்பர் விடுதலை செய்யப்பட்டார்.

விடுதலையான நெல்லையப்பர், வ.உ.சி. மீதான வழக்குத் தொடர்பாகச் சென்னைக்கு வந்தார். அங்கு ஹாமில்டன் வாராவதி அருகே, தமக்குத் தூத்துக்குடியிலேயே அறிமுகமான நண்பர் நீலகண்டரைச் சந்தித்தார். அவர் மூலம் தேசத் தொண்டர்கள் அனைவரும் புதுவையைப் புகலிடமாகக் கொண்டு விட்டார்கள் என்பதறிந்து, புதுவைக்குச் சென்றார். இதுவே பாரதியார், வ.வே.சு.ஐயர், அரவிந்தர் ஆகியோருடன் நெல்லையப்பர் நெருங்கிப் பழகவும், விடுதலைப் போராட்ட இயக்கத்தில் தீவிரமாக ஈடுபடவும் காரணமாயிற்று.[5]

வெளிநாட்டிலிருந்து வரும் ஆயுதங்களையும் வெடிப்பொருள் களையும், பல ஊர்களுக்கும் மாறுவேடம் புனைந்து எடுத்துச் செல்லுதல், புரட்சிகரமான பிரசுரங்களை வெளியிடுதல் போன்ற செயல்களை இரகசியச் சங்கங்களின் வாயிலாகச் செய்து வந்தார். கோவைச் சிறையிலிருந்த வ.உ.சி.யுடன் ரகசியத் தொடர்பு கொண்டு, சிறுசிறு துண்டுத்தாள்களில் அவர் தந்த செய்திகளைப் பெற்று, அவரது திட்டங்களை நிறைவேற்றி வந்தார்.[6]

**தலைமறைவு வாழ்க்கை**

தூத்துக்குடியில் வ.உ.சியின் போர்வாளாக இருந்து, வெள்ளையர் ஆதிக்கத்தை ஒடுக்க வெள்ளையர்களின் சமையல் காரர்களை வேலை நிறுத்தம் செய்யுமாறு தூண்டியோருள் ஒருவர் என்பதாலும், வ.உ.சி.யின் சிறைத் தண்டனையை எதிர்த்துத் துண்டுச்சீட்டுகளை அச்சிட்டுப் பொது மக்களிடையே வழங்கியவர் என்பதாலும், முன்பே ஆங்கிலேய அரசின் கண்காணிப்புக்கு நெல்லையப்பர் உள்ளாகியிருந்தார். இந்நிலையில் ஜுன் 1911-இல் கலெக்டர் ஆஷ் கொல்லப்படவே, நெல்லையப்பரின் நிலைமை மேலும் மோசமாயிற்று. அரசாங்கத்தின் தேடலுக்குத் தப்பி, 1911 முதல் 1912 வரையில் தலைமறைவு வாழ்க்கையை, நெல்லையப்பர் மேற்கொண்டிருந்ததாகத் தெரிகின்றது.

**பாரதி பதிப்பாளர்**

பாரதியால் 'தம்பி' என்று நெல்லையப்பரும், நெல்லையப்பரால் 'தமிழ்நாட்டின் தவப்பயன்' என்று பாரதியும் கொண்டாடப் பட்டனர். இந்தப் பெருமைமிகு பந்தம் காரணமாகப் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் அடக்குமுறை மிகக் கடுமையாக இருந்த காலத்தில், ஒரு முறை (1917) முரசு மற்றும் பாப்பாப் பாட்டையும், இருமுறை (1917 & 1919) கண்ணன் மற்றும் நாட்டுப்பாட்டு களையும் பதிப்பித்துத் துணிவுடன் நெல்லையப்பர் வெளியிட்டார். இது அவரது போராட்ட குணத்தைக் காட்டுவதாகக் கொள்ளலாம்.[7]

**காந்திய இயக்கத்தில் ஈடுபாடு**

இந்திய அரசியல் வரலாற்றில், காந்தியின் வருகையால், ஒரு புதிய திருப்புமுனை ஏற்பட்டது. திலகரின் தீவிரவாதமும், கோகலேயின் மிதவாதமும், காந்தியத்தை ஏற்கும் நிர்ப்பந்தம் உருவானது. இச்சூழலில் தமிழ்நாட்டிலும், வ.உ.சி. மேற்கொண்ட அரசியல் துறவறமும், பாரதியின் மறைவும் ஏற்படுத்திய வெற்றிடத்தைக் காந்தியமே நிரப்பியது. வேறு வழியின்றி நெல்லையப்பரும், மெல்ல மெல்லக் காந்தியத்தில் தன்னைக் கரைத்துக் கொண்டார்.

**காந்தியப் போராட்டங்கள்**

1932-இல் சென்னை சிந்தாதிரிப்பேட்டைப் பகுதியில் இருந்த கள்ளுக்கடை, அந்நியத் துணிக்கடைகள் முன்பாகச் சில தொண்டர் களுடன் இணைந்து நெல்லையப்பர் மறியல் செய்தார். 1941-இல் நடந்த காங்கிரஸ் தனிநபர் சத்தியாகிரகத்திலும் கலந்துகொண்டு, ஆறுமாதகாலச் சிறைத்தண்டனையும் பெற்றார். இக்களப்பணி களுடன், காந்தியக் கருத்தியலான அகிம்சைக்கு ஆதரவாகத் தம் எழுத்துக்கள் வழியேயும் நெல்லையப்பர் பாடுபட்டார். லோகோபகாரி என்ற வார இதழின் ஆசிரியராக நெல்லையப்பர் (1922-1941) பொறுப்பேற்ற பின்னர், ''வேதாந்தப் பத்திரிகையாக இருந்த லோகோபகாரியைத் தேசியப் பத்திரிகையாகத் தேசிய விடுதலைக்குப் போராடும் தொண்டர்களுக்கு ஊக்கம் தரும் பத்திரிகையாக நடத்தலானார்''[8] என்பர்.

**பண்பாளர் நெல்லையப்பருக்குச் சிலை**

1959-இல் தமிழக அரசு, சுதந்திரப் போராட்டத் தியாகிகளுக்கென வழங்கிய நிலத்தில் நெல்லையப்பர் குடியிருந்தார். அந்நிலத்தில் 1962-இல் விவசாயம் செய்து பெரும் பொருளிழப்பிற்கு உள்ளானர். பின்னர் அந்நிலத்தின் ஒரு பகுதியைப் பள்ளிக்கூடம் கட்ட இலவசமாகக் கொடுத்தார். அந்தப் பள்ளி, இன்று அவர்

பெயரால் (பரலி. சு. நெல்லையப்பர் நகராட்சி ஆரம்பப்பள்ளி-பாரதிபுரம்), பல்லவபுரம் நகராட்சியால் நிர்வகிக்கப்படுகிறது. இறுதிக் காலத்தில், வறுமையால் மிகவும் துன்பமுற்று மறைந்த நெல்லையப்பருக்குத் காலங்கடந்த நினைவஞ்சலியாக, அவர் மறைவிற்கு 22 ஆண்டுகளுக்குப் பிறகு, 28.03.1993-இல் குரோம்பேட்டையில் உருவச்சிலை நிறுவப்பட்டுள்ளது.[9]

**குறிப்புகள்**

1. ரா.அ. பத்மநாபன், சித்திரபாரதி, ப. 92.
2. ரகுநாதன், பாரதி காலமும் கருத்தும், ப. 250.
3. ம.பொ. சிவஞானம், கப்பலோட்டிய தமிழன், ப.81.
4. ரா.அ. பத்மநாபன், மு.நூ., ப.92.
5. சு.விசுவநாதன், பாரதியாரின் தம்பி, ப. 26.
6. ரா.அ. பத்மநாபன், மு. நூ., ப.92.
7. பெ.சு. மணி, பாரதி புகழ் பரப்பிய முன்னோடிகள், ப. 34.
8. நாரண துரைக்கண்ணன், 'எனது குரு நெல்லையப்பர்,' நெல்லையப்பர் நினைவு மலர், ப.43.
9. ப. கல்பனா, பரலி. சு. நெல்லையப்பர் - ஓர் ஆய்வு,ப. 16, 18. (சென்னை கிறித்தவக் கல்லூரி-எம்.ஏ.ஆய்வேடு)

# கிறித்தவப் பிரசங்கியார்களின் பார்வையில் அய்யா வைகுண்டர்

**சிவ. விவேகானந்தன்**

*திருவேங்கடவன் கல்லூரி*
*புதுடெல்லி – 110 021*

கி.பி. 19–ஆம் நூற்றாண்டில் தென்திருவிதாங்கூர் நாடார் இன மக்கள் ஆளும் வர்க்கத்தினராலும் மேட்டுக்குடியினராலும் மிகுந்த துன்பத்திற்குள்ளாயினர். 1809-ஆம் ஆண்டு தென்திருவிதாங்கூர் காலடிவைத்த மேல்நாட்டு புரோட்டஸ்டாண்டு கிறித்தவ மதத்தில் நாடார்கள் தஞ்சம் புகுந்து விடுதலை பெற்றனர். 1809-ஆம் ஆண்டு தென்திருவிதாங்கூர் – தாமரைக் குளத்தில் பிறந்த அய்யா வைகுண்டர் மக்களை மதம் மாறவேண்டாம் என்றும்; தாய் மதத்திலிருந்தே துன்பங்களிலிருந்து விடுதலை பெறலாம் என்றும் அறிவுறுத்தினார். வைகுண்டர் தாழ்த்தப்பட்ட மக்களுக்காகத் திருவிதாங்கூர் மன்னனைக் கண்டித்தார்; எச்சரித்தார். மேலும் அம்மக்களுக்காகப் புதிய வழிபாட்டு முறைகளையும் அமைத்துக் கொண்டார். அய்யா வைகுண்டரின் முயற்சி தென்திருவிதாங் கூரில் கிறித்துவம் பரவுவதற்குத் தடையாக இருந்தது எனக் கிறித்தவ பாதிரிமார்கள் – அருள் திருவாளர்கள் கூறுகின்றனர். தான் பிறந்த நாட்டில், தன்னுடைய ஊரில் தன் மதத்திலிருந்து வேற்று நாட்டு மதத்திற்குச் சென்று கொண்டிருந்த தன் இன மக்களுக்கு அறிவுரை போதித்த அய்யா வைகுண்டர், வேற்று நாட்டிலிருந்து வந்து அந்நாட்டு மதத்தைப் பரப்பி வருபவர்களுக்கு இடையூறு விளைவிக்கிறார் என்று கூறி அவர்மீது தகாதன வற்றைக் கூறி களங்கம் விளைவிப்பது எவ்வகையில் நியாயம் எனத் தெரியவில்லை. அய்யா வைகுண்டரின் எண்ணங்கள், தீர்க்க தரிசனங்கள் யாவும் அவர் சீடர் அரிகோபாலன் என்பவரால் அகிலத்திரட்டாகவும் பிற சீடர்கள் வாயிலாக அருள்நூல் திரட்டாகவும் எழுதப்பட்டுள்ளன. 'முத்துக்குட்டி நாராயணசுவாமி' (1981) என்னும் நூலை எழுதிய அருள்திரு ஜீவராஜ் என்பவரும் அந்நூலில் கருத்துகள் கூறியுள்ள அருள்திரு சாமுவேல் என்பவரும் இரண்டாம் வகையில் அமைகின்றனர். அவர்களது கருத்துகளும் அக்கருத்துகளுக்கான மறுப்புகளும் பின்வருமாறு அமைகின்றன.

அருள்திரு சாமுவேல் கூறுகின்றார். 'இக்கிளர்ச்சியை ஆரம்பித்தவர் முத்துக்குட்டி என்ற சான்றோன் பக்தன். இவர் கி.பி. 1808-இல் பாண்டிநாட்டைச் சார்ந்த இடையன்குடி கிராமத்தில் பிறந்து அங்குள்ள கிறிஸ்துவ ஆலயத்தில் பணியாற்றினார். பின் பிழைப்புத் தேடி தென்திருவிதாங்கூர் வந்ததாகவும் அங்குக் கோட்டையடி கிறிஸ்தவச் சங்கத்தில் சேர்ந்து கிறிஸ்தவ மார்க்க போதனையை ஆராய்ச்சி செய்தார் என்றும் தென்நெல்லை மக்கள் கூறுகின்றார்கள். தன் குலத்தவனான இன்னொருவனுடைய மனைவியை நேசித்து ஒரு மகவையும் கண்டார்; குஷ்டரோகத்தால் பீடிக்கப்பட்டார். அக்கிரமமாய் சேர்க்கப்பட்ட ஸ்திரீயின் கணவன் அணிந்த மாங்கல்யத்தை அறுத்தெறிந்துவிட்டு மறுதாலி போடக் கட்டாயப்படுத்தினார். நான் கடலிலுள்ள மீன் வயிற்றில்தான் மூன்று நாட்கள் இருந்தேன் என்றும்; 10 அவதாரங்களை நடத்தி 18000 கோவில் ஸ்திரீகளை மணந்துபோன விஷ்ணு நானே என்றும் கூறினதாக முத்துக்குட்டியின் ஏடுகளில் காணக்கிடக்கிறது. தான் சேர்த்துக்கொண்ட மனைவிக்குச் சொந்த தாலி அணிந்தார். இன்னொரு தாரத்தையும் மணந்து இன்னொரு மகவையும் பெற்றார். எந்தக் கன்னியர் மீது ஆசைப்பட்டாலும் அவள் வீட்டைத் தேடி இரவு 12.00 மணிக்குமேல் சென்று அவளை மணந்துகொள்வார். முத்துக்குட்டி 1863-ஆம் வருஷம் தனது 60-வது வயதில் மரணம் அடையும் முன்பே தான் மரித்து மூன்றாம் நாள் உயிர்த்தெழும்பு வதாகவும்; மரணமடைந்த மக்கள் அனைவரையும் எழுப்பி நடுத்தீர்ப்புச் செலுத்தப் போவதாகவும் ஏடுகள் கூறியுள்ளன. மேற்கூறிய எச்சரிக்கை நிறைவேறாமல் போனதுடன் மூன்றாம்நாள் உயிர்த்தெழவும் இல்லை. மூன்றாம் நாள்வரை அடக்கம் செய்யப்படாதிருந்த சடலம் அழுகி நாற்றமெடுத்ததைக் கண்ட சீடர் சாமித்தோப்பில் அடக்கம் செய்து கல்லறையைச் சுற்றி ஓர் கட்டிடமும் கட்டினார். கோவிலில் வேலாயுதம் ஒன்று தவிர சிலைகள் இல்லை'.

அருள்திரு வே. ஜீவராஜ் எழுதுகிறார் : 'முத்துக்குட்டி பேயை எரித்தார் என்று அகிலம் கூறுகிறது. ஆனால் எவ்விதம் பேயை எரித்தார்? எச்சமயம் பேயை எரித்தார் என்று காட்டப்படுவதில்லை. மதவேறுபாட்டை இடித்துரைத்துவிட்டு தனக்கென ஒரு ஸ்தாபனத்தை ஏன் ஏற்படுத்தவேண்டும்? இவர் செய்கிறது மதத்திற்குள் பிரிவை ஏற்படுத்துவது இல்லையா? முத்துக்குட்டி குஷ்டரோகத்தால் செந்தூர் சுப்பிரமணிய கோவிலுக்குச் சென்று கடலில் மூன்று நாள் இருந்தார். பின் வெளியே வந்தார் என்று அகிலம் கூறுகிறது. இது இவரது மரணம் உயிர்த்தெழுதலைக் குறிக்குமானால் ஏன்

1847–ல் மரணமடைந்தவர் மூன்றாம் நாள் உயிர்தெழவில்லை. அய்யா சான்றோர்க்காகச் சிறையிருந்தேன் என்று கூறும்போது மற்ற சாதிகளை ஏன் விட்டுப்பேசுகிறார்? காணிக்கையை வாங்கி விட்டு நன்கொடை என்று கூறுவது விசித்திர வினோதமானது. அய்யாவின் பக்தர்கள் எனப்படுபவர்களில் கல்வியறிவு உடையவர் களின் எண்ணிக்கை மிகக் குறைவு. இந்நிலையில் மக்களின் சரீரசுகத்திற்கு அடுத்தவற்றைத் தேடும்போது நான் தருகிறேன் என்றால் ஓடிவராத பாமரர்கள் இருக்கமாட்டார்கள் என்று நம்புகிறேன். இவ்விதமான பேராபத்து விளைவிக்கக்கூடிய அய்யாவின் நெறியைச் சுற்றி அமர்ந்திருக்கிற நாம் இனிமேல் விழப்போகிற விளைவுகளையாவது தடுத்து நிறுத்த முற்படுவோம். கிறஸ்துவுக்குள் அவர்களையும் கட்டி நிறுத்துவோம், அவர்களும் கிறிஸ்துவின் இராஜியத்தின் சுதந்திரவாதிகள் ஆகட்டும்'.

ஒருவர் ஒரு கருத்தை விமர்சிப்பதற்கு முன் அது சரியா என ஆராய்ந்து பார்த்து, சான்றுகளுடன் விமர்சிக்க முன்வரவேண்டும். அய்யா வைகுண்டர் பிறந்தது 1809–ம் ஆண்டு. அவர் வைகுண்டம் எய்தியது 1851-ஆம் ஆண்டு. அவர் இவ்வுலகில் வாழ்ந்தது 42 ஆண்டுகள். சாமுவேல் கூறுகிறார். 'அவர் நெல்லையில் 1808–ம் ஆண்டு பிறந்தாராம், மறுநாளே கிறித்தவ ஆலயத்தில் சேர்ந்து ஊழியம் செய்தாராம், பின்னர் திருவிதாங்கூருக்கு வந்தாராம். அங்குக் கிறித்தவ ஆராய்ச்சி செய்தாராம். இவற்றை நெல்லை மக்களும் ஏடு களும் கூறுகின்றனவாம்', இவை அனைத்தையும் சான்றுகளுடன் நிரூபித்துக் காட்ட வேண்டும். சாமுவேல் கூறிய கருத்துகளுக்கு ஆதாரம் எவை என்று தெரியவில்லை. அய்யா வைகுண்டர் திருமணம் செய்து கொள்ளவுமில்லை; அவருக்குக் குழந்தைகளுமில்லை. தன்னை நாடிவந்த பெண்ணை மானசீகமாக விரும்பினாரேயொழிய அவளைத் திருமணம் செய்து கொண்டதாக எங்கும் குறிப்புகள் இல்லை. மேலும் அய்யா வைகுண்டர் 1963–ஆம் ஆண்டுவரை உயிர்வாழவுமில்லை. அவர் வாழ்ந்த காலத்தில் அவர் அமர்ந்த நாற்காலிதான் கோவிலில் இருக்கிறதேயொழிய அங்கு வேலாயுதமோ சூலாயுதமோ இல்லை.

அய்யா வைகுண்டர் 'பேயை எரித்து புதுமை மிகச் செய்ததுவும்', 'பொய்யில்லை பிசாசும் இல்லை பில்லியன் வினை களில்லை' என அகிலத்தில் குறிப்பிடுகிறார். பேயை எரித்து என்பதில் ஜீவராஜ் எண்ணுகின்ற பிசாசு என்னும் பேய் அல்ல. ஜீவராஜ் நினைப்பது போன்ற பேயாக இருந்தால் பொய்யில்லை பிசாசும் இல்லை என்று அய்யா வைகுண்டர் கூறவேண்டிய அவசியம் இல்லை. இங்கு வைகுண்டர் குறிப்பிடும் பேய் தீமை

அல்லது வெறி என்னும் பொருளையே குறிக்கும். இந்து மதத்தில் ஏற்கனவே வைணவம், சைவம் என்னும் பிரிவுகள் காணப்படுகின்றன. கிறித்தவத்தில் இல்லாத பிளவுகளையா அய்யா இந்துமதத்தில் பிளந்துவிட்டார்? அவர் அன்புக்கொடி இயக்கம் என ஓர் அமைப்பைத் தொடங்கி அதன் வாயிலாக மேட்டுக் குடியினருக்கு எதிராகக் குரல் கொடுத்தார். முத்துக்குட்டி குஷ்டரோகத்தால் திருச்செந்தூருக்குக் கொண்டு செல்லப்பட்டார் என்று கூறுகிறார் ஜீவராஜ். ஒருவன் நோய்வாய்ப்பட்டுப் படுத்துவிட்டால் அவனுக்குக் குஷ்டரோகம் என்று பொருளல்ல. வைகுண்டருக்குக் குஷ்டம் பிடித்தது என்று ஜீவராஜ் சான்றுகளுடன் நிரூபித்துக்காட்டினால் அது நியாயம். கடலில் சென்ற வைகுண்டர் மூன்றாம்நாள் திரும்பி வந்தார் என்பதை அய்யா வழியினர் யாரும் அவர் உயிர்த்தெழுந்த தாகக் கூறவோ எண்ணவோ இல்லை.

சாமித்தோப்பு வைகுண்டர் கோவிலில் காணிக்கையை வாங்கி விட்டு நன்கொடை என்று கூறுவது விசித்திர வினோதமானது என ஜீவராஜ் கிண்டல் அடிக்கிறார். ஆனால் உண்மையாகவே அது விசித்திர வினோதமானதுதான். சீக்கிய மதத்தைத் தவிர இந்தியாவில் உள்ள வேறு எந்த மதத்திலும் அய்யா வைகுண்டர் கோவிலில் நடைபெறும் வினோதம் போன்று நடைபெறுவதில்லை. வைகுண்டர் கோவிலில் வாங்கும் காணிக்கைப் பொருள்கள் அடுத்த நிமிடமே அடுத்த வாசல் (வடக்குவாசல்) வழியாக அங்கு அமர்ந்திருக்கும் பக்தகோடிகளுக்குச் சென்றுவிடுகின்றன. மேலும் அங்கு வாங்கப்படும் எண்ணெய்க்காசு என்னும் காணிக்கைப் பணம் தினம் இருவேளை கொடுக்கப்படும் அன்னதானத்திற்குச் சென்றுவிடுகிறது. இந்தியாவிலேயே உண்டியல் இல்லாத கோவில் வைகுண்டர் கோவில் என்பதை புரிந்துகொள்ளவேண்டும்.

அய்யா வைகுண்டர் அன்புக்கொடி இயக்கத்தைத் தொடங்கி, அதன் மூலம் மக்களை நல்வழிப் படுத்தியதை மதத்திற்குள் பிரிவு என்று வர்ணிக்கும் ஜீவராஜ், அவர் நூலில் எழுதியிருக்கும் பாலாசீர்லாறி தொடங்கியிருக்கும் மனுஜோதி ஆசிரமத்தை ஏற்றுக்கொள்கிறார். தென் திருவிதாங்கூர் தாழ்த்தப்பட்டோர் கிறித்தவ மதத்தின் வருகையால் மேன்மையடைந்தனர் என்பதை யாரும் மறுக்கவியலாது. ரிங்கல் தௌபே, மீட்பாதிரியார் முதலிய திருத்தொண்டர்களின் திருத்தொண்டுக்கு இணையே இல்லை. அவர்கள் இந்து மதத்தையோ வைகுண்டரையோ பழிக்கவுமில்லை. சாமுவேல், ஜீவராஜ் முதலிய அருள்திருவாளர்கள் திருத்தொண்டர் களின் பெயருக்குக் களங்கம் விளைவிக்காமல் ஊழியம் செய்தால் சமுதாயம் மேன்மையடையும்.

# இந்திய விடுதலைப் போராட்ட வீரர் தளபதி சுந்தரலிங்கக் குடும்பனார்

**தே. ஞானசேகரன்**

*பாரதியார் பல்கலைக்கழகம்*
*கோயமுத்தூர் - 46*

கட்டபொம்மனின் படைத்தளபதிகளில் ஒருவராக இருந்து சாதி ரீதியாகத் தமிழகம் முழுவதும் சென்று மள்ளர்களை ஒன்று திரட்டி பாஞ்சாலங்குறிச்சி அருகிலுள்ள ஏகவுனகிரிப் பள்ளியில் இராணுவம் அமைத்து வெள்ளையருக்குப் பெருஞ் சவாலாக இருந்தவர் தளபதி சுந்தரலிங்கனார் ஆவார்.

**பஞ்ச பாண்டியர்களின் கடைசி வாரிசு - சுந்தரலிங்கனார்**

தூத்துக்குடி மாவட்டம் ஒட்டப்பிடாரம் தாலுகாவில் அதாவது தூத்துக்குடியிலிருந்து 25 கி.மீ தொலைவில் ஒட்டப்பிடாரத்திற்கு 2 கி.மீ தொலைவில் அமைந்திருப்பது பாஞ்சாலங்குறிச்சி ஆகும். இந்தப் பாஞ்சாலங்குறிச்சி பாளையத்திற்குக் கட்டுப்பட்டு 92 கிராமங்கள் இருந்தன. இக்கிராமங்களில் அன்று முதல் இன்று வரை தேவேந்திரகுல வேளாளர், தேவர், நாடார், நாயக்கர், பிள்ளை, கோனார், பகடை (அருந்ததியர்) ஆகியோர் வாழ்ந்து வருகின்றனர். இதில் ஒட்டப்பிடாரம் தாலுகா முழுமையும் பெருமளவில் தேவேந்திர குல வேளாளர் இன்று வாழ்ந்து வருவது போலவே அன்றும் வாழ்ந்து வந்தனர். இந்த ஒட்டப்பிடாரம் தாலுகாவில் பாஞ்சாலங்குறிச்சிக்கருகில் இருந்த ஊர் ஏகவுனகிரிப் பள்ளி என்பதாகும். இந்தக் கெவுனகிரி அக்காலத்தில் பேரூராகவும், வணிகத் தளமாகவும் விளங்கியது. இந்த ஊரில் பிறந்தவரே.... தளபதி சுந்தரலிங்கக் குடும்பனார் ஆவார். இந்த ஏகவுனகிரி வெள்ளையரை எதிர்க்கும் புரட்சிக்காரர்களின் இராணுவக் கேந்திரமாகத் திகழ்ந்தது. இதனால் இந்த ஊர் வெள்ளையரால் ஊமைத்துரை காலத்தில் முழுவதும் சூறையாடப்பட்டது என்பதை அறிகிறோம். இதற்கு முழுமையான காரணம் சாதி ரீதியில் மள்ளர்கள் தளபதி சுந்தரலிங்கம் தலைமையில் இங்கே அணி திரட்டப்பட்டு, பயிற்சியளிக்கப்பட்டு இராணுவமாய்ச் செயல்பட்டு வந்ததே ஆகும். இத்தகைய வீரச் சிறப்புமிக்க பேரூரில் தேவேந்திர குல வேளாளர் சமூகத்தில் தளபதி கட்டக் கருப்பணக் குடும்பனார்.

முத்திருளி மள்ளத்தியார் ஆகியோரின் வீர மகனாகத் தோன்றியவர் சுந்தரலிங்கக் குடும்பனார் ஆவார். இவர் 1775 வாக்கில் பிறந்தார் எனச் சொல்லப்படுகிறது. ''கொல்லங்கிணறு களரி ஆசிரியர் நாகனார் அவர்களிடம் கெவுனகிரிப் பள்ளியில் இளம் மள்ளர்கள் போர்ப் பயிற்சி பெற்று வந்தார்கள். நாகனாருடைய சிறந்த மாணாக்கராகச் சுந்தரலிங்கக் குடும்பனார் விளங்கினார். இவருடன் போர்ப்பயிற்சி பெற்றுச் சிறந்த வீரர்களாக விளங்கியவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் கரையாளக் குடும்பனார், சின்னக்காலாடி, பெரியக் காலாடி, சாத்தான் காலாடி, மாடக்குடும்பனார் ஆகியோராவர். சுந்தரலிங்கக் குடும்பனாரின் தந்தை கட்டக்கருப்பணக் குடும்பனார் சிறந்த வீரராகக் கட்டபொம்மன் படையில் ஒரு தளபதியாகப் பதவி வகித்து வந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது. இதன் அடிப்படையில் சுந்தரலிங்கக் குடும்பனார் கட்டக் கருப்பணன் சுந்தரலிங்கம் என்று பிறரால் அழைக்கப் பட்டார். இந்தப் பெயர் அடிப்படையில் தான் பின்னாளில்

> ''கட்டக் கருப்பணன் சுந்தரலிங்கமென்றால்
> காலனும் நடுங்குவான்''

என்று சுந்தரலிங்கனாரின் வீரம் மக்களால் வரலாறாகப் போற்றப் பட்டது. இத்தகைய வீர வழக்காறு கட்டபொம்மனின் படைத் தளபதியாகச் செயல்பட்டதால் இவருக்கு வரவில்லை. இவரும் இவரது வம்சா வழியினரும் பாண்டிய நாட்டின் அதாவது பிற்காலப் பாண்டியரின் கடைசி வாரிசாக இருந்து தாய் நாட்டினை அன்னியரிடமிருந்து மீட்கப் போராடியவர்கள் ஆவர். இதனைக் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் தனது பாயும்புலி பண்டாரக வன்னியன் எனும் நூலில் ''பாண்டிய மண்ணின் உரிமைக்காக வீரப்போரிட்ட வெட்டும் பெருமாளின் பரம்பரையில் வந்தவர் இந்தச் சுந்தரலிங்கக் குடும்பன் என்று கேள்விப்பட்டிருக்கிறேன்'' என்று கூறுவதற்கேற்பப் பாண்டிய மண்ணின் உரிமைக்காகப் போரிட்ட வெட்டும் பெருமாள் பாண்டியனின் வம்சா வழியைச் சேர்ந்தவர் தளபதி சுந்தரலிங்கக் குடும்பனார் என்பது குறித்த வரலாற்றுக் கருத்துக்கள் நிறைய கிடைக்கின்றன. வெட்டும் பெருமாள் பாண்டியரின் நாட்டுக் கதைப்பாடல்கள் தொடர்பான ஓலைச் சுவடிகள்கூட மறைக்கப் பட்டு விட்டதாகத் தெரிகின்றது. இதனை ஐவர் ராசாக்கள் கதை எனும் நூலில் தமிழகத்தின் நாட்டுப்புறவியல் தந்தை என்று புகழப்படும் பேரா.நா. வானமாமலை குறிப்பிடுவது கவனிக்கத்தக்கது.

**தளபதி சுந்தரலிங்கக் குடும்பனாரும் தேவேந்திரர்களும்**

கட்டபொம்மன் காலத்தில் நடந்த வெள்ளையருக்கு எதிரான கிளர்ச்சியில் மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர் இனமான வீரர்கள் ஆயிரக்கணக்கில் கலந்து கொண்டு வீர

மரணமடைந்தனர். இவர்களில் அக்காலத்தில் கட்டபொம்மன், வெள்ளையத்தேவன், ஊமைத்துரை போன்று மக்களிடம் வழங்கிய பிரசித்தி பெற்ற பெயர் சுந்தரலிங்கம் என்பதாகும். தனது தந்தை கட்டக் கருப்பணக் குடும்பனார் போன்றே பெரிய வீரராக விளங்கிய சுந்தரலிங்கம் கட்டபொம்மன் போர்ப்படையில் ஒற்றறியும் படையின் தலைவராகப் பணியில் சேர்ந்து பல வீர சாகசங்களால் முதலிடம் பெற்றுப் படைத்தளபதி அந்தஸ்துக்கு உயர்ந்தார். அக்காலத்தில் கட்டபொம்மன் நிலையான பெரிய போர்ப்படையை வைத்திருக்க வில்லை. தமிழகத்தில் போராற்றலில் தலை சிறந்து விளங்கிய மள்ளர், மறவர் போன்ற இனங்களில் பிரசித்தி பெற்ற போர் வீரர்களைப் படைத்தளபதிகளாக்கி, அவர்களின் தலைமையில் அவ்வீர சமுதாயங்களின் ஆதரவைப் பெற்றுப் போராடினார். இப்போராட்டத்தில் தனது மன்னனையும், தமது மண்ணையும் காக்க வெள்ளையரின் இராணுவக் கிடங்கை தனது முறைப்பெண் வடிவுடன் முதல் மனித வெடிகுண்டாக மாறி அழித்தவர் இந்தச் சுந்தரலிங்கனார். இத்தகைய வீரத் தளபதியின் தியாக வரலாறு ஆதிக்க சாதிகளால் பெரிய அளவாகப் போற்றப்படவில்லை. கட்டபொம்மனின் பெருமைகளைப் பல ஆதாரங்களுடன் விளக்க முயன்றவர்கள் அவரின் வெற்றிக்காக உயிர் நீத்த பல வீரமள்ளர் களின் வரலாற்றை மறைத்தார்கள். இருப்பினும் பல நிலைகளில் சுந்தரலிங்கனாரின் பெயர் மீண்டும் மீண்டும் இந்தியச் சுதந்திர வரலாற்றோடு இணைத்து மக்களால் இசைக்கப்பட்டதை நாம் வரலாற்றில் தவறாது கேட்க முடிகின்றது. இன்று சுந்தரலிங்கனாரின் நினைவைப் போற்றி அரசே அவரின் வாரிசுகளுக்கு நினைவுக் கிராமம் அமைத்து அவரின் நினைவு நாளை அரசு விழாவாக அறிவித்து 1998-லிருந்து கொண்டாடி வருகின்றது.

**தளபதி சுந்தரலிங்கனாரின் இறுதிக்கட்டப் போர்**

''கட்டபொம்முவுக்குகூட இருந்த பலரும் துரோகம் செய்தனர். ஆனால் கடைசிவரை நம்பிக்கைக்கு உரியவராக இருந்தவர் சுந்தரலிங்கம். 5.5.1799-இல் பாஞ்சாலங்குறிச்சி மீது வெள்ளையர் போர் தொடுத்த போது கோட்டை வாசலில் நின்று வழி மறித்தார் சுந்தரலிங்கம். வேங்கை போல் பாய்ந்து போரிட்டார். கோட்டை வாசலிலே வீரர்களோடு தானும் வீரமரணம் அடைந்தார்'' என்றும் வெள்ளையரின் வெடி மருந்துக்கிடங்கை அழிக்க யாரும் முன் வராமல் போகவே தானே முன்நின்று உலகின் முதல் மனித வெடிகுண்டாக மாறி தீப்பந்தத்தை உடலில் கட்டிக்கொண்டு கிடங்கிற்குள் குதித்து வெடி மருந்துக்கிடங்கை அழித்துத் தியாகத் தீபமாக மாறினார் மாவீரர் தளபதி சுந்தரலிங்கக் குடும்பனார் என்றும் இவரின் வீரமரணம் வரலாறுகளில் இருநிலைகளில்

வெவ்வேறு விதத்தில் சொல்லப்படுகின்றன. ஆனால் கட்டபொம்மன் போன்றோர் கோட்டையிலிருந்து தப்பிவிட இறுதிவரை கோட்டையை வெள்ளையரிடமிருந்து காக்கப் போரிட்ட போர்ப்படைப் பிரிவு இவரது தலைமையில் ஆனது என்றே அறிய முடிகின்றது. பாஞ்சாலத்தின் முதல்நாள் போரிலேயே வெள்ளையத்தேவன் இறந்துபடுகின்றான். இதன்பின் இவரது தலைமையில்தான் வெள்ளையரைப் பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை எதிர் கொள்கின்றது.

இப்போரில் கட்டபொம்மன், ஊமைத்துரை போன்ற ஆறு பேர் தவிர (இவர்கள் கோட்டை பின்புற வாயில் வழியாகத் தப்பியவர்கள்) அனைவருமே வெள்ளையர் படையால் அதாவது பானர்மென் தலைமையிலான பீரங்கிப்படையால் சுட்டுக்கொல்லப் பட்டனர். இந்தப் போர் குறித்த செய்திகள் வருமாறு.

''பானர்மன் போரைத் துவக்கினான். கோட்டையை இடிக்க ஆரம்பித்தான். தெற்கு வாயிலை நோக்கி, ஓரில்லி என்ற துணைத் தளபதி பீரங்கியைத் திருப்பி குண்டுமாரி பொழிந்தான். டல்லாப் தனது குதிரைப் படையுடன் வடக்கு வாயிலைத் தாக்கினான். மற்றும் லெப்டினன்ட் காலின்ஸ், டல்லஸ், புரூஸ், பிளேக், பிரௌன் என்பவர்களும் துணைத் தளபதிகளாக இருந்து முர்க்கமாகப் போர் புரிந்தனர். கோட்டை வாயிலும் தகர்க்கப்பட்டது.

கோட்டை வாசல் திறக்கப்பட்டவுடன் தனது காலாட்படை களுடன் காலின்ஸ் கோட்டைக்குள் நுழைய முயற்சித்தான். பாளையப்படைகளை உள்ளே நுழைய விடாமல் தீவிரமாக எதிர்த்துப் போராடியதால் காலின்ஸ் ஈட்டிக்குப் பலியானான். போர் அன்று முழுவதும் நடைபெற்றது. இருபக்கத்திலும் பலத்த சேதம் ஏற்பட்டதே தவிர கோட்டை பிடிபடவில்லை.

பானர்மென் திகைத்து விட்டான்! பாஞ்சைப்படை இவ்வளவு பலமுள்ளதாக இருக்குமென்று அவன் சிறிதுகூட எதிர்பார்க்க வில்லை. அதனால் தன் படைபலத்தைப் பெருக்கிக்கொள்ள நினைத்துப் பீரங்கிப் படையொன்றை உடனடியாக அனுப்பும்படி பாளையங்கோட்டைக்குத் தகவல் அனுப்பிவிட்டு, அந்த உதவி வந்து சேருகிறவரை கோட்டைக்குள் இருப்பவர்கள் வெளியேறி விடாமல் கண்காணித்து வந்தான். இந்த முற்றுகை 1977-வது ஆண்டில் செப்டம்பர் மாதம் 5-ந் தேதி நடந்தது. இந்தக் கோட்டை முற்றுகைப் போரை முறியடிக்கும் பாஞ்சைப்படையின் தளபதியாகப் பொறுப்பேற்றுப் போரை நடத்தியவரே தளபதி சுந்தரலிங்கக் குடும்பனார் ஆவார். இவரின் தலையில் கோட்டையைக் காத்து நின்றவர்களில் பெரும் பகுதியினர் மள்ளர் இன வீரர்களும் இருந்தனர் என்பது வரலாறு தரும் உண்மைச் செய்தியாகும்.

# மௌனப்புயல் - நாவலில் அரசியல் பின்னணி

**மா. மணிமாறன்**

*சேதுபதி அரசு கலைக் கல்லூரி*
*இராமநாதபுரம் - 623 502*

பாரதப் பிரதமர் திருமதி. இந்திராகாந்தி சுட்டுக் கொல்லப் படுவதற்குக் காரணமான பஞ்சாப் பிரச்சனை, அப்பிரச்சனைகளின் தன்மை, அவற்றிற்குத் தீர்வு ஏற்பட்ட முறை என்னும் வகையில் இந்நாவலை எழுதியுள்ளார் வாஸந்தி.

**கதைப்பின்னல்**

சீக்கியர்களின் வாழ்விடங்களான பஞ்சாப், டெல்லி ஆகிய நகரங்களில் வாழும் நடுத்தரக் குடும்பத்தினர் அரசியல் நிகழ்வு களால் எந்தளவிற்குப் பாதிக்கப்படுகின்றனர் என்பதே கதையின் மையக் கருத்து. ரஞ்சனி, ருமா, மன்மோகன்சிங் ஆகியோர் டெல்லிப் பல்கலைக்கழகத்தில் படிப்பவர்கள். ரஞ்சனி தமிழ் நாட்டைச் சேர்ந்த பிராமணப் பெண். சீக்கியரான மன்மோகன்சிங்கைக் காதலிக்கிறாள். இவர்கள் இருவரும் மாறிவரும் உலகியலுக்குத் தகுந்தபடி தங்களின் பண்பாடு, பழக்கவழக்கங்களை மாற்றிக் கொள்பவர்கள். ருமா சீக்கியப்பெண். சீக்கியரான அர்ஜுன் சிங்கைக் காதலிக்கிறாள். ரஞ்சனியும், மன்மோகன்சிங்கும் படித்துக்கொண்டே பத்திரிக்கையில் பணியாற்றுபவர்கள். இதனால் அன்றாட அரசியல் நிகழ்வுகளை அறிந்திருப்பவர்கள். ருமா இதிலிருந்து மாறுபட்டவள். இவளது காதலனும் மதம் சார்ந்த விபரங்களில் நம்பிக்கை யுடையவன். இந்தியாவிலிருந்து பஞ்சாபைப் பிரித்து 'காலிஸ்தான்' என்ற தனிநாடு கேட்டுப் போராடிய தீவிரவாதிகளை ஒடுக்குவதற்காகப் பஞ்சாபில் நடந்த நீல நட்சத்திர நடவடிக்கை (Operation of Blue Star)யால் படுகொலைகள் பல நடந்தன. இதன் தொடர்ச்சியாக அன்றைய பாரதப் பிரதமர் சீக்கிய மதத்தைச் சார்ந்த தனது மெய்க்காப்பாளர்களால் சுட்டுக் கொலை செய்யப்படுகிறார். இதனால் டெல்லியில் வன்முறைகள் பல நடந்தேறின. பின் 01.11.1984-இல் பாரதப் பிரதமராகப் பதவியேற்ற திரு. இராஜீவ் காந்தியால் பஞ்சாப் பிரச்சனைக்குத் தீர்வு காணப்பட்ட விதம் போன்றவற்றால் பஞ்சாபில் அமைதி நிலவியது. இதுவே இந்நாவலின் கதைப் பின்னல் ஆகும்.

**பஞ்சாப் நிலை**

முந்நூறு வருடங்களில் வளர்ந்த சீக்கிய மதம் இன்று உலகம் முழுவதிலும் பரவியுள்ளது. அவர்கள் தங்களை மற்றவர்களிட மிருந்து அனைத்துச் சூழ்நிலைகளிலும் தனிமைப்படுத்திக் கொண்டனர். இத்தகு நடவடிக்கைகளால் பஞ்சாபில் இந்துக்களுக்கும் - சீக்கியர்களுக்கும் பிரச்சனைகள் வெடித்து வன்முறை என்பது தொடர்ந்து கொண்டிருந்தது.

சீக்கியர்கள் ஆன்மீகத்தில் பற்றுக்கொண்டவர்கள். மதம் சார்ந்தவற்றில் தீவிர நெறிமுறைகளைக் கடைபிடிப்பவர்கள் "பொற்கோவிலுக்கும் சீக்கியனுக்கும் இருக்கும் உறவு சீக்கியனுக்குத் தான் புரியும். அந்த உறவு ரொம்ப ஆழமானது. அந்தரங்கமானது" (ப. 14) என்பதிலிருந்து பொற்கோவிலின் மீது சீக்கியர்கள் கொண்ட பக்தியானது அவர்களது உணர்வில் கலந்த ஒன்று என்பது புலனாகிறது.

"ருமாவின் வீட்டில் ஒவ்வொரு அறையிலும் சீக்கிய குரு ஒருத்தரின் படம் இருக்கும். அவள் வீட்டிற்கு எப்பொழுது சென்றாலும், யாராவது பூஜை அறையில் 'குருகிரந்த ஸாஹிப்' படித்துக்கொண்டிருப்பார்கள்' (ப. 7) எனும் ரஞ்சனியின் கூற்றி லிருந்து அவளது தோழி ருமாவின் வீட்டில் மதம் சார்ந்த நிகழ்வுகள் அன்றாடம் இடம்பிடிப்பதை அறியமுடிகிறது. இனப்பற்று, மதப்பற்று ஆகியன அவர்களின் அன்றாட வாழ்வில் ஏதாவது ஒரு வழியில் வெளிப்படுவதை அறிய முடிகிறது.

**நடுவண் அரசின் பாராமுகம்**

பஞ்சாபில் மிதவாதிகளான அகாலிதல்காரர்கள் தலைவரான லோங்கோவால் தலைமையில் உள்ள குழுவினர் நடுவண் அரசிடம் நியாயமான முறையில் சில கோரிக்கைகளை வைத்தனர். பஞ்சாப் மக்களின் ஆதரவு பெற்றவர்களும் இவர்களே. இவர் களின் கோரிக்கைகளை நடுவண் அரசு ஏற்கவில்லை.

"பஞ்சாபைப் பொறுத்தவரை எல்லாப் பிரச்சனைகளும் முட்டாள் தனமான பிரச்சனைகள். எளிமையாக ஆரம்பித்த கோரிக்கைகள் அசட்டுப் பிடிவாதத்தால், அரசியல் பிரச்சனைகளாக்கப்பட்டு, முட்டாள்தனப் பகிரங்கப் பேச்சால் சிக்கலாகி, மதப் போர்வை போர்த்தப்பட்டு, நிஜமாகவே ஒவ்வொரு சீக்கியனும் மதம் பிடித்தவனாய்" (ப. 20) என்பதிலிருந்து சீக்கியர்களின் எண்ண ஓட்டங்களை அறிய முடிகிறது.

'பஞ்சாப்காரர்களின் கோரிக்கைகளின்போது "நிபந்தனை இல்லாமல் பேச வந்தால்தான் பேசமுடியும் என்றார்" பிரதமர். (ப. 24) எனும் பிரதமரின் பேச்சு நடுவண் அரசின் குரலாகவே எடுத்துக்கொண்டு அரசினை எதிர்க்கத் துணிந்தனர்.

'ஸிக்கும், ஹிந்துவும் ஒன்றாகத்தான் இம்மண்ணில் பிறந்தோம். ஒன்றாக இதைக் காத்தோம், வளர்த்தோம். இப்பொழுது அரசியல் வாதிகள், மதத்தில் அரசியலைப் புகுத்தப் பார்க்கும் வெறியர்கள் நம்மைப் பிரிக்கப் பார்க்கிறார்கள். குடிநீர் வசதியில்லை, கிராமங் களில் மின்சாரம் இல்லை. இளைஞர்களுக்கு வேலை வாய்ப்பு இல்லை. இந்த முக்கியமான பிரச்சனைகளை ஒதுக்கிவிட்டுத் துவேஷப் பிரச்சாரம் செய்கிறார்கள். உலகம் எத்தனை உயரத்திற்குப் போயிருக்கிறது. நீங்களும் நானும் எந்த நிலையில் இருக்கிறோம்?' (ப. 52) என்ற குருசரன்சிங்கின் நாடகம் வாயிலாகப் பஞ்சாப் மக்களின் அடிப்படை பிரச்சனைகளைத் தீர்க்கக்கூட நடுவண் அரசு உதவவில்லை என்பதை உணரமுடிகிறது.

**தனிநாடு கேட்டுப் போராடுதல்**

பஞ்சாபில் 1983, 1984-ஆம் ஆண்டுகளில் வன்முறை வாழ்க்கை முறையாகப் போயிருந்தது. இருக்கிற அமைப்புகளில் மக்களுக்கு நம்பிக்கை போய்விட்டது. வன்முறை மூலம் காரியங்களைச் சாதிக்கலாம் என்ற எண்ணம் மேலோங்கியது.

அகாலிதல்காரர்களை அடக்க அன்றைய பிரதமர் ''பிந்திரன்வாலே இவர்களுக்கு எதிராக நீ நின்றால் நான் கொஞ்சம் இளைப்பாறுவேன்! என்றார். நான் பார்த்துக் கொள்கிறேன். கவலையை விடு என்றார் பிந்திரன்வாலே. ஆனால் நீ கொஞ்சம் கண்ணையும் காதையும் மூடிக்கொள்....

பிரதமர் கண்ணைத் திறந்த சமயத்தில் திடுக்கிட்டார். பிந்திரன் வாலேயின் துப்பாக்கி பிரதமரைக் குறி பார்த்திருந்தது' (ப. 24) என்பதன் வழியாகப் பிரதமர் எவ்வளவு பெரிய தவறினைச் செய்திருக்கிறார் என்பதையும், அதுவே தீவிரவாதிகளின் ஆயுத பலத்திற்கு உதவியாக இருந்ததையும் அறிய முடிகிறது.

தீவிரவாதத்திற்கு எதிரான சிந்தனைகள், எண்ணங்கள் கொண்ட பத்திரிக்கையாளர்களையும் சுட்டுக்கொன்றனர்.

''பஞ்சாப் கேசரியின் எடிட்டர் ரமேஷ் சந்தர் சுட்டுக் கொல்லப் பட்டிருக்கிறார்''

ஜகத்நாராயணின் பிள்ளையா? தந்தையைக் கொன்றது போத வில்லையா? (ப. 61) என்பதிலிருந்து தங்களுக்கு எதிராக 'பஞ்சாப் கசாப்பு களமாகிவிட்டது'' என்று எழுதியதால் 'லாலா ஜகநாராயனன் 1981-லிலும் அவரது மகன் ரமேஷ் சந்தரை 1984-லிலும் பிந்திரன் வாலே சுட்டுக்கொலை செய்ததை அறிய முடிகிறது.

''கோவிலின் பிரகாரத்தைச் சுற்றி இருந்த புனித கட்டிடங் களையெல்லாம்... கோட்டையாக்கி வருகிறான். லங்கருக்கு (பொற்கோவிலில் அன்னதானம் நடைபெறும் இடம்) சாமான்கள்

கொண்டு வரப்படும் லாரிகளில், கோதுமை மாவு மூட்டைகளுக்கு அடியில் எல்லைப்புறத்தில் கடத்தல் செய்யப்பட்ட துப்பாக்கிகள் பதுக்கப்பட்டுக்கொண்டு வரப்படுகின்றன'' (ப. 53) என்பவற்றி லிருந்து மத்திய, மாநில அரசுகளின் கையாலாகாத்தனத்தால் கலவரமும், பீதியும் ஏற்பட வழிவகுத்ததை உணரமுடிகிறது.

தீவிரவாதிகளின் உச்சக்கட்ட நடவடிக்கைகளில் தனி நாடு அமைத்தாலும் ஒன்றாகும். ''பாகிஸ்தானுடன் தொடர்பு வைத்துக் கொண்டு 'காலிஸ்தான்' என்கிற சுதந்திர சீக்கியர் நாட்டைப் பஞ்சாபி லிருந்தும், தாய்நாட்டிலிருந்தும் பிரித்து உருவாக்கப் பார்க்கிறான்'' (ப. 78) என்ற இராணுவத்தளபதி பிராரின் உரையினால், பாகிஸ்தானில் இருந்து பங்காளதேசம் உருவானதுபோல் இந்தியாவிலிருந்து தனிநாடு உருவாக்க முயலும் நடவடிக்கைகளையும் அறியலாம்.

**மிதவாதிகள் நிலை**

பிந்தரன் வாலேக்கு எதிராக மிதவாதிகள் செயல்பட்டனர். இவர்களில் லோங்கோவால் முக்கியமானவர். நாடு பிரிவதை விரும்பாது, அதனால் ஏற்படும் விளைவுகளையும் எண்ணினார்கள். ''பிரிவினை என்றாலே தேகம் நடுங்குகிறது. லாகூரில் பட்டு வியாபாரத்தில் கொடி கட்டிப் பறந்த தந்தையின் கடை எரிக்கப் பட்டது, உயிரைக் காப்பாற்றிக் கொண்டால் போதும் என்று போட்டது போட்டபடி இலகாபாத்துக்கு ஓடியதும் (ப. 137) என்ற செய்தியிலிருந்து பிரிவினையின் விளைவுகளை அறிய முடிகிறது.

''ஆனந்தபூர் ஸாஹப் கோரிக்கைகளை அரசு மட்டும் ஒத்துக்கொண்டால், எல்லாப் பஞ்சாபியும் பயன் அடைவார்கள். அதிகத் தண்ணீர் வேண்டும். லாகூரை இழந்ததற்குப் பிரதியாக சண்டிகர் தலைநகர் வேண்டும் தொழிற்சாலைகள் வேண்டும். மாநில அரசுக்கு அதிக அதிகாரம் வேண்டும்''. (ப. 59) என்ற அகாலிதல்காரர்களின் தீர்மானங்கள் பஞ்சாபின் பல்வேறு பிரச்சனைகளைச் சுட்டிக்காட்டுகிறது. மாநில சுயாட்சி வேண்டும், என்று தமிழக தி.மு.க வினர் 1957-களில் கேட்டதை அகாலிகள் 1984-களில் கேட்பதையும் உணர முடிகிறது.

**பொற்கோவிலுக்குள் இராணுவம்**

பிந்தரன் வாலேயும், அவனது ஆதரவாளர்களும் அமிர்த சாகரிலுள்ள பொற்கோவிலுக்குள் மிகப் பயங்கரமான ஆயுதங்களைப் பதுக்கி தனிநாடு கேட்டுப் போராடினார்கள். 01.06.1984 அன்று இராணுவத் தளபதிகள் பிரார், ஆனந் ஆகியோர் பொற் கோவிலுக்குள் நுழைந்து எதிரிகளின் ஆயுதபலம், மறைவிடங்களை அடையாளம் கண்டனர். ''டி.வி. ரேடியோ வாங்குவதற்குப் பதில் துப்பாக்கி வாங்குங்கள்'' (ப. 77) என்ற பிந்திரன் வாலேயின்

பேச்சை ஆனந், பிராரிடம் கூறியதன் வாயிலாக ஆயுத கொள்முதலில் பிந்திரன்வாலே காட்டிய அக்கறையைக் காண முடிக்கிறது. 05.06.1984 அன்று மாலை இராணுவ அதிகாரிகள் லௌட் ஸ்பீக்கரில் "கோவிலுக்குள் இருக்கும் எல்லா யாத்ரீகர்களும் வெளியில் வந்து விடுங்கள், ஆயுதம் வைத்திருப்பவர்கள் சரணடையுங்கள் (ப. 80) என்ற அறிவிப்பின் வாயிலாக இராணுவம் 'நீல நட்சத்திர நடவடிக்கைக்கு' தயாரானதை அறியமுடிகிறது. இரவு துவங்கிய சண்டையில் 45 கமாண்டோஸ் உள்ளே நுழைந்தவுடன் சுட்டு வீழ்த்தப்பட்டதும்... அகால் தத்துக்குள்ளிருந்து பாய்ந்து வந்த குண்டு வீச்சுகளுக்கு ராணுவ வீரர்கள் அதிக நேரம் தாக்குப்பிடிக்க முடியாது என உணர்ந்து 06.06.1984-ல் அதிகாலை 2.30-க்கு கோவிலுக்குள் கூடுதலாகச் சென்று இராணுவம் (ப. 81) என்பதிலிருந்து தீவிரவாதிகள் கோவிலுக்குள் வலிமையுடன் இருந்ததை உணர முடிகிறது. இச்சண்டையில் பிந்திரன் வாலே சுட்டுக்கொல்லப்பட்டான். பல சீக்கியர்கள் உயிரிழந்தனர்.

**இந்திராகாந்தி படுகொலை**

நீல நட்சத்திர நடவடிக்கைக்குப் பின் கோவிலுக்குள் பத்திரிக்கையாளராகச் சென்ற ரஞ்சனியிடம் ஒரு சீக்கியப் பெண் 'சீக்கிய சரித்திரத்தைத் தில்லி சிம்மாஸனத்துக்கு எடுத்துச் சொல்லுங்கள்! இந்தக் கோவிலைத் தாக்கியவர்களை நாங்கள் சும்மா விட்டதில்லை! வெள்ளைக்காரனாகட்டும், மொகலாயனாகட்டும் பழிக்குப் பழி வாங்காமல் விட்டதில்லை. இப்பொழுது தில்லியில் அரசு புரியும் பிராமணர்களைச் சும்மா விடுவோமா? (ப. 113) எனும் அப்பெண்ணின் கூற்றிலிருந்து இந்திராகாந்தியின் இறப்பு சீக்கியர்களினால் என்பது உணர முடிகிறது.

இந்திராகாந்தி 30.10.1984-ல் ஒரிஸ்ஸாவில் பிரம்மாண்ட கூட்டத்தைப் பார்த்து "நான் இன்று இறந்தால் என் ஒவ்வொரு துளி இரத்தமும் இந்த தேசத்தைப் பலப்படுத்தும் (ப. 135) என அவரது உரையிலிருந்து இறப்பினைப் பற்றி பிரதமர் தீர்க்க தரிசனமாக உணர்ந்ததை அறிய முடிகிறது. '31.10.1984-ல் பிரதமர் வீட்டினருகில் பட்டாசு வெடிச் சத்தம் போல் தோட்டத்தில் அருகில் கேட்டது. தொடர்ந்து வெடிச்சத்தமும் திடீரென்று பலபேர் கத்தும், ஓடும், சுடும், பேசும் சத்தங்கள்...

இந்திரா இரத்தக் குட்டையில் கிடந்தார் ஆரஞ்சுப் புடவை சிவப்பாய் மாறிக்கொண்டிருந்தது. விழிகள் பிதுங்க அடிபட்ட பட்சி போல கிடக்கும் பிரதமரையும் குப்புற விழுந்திருக்கும் அந்த இரு சீக்கியர்களையும்" (ப. 142-143) என்பதிலிருந்து இந்திராவை அவரது மெய்க்காப்பாளர்கள் தங்கள் இனத்தினரின் விருப்பத்தின்படி சுட்டுக் கொலை செய்து தங்களின் சீக்கிய உணர்வுகளை வெளிப்படுத்தியதை அறிய முடிகிறது.

